காரைக்காலம்மையாரின்

# அற்புதத் திருவந்தாதி



கி. வா. ஜகந்நாதன்

அமுத நிலையம்

காரைக்காலம்மையாரின்

# அற்புதத் திருவந்தாதி

கி. வா. ஜகந்நாதன்




அமுத நிலையம் லிமிடெட்
46, ராயப்பேட்டை ஹைரோடு,
சென்னை-600 014.

# காரைக்கால் அம்மையார் சரிதம்

வணிகர் குலத்தினர் பெருகி வளம் பெறும் கடற்கரைப் பட்டினம் காரைக்கால். அங்கே பெரிய வணிகர் தனதத்தர். அவருக்குப் பெண்ணாகப் பிறந்தவர் புனிதவதியார். இளம் பருவத்திலேயே சிவபெருமானிடம் ஆழ்ந்த அன்புடையவ ராஞர் அப் பெருமாட்டியார். விளையாடும் பொழுதுகூடச் சிவபெருமானைப் பற்றிய பாடல்களைப் பாடி விளையாடுவார்.

புனிதவதியார் திருமணப் பருவத்தை அடைந்தார். நாக பட்டினத்தில் இருந்த பரமதத்தன் என்ற வணிககுலக் குமரன் அவரை மணம் செய்துகொண்டான். புனிதவதியார் அந்தக் குடும்பத்திற்கு ஒரே பெண்ணாதலின் அவரைப் பிரிந் திருக்க அவருடைய தாய் தந்தையர் விரும்பவில்லை. அதனால் தம்முடைய மருமகனைக் காரைக்காலிலே இருந்துவிடும்படி வேண்டினர். பரமதத்தன் அவர்கள் விரும்பியபடியே அவ் ஊரில் தங்கி அவர்களுடைய சொந்தப் பிள்ளையைப்போல வியாபாரம் முதலியவற்றைக் கவனித்து வரத் தலைப் பட்டான்.

இல்வாழ்வில் புகுந்த புனிதவதியார் சிவபெருமானிடம் ஆராத அன்புடையவராக இருந்ததோடு இல்வாழ்க்கைக் குரிய கடமைகளையும் குறைவற நிறைவேற்றினர். யாரேனும் சிவனடியார் வந்தால் அவருக்கு உணவளித்து ஆடை அணி களும் பிற பண்டங்களும் அளித்து வழிபடுவார்.

அவர்களுடைய இல்வாழ்க்கை இனிதே நடந்துகொண் டிருந்தபோது ஒரு நாள் பரமதத்தனிடம் அன்புள்ளவர் ஒருவர் இரண்டு மாங்கனிகளைக் கடையில் இருந்த அவனிடம் கொண்டு வந்து கொடுத்தார். அவற்றை வாங்கித் தன்

இது இல்லையே! இது ஏதோ உயர்ந்த ராசி போல இருக்கிறதே! இதை யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டான்.

இறைவன் அருளால் கிடைத்தது என்று சொல்ல அம்மையார் விரும்பவில்லை. அந்த அற்புதம் இரகசியமாகவே இருக்கட்டும் என்பது அவர் எண்ணம். ஆனால் கணவன் கேட்டதற்கு உண்மையைச் சொல்வதுதான் கற்பு நெறிக்கு அழகு என்றும் ஓர்ந்தார். சிறிது நேரம் அவர் தடுமாறினார். பிறகு நடந்ததை நடந்தபடியே சொல்வதுதான் தக்கதென்று முடிவு செய்து, எல்லாவற்றையும் பரமதத்தனிடம் உரைத்தார்.

'இறைவன் அருளால் மாம்பழம் கிடைப்பதாவது! உலகத்தில் நடக்கிற காரியமா இது?' என்று அவன் மயங்கினான். பிறகு, "அப்படியானால் அவனருளால் மற்றொரு பழத்தை வருவித்து இலையில் இடு" என்றான்.

அம்மையார் என் செய்வார்! உள்ளே சென்று, "இறைவனே, இவருடைய விருப்பத்தை இப்போது நிறைவேற்றா விட்டால் நான் சொன்னது பொய்யாகிவிடுமே!" என்று மனம் நைந்து வேண்டினார். இப்போதும் இறைவன் அருளால் அவர் கையில் மாங்கனி ஒன்று வந்தது. அதைக் கொணர்ந்து தம் கணவன் கையில் தந்தார். பரமதத்தன் மிக்க வியப்பை அடைந்து அதை வாங்கிக் கொண்டான். ஆனால் அது உடனே கையிலிருந்து மறைந்தது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போகவே, அம்மையார் தெய்விகம் நிரம்பியவர் என்ற உண்மை அவனுக்குப் புலனாயிற்று. 'இவள் மற்றப் பெண்களைப் போன்றவள் அல்ல; தொழுவதற்கு உரியவள்' என்ற மதிப்பும், அவரோடு வாழ்வதற்குப் பயமும், இன்ன செய்வதென்று தெரியாத தடுமாற்றமும் உண்டாயின. 'இனி இவளோடு வாழ இயலாது' என்று தீர்மானித்துக் கொண்டான். அதுமுதல் அதிக நெருக்கமின்றி வாழலானான்.

வீட்டுக்கு அனுப்பி வைத்தான் அவன். அந்த இரண்டு
களையும் புனிதவதியார் வாங்கி வைத்துக் கொண்டார்.

அப்போது ஒரு சிவனடியார் மிகவும் பசியுடன் அ
வந்து சேர்ந்தார். மிக்க வாட்டத்துடன் இருக்கும்
பசியை உடனே ஆற்ற வேண்டும் என்று எண்ணினார் பு
வதியார். ஆனால் அப்போது அன்னம் மாத்திரம் சித்த
இருந்தது; கறியமுது ஆகவில்லை இருப்பினும் அ
ருடைய பசியை அறிந்து உடனே இலையைப் போட்டு உ
பரிமாறத் தொடங்கினார். தம் கணவன் அனுப்பிய
மாம்பழங்களில் ஒன்றை வெஞ்சனமாக இட்டார். அ
வயிறார உண்டு அம்மையாரை வாழ்த்திவிட்டுச் சென்ற

நண்பகலில் வழக்கம்போல் கடையிலிருந்து பரமத
வீட்டுக்கு வந்தான். நீராடி விட்டு உண்ண உட்கார்ந்
இலையில் எல்லாம் படைத்துவிட்டு அவன் அனுப்பிய
பழங்களில் எஞ்சியிருந்த ஒன்றை இட்டார் புனிதவதி
அந்தக் கனியை உண்ட வணிகன் அது மிகவும் சுவை
தாக இருப்பதை அறிந்து, "எங்கே, மற்றொரு பழம்
கிறதே; அதையும் கொண்டு வந்து வை" என்றான்.

அம்மையார் அதை எடுத்து வருவதற்காகச்
பவரைப் போல உள்ளே போனார். உள்ளே பழம்
'இவர் ஆசைப்பட்டுக் கேட்கிறாரே! நான் என் செய்வே
என்று அப்போது புனிதவதியாருடைய உள்ளம் தத்
தது. அவருடைய நிலைகண்டு இரங்கினான் சிவபெரு
அவனருளால் ஒரு மாங்கனி அம்மையாருடைய
வந்திருந்தது 'இறைவன் திருவருள் இருந்தபடி
ஆச்சரியம்!' என்று எண்ணிய அம்மையார் அதைக் கொ
போய்த் தம் கணவனுடைய இலையில் பரிமாறினார்.

அதைப் பரமதத்தன் உண்டான். அது எங்கும் க
இனிய சுவையை உடையதாக இருந்தது. அது வ
அவன் உண்ட மாம்பழங்களுக்கு இல்லாத தனிச் சுவை
அதில் கண்டான். "முன்னால் நான் உண்ட பழத்தைப்

வீட்டுக்கு அனுப்பி வைத்தான் அவன். அந்த இரண்டு கனி களையும் புனிதவதியார் வாங்கி வைத்துக் கொண்டார்.

அப்போது ஒரு சிவனடியார் மிகவும் பசியுடன் அங்கே வந்து சேர்ந்தார். மிக்க வாட்டத்துடன் இருக்கும் அவர் பசியை உடனே ஆற்ற வேண்டும் என்று எண்ணினார் புனித வதியார். ஆனால் அப்போது அன்னம் மாத்திரம் சித்தமாக இருந்தது; கறியமுது ஆகவில்லை இருப்பினும் அடியவ ருடைய பசியை அறிந்து உடனே இலையைப் போட்டு உணவு பரிமாறத் தொடங்கினார். தம் கணவன் அனுப்பியிருந்த மாம்பழங்களில் ஒன்றை வெஞ்சனமாக இட்டார் அடியார் வயிறார உண்டு அம்மையாரை வாழ்த்திவிட்டுச் சென்றார்.

நண்பகலில் வழக்கம்போல் கடையிலிருந்து பரமதத்தன் வீட்டுக்கு வந்தான். நீராடி விட்டு உண்ண உட்கார்ந்தான். இலையில் எல்லாம் படைத்துவிட்டு அவன் அனுப்பிய மாம் பழங்களில் எஞ்சியிருந்த ஒன்றை இட்டார் புனிதவதியார். அந்தக் கனியை உண்ட வணிகன் அது மிகவும் சுவையுள்ள தாக இருப்பதை அறிந்து, "எங்கே, மற்றொரு பழம் இருக் கிறதே; அதையும் கொண்டு வந்து வை" என்றான்.

அம்மையார் அதை எடுத்து வருவதற்காகச் செல் பவரைப் போல உள்ளே போனார். உள்ளே பழம் ஏது? 'இவர் ஆசைப்பட்டுக் கேட்கிறாரே! நான் என் செய்வேன்?' என்று அப்போது புனிதவதியாருடைய உள்ளம் தத்தளித் தது. அவருடைய நிலைகண்டு இரங்கினான் சிவபெருமான். அவனருளால் ஒரு மாங்கனி அம்மையாருடைய கையில் வந்திருந்தது 'இறைவன் திருவருள் இருந்தபடி என்ன ஆச்சரியம்!' என்று எண்ணிய அம்மையார் அதைக் கொண்டு போய்த் தம் கணவனுடைய இலையில் பரிமாறினார்.

அதைப் பரமதத்தன் உண்டான். அது எங்கும் காணாத இனிய சுவையை உடையதாக இருந்தது. அது வரையில் அவன் உண்ட மாம்பழங்களுக்கு இல்லாத தனிச் சுவையை அதில் கண்டான். "முன்னால் நான் உண்ட பழத்தைப்போல

வீட்டுக்கு அனுப்பி வைத்தான் அவன். அந்த இரண்டு கனி களையும் புனிதவதியார் வாங்கி வைத்துக் கொண்டார்.

அப்போது ஒரு சிவனடியார் மிகவும் பசியுடன் அங்கே வந்து சேர்த்தார். மிக்க வாட்டத்துடன் இருக்கும் அவர் பசியை உடனே ஆற்ற வேண்டும் என்று எண்ணினார் புனித வதியார். ஆனால் அப்போது அன்னம் மாத்திரம் சித்தமாக இருந்தது; கறியமுது ஆகவில்லை இருப்பினும் அடியவ ருடைய பசியை அறிந்து உடனே இலையைப் போட்டு உணவு பரிமாறத் தொடங்கினார். தம் கணவன் அனுப்பியிருந்த மாம்பழங்களில் ஒன்றை வெஞ்சனமாக இட்டார். அடியார் வயிறார உண்டு அம்மையாரை வாழ்த்திவிட்டுச் சென்றார்.

நண்பகலில் வழக்கம்போல் கடையிலிருந்து பரமதத்தன் வீட்டுக்கு வந்தான். நீராடி விட்டு உண்ண உட்கார்ந்தான். இலையில் எல்லாம் படைத்துவிட்டு அவன் அனுப்பிய மாம் பழங்களில் எஞ்சியிருந்த ஒன்றை இட்டார் புனிதவதியார். அந்தக் கனியை உண்ட வணிகன் அது மிகவும் சுவையுள்ள தாக இருப்பதை அறிந்து, ''எங்கே, மற்றொரு பழம் இருக் கிறதே; அதையும் கொண்டு வந்து வை'' என்றான்.

அம்மையார் அதை எடுத்து வருவதற்காகச் செல் பவரைப் போல உள்ளே போனார். உள்ளே பழம் ஏது? 'இவர் ஆசைப்பட்டுக் கேட்கிறாரே! நான் என் செய்வேன்?' என்று அப்போது புனிதவதியாருடைய உள்ளம் தத்தளித் தது. அவருடைய நிலைகண்டு இரங்கினான் சிவபெருமான். அவனருளால் ஒரு மாங்கனி அம்மையாருடைய கையில் வந்திருந்தது 'இறைவன் திருவருள் இருந்தபடி என்ன ஆச்சரியம்!' என்று எண்ணிய அம்மையார் அதைக் கொண்டு போய்த் தம் கணவனுடைய இலையில் பரிமாறினார்.

அதைப் பரமதத்தன் உண்டான். அது எங்கும் காணாத இனிய சுவையை உடையதாக இருந்தது. அது வரையில் அவன் உண்ட மாம்பழங்களுக்கு இல்லாத தனிச் சுவையை அதில் கண்டான். ''முன்னால் நான் உண்ட பழத்தைப்போல

இது இல்லையே! இது ஏதோ உயர்ந்த ராசி போல இருக்கிறதே! இதை யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டான்.

இறைவன் அருளால் கிடைத்தது என்று சொல்ல அம்மையார் விரும்பவில்லை. அந்த அற்புதம் இரகசியமாகவே இருக்கட்டும் என்பது அவர் எண்ணம். ஆனால் கணவன் கேட்டதற்கு உண்மையைச் சொல்வதுதான் கற்பு நெறிக்கு அழகு என்றும் ஓர்ந்தார். சிறிது நேரம் அவர் தடுமாறினார். பிறகு நடந்ததை நடந்தபடியே சொல்வதுதான் தக்கதென்று முடிவு செய்து, எல்லாவற்றையும் பரமதத்தனிடம் உரைத்தார்.

'இறைவன் அருளால் மாம்பழம் கிடைப்பதாவது! உலகத்தில் நடக்கிற காரியமா இது?' என்று அவன் மயங்கினான். பிறகு, "அப்படியானால் அவனருளால் மற்றொரு பழத்தை வருவித்து இலையில் இடு" என்றான்.

அம்மையார் என் செய்வார்! உள்ளே சென்று, "இறைவனே, இவருடைய விருப்பத்தை இப்போது நிறைவேற்றா விட்டால் நான் சொன்னது பொய்யாகிவிடுமே!" என்று மனம் நைந்து வேண்டினார். இப்போதும் இறைவன் அருளால் அவர் கையில் மாங்கனி ஒன்று வந்தது. அதைக் கொணர்ந்து தம் கணவன் கையில் தந்தார். பரமதத்தன் மிக்க வியப்பை அடைந்து அதை வாங்கிக் கொண்டான். ஆனால் அது உடனே கையிலிருந்து மறைந்தது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டாமல் போகவே, அம்மையார் தெய்விகம் நிரம்பியவர் என்ற உண்மை அவனுக்குப் புலனாயிற்று. 'இவள் மற்றப் பெண்களைப் போன்றவள் அல்ல; தொழுவதற்கு உரியவள்' என்ற மதிப்பும், அவரோடு வாழ்வதற்குப் பயமும், இன்ன செய்வதென்று தெரியாத தடுமாற்றமும் உண்டாயின. 'இனி இவளோடு வாழ இயலாது' என்று தீர்மானித்துக் கொண்டான். அதுமுதல் அதிக நெருக்கமின்றி வாழலானான்.

எப்படியும் அவ்விடத்தை விட்டு நீங்கவேண்டும் என்று முடிவு செய்தானுதலால் அதற்கு என்ன வழி யென்று ஆராய்ந்தான். "இங்கே இருந்து வியாபாரம் செய்வதோடு, கடல் கடந்து சென்று வாணிகம் செய்ய விரும்புகிறேன். அதில் அதிக ஊதியம் உண்டு" என்று தன் உறவினர்களிடம் சொல்ல, அவர்கள் அவன் கூறுவது சரியென்று இணங்கினர். அவனுக்காக ஒரு கப்பலைக் கட்டித் தந்தனர். அதில் அவன் ஏறிக் கடல் கடந்து சென்று வேற்று நாட்டை அடைந்து அங்கே வாணிகம் செய்து செல்வம் சேர்த்தான். பின்பு மீண்டும் தாய்நாடு வர எண்ணிய அவன், காரைக்காலுக்குப் போகாமல் பாண்டி நாட்டில் ஒரு கடற்கரைப் பட்டினம் சென்று அங்கேயே தங்கி வாழலானன். அங்கே கப்பல் வியாபாரம் செய்யும் வணிகன் ஒருவனுடைய பெண்ணை மணந்துகொண்டு வாழ்ந்து வந்தான். தனக்கு முன்பே திருமணம் ஆயிற்றென்பதையும், அந்த மனைவி இன்னுள் என்பதையும் யாருக்கும் தெரிவிக்காமலே இருந்தான். அவனுக்கு இரண்டாம் மனைவியிடம் ஒரு பெண் பிறந்தது. அவளுக்குப் புனிதவதி என்ற பெயரையே இட்டு அன்புடன் வளர்த்து வந்தான்.

காரைக்காலில் இருந்த புனிதவதியார் தம் கணவனுடைய போக்கை உணரவில்லை. தம் இல்லத்தில் இருந்து அறங்கள் பிறழாமல் ஆற்றி வந்தார். நாளடைவில் பரமதத்தன் பாண்டி நாட்டில் ஒரு நகரத்தில் வாழ்கிறுன் என்ற செய்தி உறவினர்களுக்குத் தெரிய, அவர்கள் புனிதவதியாரிடம் தெரிவித்தார்கள். தக்கவர்களை அனுப்பி அவனுடைய நிலையைத் தெரிந்துகொண்டு வரச் செய்தார்கள் அவன் வேறு மணம் செய்துகொண்டு வாழ்வதை அறிந்த போது அவர்களுக்குக் கலக்கம் உண்டாயிற்று. 'அவன் இருக்குமிடத்தில் இவளைக் கொண்டுபோய் விடுவதே நம் கடமை' என்று எண்ணிய உறவினர், புனிதவதியாரை ஒரு சிவிகையில் ஏற்றி ஆண்களும் பெண்களும் சூழப் பரமதத்தன் இருந்த ஊருக்குச் சென்றார்கள்.

அங்கே சென்று தாம் வந்த செய்தியை ஆள் மூலம் பரமதத்தனுக்குச் சொல்லியனுப்பினர். அவன் அஞ்சித் தம் இரண்டாம் மனைவியோடும் குழந்தையோடும் சென்று எதிர் கொள்ள எண்ணிப் புறப்பட்டான். புனிதவதியார் இருந்த இடம் போய்த் தன் இரண்டாம் மனைவியையும் குழந்தையையும் வணங்கச் செய்து, தானும் அவருடைய அடியில் வீழ்ந்தான். பணிந்து எழுந்து, "யான் உம்முடைய அருளால் இங்கே இனிமையாக வாழ்க்கை நடத்துகிறேன். இந்தக் குழந்தைக்கு உம்முடைய திருநாமத்தையே வைத்திருக்கிறேன்" என்று பணிவுடன் கூறி மீட்டும் வணங்கினான்.

அப்போது புனிதவதியார் அஞ்சி ஒருபுறமாக ஒதுங்கி நிற்கச் சுற்றத்தினர் "உன் மனைவியை நீ வணங்குகிறாயே! இது முறையாகுமா?" என்று கேட்டனர்.

அப்போது அவன், "இவரை மற்றப் பெண்களைப் போல மானிடப் பெண் என்று நினைக்காதீர்கள். இவர் தெய்வப் பிறவி. இதனை உணர்ந்த பிறகே இவரை மனைவியாகக் கொண்டு வாழ்தல் அபசாரம் என்று இவரை விட்டுப் போனேன். இவரிடம் உள்ள பக்தியினால் இதோ இந்தக் குழந்தைக்கு இவருடைய பேரையே வைத்தேன். இவர் தெய்வத்தன்மை உடையவர் என்பதை அறிந்தவனாதலால் வணங்கினேன். நீங்களும் இவரை வணங்குங்கள்" என்று சொன்னான். அதைக் கேட்ட உறவினர் ஒன்றும் அறியாமல் மயங்கி நின்றனர்.

புனிதவதியார் பரமதத்தனுடைய கருத்தை உணர்ந்து கொண்டார். "இவர் எண்ணிய எண்ணம் இதுவானால் இந்த உடம்பைத் தாங்குவதனால் என்ன பயன்? இவருக்காக அமைந்த இந்த உடம்பு இனி எனக்கு வேண்டாம். சிவ பெருமானே, இனி நின் தாள்களைப் போற்றும் பணியையன்றிப் பிறிதொரு பணி எனக்கு இல்லை. ஆதலின் அடியாளுக்குப் பேய்வடிவை அருள் செய்யவேண்டும்" என்று இறைவனைத் துதித்து நின்றார். அவர் வேண்டுகோளின்படி கண்டார்

விரும்பும் கனியை முன்பு அருள் செய்த அப்பன், இப்போதும் அவர் விருப்பத்தின்படியே, கண்டார் அஞ்சி ஒதுங்கும் பேய் வடிவத்தைத் தந்தருளினன். புனிதவதியாருடைய உடம்பில் இருந்த தசைகள் மறைந்தன. எலும்புருவம் பூண்ட பேயாக அவர் நின்றார். தேவர்களும் போற்றும் பேயாக உருவெடுத் ததைக் கண்ட உறவினரும் பரமதத்தனும் வணங்கி, அஞ்சித் தத்தம் இடங்களை அடைந்தார்கள்.

புதிய உடம்பு பெற்ற அம்மையார், இறைவனைப் போற்றி, அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை என்ற இரண்டையும் பாடினார். பின்பு கைலைமலை சென்று உமாதேவியாருடன் எழுந்தருளியிருக்கும் பரமசிவனைத் தரிசிக்கவேண்டும் என்ற ஆசை உந்த, வடதிசை நோக்கிப் புறப்பட்டார். அவருடைய உருவத்தைக் கண்டவர்களெல் லாம் அஞ்சினார்கள். "பேய், பேய்!" என்று கூவி ஓடினார்கள். "எம்பெருமானுக்கு என்னை அடையாளம் தெரிந்தால் போதும். மற்றவர்களுக்கு நான் எப்படி இருந்தால் என்ன?" என்று எண்ணி அவர் கைலையை நோக்கிப் போய்க்கொண் டிருந்தார். தமிழ் நாட்டைக் கடந்து, அப்பால் வடநாட்டை யும் கடந்து கைலைமலையின் பக்கம் அணுகினார். அங்கே தம் காலால் நடப்பதை விட்டுவிட்டுத் தலையினால் நடக்கத் தொடங்கினார்.

கைலைமால்வரையில் என்புருவம் படைத்த காரைக்கா லம்மையார் தலையினால் நடந்து ஏறுவதை மேலே எம்பெருமா னுடன் வீற்றிருந்த உமாதேவியார் கண்டார். உடனே சிவ பிரானை நோக்கி, "இதோ இந்த என்புருவம் படைத்த உடம்பு தலையாலே நடந்து ஏறுகிறதே! இதற்கு உள்ள அன்பு தான் என்னே!" என்று வியந்தார்.

அப்போது பெருமான் உமாதேவியாரிடம், "இங்கே வரும் பெண்மணி நம்முடைய அம்மை. இந்த என்புருவத்தை வேண்டுமென்று பிரார்த்தித்துப் பெற்றுக்கொண்டாள்"

என்ருன். அவன் அருகில் காரைக்கால்பேயார் அணுகவும், "அம்மா!" என்று அழைத்தருளினுன் எம்பெருமான்.

தனக்கு அம்மையே இல்லாதவனும், தானே எவ்வுயிர்க்கும் அம்மையாக இருப்பவனுமாகிய சிவபெருமான் "அம்மா!" என்று அருளியதைக் கேட்ட பேயார், "அப்பா!" என்று கூவியபடியே ஆர்வத்தோடு சென்று அவனுடைய திருவடித் தாமரையில் வீழ்ந்தார். வீழ்ந்து எழுந்த அவரை நோக்கி, "இப்போது உனக்கு என்ன வேண்டும்?' என்று எம்பெருமான் கேட்கவே, மனம் உருகி அவர் சொல்லலானுர்: "இறைவனே, என்றும் இறவாத இன்ப அன்பு எனக்கு வேண்டும். இனி மீண்டும் இவ்வுலகில் பிறவாமல் இருக்கும்படி அருள் பாலிக்க வேண்டும். ஒருகால் பிறக்கும்படி நேர்ந்தாலும் உன்னை மறவாமல் இருக்கவேண்டும். அதோடு உன் புகழையே பாடி உன் திருவடிக்கீழ் என்றும் உறையும்படி திருவருள் புரியவேண்டும்" என்று வணங்கி விண்ணப்பம் செய்து கொண்டார்.

இறைவன் அவ்வாறே அருளியதோடு, "தென்னுட்டில் பழையனூரைச் சார்ந்த திருவாலங்காட்டில் நாம் ஊர்த்துவ தாண்டவம் செய்கின்ருேம். அந்தத் தாண்டவத்தைக் கண்டு இன்புற்று அங்கே இருந்து கொண்டு நம்மைப் பாடுவாயாக!" என்று திருவாய் மலர்ந்தருளினுன்.

அதனைக் கேட்டு அம்மையார் இறைவன் திருவருளை எண்ணி உருகி, அவனை வணங்கி விடை கொண்ட பிறகு திருவாலங்காட்டை நோக்கிப் புறப்பட்டார். தலையாலே நடந்து வந்து அந்த நற்பதியை நண்ணினுர்.

அங்கே அண்டமுற நிமிர்ந்தாடும் அப்பனுடைய ஆடலைக் கண்குளிரத் தரிசித்து இரண்டு திருப்பதிகங்கள் பாடினுர். பேய்கள் சூழ எம்பெருமான் ஆடுந் திறத்தை அவற்றில் விரித்துரைத்தார். பேய்களின் இயல்பையும் எடுத்துச் சொன்னுர். அந்தத் தாண்டவ மூர்த்தியின் திருவடிக் கீழ் என்றும் உறையும் பேறு பெற்ருர்.

"மடுத்தபுனல் வேணியினார் அம்மைஎன மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவியதாண் டவத்தில் அவர்
எடுத்தருளும் சேவடிக்கீழ் என்றும்இருக் கின்றாரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் ஆரளவா யினதம்மா!"

என்று சேக்கிழார் பாடுகிறார். அளப்பதற்கரிய பெருமை உடையவர் காரைக்காலம்மையார் என்பதில் ஐயம் ஏது?

  

இறைவனாலேயே "அம்மையே" என்று விளிக்கப் பெற்ற பெருமையையுடைய காரைக்காலம்மையார். இயற்றிய "அற்புதத் திருவந்தாதி" விளக்கத்தை, "ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்" பத்திரிகையில் தொடராக எழுதி வந்தேன். பல்லோரும் படித்து மகிழ்ந்ததுடன், அதையே தொகுத்துப் புத்தகமாக வெளியிடவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

அதனை யொட்டி இப்போது இந்த அற்புதத் திருவந்தாதியை நூலாக வெளியிடத் திருவருள் துணை நின்றது.

O பதிப்பிக்கையில் ஒரு சிறு தவறு நேர்ந்து விட்டது. 40-வது பாடலுக்கான விளக்கம் இரண்டு தடவையாக இடம் பெற்று விட்டது. இது ஒரு அதிகப்படியான கட்டுரைதான் என்றாலும், தவற்றுக்கு வருந்துகிறேன். தொடர்ந்து வெளியிட்டு வந்த 'ஸ்ரீ ராம கிருஷ்ண விஜயம்' ஆசிரியருக்கும் இன்று நூலாக வெளியிடும் அமுத நிலையத்துக்கும் நான் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தப் புத்தகத்தை வாங்கி ஆதரிக்க வேண்டும் என்று அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன். மேலும் மேலும் நூல்களை வாங்கி ஆதரிப்பதன் மூலம் அன்பர்கள் உதவினால் இன்னும் வெளிவர இருக்கும் பல நூல்களை விரைவில் வெளியிட இயலும் திருவருளும் குருவருளும் துணை கூட்ட வேண்டும்.

"காந்தமலை"
2, நார்ட்டன் முதல் தெரு
சென்னை-28

அன்பன்.
கி. வா. ஜகந்நாதன்
4-5-1985

# பொருளடக்கம்

# 1. நீலகண்டன்

இறைவனுடைய நீலகண்டத்தையே அவர் கண்கொட்டாமல் பார்த்தார். சிவபெருமானுடைய திருமேனி ஓரே சிவப்பு. "சிவமெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" அல்லவா? செக்கச்செவேல் என்ற திருமேனியிலே இந்த நீலத் திருக்கழுத்து எடுப்பாகத் தோன்றுகிறது. மையின் நிறம் கழுத்தை விடாமல் பின்னிப் பிணைத்துக் கொண்டு நிற்கிறது. 'மைஞ்ஞான்ற கண்டம்' அது. அதன் நிறம் நன்றாகத் திகழ்கிறது.

அந்தக் கழுத்தின் கருமை ஒரு கதையையல்லவா சொல்லுகிறது? தேவர்கள் எல்லாம் தாம் என்றும் சாவாமல் இருக்க வேண்டும் என்ற ஆசையினால் அமுதம் பெற எண்ணினார்கள். பாற்கடலைக் கடையப் புகுந்தார்கள். எல்லாத் தேவர்களும் அமுதம் கிடைக்கும் என்ற அவாவினால் மிகவும் ஊக்கத்தோடு பாற்கடலைக் கடைந்தார்கள். 'ஒரு பெரிய காரியத்தைச் செய்யப் போகிறோமே; இதற்குப் பெரியவர்கள் ஆசியைப் பெற வேண்டாமா? நமக்கெல்லாம் பெருமானாகிய மகாதேவனை வணங்கி இதைச் செய்யலாமே!' என்ற எண்ணம் அவர்களுக்குச் சிறிதும் உண்டாகவில்லை. தம்முடைய வலிமையினால் அமுதத்தைக் கடைந்து உண்டு சாவா நிலைபெற்று வாழலாம் என்று கனவு கண்டார்கள்.

பாற்கடலைக் கடைந்தார்கள். மந்தரத்தை மத்தாக்கி வாசுகியைக் கயிறாக்கி ஒருபக்கம் தேவர்களும் மற்றொரு பக்கம் அசுரர்களும் பிடித்துக் கடைந்தார்கள். ஆம், அசுரர் களும் இந்த முயற்சியில் ஈடுபட்டார்கள். எப்போதுமே

சாவாமல் வாழ வேண்டும் என்ற ஆசை யாருக்குத்தான் இராது?

கடைந்தபோது முதலில் அமுதம் உண்டாகவில்லை. கற்பகம், சிந்தாமணி, திருமகள், ஐராவதம் முதலியவை எழுந்தன. அவரவர்கள் தங்கள் தங்களுக்கென்று அவற்றை எடுத்துக் கொண்டார்கள். அப்போதும் அவர்கள் இறைவனை நினைக்கவில்லை.

இன்னும் அமுதம் தோன்றவில்லை. அதற்குள் ஒரு பேராபத்து வந்து சூழ்ந்தது. ஆலகால நஞ்சு பாற்கடலில் தோன்றியது. அதன் வாடையே தேவர்களுக்கு மயக்கத்தைத் தந்தது. எல்லோரையும் அடியோடு அழித்துவிடும் உக்கிரத் தோடு அது எழுந்தது.

அப்போது யாவரும் அஞ்சி நடுங்கினர். என்ன செய்வ தென்று தெரியாமல் திகைத்தனர். அந்த நிலையில் சிவ பெருமானுடைய நினைவு வந்தது. உடனே தேவர்களெல்லாம் வேகமாக ஓடிப்போய் இறைவன் திருவடியில் வீழ்ந்து, "எங்களை நீதான் காப்பாற்ற வேண்டும். அமுதம் வராமற் போனாலும் போகட்டும்! இந்த நஞ்சிலிருந்து நாங்கள் பிழைத்தாலே போதும்!" என்று முறையிட்டார்கள். "முன் பெல்லாம் என் நினைவு வரவில்லையா? இப்போது மட்டும் என் உதவி வேண்டியிருக்கிறதோ?" என்று அவன் சொல்ல வில்லை. அவன் ஆசுதோஷன்; எல்லாவற்றையும் கணப் பொழுதில் மறந்து மகிழ்ச்சியடைபவன்.

ஆகவே தேவர்கள்பால் அருள் சுரந்து அந்த நஞ்சை எடுத்து உண்டான். பக்கத்தில் இருந்த இறைவி பார்த்தாள். வெளியில் உள்ள அமரர் முதலியவர்களைக் கொல்லும் என்று இறைவன் அதை நுகர்ந்தான். அது அவன் வயிற்றுக்குட் சென்றால் அங்குள்ள உயிர்கள் அழியுமே! ஆதலால் அம்பிகை இறைவன் கண்டத்தைக் கையாற் பிடித்து நஞ்சம் அங்கே தங்கும்படி செய்தாள். அதனால் 'நிறந்திகழும் மைஞ்ஞான்ற கண்டம்' ஆயிற்று இறைவன் திருக்கழுத்து.

"புவனங்கள் உள்ள ஐயர்
பொங்குநஞ் சுண்ண யாம்செய்
தவம்நின்று தடுத்த தென்னத்
தகைந்துதான் தரித்த தென்று
சிவனெந்தை கண்டந் தன்னைத்
திருநீல கண்டம் என்பார்"

என்று நீலகண்டத்தின் பெருமையை உணர்ந்த நாயனார் ஒருவர் எப்போதும், "திருநீலகண்டம், திருநீலகண்டம்" என்று சொல்லிச் சொல்லி, திருநீலகண்ட நாயனார் என்ற பெயரையே பெற்று விட்டார்.

சிவபிரானை எண்ணாமல் அமுதம் கடையப் புகுந்த தேவர்கள் இப்போது அவனுடைய பெருமையை உணர்ந்தார்கள். தங்கள் பெருமான் என்று இப்போது போற்றுகிறார்கள். 'நிறந்திகழும் மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமா'னாக இறைவன் விளங்குகின்றான்.

இத்தனை எண்ணங்களும் நீலகண்டத்தைக் கண்டபோது காரைக்கால் அம்மையாருடைய உள்ளத்தே படர்ந்தன.

இப்போது தம்மைப் பற்றியே அவர் எண்ணமிடலானார். அவர் எத்தகையவர்?

முன்பிறப்பிலே தவம் செய்தவர்; ஆதலின் இளம் பருவத்திலேயே அவருக்குச் சிவபெருமானிடம் பக்தி உண்டாகிவிட்டது, பிறந்து தளர் நடையிட்டு மழலைச் சொல் பேசும் போதே சிவனுடைய பெயரையே சொல்லத் தொடங்கினார். வாய் இறைவன் நாமத்தைச் சொல்ல மனம் அவனிடம் பக்தி பூண்டு உரம் பெற்றது. காதல் என்பது தூய அன்பைக் குறிக்கவும் வரும். தாய்க்கும் குழந்தைக்கும் இடையேயுள்ள உறவைக் காதல் என்று சொல்வதும் உண்டு. ஆதலால் பிள்ளைக்கும் காதலன் என்ற பெயர் வழக்கில் வந்தது. "காதி காதலன்" என்று விசுவாமித்திரரைச் சொல்வார் கம்பர்.

மொழி பயின்றபோது இறைவன் நாமத்தையும் புகழையும் சொல்லிச் சிவபக்தியை வளர்த்து வந்தார். அது வரவரச் சிறந்து உரம் பெற்றது.

உலகத்தில் விலங்கினங்களும் பிறக்கின்றன; மனிதர்களும் பிறக்கிறார்கள். வளரவளர விலங்கினங்களின் உடம்பு பருக்கிறது; உள்ளமும் ஓரளவு விரிகிறது, ஆனால் அவற்றுக்கு வாக்கு வளம் உண்டாவதில்லை. மனிதன் ஒருவனுக்குத்தான் பொருளென்னும் பெருவரம் கிடைத்திருக்கிறது. வாயுடையவன் அவன்தான்; மற்றவை யாவும் வாயில்லாப் பிராணிகள் அல்லவா? ஆகவே பிறந்து மொழிபயிலும் பெருமையுடையவன் மனிதன் தன்கருத்தை வாயால் சொல்லத் தெரிந்தவன் அவன். மற்றவர்கள் பேசுவதைக் கண்டு வார்த்தைகளைச் சொல்லக் கற்றுக் கொள்ளும் குழந்தை மெல்ல மெல்ல அந்த மொழியில் தன் கருத்தைத் தெளிவாகச் சொல்லும் ஆற்றலைப் பெறுகிறது.

இந்த நாட்டில் இளங் குழந்தைகளுக்கு ஆண்டவன் திருநாமங்களையும் அவன் புகழையும் கற்றுக்கொடுப்பது பெற்றோர்களுக்கு வழக்கமாக இருந்தது. அவனே, இவனே என்னமல் சிவனே சிவனே என்று சொல்லப் பழக்கினார்கள். 'ராம கிருஷ்ண கோவிந்தா, கிருஷ்ண ராமா கோவிந்தா!' என்று இறைவன் திருநாமங்களைச் சொல்லித் தந்தார்கள், நாளடைவில் குழந்தை பெரியவனாகும் போது அந்த நாமங்களின் பொருளை உணர்ந்து இறைவனிடம் பக்தி கொள்ளும்.

காரைக்காலம்மையாரிடம் இந்தப் பயிற்சி மிகுதியாகப் படிந்தது. மொழி பயின்ற போதெல்லாம் இறைவன் திருநாமங்களையே மிகுதியாகப் பயின்றார். அவன் புகழையே பேசினார். அவற்றின் பொருள் உள்ளே பாய்ந்தது. அவனிடத்தில் பக்தி, காதல் தோன்றி வளர்ந்து சிறந்தது.

இப்போது மனத்தில் தோன்றிய காதலால் மனப்பயிற்சி வளர்ந்தது. இறைவன் திருவடியையே உள்ளத்தில் பதித்துத்

தியானம் செய்யலானார். அந்தச் சேவடியையே உள்ளத்தால் சேர்ந்திருக்கும் திறமை அவரிடம் மலர்ந்தது.

> "தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
> மனக்கவலை மாற்றல் அரிது"

என்ற குறளில் பரிமேலழகர், 'சேர்தலாவது இடைவிடாது நினைத்தல்' என்று எழுதினார். அம்மையார் **'காதல் சிறந்து இறைவன் சேவடியே சேர்ந்து'** நின்றார், மொழி, மனம், உடம்பு ஆகிய முக்கரணங்களும் இறைவனிடம் ஈடுபட்டு நின்றன. பிறந்து மொழி பயின்ற இளம் பருவந்தொட்டே இறைவனைத் தியானித்து வாழ்த்தி வந்தார்.

இறைவன் இன்னும் தமக்கு முழுக்கருணையும் வழங்க வில்லை என்ற குறை அவருக்கு இருந்தது. இன்னும் சில இடர்ப் பாடுகள் தமக்கு இருப்பதாக உணர்ந்தார். பொருளுடைய வருக்கு எப்படித் தம்மிடம் உள்ள பொருள் போதாது, இன்னும் வேண்டும் என்ற ஆசை இருக்கிறதோ, அதுபோலவே, இறைவன் அருளைப் பெற்றவர்களுக்கும் தமக்குக் கிடைத்த அருள் போதாது என்ற உணர்வு உண்டாகும். அத்தகைய மனநிலையில், தமக்குள்ள இடர்களை இன்னும் இறைவன் முற்றும் போக்கியருளவில்லையே என்ற குறை தோன்றியது.

நீலகண்டத்தைக் கண்டு அதன் தொடர்பாகச் சிவ பெருமான் வானோர் இடரைத் தீர்த்த அருட்செயல் நினைவுக்கு வந்தது அம்மையாருக்கு. தம் இடரை இறைவன் தீர்க்கவில்லையே என்ற எண்ணம் அடுத்துத் தோன்றியது. மீட்டும் வானவர் நிலையையும் தம் நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்கலானார்.

வானவர்கள் முதலில் இறைவனை நினைக்கவில்லை; புறக் கணித்தார்கள். ஆபத்து வந்தபோது திடீரென்று அவனிடம் ஓடிச் சரண் புகுந்தார்கள். இறைவன் உடனே அவருக்கு அருள் செய்தான். அம்மையாரோ பல காலமாக இறைவனிடம் ஈடுபட்டவர். **'பிறந்து மொழி பயின்ற பின் எல்லாம்**

காதல் சிறந்து இறைவன் சேவடியே சேர்ந்தவர்.' அவருடைய இடரை இன்னும் இறைவன் களையவில்லை.

இந்த இரண்டையும் நினைத்தபோது காரைக்காலம்மையாருக்கு மனம் உருகியது இறைவனிடமே இந்தச் செய்தியை முறையிடலாம் என்று தொடங்கினார். "எம்பெருமானே! தேவர்கள் காலில் விழுந்த அந்தக் கணத்திலே அவர்களுக்கு அருள் செய்து மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானாக நிற்கும் நீ, பிறந்து மொழி பயின்ற பின் எல்லாம் காதல் சிறந்து நின் சேவடியே சேர்ந்த என் இடரை எப்போது தீர்க்கப் போகிறாய்?" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

"பிறந்து மொழிபயின்ற பின்எல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே!
எஞ்ஞான்று தீர்ப்பது இடர்?"

[நிறம்திகழும் - நிறம் விட்டுவிளங்கும். மைஞான்ற - கரிய நிறம் வழிவது போலத் தங்கும்.]

அற்புதத்திருவந்தாதியில் உள்ள முதற் பாட்டு இது.

# 2. அன்பு அருது

செல்வமோ ஆற்றலோ உள்ளவர்கள் தம்மை அடுத்தவர் களுடைய இடர்களைக் களையவேண்டும். அதுதான் முறை. எளியவர்கள் அத்தகையவர்களை அணுகி முறையிடுவார்கள். அந்தச் செல்வர்களால் தங்கள் வறுமை போகும் என்ற நம்பிக்கையினால் அவர்களை விடாது பின்பற்றி வழிபடுவார் கள். 'இவர்கள் எளியவர்கள். இவர்களுக்கு உதவி புரிந்து இவர்களுடைய துன்பத்தை நீக்க வேண்டும்' என்று எண்ணி உதவ முன் வருவதே செல்வர்களுக்கு அழகு. அப்படி அந்தச் செல்வர் செய்வதில்லை; செய்யமாட்டார் என்று யாரோ சொல்கிறார்கள்.

"இடர் களைவார் என்று அவரை, அணுகினேன். அவர் களைய மாட்டாரா?"

"ஆம்; இடர் களையார்."

"அப்படியா! இருக்கட்டும்; குற்றம் இல்லை."

மேலே அந்தச் செல்வரைப் பற்றிய விமரிசனம் தொடர் கிறது.

பெரியவர்கள், செல்வர்கள் பிறருடைய இடரைக் களைய வேண்டும். செல்வம் இல்லதாதவர்களாக இருப்பினும் நல்ல மனம் உடையவர்கள் தம்மால் ஓர் உதவி செய்ய இயலா விட்டாலும், 'ஐயோ, பாவம்!' என்று இரங்குவார்கள். அவர் களிடம் செல்வம் இருந்தால் கண்டு இரங்கிக் கொடுத்து விடுவார்கள். அவர்களிடமோ பொருள் இல்லை. ஆனால் பிறர்

துன்பம் கண்டு இரங்கும் இயல்பு இருக்கிறது. இரக்கம் உண்டானால் தானே, கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும்?

"இடர் களையாரேனும் எமக்கு இரங்குவார்" என்ற எண்ணம் தோன்றுகிறது.

"அவர் இரங்கவும் மாட்டார்" என்று ஒரு குரல் எழும்பு கிறது. "இடரைக் களையவும் மாட்டார்; அப்படிக் களைவ தற்குமுன் உண்டாகும் மனநிலையும் அவரிடம் இல்லை. இரக்கத்துக்கும் அவருக்கும் நெடுந்தூரம்" என்று அந்தக் குரல் மேலும் விளக்கத்தைத் தருகிறது.

"அப்படியா? எமக்கு இரங்கமாட்டாரா? இருக்கட்டும், அதனாலும் குற்றம் இல்லை."

"இடர் களையாரேனும் எமக்கு இரங்குவார் என்ற எண்ணம் இருந்தால் அதிலும் மண் விழுந்து விட்டதே! அப்படி இருந்துமா இன்னும் நம்பிக்கை?" அந்தக் குரல் வினவை எழுப்புகிறது. மறுபடியும் அது தொடர்கிறது.

"இடர் களையாரேனும் எமக்கு இரங்குவார் என்று சில நல்ல மனிதர்களைப் பற்றிச் சொல்ல இடம் இருக்கிறது. நீ வழிபடும் அவரிடமோ செயலும் இல்லை; இரக்கமும் இல்லை."

"அது கிடக்கட்டும். தாம் ஒன்றைத் தராவிட்டாலும், இரங்காவிட்டாலும், 'இந்த வழியிலே போ' என்று வழிகாட்டு வார் அல்லவா? இடர் களைவார் என்று இருந்தேன். இல்லை யென்று சொல்கிறாய். இடர் களையாரேனும் எமக்கு இரங்கா ரேனும் இன்ன வழியிற் போ என்று படரும் நெறி பணிப்பார் அல்லவா? அது போதுமே! அந்த நெறியிற் சென்று நான் உய்கிறேன்."

"படரும் நெறியும் பணியார். அவர் அப்படிக் கை காட்டுவார் என்று காத்திராதே. அவரிடம் என்ன இருக்கிறது ஆசைப்பட?"

"அவர் சோதிவடிவினராயிற்றே! சுடர் உருவினர் அல்லவா?"

"சுடர் உருவினரா? தூய சுடர் உருவினராக இருந்தால் நன்றாக இருக்கும். அந்த உருவில் எலும்பு மாலையை அல்லவா அணிந்திருக்கிறார்? அவருடைய கோலத்தை நினைத்தாலே அச்சமாக இருக்கிறது. எலும்பு மாலையைக் கணமாவது கழற்றி வைக்கக் கூடாதா? அது என்ன மதர் மாலையா? காசு மாலையா? இந்த எலும்பணிந்த கோலத்தை மதித்து நம்பிக்கை வைக்கிறாயே!"

"என்னுடைய அன்பு நீ சொல்லும் எதையும் எண்ண வில்லை. இது கிடைக்கும் என்று எதிர்பார்த்து வைக்கும் அன்பு அன்று அது."

"அவர் கோலந்தான் பயங்கரம் என்றால் அவர் ஆடும் இடம் எது தெரியுமா? ஒரே பேய்க் கூத்து. நெருப்பில் நின்று ஆடுகிறார். ஈமக்காட்டில் எலும்பு மாலையை அணிந்து எரியில் ஆடுகிறாரே! நினைத்தாலே அச்சம் உண்டாகிறது. அவரையா அணுகி அன்பு செய்வது?"

"எப்படி இருந்தாலும் அவரே எனக்குத் தலைவர்; உடையவர்; எம்மானார். அவர் எந்தக் கோலத்தில் இருந் தாலும் எதை அணிந்தாலும் எங்கே நடனம் ஆடினாலும் என் நெஞ்சம் அவரையே பற்றி அன்பு செய்கிறது. அவர் இடர் களையாமல் இருக்கட்டும். என் நெஞ்சம் அவர்பால் உள்ள அன்பைக் களையாது. எமக்கு இரங்காமல் கல் நெஞ்சராக இருக்கட்டும். அதனால் என் நெஞ்சம் கல்லாகாது. அது அவர்பால் உள்ள அன்பினால் நெக்குருகும். படரும் நெறி பணி யாமல் இருக்கட்டும். என் நெஞ்சம் அன்புப்பாதையில் செல்வதினின்றும் ஒழியாது."

காரைக்கால் அம்மையார் இப்படிச் சொல்கிறார். அவர் பேய்வடிவம் தாங்கியவர். அவருக்கு என்பருக்கோலமும் எரியாடுவதும் அச்சத்தை உண்டாக்குமா?

அவரிடம் உள்ள அன்பு எதையும் எதிர்பாராத அன்பு. இறைவன் உயிர்களிடம் எந்தக் கைமாற்றையும் எதிர் பாராமல் கருணை வைக்கிறான். அதை அவ்யாஜ கருணை என்பார்கள். சிறந்த அன்புடையவர்களும் இறைவனால் ஒரு லாபம் உண்டென்று கருதி அன்பு செய்வதில்லை. அவ்யாஜ ப்ரேமை அது. அதையே பிரேம பக்தி என்பார்கள். அவன் பால் அன்பு செய்வதே அவர்களுக்கு இன்பம்.

"கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

என்று சேக்கிழார் கூறுவார். முக்தியின்பத்தைக்கூட அவர்கள் வேண்டுவதில்லை.

அத்தகைய சீரிய அன்புடையவர் காரைக்கால் அம்மையார், அவருடைய நெஞ்சத்திலுள்ள அன்பு எதையும் எதிர்பாராத, எதற்கும் அஞ்சாத, என்றும் குறையாத பிரேம பக்தி, அதனால்தான் இப்படி வருகிறது பாட்டு :

**"இடர்களையா ரேனும், எமக்குஇரங்கா ரேனும்,**
**படரும் நெறிபணியா ரேனும்-சுடருருவில்**
**என்புஅருக் கோலத்து எரிஆடும் எம்மானார்க்கு**
**அன்பு அறாது; என்நெஞ்சு அவர்க்கு."**

சிவபெருமான் எம்முடைய இடரைக் களையார் என்றா லும், எம்பால் இரங்காமல் இருந்தார் என்றாலும், நாங்கள் செல்ல வேண்டிய வழியைக்கூடக் காட்டாராயினும் சோதி வடிவமுள்ள தம் திருமேனியில் எலும்புமாலை எப்போதும் நீங்காமல் இருக்கும் கோலத்தோடு, நெருப்பில் கூத்தாடும் எம் தலைவருக்கு என் அன்பு என்றும் அறாது; என் நெஞ்சு அவருக்கே உரியது; அவரையே கூட்டியும் பற்றுவது.

[பணியாரேனும் - காட்டாவிட்டாலும். என் நெஞ்சு என்பதை இடைநிலை விளக்காக்கி ·என் நெஞ்சு எம்மானார்க்கு அன்பு அறுது, என் நெஞ்சு அவர்க்கே என்று பொருள் செய்ய லாம்.

முதலில் எம் என்று பன்மையிற் சொன்னது தம்மைப் போன்ற அடியார்களையும் உள்ளிட்டு.

காரைக்காலம்மையார் பாடிய **அற்புதத் திருவந்தாதியில்** இரண்டாம் பாட்டு இது.

# 3. அவருக்கே

இறைவன் என்றும் இருக்கிறான். அவனுடைய அருளும் என்றும் இருக்கிறது. ஆனால் அந்த அருளைப் பெறுகிறவர்கள் மிகவும் அரியவர்களாகவே இருக்கிறார்கள்.

அருள் கிடக்கட்டும். உலக வாழ்க்கைக்கு இன்றியமையாதது பொருள். "பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு" என்று திருவள்ளுவரும், "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்" என்று மாணிக்கவாசகரும் சொல்கிறார்கள். உலகத்தில் பொருள் இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் எல்லோரிடமும் இருக்கிறதா? உலகத்தில் ஏழைகளே பெரும்பாலோர். ஏன்?

இதற்குத் திருவள்ளுவர் ஒரு காரணம் சொல்கிறார். இப்போது வறுமையாளர்களாக இருப்பவர்கள் முற்பிறவியில் நல்ல காரியங்களைச் செய்யாதவர்கள்; பிறருக்கு நன்மை பயக்கும் தொண்டுகளைச் செய்யாதவர்கள். உலகத்தில் மிகுதியான பேர்கள் தம் நலத்தையே கருதி வாழ்கிறார்கள். 'தமக்கென வாழாப் பிறர்க்குரி யாளர்' ஆகத் தவம் செய்வதில்லை. அதன் விளைவாகவே அவர்கள் மறுபிறப்பில் ஏழைகளாகப் பிறக்கிறார்கள். இந்த நிலை மாறுவதில்லை; அதனால் எப்போதும் ஏழைகள் பெரும்பான்மையாளராக இருக்கிறார்களாம்.

"இலர்பலர் ஆகிய காரணம்; நோற்பார்
சிலர்; பலர் நோலா தவர்."

மனிதன் உலகியலில் புகுந்து ஓரளவு முயற்சியினுல் பெற்று விடலாம் என்று நாம் நினைப்பதும், நிலையாததுமாகிய பொருளுக்கே முன்னைத் தவம் வேண்டும் என்ருல், எல்லாச் செல்வங்களுக்கும் மேலான செல்வமாகவும், என்றும் அழியாத இன்பத்தைத் தருவதாகவும் உள்ள அருளுககு எவ்வளவு காலம் தவம் செய்திருக்க வேண்டும்!

"நூதன விவேகி உள்ளம்
நுழையாது; நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி
புனிதனும் புருடனுமே"

என்று கைவல்ய நவநீதம் சொல்கிறது.

"பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சிக்கின்
நல்லறிவு சற்றே நகும்"

என்பது சைவ சாத்திரம்,

இப்படிப் பல பிறவிகளில் உண்டான சம்ஸ்காரத்தால் தான் பக்தியும் ஞானமும் உண்டாக வேண்டும். அந்தப் பக்தி யிலும் பல படிகள் உண்டு. பணக்காரர்களில் வேறுபாடு இல்லையா? லட்சாதிபதி என்கிறேம்; கோடீசுவரன் என்கிறேம் பெரு நிலக்கிழார் என்கிறேம்; ஜமீன்தார் என்கிறேம்; குறு நில மன்னர், மன்னர், சக்கரவர்த்தி என்றெல்லாம் இருந் தார்கள். பணமும் பதவியும் எவ்வாறு படிப்படியாக உயர்ந்து நிற்கும் என்பதை இந்தப் பெயர்கள் காட்டுகின்றன. அப்படித்தான் முக்தியை அடையும் வரையில் ஒருவனுடைய பக்குவம் படிப்படியாக உயர்ந்து வரும்.

மலையின் மேல் ஏறுகிருன்; பழனி மலையில் ஏறுகிருன் என்று வைத்துக் கொள்வோம். அவன் கீழே இருக்கும் போது ஊரிலே ஒருவனுக நிற்கிருன். படியிலே ஏறும் போது வரவர உயர்ந்து போகிருன். அவன்

பார்வை விரிகிறது. அவன் தண்டாயுதபாணியை நோக்கிப் போனால் ஊரே மறைந்து போகிறது. கொஞ்சம் கொஞ்சமாகப் படிகளும் மறைகின்றன. அவன் பின்புறத்தில் தானே அவை இருக்கின்றன? அவனுக்கு முன்னே உள்ள படிகளே தெரிகின்றன. விட்டுப் போனவை தெரிகிறதில்லை. மேலே போகப் போகப் பக்கத்தில் தோன்றிய காட்சிகள்கூடத் தெரிவதில்லை.

இப்போது கோவிலுக்குள் நுழைந்துவிட்டான். தண்டபாணியின் சந்நிதியில் அந்தப் பெருமானையே நோக்கிப் போகிறான். அங்கே நிற்கிறான். இப்போது அவன் எல்லாவற்றையும் விட்டுவிட்டு வந்தவனைப்போல நிற்கிறான். அவன் பார்வைக்கு முருகன் ஒருவனே தெரிகிறான். இதுகாறும் பழகின ஊரும் தெரியவில்லை. கடந்து வந்த படிகளும் தெரியவில்லை. இதுகாறும் காணாத ஆண்டவன் உருவந்தான் தெரிகிறது. அவனுடைய திருமுடி நன்றாகத் தெரிகிறது.

காரைக்காலம்மையார் இந்த உச்ச நிலையில் இருக்கிறார். படிகளையெல்லாம் கடந்து விட்டார் நேரே சிவபெருமானைப் பார்க்கிறார். வேறு யாரும் அவர் கண்ணிற் படவில்லை. அந்தப் பெருமானுடைய திருமுடி நன்றாகத் தெரிகிறது. அவர் சந்திர கண்டத்தை, நிலாத்துண்டைத் தலையிலே தரித்திருக்கிறார். பகுதியாகப் பகிர்ந்து போழ்ந்த மதிப்பிளவைத் தரித்திருக்கிறார். அவர் சடை, கொடிகள் ஒன்றோடு ஒன்று பிணைந்தது போலப் பின்னியிருக்கிறது, 'பின்னுசெஞ்சடை' அல்லவா?

இப்போது அம்மையார்முன் சிவபெருமான்; சிவபெருமான் முன் அவர். அவர் ஆட்கொண்டார். இவர் ஆளப்பட்ட ஆளாகிவிட்டார். அவர்களையன்றி மூன்றாவது பொருள் இல்லை.

இது வரையில் எதை எதையோ பார்த்த கண்களுக்குச் சிவபெருமான் ஒருவரே தெரிகிறார். இந்தப் பிறப்பிலே அவருக்கு ஆளாகிவிட்டமையால் இனி அந்த அடிமைச்

சாசனம் முறிபடாது. அவரோடு ஒட்டிக் கொள்ளும் வரைக்கும் இந்த அடிமைத் தன்மை, ஆளான தன்மை மாறுது. அவரல்லாத பொருள்கள் அம்மையார் கண்ணிலேயே படாதவை. அவர் முதுகுக்குப் பின்னலல்லவா அவை இருக்கின்றன? பார்த்தாலும் தெரியாத உயரத்துக்கல்லவா அவர் வந்து விட்டார்?

இப்போது சொல்கிருர். 'கொடி போன்ற சடையின் மேல் பகுதியாகப் பிளந்த திங்கட் பிளவைச் சூடும்' அவரைத் தரிசித்தபோது முதலில் அவரை வருணிக்கக் கூடத் தோன்றவில்லை, "அதோ! அதோ! அவர்!" என்ருர்.

"யார் அவர்? அவருக்கும் உங்களுக்கும் என்னதொடர்பு?"

"அவர் என் பிரபு; நான் அவருக்கு ஆள்."

"எப்போது இந்த உறவு ஏற்பட்டது?"

"எப்போதுமே இந்த உறவு உண்டு ஆனல் நான் இப்போதுதான் தெரிந்து கொண்டேன்."

"என்ன தெரிந்துகொண்டீர்கள்?"

"ஏழு வகைப் பிறவி என்று சொல்லுவார்கள். அப்படி வரும் பிறவிகள் இனி எத்தனை எடுத்தாலும் அவருக்கே நாம் ஆள் ஆவோம்."

பணக்காரர்கள் கர்வத்தால், 'நாம்' என்று சொல்லுவார்கள் பக்தர்கள் பெருமிதத்தால், இறைவருக்கு ஆட்பட்டோம் என்ற பெருமையால், நாம் என்று தன்மைப் பன்மையில் சொல்லுவார்கள்.

"நாம் ஆர்க்கும் குடியல்லோம்" என்று அப்பரடிகள் சொல்லவில்லையா? அதே சுருதியில் பேசுகிருர் காரைக்கால் அம்மையார்.

"அவர்க்கே எழுபிறப்பும் ஆள்ஆவோம்"

அவருடைய பெருமையுணர்ச்சி பேசுகிறது. "நாம் இப்போது ஆளாகி விட்டோம்; இனியும் பிறப்புண்டானாலும் ஏழு வகையாகத் தோன்றும் பிறப்பு எதுவானாலும் அவருக்கே ஆளாகியிருப்போம்" என்கிறார்.

ஏழுவகைப் பிறப்பாவன: தாவரம், நீர் வாழ்வன, ஊர்வன, பறப்பன, நாற்கால் விலங்கு, மக்கள், தேவர் என்னும் ஏழு.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்"

என்பதனால், ஊரும் புழுவுக்கும் இறையருளால் பக்தி உண்டாகலாம் என்பது தெரியவரும்,

ஆளாவதில் ஒரு பெருமிதம் இருக்கும். முதலில் விசுவாசத்துடன் வேலை செய்யப் புகுந்த ஆள், ஆசை மேலீட்டால் அந்த விசுவாசம் குறையும்படி போகலாம், இங்கே சிவபெருமானுக்கு ஆளாகிய அம்மையாருக்கு எப்போதாவது அன்பு குறையுமா?

"என்றைக்கும் அவருக்கே நாம் அன்பாக இருப்போம்" என்கிறார்.

**"அவருக்கே நாம் அன்பாவது."**

ஆளாக வந்தவனுக்கு வேறிடத்தில் வேறொருவர் அதிகக் கூலி கொடுப்பார் என்றால் அங்கே மனம் தாவும். ஆசைப்படுகிற மனம் ஓரிடத்தை விட்டு ஓரிடத்துக்குத் தாவுவதுதானே? பெரிய வள்ளல்கள் தம்மிடம் கொடை பெற்றவர்கள் வேறு ஒருவரிடம் போகாதபடி கொடுப்பார்களாம்.

"செருமான வேற்சென்னி தென்னுறந்தை யாந்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர்—ஒருநாளும்

பூதலத்தோர் தம்மைப் பொருள்நசையால் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்"

என்பது ஒரு பழம் பாடல். பொருள் செலவழிவது. அப்படி யிருந்தும் செலவு செய்யச் செய்யக் குறையாத செல்வத்தைப் பொருள் படைத்த வள்ளல்கள் கொடுப்பார்கள் என்றால், என்றும் அழியாத அருளைக் கொடுக்கும் சிவபெருமான், இன்னும் ஒருவரிடம் சென்று கை நீட்டும்படியா வைப்பார்?

ஆகவே, காரைக்காலம்மையார் சொல்கிறார்: "அவருக் குத்தான் நாம் அன்பாவோம்" என்றவர், "வேறு யாரிடமும் போகமாட்டோம்" என்று சொல்ல வருகிறார். சிவபெரு மானுக்கு ஆளாகிவிட்டால் வேறு ஒருவரிடமும் போக மனம் வருமா? அவசியந்தான் ஏது?

"வேறு யாரிடமும் போய் ஆளாக மாட்டீர்களா?"

இப்போது அம்மையார் அவர்தம் எசமான், தலைவர் யார் என்பதை அடையாளத்தோடு சொல்லி, "மற்றவர் களுக்கு எந்தக் காலத்திலும் ஆளாகய போவதில்லை" என்று உறுதியாக அடித்துப் பேசுகிறார்.

"அவருக்கே அன்பாவதன்றி, கொடி போன்ற சடையின் மேல் துண்டாகத் திங்கள் பிளவைச் சூடுகின்ற அந்தப் பெரு மானுக்கல்லாமல் வேறு ஒருவர்க்கு ஆளாவது இனி எந்தக் காலத்தும் இல்லை. எந்த நாளும் அவருக்கே ஆளாகக் கழியும்; அன்றி வேறு யாருக்கும் ஆளாகாமலே அந்த நாட்கள் போகும்."

"............அல்லால்—பவர்ச்சடைமேல்
பாகாப்போழ் சூடும் அவர்க்(கு) அல்லால்
மற்றொருவர்க்(கு)
ஆகாப்போம் எஞ்ஞான்றும் ஆள்."

'அவர்க்கு அல்லால் மற்றொருவர்க்கு எஞ்ஞான்றும் ஆள் ஆகாப்போம்' என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும். எஞ்ஞான்றும் என்பது எழுவாய்; போம்: பயனிலை. 'வேறு ஒருவருக்கு ஆளாகமலே எல்லா நாட்களும் கழியும்' என்பது பொருள்.

ஒருவருக்கே ஆளாவதும், அவருக்கே அன்புடைய ராவதும், அவரையன்றி வேறு யாரையும் மனத்தால் நினையாமல் இருப்பதும் உயர்ந்த பக்தியின் மூன்று படிகள். இந்த நிலைகளை இந்தப் பாட்டில் அம்மையார் காட்டுகிறார்.

**''அவர்க்கே எழுபிறப்பும் ஆளாவோம்; என்றும்**
**அவர்க்கேநாம் அன்பாவது; அல்லால்—பவர்ச்சடைமேல்**
**பாதுகாப்போழ் சூடும் அவர்க்(கு) அல்லால்,**
**மற்றொருவர்க்(கு)**
**ஆகாப்போம் எஞ்ஞான்றும் ஆள்''**

[கொடியைப் போலத் தோன்றும் சடையின்மேல் பகுத்த துண்டமாகச் சந்திரனின் பிளவாகிய பிறையைச் சூடும் அந்தச் சிவபெருமானுக்கே ஏழு வகையான பிறவிகளிலும் யாம் அடிமையாக இருப்போம்; எப்போதும் அவருக்கே நாம் அன்பராவது; இப்படி அன்றி அவருக்கல்லாமல் வேறு ஒருவருக்கு எந்த நாளும் ஆள் ஆகாமல் கழியும்.]

செய்யுளாதலால் சுட்டு முன் வந்தது. ஏகாரங்கள், பிரிநிலை; அன்பு ஆவது—அன்பராவது; குணத்தைக் குணியாகச் சொன்ன உபசார வழக்கு; பவர் - கொடி; பாகு - பகுத்த பாகம். போழ்-பிளவு; இங்கே சந்திரனுடைய பிளவாகிய பிறை ஆகாப்போம்-ஆகாமற் போகும்; தொகுத்தல்விகாரம்.

எஞ்ஞான்றும் போம் என்று முடிக்க, எஞ்ஞான்றும்; எழுவாய், ஆள்: இருபாலுக்கும் பொதுவாக நின்றது. "ஆள் வந்து நின்றெனது கண் மறைக்கவே" என்று பாரதியார் கண்ணம்மாவைச் சொல்வது காண்க.

சர்வசங்க பரித்தியாகம் செய்து இறைவர் ஒருவரையே சரணம் புகுந்த பிரேமபக்தி இது.

காரைக்காலம்மையார் பாடியருளிய **அற்புதத்திருவந்தாதியில்** மூன்றாவது பாட்டு இது.

# 4. என்ன காரணம்?

இறைவன் மெய்யடியவர்களை ஆட்கொள்ளும் முறை மிக மிக வியப்பதற்குரியது. அவர்கள் நினையாமல் இருக்கும் போதே அவன் வலிய வந்து தடுத்தாட் கொள்வான். உடைய வன், தன் உடைமையைத் தேடிக் கண்டுகொள்வதைப் போல அவன் தன்னுடைய அருளைப் பாய்ச்சுவதற்குரிய அன்பர்களைத் தேடிச் சென்று கருணை காட்டுகிறான்.

ஆளான பிறகு அந்த அடியவர்கள் அவனை விடுவதில்லை. ஆனால் அவனோ வேறு அன்பர்களைத் தேடிப் போய்விடுகிறான். சென்னையில் ரெயில்வே ஸ்டேஷனில் டாக்ஸிக்காரன் இப்போதெல்லாம் ஒரு காரியம் செய்கிறான். நம்மை, "வாருங்கள்" என்று வலிய அழைத்துக்கொண்டு போவரன். உடனே ஏற்றிக்கொண்டு போவதில்லை. "இன்னும் ஒருவரை அழைத்து வருகிறேன்" என்று நம்மை வண்டியில் உட்கார வைத்துவிட்டுப் புதிய ஆட்களைத் தேடிக்கொண்டு போய் விடுவான். அவன் மேலும் சிலரை அழைத்து வரும் வரையில் நாம் வண்டியில் பொறுமையாகக் காத்திருக்க வேண்டும். முதலில் டாக்ஸிக்காரன் வலிய வந்து அழைக்கும்போது, மகிழ்ந்து வண்டியில் ஏறிய நாம், இப்போது அந்த வண்டியை விட்டுப் போகவும் முடியாமல், அவன் வரும் வரைக்கும் பொறுமையோடு இருக்கவும் முடியாமல் தவிப்போம். அவன், தம் வண்டியில் ஏறினவர் இறங்கிப் போகமாட்டார் என்ற தைரியத்தில் வேறு ஆட்களை நாடிப் போய்விடுவான்.

அடியவர்கள் இறைவனைப்பற்றிச் சொல்வதைப் பார்த் தால் இந்த டாக்ஸிக்காரன் நினைவுதான் வருகிறது. "வலிய

வந்து தடுத்தாட் கொண்டான். ஆனால் பிறகு எம்மை அனுகி இன்பம் தராமல் அலைக்கழிக்கிறான்'' என்ற கருத்துப்பட அருளாளர்கள் பாடியிருக்கிறார்கள்.

'நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்' என்று திருநாவுக்கரசர் பாடுகிறார். வாழைக்குலையை மரத்திலிருந்து வீட்டுக்குக் கொண்டுவந்து, உடனே பயன்படுத்தாமல் அதை மூட்டம் போட்டுக் கனியவைக்கிற செயல்போன்றது, அடியாரான பிறகு நைய வைக்கிற செயல்.

''நல்லவர்களுக்குக் காலம் இல்லை. எத்தனையோ பக்தர் கள் இன்னல்படுகிறார்கள்'' என்று பலர் குறைப்படுவதை நாம் கேட்டிருக்கிறோம். அடுத்த வீட்டுப் பையன் பண்ணாத அக்கிரமமெல்லாம் பண்ணுவான். அவனை நாம் ஒன்றும் பண்ணுவதில்லை. நம் பையன் சிறு தவறு செய்தாலும் உடனே கண்டிக்கிறோம். நம் பையன் என்னும் உரிமை, அன்பு செய் வதற்கு மட்டுமா உரியது? கண்டிப்பதற்கும் உரியது. ஆகவே, இறைவன் தன்னால் ஆட்கொள்ளப்பட்டவர்களை உரிமை பற்றிச் சோதனை செய்கிறான்.

தங்கத்தை விலை கொடுத்து வாங்குகிறார்கள். தங்கமாக, தங்கக் கட்டியாக வாங்கியதை அப்படியே பயன்படுத்த முடியாது. அணிகலனாகச் செய்துதான் பூட்டிக்கொள்ள வேண்டும். அதற்காகத் தங்கத்தை உருக்கியும் தட்டியும் கம்பியாக நீட்டியும் பக்குவப்படுத்துகிறார்கள். அணிகலனாவ தற்குள் நெருப்பிலும் பட்டடைக் கல்லிலும் புகுந்து பலவகை யான சோதனைக்கு உள்ளாகிறது தங்கம்.

இறைவனும் மற்றவர்களையெல்லாம் ஒதுக்கிவிட்டுச் சிலரை ஆட்கொள்கிறான்; தங்கத்தை வாங்குவது போன்றது இது. அப்படி ஆளான அடியவர்களுக்குப் பலவகைச் சோதனை களை உண்டாக்குகிறான். அடியவர்களாகி விட்டபடியால் அவர்கள் இறைவனை விட்டு நீங்க முடியாமல் இறுகப் பிணைத்த அன்பில் மாறாமல் இருப்பார்கள். ஆனாலும் அவன்

அருளை முற்றும் பெறுமல் சோதனைகளுக்குள் அகப்படும் போது, "ஐயோ! அவன் அருள் கிடைக்கவில்லையே!" என்று ஏங்குவார்கள்.

இறைவனுக்கு ஆளாகிய பிறகும், இறைவன் அருளை முற்றப் பெற்றவர்களைப் போல் நாம் ஆகவில்லையே என்ற தாபம் மாணிக்கவாசகருக்கு இருந்தது.

"செழுக்கமலத் திரளனநின்
சேவடிசேர்ந் தமைந்த
பழுத்தமனத் தடியருடன்
போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப்
பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்குமனத் தடியேன்
உடையாய்நின் அடைக்கலமே"

என்று புலம்புகிறுர்.

இதே அநுபவத்தை நாயக நாயகி பாவத்தில் இராமலிங்க வள்ளலார் சொல்கிறுர். "அவன் என்னை அறியாத இளம் பருவத்தில் தானே வலியவந்து மகிழ்ந்து எனக்கு மாலை யிட்டான். மறுபடியும் வந்து பார்க்கவில்லை, எந்த மாயச் சிறுக்கி மந்திரம் போட்டாளோ?' என்கிறுர்.

"சித்தமணி அம்பலத்தான்
என்பிராணை நாதன்
சிவபெருமான் எம்பெருமான்
செல்வநட ராஜன்
வாய்த்தளை அறியாத
இளம்பருவந் தனிலே
மகிழ்ந்துவந்து மாலையிட்டான்
மறித்துமுகம் பாரான்

ஆய்த்தகலை கற்றுணர்ந்த
அணங்கனையார் தமக்குள்
ஆர்செய்த போதனையோ?........"

என்பது அவர் பாடல்.

இத்தகைய ஒரு நிலையில் நின்று காரைக்காலம்மையார் பாடுகிறார்.

"இறைவன் என்னை ஆட்கொண்டான்; அவனுக்கு ஆட்பட வேண்டும் என்ற எண்ணமே இல்லாதபோது, நான் விண்ணப் பித்துக்கொள்ளாமலே என்னை ஆட்கொண்டான். கேளாமலே கொடுக்கிற ஈகையைப் போன்றது இது.

"அப்போது அவனுடைய நீண்ட திருமேனியைத் தரிசித்தேன்; நெடிது உயர்ந்த திருமேனி அது. அந்தத் திருக்கோலத்தில் ஒன்லறக் கண்டேன். தூரத்லிருந்து பார்த்த போது ஒரே செம்மைமயம்; அந்திவண்ணன், தீ வண்ணன் என்றெல்லாம் சொல்வதற்குப் பொருத்தமாக அமைந்த வடிவம் அது. ஆனால் அவனை அணுகிப் பார்த்தபோது ஒன்றை உணர்ந்தேன். அவன் திருமிடறு சிவப்பாக இல்லை; மற்றொன்றாக, அந்த மேனி வண்ணத்துக்கு மாறாக இருந்தது. முழுச் சிவப்பில் அந்தக் கருமை நன்றாக விட்டு விளங்கியது."

"அவன் வடிவந்தான் முதல் பார்வையில் முழுச்செம்மை யாகத் தோற்றிப் பிறகு கழுத்துக் கறுப்புத் தோன்றியது என்று எண்ணினேன்; ஆனால் அவன் இயல்பும் அப்படித்தான் இருக்கிறது."

**"கேளாமை....எம்மைஆட் கொண்ட இறை"**

அவன் வடிவம் முதலில் செம்மையாகத் தோற்றியது பிறகு, நெருங்கியபோது,

'இங்கே கறுப்பும் இருக்கிறது' என்று தெரியவந்தது.

**"நீளாகம்; செம்மையான் ஆகித் திருமிடறு மற்றொன்றும்"**

"அவன் செய்யும் செயலும் இந்தக் கோலத்தை ஒத்தே இருக்கிறது. எப்படி?

"நான் விண்ணப்பம் போடாமலே என்னை வலிய வந்து ஆளாக்கிக் கொண்டான். ஆனாலும் என் அல்லல்கள் போக வில்லை. அவற்றைத் தீர்க்க எண்ணி அவனிடம் முறை யிட்டேன்; எவ்வளவோ வகையாக முறையிட்டேன். அவன் செவி கொடுக்கவில்லை. முன்பு வலிய வந்து அடிமை கொண்ட வன் இப்போது நாம் எத்தனை சொன்னாலும் கேளாமல் இருக் கிறானே; இது நியாயமா?

"இது பெரிய முரண்பாடு அல்லவா! அடிமையாவதுதான் அருமை. ஆட்கொள்வதும் அருமை. அதை எளிதில் வலிய வந்து செய்தவன், நினைத்தால் எளிதிலே என் அல்லலைப் போக்கிவிடலாமே! அவன் அதைச் செய்யவில்லையே! இதற்குக் காரணம் என்ன?

"அவன் திருமேனி சிவப்பாகத் தோற்றி அணுகியபோது திருமிடறு வேறு நிறமாக இருப்பதைப்போலவே, பெருங் கருணையுடையவனைப்போல வலிய வந்து ஆண்டுகொண்ட வன், என் அல்லலைத் தானாகவே அறிந்து போக்குவது முறை யாக இருக்க, நான் பலமுறை முறையிட்டும் கேளாமல் இருக் கிறான். இரண்டுக்கும் ஒரு பொருத்தம் இருக்கிறது."

இப்படி விளக்கம் கொள்ளும்படி அம்மையார் பாடுகிறார்.

**"ஆள்ஆனோம், அல்லல் அறிய முறையிட்டால்**
**கேளாத தென்கொலோ? கேளாமை—நீளாகம்**
**செம்மையான் ஆகித் திருமிடறு மற்றொன்றும்**
**எம்மையாட் கொண்ட இறை."**

[கேளாமை எம்மை ஆட்கொண்ட இறை—யாம் விண் ணப்பம் செய்துகொள்ளாமலே எம்மை அடியவராகக் கொண்ட இறைவன், நீள் ஆகம் செம்மையான் ஆகி-உயர்ந்த திருமேனி முழுச்சிவப்புடையவனாகி, திருமிடறு மற்றொன்று

ஆம் இறை—திருக்கழுத்து வேறொரு நிறமாகிய கறுப்பாக உள்ள இறைவன். ஆள் ஆனோம்—அவனால் வலிய ஆளப்பட்டு அடிமைகளாகிய யாம், அல்லல் அறிய—என் துன்பங்களைத் (தானே குறிப்பினால்) தெரிந்துகொள்ள வேண்டியவனாக இருக்க, அவ்வாறு செய்யாமையால் யாம் எம்முடைய துன்பத்தை அவன் அறியும்படி, முறை இட்டால்—எடுத்து விண்ணப்பித்துக் கொண்டாலும், கேளாதது—அதைக் கேளாமல் இருப்பது, என்கொலோ?—என்ன காரணமோ?

"வலியத் தானே வந்து ஆட்கொண்டவன், யாம் வலியச் சென்று முறையிட்டும் கேட்கவில்லையே!" என்கிறார்.

[கேளாமை ஆட்கொண்ட இறை. நீளாகம் செம்மையானதித் திருமிடறு மற்றொன்றும் இறை என்று கூட்டிப் பொருள் செய்யவேண்டும். கேளாமை—கேளாமல்; 'பொய் யாமை பொய்யாமை ஆற்றின்' என்பதுபோல, மல் ஈற்று வினையெச்சம் திரிந்து மையீறு பெற்றது. ஸ்ரீகண்டம்* என்று இறைவன் திருக்கழுத்தைச் சொல்வதுண்டு; ஆகவே திருமிடறு என்றார். மற்ற ஒன்று: செம்மையல்லாமல் மாறுபட்ட ஒன்று; கறுப்பு.

அறிய—அறியாதவன்போல் இருக்கும் இறைவன் அறிந்து கொள்ளும்படி, தம் குறையைத் தீர்க்கவேண்டும் என்று தலைவர்களிடம் விண்ணப்பித்தலை முறையிடுதல் என்று கூறுவது மரபு. முறையிட்டாலும் என்ற உம்மை தொக்கது. கேளாதது—கேளாத செயல். என் கொலோ: கொல், ஓ இரண்டும் அசை; என் என்பதே வினாப் பொருளைத் தருதலால் அவ்விரண்டும் அசைகளாயின.

தன்மைப் பன்மையால் சொன்னது, பிற அடியாரையும் உளப்படுத்தி.

காரைக்காலம்மையார் அடிக்கடி நீலகண்டத்தை குறிப்பது வழக்கம்.]

அம்மையார் அருளிச் செய்த **அற்புதத் திருவந்தாதியில்** 4-ஆவது பாடல் இது.

# 5. பொதுவும் சிறப்பும்

உலகத்தில் ஒரு வேடிக்கை நடக்கிறது. சுழல் சக்கரம், சுழன்று கொண்டே இருப்பது போல, உயிர்க் கூட்டங்கள் இங்கே வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கின்றன. ஆண்டுகள் ஆக ஆக, உலகத்தின் ஜனத்தொகை, பெருகிக் கொண்டே வருகிறது. இந்தப் புதிய மக்கள் எங்கிருந்து வருகிறார்கள்? இதற்கு முன் எங்கே இருந்தார்கள்? நூறு ஆண்டுக் காலத்தில் ஜனத்தொகை இரட்டித்து விடுகிறது. ஜீவர்களும் எங்கே இருந்தார்கள்.

உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்கள், அளவுக்கு அகப் படாதவை. ஜனத்தொகைக் கணக்கு, மனிதர்களின் கணக்கைத்தான் சொல்லுகிறது. மக்களையல்லாமல் எத்தனையோ கோடி கோடி உயிர்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. கண்ணுக்குத் தெரியாத பூச்சி முதல் மிகப்பெரிய காண்டாமிருகம் வரையில் பலபல பிராணிகள் உலகில் உயிர் வாழ்கின்றன. அந்த உயிர்கள் எப்போதும் அப்படியே இருப்பதில்லை. பிறந்தும் இறந்தும் மீட்டும் பிறந்தும் வருகின்றன. அப்படி வருகின்ற சுழற்சியில் அவை, வெவ்வேறு தறவிகளை எடுக்கின்றன. புழுவாக இருந்த உயிர், மறுபிறவியில் புழுவாகவே பிறக்கும் என்பது இல்லை. வேறு பிராணியாகவோ மனிதனாகவோ பிறக்கலாம். இப்படி மாறி மாறி வரும் பிறப்பின் மிக உயர்ந்தது மனிதம் பிறவி. இப்போது மனிதர்களின் தொகை மிகுதியாக இருக்கிறது. பல வகையான பிராணிகளின் தொகை குறைந்து விட்டது. அந்தப் பிராணிகளின் கணக்கை எடுப்பவர்கள்யார்? எத்தனையோ வகையான விலங்கினங்கள்

முன்பு இருந்தன என்றும் இப்போது இல்லாமல் ஒழிந்தன என்றும் ஆராய்ச்சி வல்லுநர்கள் சொல்கிறார்கள்.

இப்படி உயிர்கள் இறந்து, மீட்டும் வேறு வடிவெடுத்துப் பிறக்கும் செயல், இடைவிடாமல் நடந்து கொண்டே இருக்கிறது. நாடக மேடையில் வேறு வேறு கோலம் புனைந்து நடிகர்கள், வேறு நாடகத்தில், முன் நாடகத்தில் இல்லாத வேறுபட்ட கோலங்களைப் புனைந்து நடிக்கிறார்கள். இவ்வாறு அவர்களை நடிக்கும்படி இயக்கும் இயக்குநர் ஒருவர் இருக்கிறார். அவர், தாமே சில பாத்திரங்களாகச் சில சமயங்களில் வருவார். பல சமயங்களில் அவர், நடிக்காமலே நாடகத்தை நடத்துவதும் உண்டு. இவ்வாறு பிரபஞ்ச நாடகத்தை நடத்துகிற ஒருவன் இருக்கிறான்.

பொம்மலாட்டத்தில் திரைக்குப் பின் இருந்து, பொம்மைகளை ஆட்டுவிப்பது போல ஆட்டுகிற சூத்திரதாரி அவன். மாயை என்னும் திரையை நீக்கி அவனைப் பார்க்க வேண்டும்.

"குன்றாத மூவுருவாய் அருவாய் ஞானக்
கொழுந்தாகி அறுசமயக் கூத்து மாடி
நின்றாயே; மாயைஎனும் திரையை நீக்கி
நின்னையார் அறிய வல்லார்?"

என்கிறார் தாயுமானவர்.

இவ்வாறு உயிர்க்கூட்டங்களுக்கு உடம்பைக் கொடுத்துப் பிறக்கும்படி செய்கிற இறைவனே, அந்த உடம்பினின்றும் இறக்கச் செய்து, கோலத்தை மாற்றுகின்றான். அவன் எங்கும் இருப்பவன். அதனால் இறைவன் 'என்ற பெயர் வந்தது. இறை-தங்குதல். 'பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணன்' அவன். அவன் அவ்வாறு எங்கும் நிறைந்திருப்பதை நாம் காண முடிவதில்லை. ஆனாலும் பிரபஞ்சம் இயங்குவதைப் பார்க்கும் போது, 'ஜடமாகிய இதை உடனிருந்து இயக்குபவன் ஒருவன் இருக்க வேண்டும்'

"பிறவிப் பெருங்கடல்"

என்பது திருக்குறள்.

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத்து எவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு"

என்று பாடுபவர் மணிவாசகர்.

∴ ∴ ∴

இறைவன் இவ்வாறு பொதுவாக, எல்லா உயிர்களையும் சுழற்றி விட்டாலும் சில உயிர்களுக்குச் சிறப்பான நலத்தைச் செய்கிறான். மற்ற உயிர்களைப் போலப் பிறப்பதும் உலகியலில் சிக்கித் தடுமாறுவதும் இறப்பதுமாக இராமல், தமக்கு என்றும் உறவாக உள்ளவன் இறைவன் என்பதை, அந்த உயிர்கள் உணர்கின்றன.

இறைவனுடைய உண்மையை உணர்ந்த மெய்யன்பர்களே அவ்வுயிர்கள். தம் உடம்பை, நம் கண் காணத்தந்த தந்தை, இங்கே இருந்தாலும் உண்மையாகத் தம் பிறப்புக்கு மூல காரணமாக இருப்பவன் இறைவனே என்பதை உணர்ந்தவர்கள் அவர்கள். ஒவ்வொரு பிறவியிலும் எடுக்கும் உடம்புக்கு ஏற்றபடி ஒவ்வொரு தகப்பன் அமைகிறான். இறைவனோ எந்தப் பிறவியிலும் நமக்குத் தந்தையாக இருக்கிறான்.

தந்தை, தன் மகன் அறிவுடையவனாகத் திகழ வேண்டுமென்றும், நன்றாக வாழவேண்டுமென்றும் எண்ணி அவனுக்கு வேண்டியவற்றையெல்லாம் தருகிறான். மகன், தந்தையின் விருப்பப்படி ஒழுகா விட்டால் அத்தந்தை அவனை ஒறுத்து நல்ல வழியில் நிற்கச் செய்கிறான். மகனை ஒறுக்கும் தந்தையைப் பார்க்கும் போது, அவன் கொடியவனாகத் தோன்றுகிறான். ஆனால் தந்தையின் நோக்கம், மகனைத் திருத்த வேண்டும் என்பதுதான்.

உயிர்க்கூட்டங்கள் அறியாமை நீங்கி மெய்யறிவு பெற்று உய்ய வேண்டும் என்பதற்காக இறைவனும் எவ்வளவோ நலன்களைச் செய்திருக்கிறான். அறிவுமிக்க மனிதப் பிறவியை அளித்து, இனிப் பிறவாத நிலையை அடைவதற்கு ஏற்ற வழிகளை நல்லோர்களின் வாயிலாகக் காட்டுகிறான். நல் வழியில் நடவாத உயிர்களுக்குத் துன்பம் தந்து ஒறுக்கிறான்.

தந்தை, தான் பெற்ற செல்வத்தைத் தன் மக்களுக்குக் கொடுக்க விரும்புவான். இறைவனும், தன் அருளாகிய செல்வத்தை மக்களுக்கு வாரி வழங்கச் சித்தமாக இருக் கிறான். பொல்லாத குழந்தைகள், தந்தையை விட்டுப் பிரிந்து இன்னல் உறுவதைப் போல அறியாமை உள்ள வர்கள், இறை நெறியின்ின்றும் விலகி இடர்ப்படுவார்கள்.

இந்த உலகில் துன்பம் உண்டாவது இயற்கை.

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்"

என்பது மணிமேகலை. 'துன்யம் வரும் போது, அதை நீக்கிக் கொள்ள வேண்டும்' என்ற எண்ணம் உண்டாவதும் இயல்பு. 'துன்பம் இன்றி இன்பம் பெற்று வாழவேண்டும் என்றே யாவரும் விரும்புகிறார்கள். விரும்புவது வேறு; அதற்காக முயன்று அதை அடைவது வேறு. எளிதாகப் பணம் சம்பா திக்கத் தவறான வழிகளில் புகுகிறவர்களுக்கு இறுதியில் தண் டனையே கிடைக்கிறது. அதுபோல உரிய வழியில் போகாமல் பெற்ற உடம்பையும் வாழ்நாளையும் நேரிய முறையில் ஈடு படுத்தாமல் இன்பத்தை நாடிப்போகிறவர்களுக்கு இறுதியில் துன்பமே கிடைக்கிறது. 'யாரை அடைந்தால் நம் துன்பம் நீங்கும்?' என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

மனிதர்கள் யாவரும் குறை உடையவர்களே. அந்தக் குறைகளில் சிறிது, பெரிது என்ற வேறுபாடு இருக்கும். அருந் தாலும் குறை குறைதானே? குறை இருக்கும் வரையில், மனநிறைவு இராது; துன்பம் நீங்காது; கவலையே இருக்கும்.

அது போகவேண்டுமானால் குறைவிலா நிறைவாகிய ஆண்டவனை அணுகவேண்டும்.

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு)
அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது"

என்று திருவள்ளுவர் சொல்லவில்லையா?

'நம் குறையை அவன் தீர்ப்பான், இவன் தீர்ப்பான்' என்று யார்யாரையோ நம்பும் வழக்கம் நம்மிடம் இருக்கிறது. திரௌபதியைத் துச்சாதனன் மானபங்கம் செய்ய முற்பட்டான். அவளுக்குப் பாதுகாப்பாகக் கணவர் ஐவர் இருந்தனர். அப்போது அவர்களை நம்பிப் பயன் இல்லாமல் போயிற்று. அவையிலிருந்த உறவினர்களை நம்பினாள். அவர்களும் செயலற்றவர்களாக இருந்தார்கள். பெரியவர்கள் இருந்தார்கள். அவர்களை நோக்கி முறையிட்டாள். அவர்களாலும் அவளுக்கு நலம் செய்ய முடியவில்லை. 'தன் கையே தனக்கு உதவி' என்று இரு கைகளாலும் ஆடையைப் பற்றிக் கொண்டாள். அப்போதும் துச்சாதனனின் முரட்டுத்தனத்தை மாற்ற முடியவில்லை. கடைசியில், 'நீதான் சரண்' என்று கண்ணனையே புகலாக அடைந்து கை குவித்தாள். அவன் அப்போது அங்கே இல்லை. இல்லையென்று நினைப்பது? அவன் இல்லாத இடம் ஏது? 'இவனையன்றி வேறு புகல் இல்லை' என்ற உறுதியோடு, 'கோவிந்தா!' என்று அரற்றியபோது அவளுக்குப் பாதுகாப்புக் கிடைத்தது. ஆடை நீண்டுகொண்டே போயிற்று. துச்சாதனன் கைகள் சலித்தன.

யாரிடம் மனப்பூர்வமாக முறையிடவேண்டும் என்பது தெரிந்தபோது பாஞ்சாலிக்கு உதவி கிடைத்தது. அவன்தான் அப்படி உதவி செய்யமுடியும்.

இதை இறைவனுடைய அன்பர்கள் நன்கு அறிவார்கள்.

குழந்தையை யாராவது அடித்தால், 'அம்மா!' என்று தான் அழும். அம்மாவே அடித்தாலும், 'அம்மா!' என்று தான் அழும். அப்படியே பக்தர்களுக்கு உலகிலுள்ளவர்களால் துயரம் வந்தாலும் வேறு வகையாகத் துன்பம் வந்தாலும் இறைவனையே நோக்கி விண்ணப்பிப்பார்கள்; நைந்து புலம்புவார்கள்; இரங்குவார்கள் 'எம் தந்தையே!!' என முறையிடுவார்கள். அந்த முறையீட்டைக் கேட்டு ஆண்டவன், சும்மா இருப்பானா? எவ்வளவு கொடிய துயரமானாலும் அதை உடனே மாற்றிவிடுவான்.

**"இறைவனே, எந்தாய் எனஇரங்கும்**
**எங்கள்மேல் வெந்துயரம் வந்தால், அதுமாற்றுவான்."**

இறைவனை நோக்கி, 'எம் தந்தையே, அப்பா, பரம பிதாவே' என்று நைந்து உருகி இரங்குபவர்கள் அன்பர்கள். அவர்கள் தமக்குப் பற்றுக்கோடாக வேறு யாரையும் பற்றுவதில்லை. இறைவன் ஒருவனே புகலிடம் என்று புகுவார்கள். அது அவர்களுக்கு இயல்பு. அன்பின் நிலை அது.

அவர்கள் குரலைக் கேட்டு, யாருக்கு வந்த விருந்தோ இது?' என்று புறக்கணியாமல் உடனே அவர்களுடைய துயத்தை மாற்றுகிற கருணையாளன் இறைவன். அவன் ஒருவன்தான் அப்படிச் செய்ய முடியும்.

பொதுவாக, உயிர்க்கூட்டங்களின் வினைக்கு ஈடாக அவர்களைத் தோற்றுவித்தும் உடம்பினின்றும் பிரித்தும் செயல் புரியும் இறைவன், சிறப்பாகத் தன்னையன்றி வேறு யாரையும் புகலாக அடையாத அன்பர்களைத் துன்பத்தினின்றும் விடுவித்து, நலம் அருளுவான் என்ற கருத்தை இந்தப் பாட்டில் காரைக்காலம்மையார் வெளியிடுகிறார்.

**"இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான்; தோற்றி**
**இறைவனே ஈண(டு) இறக்கம் செய்வான்—இறைவனே**

"எந்தாய் எனஇரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான்."

[ஈண்டு - இப்பிரஞ்சத்தில்; இரங்கும் - வருந்தி நையும்; வெந்துயரம்-பிறரால் நீக்குவதற்கரிய துயரம், பிறப்பு, இறப்பு ஆகியவை; மாற்றுவான்-போக்குவான்.]

இது அற்புதத் திருவந்தாதியில் 5-ஆம் பாடல்.

# 6. என் நெஞ்சத்தான்

ஆண்டவன் எங்கே இருக்கிறான்? இந்தக் கேள்வியைக் கேட்பதைவிட, 'அவன் எங்கே இல்லை?' என்ற கேள்வி பயனுடையதாக இருக்கும். ஆண்டவன் இல்லாத இடமே இல்லை.

ஒரு நாள் ஔவைப்பாட்டி நெடுந்தூரம் நடந்து வந்து அலுப்போடு ஒரு கோவிலுக்குள் நுழைந்தாள். சந்நிதியில் உட்கார்ந்து இளைப்பாற எண்ணினாள். சுவாமிக்கு நேரே காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்துவிட்டாள்: அதை அங்கே இருந்த பையன் ஒருவன் பார்த்தான்; "பாட்டி, பாட்டி, சுவாமி இருக்கிறார்!" என்றான். உடனே பாட்டி சிரித்துக்கொண்டு, "அப்படியா? நான் கவனிக்கவல்லை. நான் கிழவி; மிகவும் அலுப்பாக இருக்கிறது. நீயே என் காலைச் சுவாமி இல்லாத இடமாகப் பார்த்துத் திருப்பி விட்டுவிடப்பா. உனக்குப் புண்ணியமாகப் போகும்" என்றாள். "சுவாமி இல்லாத இடமா?" பையன் யோசனையில் ஆழ்ந்து விட்டான்.

திருமாலின் அடியவரான கனகதாசர் இளம் பருவத்தில் ஒரு ஞானகுருவை அடைந்து பணிந்து உபதேசம் செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அவருடைய பக்குவத்தைத் தெரிந்து சொல்ல எண்ணினார் குருநாதர். கனகதாசர் கையில் ஒரு பழத்தைக் கொடுத்து, "இதை யாரும் இல்லாத இடத்தில் சாப்பிட்டு விட்டு வா" என்று பணித்தார்.

# 7. காரணமும் காரியமும்

இறைவனிடத்தில் ஈடுபடுவது என்பது எளிய காரியம் அன்று. அநாதி காலமாக நம்மைப் பிணித்துள்ள அவித்தை மிகவும் வலிவுடையது. இந்த உலகத்தில் உள்ள சூழ்நிலையோ மேலும் மேலும் பற்றுக்குள் ஆழ்த்துவதாக இருக்கிறது. இதனிடையில் தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாவது அருமையிலும் அருமை. மாணிக்கவாசகர், 'எத்தனையோ இடையூறுகளுக்குப் பிறகுதான் ஈசுவரபக்தி உண்டாகும்' என்று சொல்லுகிறார். அவர் ஒவ்வொன்றாக அடுக்கிச் சொல்லுகிற தடைகள் பலப்பல.

இறைவனுடைய திருவருள் இருந்தால்தான் அவனை வழிபடும் எண்ணம் உண்டாகும்.

"அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கி!"

என்பது திருவாசகம்.

"தவமும் தவம்உடையார்க் காகும்!"

என்பார் திருவள்ளுவர்.

ஒரு பிறவியிலே செய்யும் முயற்சியினால் நல்ல எண்ணங்கள் தோன்றுவதில்லை. பல காலம் செய்த பயிற்சி களாலே மனம் தெளிவடையும்.

"நூதன விவேகி உள்ளம் நுழையாது
நுழையு மாகில்
பூதசன் மங்கள் கோடி புனிதனும்
புருடனுமே"

என்று கைவல்ய நவநீதம் கூறும்.

நாம் உண்ணும் செயலை மிக எளிதாகச் செய்கிறோம். பசித்தவனுக்கு முன் சோற்றை வைத்தால் அவன் உடனே விரைவாக அதை உண்ணப் புகுகிறான். ஆகையால் 'சோற்றை உண்ணுவது நமக்கு இயற்கையாக அமைந்த காரியம் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் உண்மை அது அன்று.

பிறந்த குழந்தை பசியால் அழுகிறது. அதன் அருகில் பாலை வைத்தால் அது உண்ணாது. தாய் அதை ஊட்ட வேண்டும். குழந்தைக்குச் சோறு ஊட்டும் தாய் மலையைக் காட்டி, நிலாவைக் காட்டி, மல்லிகைப் பூவைக் காட்டி, ஊட்ட வேண்டியிருக்கிறது. அப்படி ஊட்டி ஊட்டிப் பழகிய பிறகே குழந்தை, தானாக உண்ணத் தலைப்படுகிறது.

மனிதனுக்கு இன்றியமையாத உணவை உண்பதற்கே இத்தனை பயிற்சி வேண்டுமானால். இறைவனை வழிபடு வதற்கும் அவனிடம் மனத்தைச் செலுத்துவதற்கும் எத்தனை பயிற்சி வேண்டியிருக்கும்!

எம்பெருமானுக்கு ஆட்பட்ட காரைக்காலம்மையார் தாம் பெற்ற பேற்றை நினைத்துப் பார்க்கிறார். இறைவன் கருணையினால், தாம் அவனுக்கு ஆளாகிய தன்மையை எண்ணி மனநிறைவோடு பேசுகிறார்.

"யான் முற்பிறவியில் நல்ல தவத்தைச் செய்திருக் கிறேன்" என்று பெருமிதத்தோடு சொல்கிறார். 'அது அகங்காரம் ஆகாதோ?' என்றால், ஆகாது. இறைவன் திருவருள் வலிமையை உள்ளத்துட் கொண்டது அது. நெடுந்தூரம் நடந்து அடைய வேண்டிய இடத்தை அடைந்து, கடந்து வந்த தூரத்தைத் திரும்பிப் பார்த்த போது நம் மனத்தில் ஒருவகை நிறைவு உண்டாகிறதே, அத்தகைய நிறைவோடு பேசுகிறார்.

**"யானே தவம்உடையேன்."**

இவ்வாறு சொல்வதற்குக் காரணம் என்ன? தவத்திஞல் உண்டான விளைவைக் காண்கிருர். முன்னைப் பிறப்பில் செய்த தவம் அவருக்கு நினைவு இராது. போன பிறவிகளைப்பற்றிய நினைவு நமக்கு இருப்பதில்லையே! ஆஞலும் இப்போது உள்ள நிலையைக் காணும்போது, 'இதற்குக் காரணமாக முன்னைப் பிறப்பில் தவம் செய்திருக்கவேண்டும்' என்ற எண்ணம் உண்டாகிறது. வித்தை நடும்போது பாராவிட்டாலும் விளைந்த மரத்தைப் பார்க்கும்போது, 'வித்தை நட்டு நீர் விட்டுப் பல ஆண்டுகள் அதை வளர்த்திருக்க வேண்டும்' என்று உய்த்துணர முடிகிறது அல்லவா?

அப்படி என்ருல், தவத்திஞல் உண்டான விளைவு என்ன? "அந்த விளைவு தவத்திஞல்தான் உண்டாயிருக்க வேண்டும்?" என்றுதான் சொல்ல வேண்டுமா?

'என்ன விளைந்தது?' என்பதைத் தெரிந்து கொண்டால் அதன் அருமைப்பாடு தெரியும்.

**''என் நெஞ்சம் நன்னெஞ்சம்.''**

''என்னுடைய நெஞ்சம் நல்ல நெஞ்சமாக இருக்கிறது; அதஞல் யான் முன்னைப் பிறப்பில் நல்ல தவம் செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது'' என்கிருர்.

நெஞ்சம் அல்லது மனம் மூன்று குணங்களைக்கொண்டது. சாத்துவிகம், ராஜசம், தாமசம் என்பன அவை. இந்த மூன்றிலும் தாமசமே எல்லோரிடத்திலும் ஓங்கியிருக்கிறது. அதஞல் மேலும் மேலும் பாவங்களைப் புரிந்து பாசத்துள் ஆழும் நிலை உண்டாகிறது. ராஜசமோ மேலும் மேலும் ஓடியாடி விவகாரங்களை மிகுதிப்படுத்திக்கொள்ளும் நிலையை உண்டாக்குகிறது. சத்துவம் தலைப்பட்டால்தான் உண்மை உணர்வும் மெய்ஞ்ஞானமும் உண்டாகும்.

மனத்தில் சத்துவகுணம் மிகுதி ஆக ஆக ஏனைய இரண்டு குணங்களும் மெல்ல மெல்லக் குறைந்து தேயும். சத்துவகுண

மனம் மற்றக் குணங்களை அழித்துவிட்டுப் பிறகு தன்னைத் தானே அழித்துக்கொள்ளும். அப்போது 'மனமற்ற பரிசுத்த நிலை உண்டாகும்.'

கிராமத்தில் பிணத்தைச் சுடும் வெட்டியான், தன் கையில் ஒரு மூங்கிலைக் கொண்டு விறகுகளைத் தள்ளி எரிப்பான். எல்லாம் எரிந்த பின் அந்தக் கோலையும் அதிலே போட்டு எரித்துவிடுவான். எல்லாவற்றையும் எரிக்க உதவும் அந்தக் கோல் தானும் நெருப்பிலே எரிந்துபோவது போலச் சத்துவ குண மனம் ஏனைய இரண்டையும் அழித்து விட்டுப் பின்பு ஞானக்கினியிலே தன்னையும் அழித்துக்கொண்டு விடும். இந்த மனநாசத்தால்தான் இன்பநிலை உண்டாகும்.

எனவே, சத்துவகுணம் தலையெடுக்கும் நெஞ்சம் நல்ல நெஞ்சம். அது நல்லவற்றையே எண்ணும், உடனுக்குடன் வரும் ஊதியத்தை எண்ணாமல் நீண்ட காலம் நிற்கும் இன்ப வாழ்வை எண்ணும்.

இப்படி ஒரு நல்ல நெஞ்சம் வாய்க்க வேண்டுமானால் அதற்கு எவ்வளவோ தவம்-சாதனம்-செய்திருக்க வேண்டும்.

மனத்தில் எழுவது ஆசை; அந்த ஆசையே பிறப்புக்குக் காரணம். அந்த ஆசை மண், பெண், பொன் என்று மூவகைப் படும். இவற்றின் இனமாக வீடு, சுற்றம், மைந்தர், பதவி, புகழ் முதலிய ஆசைகள் உண்டு. இத்தகைய ஆசைகள் மேலும் மேலும் துன்பத்தை உண்டாக்கிப் பிறவிக்குக் காரணமாகும்.

ஆனால் வேறு ஓர் ஆசை பிறவிக்குக் காரணம் ஆகாது. 'இறைவன் அருளைப் பெற வேண்டும்' என்ற ஆசை அத்தகையது. அந்த ஆசைதான் பக்தி, 'முக்தி பெற வேண்டும்' என்ற ஆசை அல்லது விருப்பம் நல்லது. அதை 'முமுட்சுத்துவம்' என்பார்கள். சாதன சதுஷ்டயங்களுள் ஒன்று அது. ஞானத்தைப் பெறுவதற்குரிய சாதனங்கள் நான்கினுள் முத்தியை விரும்பும் இச்சையும் ஒன்று.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை"

என்று வள்ளுவர் கூறுவர். எதையும் வேண்டாமை யாகிய நிராசையே ஞானத்தை உண்டாக்கும். ஆனால், 'பிறவாமை வேண்டும்' என்ற ஆசை உலகப் பொருள்களில் வைக்கும் ஆசையைப் போன்றது அன்று.

'பிறப்பை அறுக்க வேண்டும்' என்ற எண்ணம் எல்லா வற்றினும் சிறந்த எண்ணம். இறைவனிடம் வேண்டிக் கொள்வனவற்றில் மிகச் சிறந்த வேண்டுகோள் இது,

"வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து.
தம்மைஎல்லாம் தொழவேண்டிச்
சூழ்த்தமது கரமுரலும்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானும்உன்னைப் பரவுவனே"

என்று பாடுவார் மணிவாசகப் பெருமான்.

'பிறப்பறுக்கவேண்டும்' என்ற எண்ணமே மீதூர்ந்து நெஞ்சத்தில் எழுமானால் அந்த நெஞ்சம் நல்ல நெஞ்சம். காரைக்காலம்மையார். "என் நெஞ்சே நன்னெஞ்சம்" என்று சொன்னவர். அதற்குக் காரணம் இன்னதென்று புலப்படுத்துகிறார்.

**"யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்,"**

"நான் தொடர்ந்து அநாதியாக வரும் பிறப்பை அறுத்து விடவேண்டும் என்ற எண்ணத்தைக் கொண்டேன். அந்த எண்ணம் உண்டான நெஞ்சம் நன்னெஞ்சம்" என்று இணைத்துக்கொள்ளும்படி அடுத்தடுத்து வைக்கிறார்.

"யான் முற்பிறப்பில் தவஞ்செய்தேன்; அதனால் நல்ல நெஞ்சத்தைப் பெற்றேன்; அதனால் பிறப்பை அறுக்க எண்ணினேன்" என்று கூறுகிறார். முன்னையது காரணம்; பின்னையது காரியம் அல்லது விளைவு.

இவ்வாறு எண்ணுதற்குப் பயன் என்ன? இறைவனுக்கு ஆளாதல். பிறப்பறுக்க வேறு வழி இல்லை; இறைவனுக்கு ஆளாகி அவனடியைப் பற்றினால்தான் பிறவியினின்றும் மீள முடியும்.

> ''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவ னடிசேரா தார்''

என்று திருக்குறள் இதைத்தானே சொல்கிறது?

தவம் செய்வது அரும்பு; நன்னெஞ்சம் பெறுவது பூ; பிறப்பறுக்கும் எண்ணம் உண்டாவது காய்; இறைவன் அடியைப் பற்றிக்கொண்டு அவனுக்கு ஆளாவது கனி, கனி கைவரப்பெற்ற அம்மையார் முன்னை நிலைகளையெல்லாம் எண்ணிப் பார்க்கிறார்.

> **''யானே தவம்உடையேன்; என்னெஞ்சே நன்னெஞ்சம்;**
> **யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்—யானே**
> **..............................................................**
> **அம்மானுக்கு ஆளாயி னேன்.''**

அம்மான் எத்தகையவன்? அம்மான்—தலைவன்; கடவுள்.

ஆணவத்தை யானையாக உவமிப்பது வழக்கம். இறைவன் கஜாசுரனை அழித்து அவனுடைய தோலைப் போர்த்துக் கொண்டான். 'தன்னை அடைந்தாரை ஆணவ முனைப் பினின்றும் விடுபடச் செய்பவன் அவன்' என்பதை அந்த ஆனைத்தோல் காட்டுகிறது. நீர்வேட்கைஉடையவர்களுக்குத் தாகத்தைத் தீர்க்கத் தண்ணீர்ப் பந்தர் வைத்தவர்கள், 'தண்ணீர் அங்கே கிடைக்கும்' என்பதற்கு அடையாளமாகப்

பெயர்ப்பலகையையோ தண்ணீர் ஊற்றுவது போன்ற படத்தையோ அங்கே வைப்பார்கள். அதுபோல ஆண்டவன், 'தன்னை அடைந்தார்க்கு ஆணவத்தின் அல்லல் போகும்' என்பதற்கு அடையாளம் இட்டதுபோல் கைம்மா உரியைப் போர்த்திருக்கிறான்.

யானையை ஐம்பொறிகளுக்கு உவமை சொல்வதும் உண்டு. "உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்" என்ற குறளால் இதை உணரலாம். 'பொறி ஐந்தினாலும் துன்புறுபவர்களுக்கு இறைவன் அவை அடங்கும்படி அருள் செய்பவன் என்பதைக் காட்ட யானைத்தோல் போர்த்திருக்கிறான்' என்றும் கொள்ளலாம். அவனுக்கு ஆளாகிவிட்டால் பொறி அடங்கும்; ஆணவம் அகலும்.

அவன் நெற்றியிலே கண்ணை உடையவன். கண்ணுதலான் அது ஞானக்கண். இறைவனை அடைந்தவர்கள் ஞானத்தைப் பெறுவார்கள்.

அவன் வெண்ணீறு அணிந்த திருமேனியை உடையவன். எல்லாம் அழிந்த பிறகு எஞ்சியிருக்கும் திருநீற்றை அவன் பூசிக்கொண்டிருக்கிறான். உலகத்துப் பொருள்களையெல்லாம் எரித்தால் சாம்பல் ஆகிவிடும். அந்தச் சாம்பலைப் பின்னும் எரித்தால் அது சாம்பலாகவே நிற்கும். அப்படி, எல்லாவற்றையும் சங்காரம் செய்து தனிப்பொருளாகச் சர்வ சங்கார காலத்தில் எஞ்சியிருப்பவன் சிவபெருமான். அவனுக்கு அழிவு இல்லை, இதை அவன் அணிந்த திருநீறு காட்டுகிறது. அவன் நித்தியன். ஆதலின் அவனை அடைந்தவர்கள் என்றும் மாறாத நித்தியமான ஆனந்தத்தைப் பெறுவார்கள்.

சிவபெருமானுக்கு ஆளானவர்கள், அவன் கைம்மா உரி போர்த்தவனாதலின் அவனருளால் ஆணவம் நீக்கப் பெற்று, அவன் கண்ணுதலான் ஆதலின் ஞானம் கைவரப் பெற்று, அவன் வெண்ணீற்று அம்மானாதலின் என்றும் பொன்றாத நித்தியானந்தத்தைப் பெறுவார்கள்.

"அத்தகைய அம்மானுக்கு ஆளாயினேன்" என்று காரைக்காலம்மையார் சொல்கிறார். பல பிறவியிலும் தவம் செய்து அதன் பயனாகச் சத்துவகுணம் ஓங்கி நிற்கும் நெஞ்சத்தைப் பெற்று. அதன் பயனாகப் பிறப்பை ஒழிக்கும் இச்சை சிறந்து, இறைவனடிக்கு ஆளானால், பிறப்பற்ற நித்திய சுகம் கிடைக்கும். இதையே ஒரு பாட்டில் அம்மையார் சொல்கிறார்.

**"யானே தவம்உடையேன்; என்நெஞ்சே நன்னெஞ்சம்;**
**யானே பிறப்பறுப்பான் எண்ணினேன்;—யானேஅக்**
**கைம்மா உரிபோர்த்த கண்ணுதலான், வெண்ணீற்ற**
**அம்மானுக்(கு) ஆளாயி னேன்.**

[யான் தவம் உடையேன்; என் நெஞ்சு நல்ல நெஞ்சு; யான் பிறப்பறுக்க எண்ணினேன். யான் அந்த யானை உரியைப் போர்த்த நெற்றிக்கண்ணனும் வெண்ணீற்றை அணிந்த பெருமானுமாகிய சிவபெருமானுக்கு ஆளாகி விட்டேன்.

ஏகாரங்கள், தேற்றம். பிறப்பறுப்பான் — பிறப்பை அறுக்க. அ : உலகறி சுட்டு, கைம்மா—துதிக்கையையுடைய விலங்கு; யானை. உரி—தோல். கஜாசுர சங்காரம், இறைவன் செய்த எட்டு வீரச்செயல்களுள் ஒன்று. வெண்ணீற்ற-வெண்ணீற்றை அணிந்த. அம்மான்-தலைவன்.]

**இது அற்புதத்திருவந்தாதியில் 7-ஆவது பாட்டு.**

# 8. அவன் அருளின் தன்மை

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்பது திருக்குறள். பிறவி பெற்ற பயன் இனிப் பிறவாமல் இருக்கும் வழியைத் தேடிக் கொள்வது, பிறப்பு என்பது துன்பத்தையே தருவது, பிறவாமை இன்பத்தைத் தருவது,

"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்
பிறவார் உறுவது பெரும்பே ரின்பம்"

என்பது மணிமேகலை. எனவே துன்பம் நீங்கி என்றும் பொன்றாத இன்பம் பெற வேண்டுமானால் பிறவியை ஒழிக்க வேண்டும். அதற்கு வழி எது?

இறைவன் திருவடியைப் பற்றிக்கொண்டு அவனுக்கு அடிமையாகி விட்டால் பிறப்பு என்னும் துயரைப் போக்கிக் கொள்ளலாம்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்"

என்பது திருக்குறள். இறைவனடியை இடையறாது சிந்தித்து அவனுக்கு அடியாராகி நிற்கும் அன்பர்கள் பிறவிக்கடலை நீந்துவார்கள். பொறிகள் போனவழியே போய் மனத்துக்கு அடியாராகிறவர்கள் மேலும் மேலும் பிறவிக்கடலில் ஆழ்ந்து அல்லல் படுவார்கள். கடலில் ஆழ்கிறவனுக்குப் புணை கிடைத்தாற்போல இருப்பது இறைவன் திருவடி. அதனைப் பற்றிக்கொள்கிறவர்கள் பிறவிக்கடலில் ஆழாமல் உய்தி பெறலாம்.

ஓடத்தில் ஏறி அக்கரையில் கால் வைத்த அந்தக் கணத்தில் நாம் ஆற்றினைக் கடந்தவராகிவிடுகிறோம். அதுவரைக்கும் ஆற்றில்தான் இருப்போம். இறைவனுக்கு ஆட்பட்டவுடனே நாம் இனிப் பிறவாத நிலையை அடைவோம்.

"மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப்
பாத மேமனம் பாவித்தேன்;
பெற்ற லும்பிறந் தேன்; இனிப் பிற
வாத தன்மைவந்(து) எய்தினேன்"

என்று **சுந்தரர்** உறுதியாகச் சொல்கிறார். இறைவன் பாதத்தை மனத்தினால் பற்றி அவனுக்கு அடிமை ஆகிவிட்டால் பிறகு பிறவித்துன்பம் இல்லாமற் போய்விடும்; இப்பொழுது எடுத்துள்ள பிறவியே இறுதியான பிறவியாக இருக்கும்.

காரைக்கால் அம்மையார் இந்தக் கருத்தைச் சொல்ல வருகிறார்.

"நான் எம்பிரானுக்கு அடிமை ஆகிவிட்டேன்" என்று தொடங்குகிறார்.

**"ஆயினேன் ஆள் அவனுக்கு"**

இப்படி உறுதியாகச் சொல்லும் நிலை எல்லோருக்கும் வராது. எல்லாப் பொருள்களிலும் பற்று விட்டபோதுதான் இறைவனை உறுதியாகப் பற்றும் திறம் வரும். இறைவனை உறுதியாகப் பற்றுதற்கு இடையூறாக இந்தப் பிரபஞ்சமே குறுக்கே நிற்கிறது. நம்முடையே மனமே தடுக்கிறது.

"நூறு நூறு மாயா சக்திகள்
வேறு வேறுதம் லீலை தொடங்கின"

என்று பாடுவார் **மணிவாசகர்**. இறைவன் திருவடி ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு, அதனைக் குலைக்க வரும் பிரபஞ்ச வாசனையை உதறித் தள்ளிவிட்டு, இறைவனுக்கே ஆளாவது அரிதிலும் அரிய செயல்,

"சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே யாம்என்றும் மீளா ஆளாக்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே"

என்று அப்பர் பெருமிதத்தோடு சொல்வார். அந்த நிலை எல்லோருக்கும் எளிதில் வந்துவிடுமா? ஆகவே,

**"ஆயினேன் ஆள் அவனுக்கு"**

என்று காரைக்காலம்மையார் சொல்லும்போது, உலக முழுவதுமே எதிர்த்து நின்று போராட அதற்கு எதிரே தனி ஒருவர் போராடி வென்றால் எவ்வளவு பெருமிதம் இருக்குமோ அவ்வளவு பெருமிதமும் மனநிறைவும் அதில் தொனிக்கின்றன.

அந்த மனநிறைவுக்கு மேல் ஓர் அநுபவ அதிசயம் வருகிறது. "நான் ஆளான அந்தக் கணத்திலே எனக்கு ஓர் அரிய பேறு கிடைத்தது; அப்பொழுதே நான் இனி ஒரு தாயின் வயிற்றிலே சென்று பிறவாத நிலையை அடைந்தேன்" என்கிறார்.

**"அன்றே பெறற்கு அரியன் ஆயினேன்."**

ஆளான அப்போதே, ஒருவரால் என்னை மகவாகப் பெறுதற்கு அரியன் ஆகிவிட்டேன்.

இதை எப்படி உறுதியாகச் சொல்லலாம்?

துரத்தித் துரத்தி விளையாடும் விளையாட்டு ஒன்று உண்டு. அதில் பல பிள்ளைகள் துரத்தி விளையாடுவார்கள். தாய்ச்சி என்று ஒரு பெண் திண்ணையில் அமர்ந்திருப்பாள். அவளைத் தொட்டுவிட்டால் அப்புறம் மற்றப் பிள்ளைகள் அந்தக் குழந்தையைத் துரத்துவது நின்றுவிடும். அதுபோலக் கர்மம் நம்மைத் துரத்திக்கொண்டே வருகிறது. நாம் பிறவியென்னும் பாதையில் ஓடிக்கொண்டே இருக்கிறோம். இறைவன் அடியைப் பற்றிக்கொண்டு விட்டால் கர்மம் நின்றுவிடுகிறது; ஓட்டமும் நின்றுவிடுகிறது.

இறைவனுக்கு அடிமையானவர் இனிமேல் யார் வயிற்றி றிலும் பிறக்கமாட்டார்கள்.

"ஈன்றெடுப் பாள்ஒரு தாயும் இல்லை"

என்பது அபிராமி அந்தாதி, "எப்போது இறைவனுக்கு நான் அடிமை ஆனேனே, அப்போதே இனிப் பிறவாத தன்மையை அடைந்துவிட்டேன், வேறு ஒருவர் என்னைப் பெறுகின்ற அவசியம் இல்லாத நிலை வந்துவிட்டது. யாராலும் பெறுவ தற்கு அரிய நிலையை உடையேன் ஆயினேன்" என்கிறார் அம்மையார்.

இதற்குக் காரணம் என்ன? "என்னுடை முயற்சி அன்று, என்னுடைய தகுதியும் அன்று, இறைவனுடைய எல்லையற்ற அருளே இந்த அற்புதத்தை நிகழ்த்தியது" என்று சொல்ல வருகிறார், வேதியினால் தொட்ட மாத்திரத்திலே செம்பு பொன்னாகி விடுவது போல, அவனடி தொட்டு ஆளான மாத்திரத்தில் பிறவித்துன்பம் ஒழிந்துவிட்டது, செம்புக்கா பெருமை? வேதி செய்த மாற்றத்துக்கல்லவா பெருமை? இங்கே இறைவனுக்கு அடிமையானது பெரிது அன்று;அடிமை யானவுடனே பிறவித் துன்பம் நீங்கியதுதான் பெரிது. அந்த விளைவு எதனால் உண்டாயிற்று? இறைவனுடைய திருவரு ளால், பிறப்பறுத்தது அற்புதம் என்றால், அந்த அற்புதத்தை நிகழச் செய்த இறைவன் திருவருள் அற்புதத்திலும் பெரிய அற்புதம்.

"அஃதன்றே ஆமாறு....அருள்!"

"அதுவல்லவா இறைவன் அருள் ஆமாறு" என்று வியக்கிறார்.

இறைவனை எப்படிச் சொல்கிறார்?

அவன் தூய்மையான புனலையுடைய கங்கையைத் தாங்கி யிருக்கிறான். எல்லாவற்றையும் புனிதமாக்கும் தன்மை யுடையது கங்கை. அதை ஆண்டவன் தலையில் தாங்கியிருக்

கிறான். அவனுடைய தோற்றம் மாசுமறுவற்ற தங்கமலை யாகிய மேருவைப்போல இருக்கிறது. அவன் திருக்கரத்தைப் பார்த்தால் அங்கும் தூய்மையைத் தரும் பொருளாகிய நெருப்பு இருக்கிறது, எல்லாவற்றையும் தூய்மைப்படுத்துவது தீ. தலையிலும் கையிலும் ஆண்டவன் தூய பொருள்களை, பிற வற்றைத் தூய்மையாக்கும் பொருள்களைத் தாங்கியிருக்கிறான் இரண்டும் ஒரே தன்மையுடையன அல்ல. ஒன்று தண்ணிய புனல்; மற்றொன்று வெவ்வியக் கனல். ஒன்று நனைத்துத் தூய்மையாக்கும்; மற்றொன்று எரித்துத் தூய்மையாக்கும். ஒன்று கீழே இழிந்து சென்று தூய்மையாக்கும்; மற்றொன்று மேலே எழுந்து தூய்மையாக்கும். இந்த இரண்டையும் தாங்கிக்கொண்டு பொன்மலையைப்போலத் தேசும் தூய்மை யும் வடிவாக நிற்கின்றான் இறைவன்.

**"புனற்கங்கை ஏற்றான்; ஓர் தூய பொன்வரையே**
**போல்வான்;**

**அனற்கு அங்கை ஏற்றான்."**

[பரிசுத்தமுள்ள புனலாகிய கங்கையைத் திருமுடியிலே தாங்கியவன்; பொன்மலையாகிய மேருமலையைப்போல் தோன்றுவான்; அனலை அங்கையால் தாங்கினவன்.]

"அஃது அன்றே அருள் ஆமாறு!" என்று வியக்கிறார். உலகில் ஒருவரை அண்டி நடையாக நடந்தால் ஏதோ சிறிதளவு பயன் கிடைக்கும். அவ்வாறன்றி அணுகியவுடனே முழுப்பயனும் கிடைத்தால் அது பெருவியப்பல்லவா? கொடுப்பானுடைய வண்மைத் திறத்தை அது காட்டும். அது போல, "நான் ஆளான அப்போதே பிறவித்துன்பம் போய் விட்டது. அதுதான் இறைவன் அருள் இருந்த வண்ணம்!" என்று அம்மையார் வியப்பு மீதூரக் கூறுகிறார்,

**"ஆயினேன் ஆள்அவனுக்(கு); அன்றே பெறற்கரியன்**
**ஆயினேன்; அஃதன்றே ஆமாறு-தூய**
**புனற்கங்கை ஏற்றான்,ஓர் பொன்வரையே போல்வான்,**
**அனற்கங்கை ஏற்றான் அருள்!"**

[இறைவனுக்கு நான் அடிமை ஆனேன்; ஆன அப்பொழுதே யாராலும் மகவாகப் பெறுதற்கு அரியேன் ஆகிப் பிறவித் துயரைக் கடந்துவிட்டேன்; அஃது அல்லவா, புனிதமான புனலையுடைய கங்கையைத் திருமுடியிலே தாங்கியவனும் ஒப்பற்ற பொன்மலையாகிய மேருவைப் போன்ற தோற்ற முடையவனும் அனலை உள்ளங்கையிலே தரங்கினவனுமாகிய ஆண்டவன் அருள் இருக்கும் வண்ணம்?]

[ஆள் - அடிமை; இருபாலுக்கும் பொதுவான சொல்; "ஆங்கப் பொழுதி லென்றன் பின்புறத்திலே, ஆள்வந்து நின்றெனதுகண் புதைக்கவே" என்று கண்ணம்மாவைப் பாரதியார் 'ஆள்' என்று சொல்வது காண்க. அவனுக்கு: செய்யுளாதலின் சுட்டு முன்வந்தது. பெறற்கு—குழந்தை யாக ஈனுவதற்கு; அரியன்: அருமை, இன்மையைச் சுட்டியது. அரியன் என்பது படர்க்கை ஆண்பால் ஒருமை அன்று, பாடு கிறவர் அம்மையாராதலின். 'அன்' ஈறு தன்மைக்கும் வரும்; இங்கே இது தன்மைக் குறிப்பு வினையாலணையும் பெயர். அஃது என்றது பிறவாமையைப் பெற்ற அது என்றவாறு. நான் அடிமையான செயல் பிறவி ஒழிதற்குக் காரணம் அன்று; அடிமையான என்னை, 'துன்பத்தினின்றும் நீக்க வேண்டும்' என்று இறைவன் திருவுள்ளத்திற் கொண்ட அருளே காரணம் என்றபடி, காலில் விழுந்தானை உதைத்துத் தள்ளுவாரும் உளராதலின், 'இறைவன் அத்தன்மையன் அல்லன்' என அவன் அருள் தகைமையை வியந்தார்.

[ஆம் ஆறு—ஆகும் வண்ணம், அருள் ஆம் ஆறு—அருள் செயற்படும் விதம். 'தூய பொருள்களைத் தலையாலும் கை யாலும் தாங்கும் அவன், தூயனல்லாத என்னையும் ஏன்று நலம் செய்தான்' என்றதனுல் அவன் அருளின் பெருமை புலப் பட்டது.

"பொன்னுர் மேனியனே", "பொன் வண்ண மெவ் வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்று

வரும் அருளாளர் திருவாக்குகளுக்கு ஒப்ப, ''ஓர் பொன் பொன் வரையே போல்வான்'' என்ருர்.

[அனற்கு அங்கை ஏற்ருன்—அனலை அங்கையில் தாங்கின வன். அனற்கு: உருபு மயக்கம். அகம் கை என்பன அங்கைஎன இணைந்தன; உள்ளங்கையைக் குறிப்பது. 'அஃதன்றே அருள் ஆமாறு' என்று கூட்டிப் பொருள் உரைக்க.

மற்ருேர் பற்றின்றி இறைவனைப் பற்றி ஆளாகும் அடிய வர்கள் பிறப்பை அறுப்பார்கள் என்பது கருத்து.

**அற்புதத் திருவந்தாதியில்** 8-ஆம் பாட்டு இது.

# 9. எல்லாம் அருளே

இறைவனுடைய திருவருள் பெற்றவர்கள் எல்லா வகையான நன்மைகளையும் பெறுவார்கள். "இம்மை யேதரும் சோறும் கூறையும், ஏத்தலாம்; இடர் கெடலும் ஆம், அம்மையேசிவ லோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே" என்பார் சுந்தர மூர்த்தி நாயனார். இம்மை மறுமை, வீடு என்று மூன்று நிலை, இந்த உலகவாழ்வு இம்மை; அதிலும் எல்லாப் போகங்களையும் பெறலாம்; மறுமை என்பது இப்பிறவியின் பின் வரும் வாழ்வு; அப்போது சொர்க்க போகம் பெறலாம். அதற்குமேல் முத்தி இன்பத்தைப் பெறலாம்.

இறைவன் அருள் இருந்தால் இந்த உலகத்தை ஆளும் மன்னவனாக இருக்கலாம்; பிறகு தேவருலகத்தை ஆளும் இந்திரனாகலாம்; பிரமலோகம் முதலியவற்றை ஆளும் பதவிகளும் கிடைக்கும். எல்லா உலகங்களையும் ஆளும்படி செய்வது இறைவன் திருவருள்.

**"அருளே உலகெலாம் ஆள்விப்பது."**

இகலோகத் தலைமையையும் பிறலோகத் தலைமையையும் தரும் அந்த அருள் பிறகு பிறப்பை அறுத்து மோட்சப் பதவியைத் தரும்.

**"ஈசன்**
**அருளே பிறப்பறுப்பது."**

உலகத்தில் இறைவன் திருவருளைப் பெற எண்ணுகிறவர்கள் இரண்டு வகையினர். ஒருவகையினர் பதவியைப்

விரும்புகிறவர்கள்; காம்யார்த்தமாகப் பக்தி பண்ணுகிற வர்கள் மற்ருெரு வகையினர். பிறப்பை அறுத்து வீட்டின்பம் பெறவேண்டி இறைவன் திருவருளை நாடுகிறவர்கள். இறைவன் அருளால்தான் இந்த நலங்களெல்லாம் கிட்டும், அவன் அருள் இல்லாவிட்டால் ஆளும் பதவி கிட்டாது. அதுதான் எல்லாவற்றையும் ஆள்விப்பது; முக்தியைத் தருவதும் அதுதான்.

இப்படித்தான் எல்லோரும் சொல்கிருர்கள்; நல்ல அநுபவம் உண்டாளுல் நன்மை உண்டாகும், ஏதேனும் ஊதியம் கிடைத்தால், அது இறைவன் திருவருளால் உண்டானது என்று அன்பர்கள் எண்ணுகிருர்கள்' ஆளுல் காரைக்காலம்மையார் மனப்பான்மையோ வேருனது,

பக்தர்கள் தமக்குத் துன்பம் உண்டாளுல், 'இறைவன் அருள் நமக்குக் கிடைக்கவில்லை' என்று எண்ணுவார்கள். யாரேனும் துன்புறுத்திஞல், 'இறைவன் திருவருள் துணை இல்லாததஞல் வந்த விளைவு' என்று நினைப்பார்கள், இன்பம் வருவது அருளால் என்றும்; துன்பம் வருவது தம் வினையால் என்றும் நினைத்து அழுங்குவார்கள்.

காரைக்காலம்மையார் அப்படி நினைப்பவர் அல்ல. அவர் இறைவனுடைய அருளையே துணைக்கொண்டு மெய்ப் பொருளை ஆராயும் நியமம் உடையவர். "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றபடி அருளாலே எவற்றையும் பார்க்கிறவர். அறிவாலே பார்ப்பது ஒன்று; அருளாலே பார்ப்பது வேறு ஒன்று, அறிவாலே பார்ப்பவர்க்கு வழி மட்டும் தெரியும்: அதற்கு மேல் அருளாலே பார்ப்பவர் களுக்கு அநுபவம் உண்டாகும்,

"அருளாலே எவையும்பார் என்ருன்—அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன;

இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி”

என்பார் தாயுமானவர்.

“அருட்கண்ணுல் நோக்காதார் அல்லாதாரே” என்பது அப்பர் திருவாக்கு.

காரைக்கால் அம்மையார் அறிவால் ஆராயும் நிலை கடந்து, ஆண்டவன் அருளாலே எது மெய்யான பொருள் என்று நோக்கும் நிலையைப் பெற்றவர். அதுவே வியாதியாக நியமமாக உடையவர். அவர் இறைவன் அருளை இவ்வாறு காண்கிருர்,

அழகுள்ள இடத்தில் ஆண்டவன் அருள் நிரம்பியிருக் கிறது. என்று நாம் நினைக்கிரும். இன்பம் உள்ள இடத்தில் ஆண்டவன் திருவருள் உள்ளதென்று சொல்கிரும். அழுக்கான இடத்தில் ஆண்டவன் அருள் இல்லை என்கிரும். அவன் வாழ்வு உள்ளவரை ஆண்டவன் அருளற்றவர் என்று கருதுகிரும்.

நமக்கே துன்பம் வரும்போது இறைவன் அருள் செய்ய வில்லையே என்று வருந்துகிரும்,

காரைக்காலம்மையார் எப்போதும் எந்தப் பொரு ளிலும் எந்த அநுபவத்திலும் எந்த நிகழ்ச்சியிலும் அருளையே பார்க்கிருர். அது எப்படி?

எல்லாம் அவன் வடிவம், எல்லாம் அவன் செயல் என்று உணரும் நிலையை அடைந்தவர்களுக்கு எல்லாம் இறைவன் அருள் விளையாட்டு என்ற அநுபவம் கிடைக்கும் தமக்கு இன்பம் உண்டாகும்போது இறைவன் அருட்பிரசாதம் என்று மகிழ்வது யோலவே, துன்பம் உண்டாகும்போதும் அதுவும் இறைவன் அருட் பிரசாதம் என்றே எண்ணுவார்கள். கணவன் காலால் உதைத்தால் அவன் காலின் பரிசம் கிடைத்ததே என்று மகிழும் கற்புக்கரசி போன்றவர்கள்

இந்த நிலையில் உள்ள பக்தர்கள், துன்பம் வந்தால், இறைவன் நம்மைத் தூய்மைப் படுத்த நல்கிய மருந்து என்று கொள்வார்கள். நோய் உள்ளவன் மருத்துவன் தரும் மருந்தை, விலை உயர்ந்தது, நன்மை தருவது என்று எண்ணி உண்ணுவதுபோல, துன்பங்களையும் இறைவன் அருளால் விளைந்தவை என்று கொள்வது முறுகிய அன்புடையார் இயல்பு.

"இடும்பைக் கிடும்பைப் படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்"

என்று திருவள்ளுவர் சொல்கிறார். துன்பங்களை மன மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறவர்கள் அந்தத் துன்பத்துக்கே துன்பத்தைத் தருவார்கள். அத்தகைய திண்ணமான மனம் எப்படி வரும்? இறைவன் திருவருட் சார்பாலே யாயற்றையும் காணுபவர்கள் அந்த நெஞ்சத் திண்மையைப் பெறுவார்கள். இதை அம்மையார் சொல் கிறார்

"—அருளாலே
**மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்; எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவது எனக்கு."**

எல்லாம் கடவுள் மயம் என்று பார்க்கும் திவ்ய தரிசனத்தைப் பெற்றவர் அம்மையார், ஆதலின் அவர் அபேதமான காட்சியையே காணுகிறார்; அபேத அநுப வத்தையே பெறுகிறார். எல்லாம் அருள் மயமாகப் பார்க்கிறார்.

**"அருளே உலகெலாம் ஆள்விப்ப(து), ஈசன்
அருளே பிறப்பறுப்பது: ஆனல்— அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன், எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ(து) எனக்கு."**

[பிறருக்கெல்லாம் சிறந்த பதவிகளைக் கொடுத்துப் பலவகை உலகங்களை ஆள்விப்பது இறைவன் அருளே; அந்த அருளே பிறப்பை அறுத்து முத்தி தருவது; ஆனால் நானோ அவன் அருளாலே உண்மையான பொருளைக் காணும் நியமத்தை உடையவள். ஆதலால் அவன் அருளே, எனக்கு எல்லாக் காலத்தும் எல்லாப் பொருளும் ஆவது.]

மற்றையோர் அருளைத் தெரியும் முறை வேறு; அம்மையார் தெளிந்தது வேறு.

[ஆள்விப்பது-ஆளச் செய்வது. ஈசன் என்பதை மூன்னும் கூட்டி ஈசன் அருளே ஆள்விப்பது என்று கொள்க. எனக்கு ஆவது அருளே என்று ஒரு சொல் வருவித்துக்கூட்டி முடிக்க.]

எல்லாம் இறைவன் என்று காணுவாருக்கு எல்லாம் அருளினால் விளையும் விளைவு. எல்லாம் இன்பந்தருவான என்ற நிலை உண்டாகும். "இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்ற நிலை அது.

இந்தப் பாடல் அற்புதத் திருவந்தாதியில் ஒன்பதாவது பாட்டு.

# 10. எனக்கு அரியது உண்டா?

இனிய பொருள் எது?—இந்தக் கேள்விக்கு எல்லோரும் ஒரே வகையான விடையைத் தரமாட்டார்கள். சின்னக் குழந்தையைக் கேட்டால், "தித்திப்பான பண்டம் இனியது" என்று சொல்லும். புதிதாகத் திருமணம் செய்து கொண்ட ஒரு கட்டிளங் காளையிடம் இந்தக் கேள்வியைக் கேட்டால், "என் காதலிதான் எல்லாவற்றிலும் இனிய பொருள்" என்று சொல்வான். இசையிலே விருப்பம் உடையவர்களை அணுகி இந்த வினவைக் கேட்டால், "இசைதான் இனியது" என்பார்கள்.

இந்த இனிமை யாவும் நம்முடைய பொறிகளுக்கு இன்பம் தருபவை. செவிக்கு இனிய இசையும் நாவுக்கு இனிய உணவும் கண்ணுக்கினிய காட்சியும் நாசிக்கினிய நறுமணமும் உடம்புக்கு இனிய மெத்தையும் இனிமையான பொருள்கள் என்றே மக்கள் உணர்கிறார்கள். ஆனால் அந்த இனிமையைப் பொறிகள் வாயிலாக நுகர்கிறார்கள்.

பொறிகளின் வாயிலாக அந்த இனிமைப் பொருள்களால் உண்டாகும் இன்பம், மனத்தைச் சார்கிறது. உண்மையில் மனந்தான் இன்பம், துன்பம் என்னும் அநுபவங்களைப் பெறுகிறது; ஐம்பொறிகளின் வாயிலாக அவற்றை அடைகிறது. மனத்தின் தொடர்பு இல்லாவிட்டால் பொறிகள் இன்ப துன்பத்தை நுகர முடியா. மயக்க மருந்து கொடுத்தபிறகு அறுவை மருத்துவம் செய்கிறார்கள். அப்போது துன்பம்

தெரிவதில்லை. அறுக்கும் உடம்பில் உயிர் இருக்கிறது என்றா லும் மனத்தோடு உள்ள தொடர்பு அப்போதைக்கு இல்லை; அதனால் அறுவைச் சிகிச்சைக்கு உள்ளாகும் மனிதன் அந்தத் துன்பத்தை அப்போது உணர்வதில்லை.

ஒரு குமரன் அயர்ந்து தூங்குகிறான். அவனருகில் ஒருவன் இனிமையாகப் பாடுகிறான். அந்தப் பாட்டை அவன் கேட்ப தில்லை. செவிகள் திறந்திருந்தாலும், தூக்க நிலையில் அவற்றோடு மனம் தொடர்பு பெறாதமையால் அவன் கேட்ப தில்லை. ஒரு நண்பன் அவனை அணைக்கிறான். அதையும் அவன் உணர்வதில்லை.

ஆகவே இன்பம், துன்பம் என்ற இரண்டும் மனத்தினால் நுகரப்படும் நுகர்ச்சிகள் என்பது தெளிவாகும். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்து வகையான நுகர்ச்சிகளை யும் ஐம்பொறி வாயிலாக உணர்ந்த மனம் இன்பத்தையோ, துன்பத்தையோ அடைகிறது. அவ்வாறு உண்டாகும் இன்பத் துக்குக் காரணமாக உள்ள, பொறிகளின் வாயிலாக இன்பத்தைப் புகுத்துகிற பொருள்களை இனிய பொருள்கள் என்று சொல்கிறோம்.

சில சமயங்களில் என்றோ நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைத்து இன்புறுகிறோம். அப்போது அந்த இன்பத்துக்குக் காரணமாக இருப்பது பழைய அநுபவத்தின் நினைவு. அந்த நினைப்பை நினைக்கும்போது பொறிகளின் உதவி வேண்டியிருப்பதில்லை. மனம் தன்னுள்ளே புதைந்து கிடந்த அநுபவத்தை வெளிக் கொணர்ந்து சுவைக்கிறது. இலக்கிய இன்பம் நினைவினால், எண்ணத்தால், சிந்தனையால் உண்டாவது. இலக்கியத்தில் வரும் காட்சிகளை நாம் நேரில் பார்க்காவிட்டாலும் கற்பனை செய்து இன்பம் காணுகிறோம். அப்போது அந்தக் கற்பனைக்கு இந்தப் பொறிகள் துணையாக இருப்பதில்லை. பலகாலமாக அநுபவித்த அநுபவங்களின் உறைப்பினாலே மனமே ஒரு கண்ணைப் படைத்துக்கொண்டு அகத்திலே ஒரு காட்சியைக் கண்டுகளிக்கிறது; செவியைப்படைத்துக்கொண்டு இசையைக்

கேட்டுக் களிக்கிறது. இந்தக் கற்பனைப் பொறிகளைத் தெளிவாகக் கனவிலே காணமுடிகிறது. கனவில் வரும் இன்ப துன்பங்கள் கற்பனையால் அமைந்த பொறிகளின் வாயிலாகத் தோன்றுகின்றன. மலரை மோந்து பார்ப்பது போலவும், திருடனுக்கு அஞ்சி ஓடுவது போலவும், ஒரு மலையைக் காண்பது போலவும் கனவிலே காண்கிறோம். அப்போது கண், கால் முதலிய உறுப்புக்கள் இருப்பதாகவே தோன்றுகிறது. அவ்வளவும் மனத்தின் கற்பனையே.

இந்த நிலையில் நுகரும் ஒன்றைத்தான் சூட்சும சரீரம் என்றும் நுண்ணுடல் என்றும் சொல்வார்கள். கனவிலே இன்ப துன்பங்களை நுகர்வது இந்த நுண்ணுடலே. பரு உடம்பை விட்டு இன்பதுன்பங்கள் உண்டு; சொர்க்கம் என்றும் நரகம் என்றும் கூறும் இன்பதுன்ப நுகர்ச்சிகளை அடைவது இந்தச் சூட்சும சரீரமே.

ஆகவே நாம் இன்பதுன்பம் என்று சொல்கிறவை பரு உடலோ, நுண்ணுடலோ ஏதேனும் ஒன்றின் வாயிலாகவே அநுபவிக்கப்படும். இந்த உடல்கள் அழிபவை. ஒரே மாதிரி இருப்பவை அல்ல. பொறிகளும் எப்போதும் ஒரே நிலையில் இருப்பவை அல்ல.

நோய் வந்தவனுக்கு நாக்குச் சுவையை உணர்வதில்லை. முதுமையை உடையவர்களுக்கு இந்திரியங்கள் வலிமையை இழந்து விடுகின்றன. இளமையில் அவர்கள் பெற்ற இன்பத்தை இப்போது நுகரமுடிவதில்லை. முன்பு இன்பமாக இருந்த சில இப்போது துன்பமாக இருக்கின்றன.

இப்படி அநுபவிக்கிற அநுபவங்கள் இன்பம், துன்பம் என்று இரண்டு வகையாக இருக்கின்றன. இரண்டும் கலந்தே வரும். ஒளியும் நிழலும் அடுத்தடுத்தே இருப்பதுபோல இன்பமும் துன்பமும் மாறி மாறி வரும். இன்பத்துக்கு இனம் துன்பம். தனித் துன்பமே நுகர்வாரும் இல்லை; தனி இன்பமே நுகர்வாரும் இல்லை.

ஆனால் வேறு ஒருவகை இன்பம் இருக்கிறது. அது துன்பம் என்ற இனமே இல்லாதது. குத்துவிளக்கை வைத்தால் ஒளியும், அந்த விளக்கின் நிழலும் தெரிகின்றன. கதிரவனிடம் ஒளியேயன்றி நிழல் ஏது? மரங்கள் முதலியவற்றின் நிழல்கள் இருக்கின்றனவே என்றால், அந்த ஒளியைத் தடுக்கும் பொருள்களின் நிழல்கள் அவையேயன்றிக் கதிரவனுடைய நிழல் அன்று அது. அதுபோல மனத்தால் அறியப்படும் இன்பத்துக்கு நிழல் போலத் துன்பம் இருந்தாலும், துன்பம் என்னும் நிழலே தோன்றாத இன்பம் ஒன்று உண்டு. அது நாம் நுகரும் சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்டது. அதைத்தான் சிவானந்தம், பிரம்மானந்தம், பரமானந்தம் என்றெல்லாம் பெரியவர்கள் சொல்வார்கள், அது உயிரினால் அநுபவிப்பதற்குரியது. இன்பம் துன்பம் என்பவை மனம் உள்ள எல்லைக்குள் அநுபவிப்பவை. அந்த எல்லையைக் கடந்துவிட்டால் இன்பமே அன்றித் துன்பம் இல்லை. அந்த எல்லையற்ற இன்பமே சீவன் முக்தர்கள் பெறும் இன்பம்.

அந்த இன்பம் புலனுகர்ச்சியாகிய இன்ப வகைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது; என்றும் மாறாதது. "வந்த பேரின்ப வெள்ளத்தில் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் பெற்ற இந்தப் பேரின்பத்தைச் சேக்கிழார் சொல்வார்,

> "கனியி னும்கட்டி பட்ட கரும்பினும்
> பனிம லர்க்குழற் பாவைநல் லாரினும்
> தனிமு டிகவித் தாளும் அரசினும்
> இனியன் தன்அடைந் தார்க்கிடை மருதனே"

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். இந்தப் பாட்டில் முதலில் சொன்ன இனிய பொருள்கள் அத்தனையும் பொறிவாயிலாக நுகரப்படும் இன்பங்கள். மனத்தின் எல்லைக்குள் அகப்படாத இடைமருதனோ பொறிகளும் மனமும் கடந்த நிலையில் நுகரப்படும் ஆனந்தமயப்பொருள். அப்படி உயிரில் இனிப்பவன் எம்பெருமான் என்பதை நன்கு உணர்ந்து அவனை நினைந்து

நினைந்து ஈடுபடுவது அன்பர்களின் செயல். அவர்கள் தம் கருவி கரணங்களையெல்லாம் அவனிடத்தில் ஈடுபடுத்துவார்கள். அவன் திருவுருவத்தைக் கண்டும், அவன் புகழைக் கேட்டும், அவன் பிரசாதத்தை உண்டும், அவனை அருச்சித்த மலரை மோந்தும், அவன் திருக்கோயிற் காற்றை நுகர்ந்தும், இன்புறுவார்கள். அவன் கோயிலைக் காலால் வலம் வந்து மகிழ்வார்கள். அவனைக் கையால் தொழுது உவகை அடைவார்கள். மனத்தால் அவனைத் தியானித்து அமைதியும் இன்பமும் அடைவார்கள்.

இத்தகைய நிலைகளையெல்லாம் அநுபவத்தில் உணர்ந்த காரைக்கால் அம்மையார் தம் அநுபவத்தைப் பாடுகிறார்.

"எனக்குத் தலைவனாகிய பரமசிவன் எனக்கு இனியன்; என் உயிருக்கு இனியன். எனக்கு மட்டுமா? எல்லா உயிருக்கும் இனிய சர்வேசுவரன்" என்று தொடங்குகிறார்.

**"எனக்கு இனிய எம்மானை ஈசனை,"**

எதை எதையோ நினைத்துக் கவலையை அடைவது மனிதர்களின் இயல்பு. கண்ட கண்ட பொருள்களையெல்லாம் தன் கையிலுள்ள அழுக்குப் பாத்திரங்களில் போட்டுவைத்துக் கொள்ளும் பைத்தியக்காரனைப் போல நாம் இருக்கிறோம். நம் மனம் அழுக்குக் கூடையாக, குப்பைத் தொட்டியாக இருக்கிறது. அதைக் கிளறக் கிளறக் குப்பையே வருகிறது.

பெரியவர்கள் உள்ளம் அப்படி இராது. தாம் பயன்படுத்தும் அறையை அடிக்கடி தூய்மைப் படுத்துவதைப் போல, அவர்கள் அடிக்கடி மனத்தை அப்பியாசத்தால் தூய்மைப்படுத்திக் கொள்வார்கள்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பொருளில் அழுத்தமான ஆசை இருக்கும். அவர்கள் வெவ்வேறு பொருள்களைப்பற்றி எண்ணமிட்டாலும், ஆசைப்படும் அந்தப் பொருள் அடிக்கடி

வந்து தலைகாட்டும். ஏதாவது இன்பத்தைப் புதிதாக நுகர்ந்தவன், பல பல எண்ணங்களுக்கிடையிலும் அந்த இன்பத்தையே நினைத்துக் கொண்டிருப்பான். தன் குழந்தையை இழந்த தாய் வெவ்வேறு எண்ணங்களில் ஈடு பட்டாலும் அடுத்தடுத்துக் குழந்தையை இழந்த எண்ணமே தலைதூக்கி நிற்கும். இறைவனிடம் ஈடுபட்ட அன்பர்கள் எதை எண்ணினாலும் இறைவனுடைய நினைப்பே மீதூர்ந்து நிலை பெற்றிருக்கும். ஒரு வீட்டுக்கு வருவார் போவார் பலர் இருந்தாலும் அங்கே வசிப்பவர்களே என்றும் தங்கியிருப்பார் கள். அதுபோல வெவ்வேறு நினைவுகள் மனத்திலே வந்து போனாலும் எதில் அதிக ஈடுபாடு இருக்கிறதோ அந்த எண்ணம் அடிக்கடி வரும்; மனத்தை விட்டுப் போகாது.

இறைவனிடம் முறுகிய அன்புடைய உள்ளத்தில் அவன் நினைவு நிலையாக இருக்கும். மனமென்னும் பெட்டியில் அந்த நினைவு என்றும் நீங்காத செல்வமாக, வைப்பாக இருக்கும். எத்தகைய இடையூறு வந்தாலும், எதை மறந்தாலும் இறைவனை அவர்கள் மறக்கமாட்டார்கள். அவனையே உள்ளத்திலே சேமித்து வைக்கும் வைப்பாகப் பற்றிக்கொண் டிருப்பார்கள்.

**"எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை வைத்தாய்"**

என்று சுந்தரர் பாடுகிறார். இறைவன் அவர் மனத்தில் வைப் பாகத் தன்னை வைத்தானாம். அதனால் எந்த நிலை வந்தாலும் அவனை மறவாமல் நினைக்கும் நிலையைப் பெற்றார் அவர்.

காரைக்காலம்மையாரும் அந்த நிலையில் உள்ளவரே. தமக்கு இனிய பொருளும் உலகத்துக்கே தலைவனுமாகிய ஈசனை அவர் தம் மனத்துள், எல்லாவற்றிலும் சிறந்த சேமிப் பாக, இனிய வைப்புப்பொருளாக வைத்தார்.

**"எனக்குஇனிய எம்மானை ஈசனை, யான்என்றும்**
**மனக்குஇனிய வைப்பாக வைத்தேன்."**

சில சமயங்களில் இனிமையாக இருக்கும் பொருள் வேறு சமயங்களில் சுவையை இழந்துவிடும். சிறுபிள்ளைப் பிராயத்தில் மண்ணில் விளையாடுகிறோம்; பிறகு அந்த விளையாட்டைச் சுவைப்பதில்லை. இறைவனோ என்றுமே மாறாமல் இனிமையை அருள்பவன்; மனத்துக்கு இனியவன்; அந்த இனிமை என்றும் மாறாமல் இருப்பது ஆதலின், "என்றும் மனக்கு இனிய வைப்பாக வைத்தேன்" என்றார்.

**"அருளே உலகெலாம் ஆள்விப்பது."**

யார் யாரையோ, வள்ளலாகவும் உபகாரியகவும் தலைவனாகவும் கொண்டு வாழும் நமக்கு நிரந்தரமான இன்பம் கிடைப்பதில்லை. என்றும் அழியாத ஒருவனைத் தலைவனாகக் கொண்டால் அவனால் வரும்இன்பம் என்றும் நிலைத்திருக்கும். ஆகவே ஈசனையே தம்முடைய உபகாரியாக, தலைவனாகக் கொண்டார் அம்மையார்.

**"— எனக்கு அவனைக் கொண்டேன்**
**பிரானாக."**

"பெரிய செல்வன் ஒருவனைத் தம் வீட்டில் கொண்டுவந்து வைத்துக்கொள்கிறோம். அவனுடைய செல்வமெல்லாம் நம் வீட்டின் அறையில், நாம் எப்பொது வேண்டுமானாலும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் இருக்கிறது. அந்த நிலையில் நமக்குக் குறைவு ஏது? எதற்கு வேண்டுமானாலும் அந்தப் பொருளைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இந்த வள்ளலை உறவு கொண்டு விட்டோம். இவரை நம் வீட்டிலே வைத்திருக்கிறோம். இவரால் நமக்கு எத்தனை இன்பங்கள்! வீடு, வாசல், உடை, உணவு எல்லாம் இவரால் கிடைக்கின்றன. இனி நமக்குக் குறை ஏது?" என்று பெருமைப்படலாம்.

இறைவனாகிய வைப்பை உள்ளத்திலே வைத்துப் பூட்டிக் கொண்ட அம்மையார், அவரையே பிரானாகக் கொண்ட அன்னை, அப்படிக் கொண்ட அந்தக் கணத்திலே தம்முடைய துன்பமெல்லாம் கால் வாங்கி ஓடக் கண்டார். என்றும்

மாருத இன்பம் பெற்று மகிழ்ந்தார். 'நமக்கு அரியது ஒன்று உண்டா?' என்று பெருமிதத்தோடு சொல்கிருர்.

"—எனக்கு அவனைக் கொண்டேன்
பிரானுக; கொண்டதும் இன்புற்றேன்;
உண்டே எனக்கு அரியது ஒன்று?"

அரியவற்றிலெல்லாம் அரிய பொருள் பரம்பொருளாகியவன் இறைவன். அவனைப் பெற்ற பிறகு அரியது என்பது ஒன்று உண்டோ? பத்து ரூபாய்க்கு ஏங்கினவன், கோடி ரூபாய் பெற்று விட்டால் பத்துக்கோ நூறுக்கோ ஏங்கும்படி இருக்குமா?

இந்த மனநிறைவோடு பாடுகிருர் காரைக்கால் அம்மையார்,

"எனக்(கு) இனிய எம்மானை, ஈசனை யான்என்றும்
மனக்(கு) இனிய வைப்பாக வைத்தேன்-எனக்குஅவனைக்
கொண்டேன் பிரானுகக் கொள்ளலுமே இன்புற்றேன்
உண்டே எனக்(கு) அரியது ஒன்று?"

[என் உயிருக்கு இனிமை தரும் எம்பெருமானுகிய ஈசனை யான் என்றைக்கும் மனத்துக்கு இனிய பெருஞ் செல்வமாகப் பொதிந்து வைத்தேன். அவனையே எனக்கு உரிய பிரானுகக் கொண்டேன்; அப்படிக் கொண்டவுடன் நான் மாருத இன்பத்தை அடைந்தேன். இனிமேல் எனக்குக் கிடைப்பதற்கு அரியதாகிய பொருள் ஒன்று உண்டோ?

எம்மானை-என் கடவுளை, மனக்கு-மனத்துக்கு, வைப்பு-சேமிக்கும் செல்வம், பிரான்-உபகாரி; தலைவன், கொள்ளலுமே-கொண்டவுடன், உண்டே-உண்டோ?]

இறைவனை மறவாமல் மனத்தில் இருத்தி அன்பு செய்பவர்களுக்குத் துன்பம் அகன்று இன்பம் வரும் என்பதும் அவர்களுக்கு ஒன்றுலும் குறைவு இராது என்பதும் இதன் கருத்து.

இது காரைக்காலம்மையார் அருளிய **அற்புதத் திருவந்தாதியில்** பத்தாவது திருப்பாடல்.

# 11. ஒன்றே

நம்முடைய மனம் ஓரிடத்தில் நிலைப்பதில்லை. அது எப்போதும் அலைந்துகொண்டிருக்கிறது. எதை எதையோ நினைந்து கொண்டிருக்கிறது. அவ்வப்பொழுது என்ன என்ன பொருள்கள் வேண்டுமோ அவற்றை நினைக்கிறது. சென்று போன இன்ப துன்ப நிகழ்ச்சிகளை நினைக்கிறது. வருங்காலத்தைக் கற்பனை செய்து பார்க்கிறது. இன்னது செய்யவேண்டுமென்று திட்டமிடுகிறது. கிடைத்ததை நினைந்து மகிழ்ச்சி அடைகிறது. கிடைக்காததை எண்ணித் துன்பம் அடைகிறது.

மாறி மாறி நினைப்பது மனத்தின் இயல்பு. ஒன்றை விட்டு மற்றொன்றை அவாவதுவும் அதற்கு இயல்பு. மனம் வாயுவின் அம்சமாதலின் எப்போதுமே அலைந்துகொண்டே இருக்கும்; எதையாவது நினைத்துக்கொண்டே இருக்கும்.

அந்த நினைப்பில் ஏதாவது ஒழுங்கு உண்டா? அதுதான் இல்லை. நம்முடைய அலுவலகத்தைப் பற்றிய நினைவில் சிறிது நேரம் மூழ்கும், திடீரென்று முதல் நாள் செய்தித்தாளில் படித்த செய்தியை நினைக்கும். மாமனாரை நினைக்கும். அடுத்தபடி எங்கோ கண்ட பன்றிக்குட்டியின் நினைவு வரும். மாமனாருக்கும் பன்றிக்குட்டிக்கும் என்ன தொடர்பு? தேவாரப் பாடலை நினைத்துக்கொண்டிருக்கும். உடனே மூட்டைப்பூச்சிக் கடி நினைவுக்கு வரும். இரண்டுக்கும் என்ன சம்பந்தம்?

இப்படிப் பலபடியாகச் சிதறுண்ட நினைவுகளிலே கிடந்து உழலுகிறது, நம் மனம். இதைத் திருத்த வழி இல்லையா?

பொல்லாத மாடு தன் மனம் போனவாறு ஓடி ஆடி அலைகிறது. பிறருடைய வயல்களுக்குச் சென்று பயிரை அழிக்கிறது. அதை அடக்க முடியவில்லை. கயிற்றில் கட்டினால் அறுத்துக்கொண்டு ஓடிவிடுகிறது. எந்தத் திசையில் அது ஓடும் என்று சொல்ல முடியாது.

ஒரு முளையை அடித்து நூறு கஜம் உள்ள கயிற்றை மாட்டின் கழுத்தில் கட்டி அந்த முளையோடு கட்டி விடுகிறோம். அப்போதும் அந்த மாடு எப்போதும்போல வேகமாக ஓடும். நூறு கஜம் உள்ள நீண்ட கயிறு ஆதலால் கட்டிப் போட்டதாக அதற்குத் தெரியாது. ஆனால் இப்போது ஓடும் அதன் ஓட்டத்துக்கும், முன்பு ஓடிய ஓட்டத்துக்கும் வேறுபாடு உண்டு, முன்பு அது ஒழுங்கில்லாமல் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் வேகமாக ஓடித் திரிந்தது, இப்போதும் அதே வேகத்தோடு ஓடினாலும் முளையைச் சுற்றி வட்டமாகவே ஓடும். ஒரு தடவை வட்டமடித்தால் கயிறு அந்த முளையில் ஒரு சுற்றுச் சுற்றிக் கொள்ளும். அந்த அளவுக்குக் கயிற்றின் நீளம் குறையும்; அது வேகமாகச் சுற்றச் சுற்றக் கயிற்றின் நீளம் குறைந்து கொண்டே வரும். மாடு முளையை நெருங்கிக் கொண்டே வரும். கடைசியில் முளையும் கயிறும் கழுத்தும் ஒன்றுபட்டு அசைய முடியாத நிலை உண்டாகி விடுல்.

மனத்தை வசப்படுத்துவதற்கு இதைப் போல ஒரு காரியம் செய்யவேண்டும். இறைவனென்னும் முளையை நட்டு அன்பு என்னும் கயிற்றினால் மனத்தைக் கட்டிவிட வேண்டும். அப்போது மனம் எப்படிச் சுற்றினாலும் இறைவனுடைய எண்ணத்தை மறக்காது. முன்பு போலப் பல வகைத் தொழிலில் ஈடுபட்டாலும் எல்லாவற்றிலும் இறைவனுடைய தொடர்பை உண்டாக்கிக் கொள்ளும். இவ்வாறு அமைந்த பிறகு என்ன நடக்கும்?

முன்பு காலாற நடை பழக எங்கெங்கோ போவோம்; இப்போது திருக்கோயிலை வலம் வருவோம். முன்பு எல்லாரிடமும் நண்பு கொள்வோம்; இப்போது ஆண்டவனடியவர்களை நண்பர் ஆக்குவோம். வெறும் சாதமாக உண்பதை ஆண்டவனுக்கு நிவேதனம் செய்து பிரசாதமாக உண்போம். காணும் காட்சிகளில் இறைவன் தொடர்பு, கேட்கும் இசையில் இறைவன் புகழ், மோந்து பார்க்கும் மலர்களை இறைவனுக்குச் சமர்ப்பித்தல், உண்ணும் உணவை அவனுக்கு நிவேதித்தல், பரிச உணர்ச்சியில் அவன் நினைவைக் கொள்ளுதல்—இப்படியாக எல்லாவற்றிலும் அவனுடைய நினைவை எப்படியாவது இணைப்போம்.

இது சாத்தியமாகுமா என்ற கேள்வி எழலாம். புதிதாகத் திருமணம் செய்து கொண்டவன் எப்போதும் தன் காதலியை நினைந்துகொண்டே இருப்பான். புடைவைக் கடைக்குப் போனால் அவளுக்குப் புடைவை வாங்க வேண்டுமென்று எண்ணுவான். பூக்கடைக்குப் போனால் மலர் வாங்கி அவளுக்குச் சூட்டவேண்டுமென்று நினைப்பான். அலுவலகத்தில் வேலை செய்யும்போது அவளையே நினைத்துக்கொண்டிருப்பான். எப்பொழுது மணி அடிக்கப் போகிறது என்று காத்துக் கொண்டிருப்பான், பிறகு, 'சினிமாவுக்குப் போக வேண்டும்' என்றெல்லாம் எண்ணமிடுவான். இவை யாவும் அவனுக்குத் தன் காதலியின்பால் உள்ள அன்பினால் விளைவன, அவசியமான வேலை காரணமாகப் போக முடியவிட்டால், "ஐயோ! அவளிடம் போகமுடியவில்லையே!" என்று ஏங்குவான்.

இவவாறே இறைவனிடம் அன்பு உண்டானால், எப்போதும் அவனையே நினைக்கும் நினைவு உண்டாகும். மாடு முளையைச் சுற்றியே வட்டமிடுவதுபோல இறைவனைச் சுற்றியே நம் எண்ணங்கள் படரும். வெவ்வேறு வகையான செயல்களில் ஈடுபட்டாலும் எப்போதும் அவன் நினைவு இருந்து கொண்டே இருக்கும்.

இவ்வாறு இருப்பது அன்பு நெறியின் முதல் நிலை. காரைக்கால் அம்மையார், அன்பு நெறியில் முறுகி நின்றவர்.

படிப்படியாக முன்னேறியவர். அவ்வாறு அவர் நிலைகளை, ஏறிய படிகளை, சொல்கிறார். எல்லாவற்றிலும் ஒன்றையே நினைந்திருக்கும் பாங்கு முதல் நிலை.

**"ஒன்றே நினைந்திருந்தேன்"**

என்று தொடங்குகிறார்.

கூலி வேலை செய்து பிழைக்கும் பெண் ஒருத்தி அருமையாக ஒரு குழந்தையை பெறுகிறாள். அதற்குப் பால் கொடுத்து விட்டு வேலைக்குப் போகிறாள், அவள் தன் வாழ்க்கைக்குரிய பொருளைத் தேடவே அந்த வேலையைச் செய்கிறாள். ஆனாலும், 'குழந்தைக்கு நடுப்பகலில் பசிக்குமே; அப்போது நாம் போக வேண்டும்' என்ற நினைப்பு அவளுக்கு இருந்துகொண்டே இருக்கும். அந்த நேரம் அணுகினால் அவசர அவசரமாகச் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்து முடிப்பாள். அவள் நினைவெல்லாம் குழந்தைக்குப் பாலூட்டும் செயலிலேயே இருக்கும்.

அப்படியே இறைவனுக்கு ஆளாகவேண்டும் என்ற நினைப்பு எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது அம்மையார். வேறு வேறு செயல் செய்தாலும் அவற்றிலே மனம் ஈடுபடாமல் ஆளாகும் திறத்தை எண்ணிக்கொண்டிருக்கிறார். தம்முடைய லட்சியம் இன்னதென்று தீர்மானம் செய்துகொண்டவராதலின் அதையே நினைந்துகொண்டிருக்கிறார்.

நாம் செய்யும் காரியங்களில் உடனுக்குடன் பயன் தருபவை சில. அந்தப் பயனைக் கருதியே காரியங்களைச் செய்கிறோம். என்றாலும் அதுவே முடிந்த பயனாகாது. அந்தப் பயனும் நம்முடைய லட்சியத்தை அடைவதற்கு உதவியாக இருக்கவேண்டும், பசிக்கிறது; உண்ணுகிறோம். உண்ணுவது பசி தீருவதற்காகத்தான். பசி தீர்ந்தால் உடல் வலிமை பெறும். வலிமை பெற்றால் உழைக்க இயலும். உழைத்தால் பொருள் வருவாய் கிடைக்கும். அதனால் நன்றாக வாழலாம்.

ஆகவே, உணவை உட்கொள்வது உடனடியாகப் பசி தீரும் பயனைத் தந்தாலும் முடிந்த பயனாகிய நல்வாழ்வுக்கு உதவியாக இருக்கிறது. நாம் எது செய்தாலும் அது நம் நல்வாழ்வுக்கு நேர்முகமாகவோ மறைமுகமாகவோ உதவி செய்வதாக இருக்கவேண்டும். இல்லா விட்டால் நம்முடைய காலமும் முயற்சியும் வீணாகிவிடும். சூதாடுவதில் நேரத்தையும் பொருளையும் இழப்பவன், லட்சியமாகிய நல்வாழ்வுக்குப் பகையாகிய காரியத்தைச் செய்கிறான். தன் நல்வாழ்வையே நினைப்பவன் அத்தகைய செயல்களைச் செய்ய மாட்டான்.

நமக்கு இன்னதுதான் முடிந்த முடிபாகிய லட்சியம் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டால் நாம் செய்யும் எல்லாச் செயல்களும் அதைச் சார்ந்தே இருக்கும். அந்த லட்சியத்தை நினைத்துக் கொண்டிருப்போம். அந்த நிலைதான் முதல் நிலை; ஒன்றே நினைந்திருக்கும் நிலை.

உலகிலுள்ள சூழ்நிலை நாம் ஒரு லட்சியத்தைத் தெரிந்து கொள்ள முடியாமல் மயக்குகிறது. "குறிக்கோள் இலாது கெட்டேன்" என்று அப்பர் சுவாமிகள் சொல்வார். ஒருவாறு இன்னதுதான் லட்சியம் என்று தெரிந்து கொண்டாலும் தெளிவு பிறப்பதில்லை. தெளிந்தாலும் வேறு வகையான ஆசைகளும் எண்ணங்களும் குறுக்கே வந்து குழப்புகின்றன. "ஆறுகோடி மாயா சத்திகள், வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின" என்று மணிவாசகர் சொல்வார். அத்தகைய இடர்ப்பாடுகளினின்றும் நீங்கவேண்டும். நாம் ஒரு லட்சியத்தை நினைப்பதோடு நில்லாமல், அதை உறுதியாகத் துணிந்து நினைக்க வேண்டும். அந்த லட்சியத்தை நோக்கிச் செல்லும் நெறியில் வரும் இடையூறுகளை வென்று ஒழித்து விலகவேண்டும், இது அடுத்தபடி,

**"ஒன்றே துணிந்து ஒழிந்தேன்"**

என்று இந்த நிலையைச் சொல்கிறார் அம்மையார்.

இறைவனுக்கு ஆளாகவேண்டும் என்ற லட்சியத்தையே எப்போதும் நினைத்த நிலை இப்போது உறுதிப்படுகிறது. அது தான் லட்சியம் என்ற துணிவு உண்டாகிறது. அதை அடையும் வழியில் குறுக்கிடும் எண்ணம் எதுவானாலும் அதனின்றும் விலகி நிற்கும் இயல்பு உண்டாகிறது. லட்சியத்தையே உறுதியாகக் கடைப்பிடித்துத் துணிந்து, அதற்கு வேறுபட்டவற்றினின்றும் ஒழிந்து நிற்கும் நிலை இது.

ஒரு பொருளைப் பெற வேண்டும் என்ற விருப்பம் ஒருவனுக்குப் பிறக்கிறது. அது கிடைத்தற்கரிய பண்டம். அவன் எங்கே சென்றாலும் அதையே தேடுகிறான்; அதைப் பற்றியே விசாரிக்கிறான். பிறகு அதைக் காணுகிறான். ஆனால் வேறு பல கவர்ச்சிப் பொருள்களோடு அது இருக்கிறது. அதைக் கண்டவுடன் அதுதான் தனக்கு வேண்டுமென்று துணிந்து, மற்றவற்றில் மனம் செல்லாமல் நிறுத்துகிறான். நாடியதைக் கண்டு, மற்றவற்றை விரும்பாமல் ஒழிகிறான். பிறகு அந்தப் பொருளைப் பெற்றுப் பாதுகாப்பான இடத்தில் வைத்துப் பேணுகிறான். ஒன்றையே விரும்பி நாடியது முதல் நிலை. பலவற்றின் நடுவே அதைக் கண்டபோது மற்றவற்றை விலக்கி, அதனையே துணிந்து நாடியது இரண்டாவது நிலை, பிறகு அதைப் பெற்றுப் பாதுகாப்பது மூன்றாவது நிலை.

காரைக்காலம்மையார் ஒன்றே நினைந்திருந்த நிலையைச் சொல்லி, ஒன்றே துணிந்தொழிந்த நிலையைச் சொல்லி மூன்றாவது நிலையையும் சொல்கிறார். "நான் என்றும் நினைத்து, பிறவற்றை ஒதுக்கி, பிறகு அதனையே என் உள்ளத்துக்குள் பொதிந்து வைத்தேன்" என்கிறார்.

**"ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன்."**

பல பல எண்ணங்கள் வந்தாலும் ஒன்றையே மீட்டும் மீட்டும் நினைத்தது முதல்படி. அந்த நினைப்பை உறுதியாக்கி மற்றவற்றை ஒதுக்குவது இரண்டாவது படி. முதல் நிலையில் சங்கற்பமும் இரண்டாம் நிலையில் போராட்டமும் இருக்கும். துணிவதும், மற்ற எண்ணம் வந்தால் அவற்றை ஒழிப்பதும்

போராட்டந்தானே? மற்ற எண்ணங்கள் ஒழிந்து விட்டால் அமைதி பிறக்கிறது. நினைவாக இருந்தது துணிவாக மாறி அந்தத் துணிவே அநுபவமாக மாறுகிறது. உள்ளத்தின் உள் அடைத்தது, சலனமின்றி உள்ளே அடைந்து கிடக்கும்; சாந்தி உண்டாகும். அதுதான் இன்பம். அந்த நிலையையே "உள்ளத்தின் உள்ளடைத்தேன்" என்கிறார் அம்மையார்.

இதுவரையில் 'ஒன்றே நினைத்திருந்தேன், ஒன்றே துணிந்தொழிந்தேன், ஒன்றே என் உள்ளத்தின் உள்ளடைத்தேன்' என்றவர் அந்த ஒன்று இன்னதென்று சொல்லவில்லை. அதை இறுதியில் சொல்கிறார். நம்முடைய ஆவலைத் தூண்டி விடுகிறார். அந்த ஒன்று எது தெரியுமா?

### ஒன்றே காண்

இறைவனுக்கு ஆளாவதையே அவர் குறிப்பிடுகிறார், மனம் அமைதி பெற்று இன்புறுவதற்குரிய அடிமை நிலை என்றால் அதற்குக் காரணம் அடிமையின் இயல்பு அல்ல· யாருக்கு அடிமையாகிறாரோ அவருடைய சிறப்பினால், கருணையினால் அந்த இன்ப நிலை வருகிறது. ஆண்டவன் செய்யும் பேரருளே அடியாருக்கு இன்பமாக மலர்கிறது. ஆகவே தாம் யாருக்கு ஆளானார் என்பதைச் சொல்ல வருகிறார். சிவபெருமான் என்று சும்மா சொன்னால் போதுமா? அவன் பெருமை என்ன? சொல்ல வேண்டாமா?

அவனை மூன்று அடையாளங்களைச் சொல்லி இனம் க்ண்டு கொள்ளச் செய்கிறார்.

> **"கங்கையான், திங்கட் கதிர்முடியான், பொங்கொளிசேர் அங்கையான்."**

என்கிறார். அவன் க்ங்கையை முடியில் அணிந்திருக்கிறான். சந்திரனைத் தரித்திருக்கிறான், கையில் அனலை ஏந்தியிருக்கிறான். இந்த அடையாளங்களை ஏன் சொன்னார்?

கங்கை என்றவுடன் அதை வருவிப்பதற்காகப் பகீரதன் செய்த தவம் நினைவுக்கு வருகிறது. தன்னைத் தாங்குவார் யார் என்று செருக்குடன் இருந்த அதன் கொந்தளிப்பை அடக்கி இறைவன் தன் சடையில் வைத்துக் கொண்டான்.

பகீரதன் கங்கையை நோக்கித் தவம் செய்தான். பிரமனை நோக்கித் தவம் செய்தான். அவன் விருப்பம் நிறைவேற வில்லை. கடைசியில் இறைவனை நோக்கித் தவம் செய்தான். அப்போது அவன் காரியம் கைகூடிற்று, இறைவன் தவத்தின் பயனைத் தருபவன் என்பதை அந்த நிகழ்ச்சி காட்டுகிறது.

ஒன்றையே நினைத்திருப்பதும் ஒரு தவந்தான். அதை நம்முடைய முயற்சி ஒன்றினால்மட்டும் நிறைவேற்ற முடியாது. இறைவன் திருவருள் இருந்தால்தான் நிறை வேறும். "அவனரு ளாலே அவன்தாள் வணங்கி" என்று மணிவாசகரும், "எத்தான்மற வாதேநினைக் கின்றேன் மனத்து உன்னை, வைத்தாய்" என்று சுந்தரரும், "நினைப்பித் தால் நின்னை நினைப்பேன்" என்று நம்பியாண்டார் நம்பி களும் அருளியவை இந்தக் கருத்தை வலியுறுத்தும்.

ஆகவே, பகீரதன் தவத்தை நிறைவேறச் செய்து கங்கையைத் தன் சடையிலே வைத்த இறைவன், அவனையே நினைக்கும் தவத்தையும் நிறைவேறச் செய்வான் என்பது குறிப்பு. மற்றொன்று, "விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல், மண்ணுக் கடங்காமல்" செருக்குற்று வந்த கங்கையை ஆண்டவன் தன் சடையில் அடக்கி அதன் செருக்கை நீக்கினான், இறைவனை நினைக்கும் எண்ணத்துக்கு மாறாக இருப்பது தான், எனது என்னும் செருக்கு, அந்தச் செருக்குப் போனால்தான் தவம் பலிக்கும். அதைப் போக்கித் தவம் பலிக்கச் செய்கிறவன் சிவபெருமான் என்பதும் ஒரு குறிப்பு.

இறைவன் திங்களை அணிந்து கதிர்விடும் திரு முடியுடை யவன். "திங்கட் கதிர் முடியான்." சந்திரன் குருத்துரோக மும் சிவத்துரோகமும் செய்தவன். தக்கயாகத்தில் இறைவன்

திருவடியால் தேய்க்கப் பெற்றவன். இறைவனுடைய திருவடித் தொடர்பு உண்டானதால் திருமுடியில் ஏறும் நிலையை உடையவனானான். எவ்வளவு குறைகளை உடையவனானாலும் அவற்றைப் பாராமல் அவனைத் தூயனாக்கி ஆட்கொள்ளும் அருளாளன் இறைவன். அவன் தூய்மை பெறுதலாவது தேய்வதும் வளர்வதும் இன்றி, பிறையாக இருப்பதனால் களங்கம் இன்றி இருத்தல்.

தன்னையே நினைத்தவருக்குப் பிறவற்றை எண்ணிச் சலனமடையாமல், தளர்ச்சியும் கிளர்ச்சியும் இல்லாமல், இருக்கச் செய்யும் நிலையைத் தருவான் இறைவன் என்ற குறிப்பு இதனால் பெறப்படும். ஒன்றையே துணிந்து பிறவற்றை ஒழித்து நிற்கும் நிலையை அருள்பவன், சிவ பெருமான்.

இறைவன் திருக்கரத்தில் உள்ள கனல் எல்லாவற்றையும் எரித்து ஒளிமயமாய் விளங்குவது. 'பொங்கொளி சேர் அங்கையான்' அவன், மனத்திலுள்ள மாசை எல்லாம் ஒழிந்து ஞான ஒளி வீச, உயர்ந்த இன்ப நிலையை அடையச் செய்பவன் அமன் என்ற குறிப்பை இந்த அடையாளம் காட்டுகிறது. உள்ளத்தின் உள் அடைப்பதால் அஞ்ஞானம் நீங்கி ஒளிவிடும் நிலை உண்டாகிறது. அந்த நிலையை அருள்பவன் இறைவன் என்ற குறிப்பை இந்தத் தொடர் காட்டுகிறது.

"இத்தகைய சிவபெருமானுக்கு ஆளாகும் அதுவே நான் இதுககாறும் கூறிய ஒன்று" என்று முடிக்கிறார் காரைக்கால் அம்மையார்.

> **"ஒன்றே நினைந்திருந்தேன்; ஒன்றே துணிந்தொழிந்தேன்;**
> **ஒன்றேஎன் உள்ளத்தின் உள்அடைந்தேன்;—**
> **ஒன்றேகாண்;**
> **கங்கையான், திங்கட் கதிர்முடியான்,**
> **பொங்கொளிசேர்**
> **அங்கையாற்(கு) ஆளாம் அது."**

[ஒன்றையே எப்போதும் நினைந்து வாழ்ந்தேன், அந்த ஒன்றையே துணிவாக உறுதி செய்து பிறவற்றினின்றும் நீங்கினேன்; அந்த ஒன்றையே என் அந்தரங்கத்தினுள்ளே பொன்னைப் போலப் பொதிந்து இன்புற்றேன்; அந்த ஒன்று, கங்கையைத் தரித்தவனும், சந்திரனையணிந்த ஒளிவீசும் சடாமுடியை உடையவனும், கொழுந்துவிடும் ஒளியை யுடைய கனலையுடைய உள்ளங்கையைப் பெற்றவனுமாகிய சிவபெருமானுக்கு ஆளாகும் அந்த இன்பம்.]

ஒன்றே: ஏகாரம், பிரிநிலை, ஒன்றேகாண்: காண், அசை. ஒன்றே அது என்று முடிக்க. ஒளி யென்றது ஆகுபெயராய்க் கனலைக் குறித்தது.

இன்னதுதான் வாழ்க்கையின் லட்சியம் என்று கொண்டு அதனையடையப் பலகாலும் நினைந்து, மற்றவற்றில் நெஞ்சம் ஈடுபடாமல் உறுதியாக நின்று, அதில் உள்ளத்தை ஒன்று படுத்தி அமைதிபெறும் இன்பநிலையை இந்தப் பாட்டில் கூறினர் அம்மையார்.

**இது அற்புதத்திருவந்தாதியில் பதினேராம் பாடல்.**

# 12. அதுதானு?

அம்மையார் 10-ஆவது பாட்டில், "எனக்கவனைக் கொண்டேன் பிரானுகக், கொள்ளலுமே இன்புற்றேன்; உண்டே எனக்கரிய தொன்று" என்றும், அடுத்த பாட்டில் "பொங்கொளிசேர் அங்கையாற் காளாம் அது ஒன்றே நினைந் திருந்தேன்" என்றும் சொன்னுர். இறைவன் தமக்குப் பிரானுனதும், அவனுல்தாம் ஆட்கொள்ளப்பட்டதுமாகிய இரண்டையும் அவ்விரண்டு பாட்டிலும் சொன்னுர். அவன் தமக்குப் பிரானுன பிறகு பேரின்பப் பெருவாழ்வு வந்ததென்றும், தமக்கு அரிய பொருள் ஏதும் இல்லாத நிலை வந்ததென்றும் சொன்னுர். இறைவன் பிரானுகி விட்டதனுல் உண்டான நிலை அது. அடுத்தபடி ஒன்றையே நினைந்து, ஒன்றையே உள்ளடைத்து ஆளானதைச் சொன்னுர். தாம் ஆளானதாகச் சொன்னுலும் இறைவன் அவ்வாறு தம்மை இருக்கச் செய்து ஆட்கொண்டான் என்பதே அவர் கருத்து.

இவ்வாறு அவன் பிரானுனதும், தாம் அவனுக்கு ஆளானதும் நினைக்க நினைக்க இன்பத்தைத் தருவனவாகவும். இறைவன் கருணையைப் புலப்படுத்துவனவாகவும் உள்ள செயல்கள். பிரானுனது முந்தியா ஆளானது முந்தியா என்ற கேள்வி பிறக்கலாம்.

நாம் இறைவனை உணராமல் வாழ்கிறேம். அவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பை நாம் எண்ணிப் பார்ப்பதில்லை. அதனுல் அவனைச் சிந்திப்பதும் இல்லை. என்ருலும் இறைவன் நம்மை விடுவதில்லை. அவன் எப்போதும் நம்மைக்

கவனித்துக்கொண்டே இருக்கிறான். நாம் அவனை அணுக வில்லை என்பதற்காக அவன் நம்மைப் புறக்கணிப்பதில்லை. அவனுடைய அருளைப் பெற வேண்டும் என்று நாம் எண்ணாமல் இருந்தாலும், தன்னுடைய அருளை வழங்க வேண்டும் என்று அவன் காத்திருக்கிறான்.

கம்பர் இந்த நிலையை விராதன் துதியில் இணைத்துச் சொல்கிறார்.

"தாய்தன்னை அறியாத கன்றில்லை; அக்கன்றை
ஆயு மறியும் உலகின்தாய் ஆயின்ஐய,
நீஅறிதி எவ்வுயிரும்; அவைஉன்னை நிலையறியா;
மாயம்இது என்கொலோ? வாராதே வரவல்லாய்!"

புன்செய்க் காட்டில் ஒரு பெரிய வீடுகட்டினான் ஒருவன். அதில் இருந்த கிணற்றை அப்படியே வைத்துக்கொண்டான். அவன் உடற்பயிற்சி செய்து உடம்பை வலிவுள்ளதாக வைத்திருப்பவன். ஒரு நாள் அவன் மனைவி அந்தக் கிணற்றில் தண்ணீர் எடுத்தாள். தாம்புக் கயிற்றில் குடத்தைக் கட்டித் தண்ணீர் இழுத்தாள். கயிறு அறுந்து குடம் கிணற்றுக்குள் விழுந்து விட்டது.

அந்தப் பெண்மணி தன் கணவனிடம், "யாரேனும் ஆள் இருந்தால் பாருங்கள், கிணற்றில் விழுந்த குடத்தை எடுக்க வேண்டும்" என்றாள்.

"ஆள் எதற்கு? நான் எடுக்க மாட்டேனா?" என்று சொல்லி அவன் கிணற்றில் குதித்தான். அகலமான கிணறு தலின் குதித்த இடத்தில் குடம் கிடைக்கவில்லை. மேலே வந்து மூச்சு விட்டு, மறுபடியும் ஓரிடத்தில் முழுகினான். அப்போதும் கிடைக்கவில்லை. மறுபடியும் வேறிடத்தில் முழுகினான்; கிடைக்கவில்லை. இப்படி எட்டு முறை மூழ்கியும் குடம் கிடைக்கவில்லை. கடைசியில் ஒன்பதாவது முறை

மூழ்கினன். குடம் தட்டுப்பட்டது. அதை எடுத்துக்கொண்டு வந்தான்.

குடம் அவனது உடைமை. அதற்கு அவன் உடையவன். குடம் ஒரு முறைதான் முழுகியது. அதை எடுக்கப் புகுந்த வனே ஒன்பது முறை முழுகினன். இதை, "உடைமைக்கு ஒரு முழுக்கு; உடையவனுக்கு ஒன்பது முழுக்கு" என்று சொல் வார்கள்.

இறைவன் உடையவன். நாம் அவன் உடைமை. நம்மைக் காப்பாற்ற வேண்டும் என்று அவனுக்கு உள்ள கருணை நாம் அவனுக்கு ஆளாக வேண்டும் என்று நமக்குள்ள ஆர்வத்தை விடப் பன்மடங்கு அதிகமானது.

நாம் அவனுக்கு ஆள் என்று நினைக்காவிட்டாலும் அவன் நமக்குப் பிரானகத்தான் இருக்கிறான். "இறைவன் இல்லை என்கிறேன். அவன் உண்மையில் இருப்பானனால் என் தலை மேல் இடி விழச் செய்யட்டும்" என்று சிலர் கொக்கரிக்கிறார் கள். அது கண்டு ஆண்டவன் கோபம் கொள்வதில்லை. அவர் களுடைய அறியாமையைக் கண்டு தனக்குள்ளே நகைத்துக் கொள்கிறான். உடம்புக்கு ஆகாதென்று, தான் வேண்டுமளவு தின்பண்டத்தைத் தாய் தராவிட்டால் குழந்தை, "உன்னைக் குத்துவேன்; கொல்லுவேன்" என்று சொல்கிறான். அதைக் கேட்டுத் தாய் நடுநடுங்கி, "ஐயோ! போலீஸ்காரரைக் கூப்பிடுங்கள்" என்று சொல்வாள்? அவன் வார்த்தைகளைக் கேட்டு அவள் சிரிப்பாள். ஆண்டவனும் தாயைப் போலத் தான் நம்முடைய அறியாமையை கண்டு சிரித்துக்கொண் டிருக்கிறான்.

ஆயினும் தாய்க்குத் தன் குழந்தை திருந்தவேண்டும் என்ற எண்ணம் வன்மையாக இருப்பது போல இறைவனாகிய பிரானுக்கு நாம் அவனுக்கு ஆளாகி நலம் பெறவேண்டும் என்ற ஆர்வம் மிகுதியாக இருக்கிறது. ஆகவே நாம் அவனைப்

பிரானென்று அறிந்தாலும் அறியாவிட்டாலும் அவன் என்றும் நமக்குப் பிரானாக, தலைவனாக, பரமோபகாரியாக இருக்கிறான். அவன் நம்மை ஆட்கொண்ட பின்பு இந்த உண்மை புலனாகிறது. அவனுடைய பெருங்கருணையை நினைந்து இன்புறுகிறோம்;, உருகுகிறோம்.

அமையார் இறைவன் என்றும் பிரானாக உள்ளவன் என்பதை நினைவூட்ட முதலில் பிரானாகக் கொண்டதைச் சொன்னார். பின்பு ஆட்பட்டதைச் சொன்னார்.

இப்போது அந்த இரண்டையும் நினைந்து வியக்கிறார்.

**"அதுவேபிரான் ஆமாறு; ஆட்கொள்ளுமாறும்**
**அதுவே."**

தன்னை இதுகாறும் நாடாமல் போனதை வீணாக்கி, யார் யாரையோ தலைவனாகக் கொண்டானே என்று அடியவனைப் புறக்கணிப்பதில்லை இறைவன். அவன் ஆசுதோஷி; கணத்தில் மகிழ்பவன். எத்தனை தவறு செய்தாலும் அதை மறந்து தன்பால் அடைக்கலம் புகுந்தால் உடனே ஏற்றுக்கொண்டு அருள்பாலிக்கும் கருணைக்கடல் அவன். "பிரானாகக் கொள்ளலும் இன்புற்றேன்" என்று முன்பு சொன்னார். உலகில் யாரையேனும் ஒருவன் புகலடைந்து தலைவனாகக் கொள்ளுவானானால் அவனை அந்தத் தலைவன் உடனே ஏற்றுக்கொண்டு, அவனுக்கு நன்மை செய்வதில்லை. அப்படிச் செய்வதற்கு அவனுடைய அணுக்கத் தொண்டார்கள் விடமாட்டார்கள். 'நாம் எல்லாம் இத்தனை காலம் காத்திருக்க, நேற்று வந்தவனுக்கு உடனே சிறப்பா?' என்று பொருமுவார்கள். வந்தவனைச் சேய்மையிலே வைத்து, அவனைப் பல வகையிலும் சோதனை செய்து மெல்ல மெல்ல அணுகி வரச்செய்து, பிறகே நலம் செய்வார்கள். இது மற்றத் தலைவர்களின் இயல்பு.

சிவபெருமானோ அத்தகையவன் அல்லன். "நீயே பிரான்" என்று புகலடைந்தால் நம்மை வாரி அணைத்துக்கொள்வான். கூட்டத்தில் வழி தெரியாமல் போய் அழுக்குக்குழியில்

விழுந்த குழந்தை வந்து அணுகினால், அவன் அழுக்குடம்புடையவன் என்று கருதாமல் உடனே ஆவலுடன் அணைத்துத் தழுவும் தாயைப் போன்ற அன்புடையவன் அவன், இது மிகவும் உயர்ந்த கருணை அல்லவா? அதை நினைக்கிறார்.

**"அதுவே பிரான் ஆமாறு!"**

அது என்றது முன் ஒரு பாட்டில் சொன்னதைச் சுட்டுவது மாத்திரம் அன்று; தாம் பெற்ற இன்பத்தை உள்ளூற எண்ணி உருகும் மனப்பாங்கையும் அந்தச் சுட்டுச் சொல் குறிப்பிக்கிறது. இதை நெஞ்சறி சுட்டு என்பர்.

அவன் ஆட்கொள்வதும் பெரிய புதுமை. பரந்த உலகத்தில் மனத்தை மயக்கும் பொருள்கள் எவ்வளவோ இருந்தும் அவற்றிலே ஈடுபடாமல் தன்னையே நினைக்கச் செய்யும் கருணையை உடையவன் இறைவன். "ஒன்றே என் உள்ளத்தின் உள்ளடைத்தேன்" என்று சொல்லும் அளவுக்குத் தன் அடியாரைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்ளும் வித்தகன் அவன்.

**"ஆர்ஒருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகர்"**

என்று வியப்பார் மணிவாசகர். அம்மையார் அதையும் நினைக்கிறார்.

**"ஆட்கொளுளும் ஆறும் அதுவே!"**

இறைவன் பிரானாகி நிற்பதும் கருணையினால் ஆட்கொள்வதும் எல்லோருக்கும் தெரிவதில்லை. அவன் தமக்கு வேண்டியவை வழங்காத லோபி என்றே பலர் நினைக்கிறார்கள். "சாமிக்குக் கண் இல்லை" என்று குறை கூறுபவர்களை நாம் அறிந்திருக்கிறோமே! "சாமியா? அப்படி ஒருவர் இருக்கிறாரா? அப்படியானால் அவர் உறங்கிக் கொண்டிருக்க வேண்டும்" என்று சொன்ன அறிஞர்களும் இருக்கிறார்கள்.

இறைவனுடைய திருவருளைப் பெற்றவர்களுக்கே அவனுடைய பெருமையும் கருணையும் தெரிய வரும். "அவன்

எத்தகைய தலைவன் என்பதை நான் அறிந்திருக்கவில்லை; அவனுக்கு ஆளாவது எப்படி என்றும் தெரிந்து கொள்ள வில்லை. அவனுடைய திருவருளுக்கு ஆளான பிறகு இவை விளங்குகின்றன. அவன் எத்தகைய தலைவன் எவ்வளவு ஆவலுடன் நம்மை ஆட்கொள்ளக் காத்திருக்கிறான் என்ற உண்மையும் இப்போது தான் தெரிய வருகிறது'' என்று காரைக்காலம்மையார் சொல்கிறார்.

> **''அதுவே பிரானுமாறு: ஆட்கொள்ளுமாறும் அதுவே!**
> **இனு அறிந்தோம்.''**

[இனி - இப்பொழுது ; அவனால் ஆட்கொள்ளப்பட்ட இப்பொழுது.]

''நான் அறிந்தேன் என்று சொன்னேன்? அவன் தகுதி, நான் அறிந்த இவற்றுக்குள்ளே அடங்கிவிடுமா? இதுகாறும் அறிந்து கொள்ளாதவற்றை அறிந்து கொண்டேன் என்பது உண்மை. அவனைப்பற்றிய இயல்புகள் அறிந்து கொண்டேன். அவன் தலைவனாகும் வண்ணமும் நம்மை ஆளாக்கும் வண்ண மும் தெரிந்து கொண்டேன். இதனால் அவனை முற்றும் தெரிந்து கொண்டது ஆகிவிடுமா?

அம்மையார் சிந்திக்கிறார். இறைவன் தன்மை முழு வதையும் உணர்ந்தவர் யார்? ''தன்மை பிறரால் அறியாத தலைவா'' என்று மாணிக்கவாசகர் கூறினார். அவனைத் தலைவனாக எத்தனையோ அடியார்கள் உணர்கிறார்கள். எல்லோரும் உணர்வது ஒரே வண்ணமாகவா இருக்கும்? அவரவர்கள் எந்த எந்த நிலையிலிருந்து உணர்ந்தார்களோ அதற்கு ஏற்றபடி அவன் பிரானான வண்ணம் இருக்கும். அணைத்து ஆட்கொள்வதும் உண்டு. அடித்து ஆட்கொள் வதும் உண்டு. ஆகவே ஒருவர் உணர்ந்தபடியே யாவரும் உணர்ந்திருப்பார் என்று சொல்ல ஒண்ணாது.

உணவை உண்பதால் வயிற்றுப் பசி தீர்கிறது. பசி தீர்வதென்பது யாவருக்கும் பொதுவான அநுபவம். ஆனால்,

உணவுப் பொருள்களின் வகை, அவற்றைச் சமைக்கும் வகை, அவற்றின் சுவை, அவற்றை உண்ணும் முறை முதலியன வேறுபடுகின்றன. அவ்வாறே இறைவனால் அடையும் முடிந்த முடிவான இன்பம் ஒன்றுதான் என்றாலும், அவனைத் தலைவனாக அடையப்பெறும் முறையும், அவனுக்கு ஆளாகும் வண்ணமும் பல்வேறு வகைப்படும். ஆதலால் ஒருவர் தாம் அவனைத் தலைவனாகப் பெற்றபடியே எல்லோரும் பெற்றிருப்பார் என்றும், தம்மை ஆட்கொண்டபடியே யாவரையும் ஆட்கொண்டிருப்பான் என்றும் சொல்ல இயலாது.

இந்த நினைவு அம்மையாருக்கு எழுகிறது. "இப்போது நான் அறிந்தேனே, அது மட்டுந்தானா அவனுடைய பெருமை?" என்று தம்முடைய கேட்டுக் கொள்கிறார்.

**"அதுவே தகவு?"**

சிவ பெருமானுடைய இயல்புகள் யாவுமே விசித்திர மானவை, வேறு யாரிடத்திலும் இல்லாதவை அவை. அவனுடைய அடையாள மாலை கொன்றை, கொன்றையை வேறு யாரும் அணிவதில்லை. அணியத்தக்க மலர்களை யெல்லாம் பிறர் அணியும்படி வழங்கி விட்டுத் தான் கொன்றைமலரை அணிகிறவன் அவன். அது கார்காலத்தில் மலர்வது, பனிக் காலத்தில் கருகி வாடுவது. அவன் அடையாள மாலை இப்படியென்றால், அவன் திருமுகத்தில் உள்ள கண் ஒன்றும் அவனை இனம் காட்டும். வேறு யாருக்கும் இல்லாத ஞானக்கண்ணாகிய நெற்றிக்கண்ணை உடையவன் அவன். அதுவே அவனுக்குப் பெருமை; "நெற்றியிலே கண் உடையவனே!" என்று வழங்கும் உலக வழக்கே அதன் பெருமையைக் காட்டும். "இமையாத முக்கண், மூவரிற் பெற்றவர்" என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு. ஒப்பற்ற ஞானக்கண்ணை விளக்கமுடைய நெற்றியிலே படைத்த பெருமான் சிவபிரான். மற்றவரிடம் இயல்புகளை அறிந்து வரையறையாகச் சொய்வது போல அவன் திறத்தில் சொல்ல ஒண்ணாது.

இவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்கிறார் அம்மையார். "கொன்றை மலரை அணிந்தவன்; நெற்றிக்கண்ணை உடையவன்; அவன் இயல்பு அதுமட்டுந்தானா?" என்று கேட்கிறார். 'அதுவே பிரானானவாறு; 'அதுவே உட்கொள்ளுமாறு' என்று என்று சொன்னேன். ஆனால், அதுமட்டுமா அவன் பெருமை?' என்று பாட்டிலே கேட்கிறார்.

**"அதுவே பிரானுமாறு: ஆட்கொள்ளுமாறும்**
**அதுவே இனிஅறிந்தோம்; ஆனால்-அதுவே**
**பனிக்கு அணங்கு கண்ணியார், ஒள் நுதலின் மேல்ஓர்**
**தனிக்கண் அங்கு வைத்தார் தகவு?**

[அவர் தலைவராகும் வண்ணம் அதுதான்; அவர் அடியவரை ஆட்கொள்ளுமாறும் அதுதான்; இவ்வுண்மையை இப்போது அறிந்தோம்; ஆனால், பனிக்கு வாடும் கொன்றை மாலையை அணிந்தவரும்; விளக்கமான நெற்றியின்மேல் ஒப்பற்ற ஒற்றைக்கண்ணைப் படைத்துவருமாகிய சிவபெருமானுடைய பெருமை அதுமட்டுமா?

பிரான்-தலைவன்; உபகாரி, முன் இரண்டு ஏகாரங்கள் தேற்றம்; பின் உள்ளது வினா. அணங்கு-துன்புறும்; வாடும். கண்ணி-தலையில் அணியும் அடையாள மாலை. நுதல்-நெற்றி. நுதல்மேல் அங்கு வைத்தார். தகவு-தகுதி; பெருமை.]

இறைவன், "உணர்ந்தார்க்கு உணர்வரியோன்" என்று பாடுவார் மாணிக்கவாசகர். அப்படி, தாம் உணர்ந்ததாகச் சொல்லி உருகிய அம்மையார், என்ன உணர்ந்து விட்டோம் என்று பிறகு அடக்கத்துடன் சொல்கிறார். முன் பகுதியில் பெருமிதமும் பின்பகுதியில் அடக்க உணர்வும் புலனாகின்றன.

இது காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத்திருவந்தாதியில் பன்னிரண்டாம் பாட்டு.

# 13. ஏ பாவம்!

பெண்களுடைய குணங்கள் நான்கு என்று ஒரு வழக்கு உண்டு. அவை அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்பவை. இந்த நான்கிலும் முதலில் நிற்பது அச்சம். பெண்கள் மெல்லியலார் ஆதலின் அஞ்சுவது இயல்பு. அவர்களுக்குத் தைரியம் குறைவுதான். சிறு கரப்பான் பூச்சியைக் கண்டாலும் பயந்து அடித்துக்கொண்டு ஓடுவார்கள் பாம்பென்றால் சொல்ல வேண்டுமா? ‘பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்’ என்பது பழமொழி. படையே நடுங்கும்போது பாவையர் நடு நடுங்கிக் கலங்குவது வியப்பே அன்று. பாம்பு தம்மிடம் வந்தால் மட்டும் நடுங்குவார்கள் என்பது இல்லை; வேறு ஒருவரை அணுகினாலும் நடுங்குவார்கள். கண்ணால் கண்டு விட்டாலே போதும்; நிலை குலைவார்கள்.

காரைக்கால் அம்மையார் பேயாக மாறினாலும் இயல்பான பெண் தன்மை மாறவில்லை. அவர் இப்போது தம் அச்சத்தை வெளிப்படுத்துகிறார். அந்த அச்சத்தில் பெண்ணின் இயல்போடு தாய்ப்பண்பும் கலந்திருக்கிறது. இறைவனுக்குத் தாயான பெருமாட்டி அல்லவா? ஆதலின் இறைவன் மேல் உள்ள பாம்பை எண்ணிப் பயப்படுகிறார்.

“யாரானவது ஆண் பிள்ளைகள் இல்லையா? ஓடி வாருங்கள்; ஐயோ இந்தப் பாம்பை இங்கே புகவிடாமல் யாரும் தடுக்க மாட்டீர்களா?” என்று கூக்குரல் இடுவதுபோல முறையிடுகிறார்.

“இந்த அபாயத்தைத் தடுக்கும் யோக்கியதையை உடையவர்கள், தகவு உடையவர்கள், யாரும் இல்லையா?

இருந்தால் வாருங்கள். இங்கே வாருங்கள். இந்தப் பாம்பு இந்த இடத்தில் போகும்படி விட்டால் மிகப் பொல்லாதது தீங்கு வந்து விடும்" என்று சொல்கிறார்.

"இறைவனுடைய திரு மார்பில் அழகிய மாலை இருக்கிறது. அந்த மாலையோடு மாலையாக அல்லவா தான் இருக்க வேண்டுமென்று இந்தப் பாம்பு போகிறது? அதை விடாதீர்கள்" என்று கூவுகிறார். இறைவனிடம் அம்மையாருக்குள்ள பரிவு அப்படிப் பேசச் சொல்கிறது.

**"தகவுடையார் தாம் உளரேல்**
**தார்அகலம் சாரப்**
**புகவிடுதல் பொல்லாது கண்டீர் !"**

[தகவு - தகுதி. தார் - மாலை. அகலம் - மார்பு.]

இறைவனுடைய பெருமையையும் வலிமையையும், வலிமையையும் நன்கு அறிந்தவர்தாம், அம்மையார். ஆனால் அவையெல்லாம் இப்போது நினைவுக்கு வரவில்லை. மடியில் பெரிய மாணிக்கத்தை வைத்திருப்பவன் ஏதேனும் செடி அசைந்தாலும் திருடன் வந்து விட்டானோ என்று நடுங்குவான். அந்த மாணிக்கத்தின்மேல் உள்ள பற்றே அதற்குக் காரணம்.

குழந்தை உள்ளே உணவு கொள்வதைப் பார்த்துவிட்டு வெளியில் வரும் தாய், "ஏதோ குழந்தை கிணற்றில் விழுந்து விட்டது" என்று ஒருவர் சொல்லக் கேட்டால், "ஐயோ! நம் குழந்தைதான் விழுந்து விட்டதோ?" என்ற அச்சம் அவளுக்கு உண்டாகும். 'உள்ளே இருந்த குழந்தை கிணற்றுக்கு எப்படிப் போகும்? கிணறு இங்கே அருகில் எங்கே இருக்கிறது?' என்றெல்லாம் அப்போதைக்கு யோசிக்கத் தோன்றாது. இது அன்பின் இயல்பு. அறிவு மறைத்து அன்பு தலைப்படும்போது எல்லாம் மறந்து விடும்.

ஆகவே, அம்மையார் பாம்பைக் கண்டு அஞ்சுகிறார். 'மாலை பூண்டு அழகாக இருக்கும் மார்பில் இந்த நஞ்சுடைய பாம்பு புகுந்தால் என்ன விபரீதம் நேருமோ? இதை விடுவது நல்லது அன்று; பொல்லாதது' என்று எண்ணுகிறார்.

அந்த நாகம் அவர் மேல் ஊர்கிறது. அது பெரிய பாம்பு; அது அடாத செயலைச் செய்வது; மிகவும் அடாத நாகம் அது. 'அது உயிரை உண்டு விடும்' என்று சொல்ல மனம் இல்லை. "ஆ! இது பொல்லாது. அடாத செயல் செய்வது" என்று சொல்கிறார்.

"என்ன அம்மா, இப்படிப் பயப்படுகிறீர்கள்? இறைவனுக்கு இது அணிகலன் அல்லவா? அவன் நஞ்சையே உண்டவன் ஆயிற்றே. தேவர்கள் நடுநடுங்கும்படி வந்த ஆலகால விடத்தையே உண்டு கலங்காமல் இருக்கும் போது இந்தப் பாம்பு என்ன செய்துவிடும்?" என்று ஒருவர் கேட்கிறார்.

அம்மையாருக்கு நடுக்கம் போகவில்லை. "தாமதம் செய்யாதீர்கள். ஏதாவது தவறு நேர்ந்தால் மிகவும் ஆபத்தாகி விடும். உடனே பாம்பைத் துரத்துங்கள்" என்கிறார்.

தொண்டர் சிரிக்கிறார். "இறைவன் இன்றுதான் இதை அணிந்தானா? எத்தனையோ காலமாக இது அவன் திருமேனியில் இருக்கின்றது. நீங்கள் சொல்கிற தாரோடு தாராக குளிர்ச்சியாகவும், பளபளப்பாகவும் இருக்கின்றதே! இவ்வளவு காலம் வாராத ஆபத்துப் புதிராக முளைத்து விடுமா?" என்று கேட்கிறார்.

அம்மையார் அவர் கூற்றை மறுக்க முடியவில்லை. ஆனாலும் அம்மையாருடைய அச்சம் இன்னும் நீங்கவில்லை. எப்படியாவது இந்தப் பொல்லாத நாகத்தை இறைவன் திரு மார்பிலிருந்து ஓட்டிவிட வேண்டுமென்று பார்க்கிறார். தகவுடையார் யாவரும் அதைச் செய்ய மாட்டார்கள் போலத் தோன்றுகிறது.

அம்மையார் சொன்ன காரணம், அதாவது 'இறைவ னுக்குப் பாம்பால் தீங்கு நேரலாம்' என்ற காரணம் சரி யென்று என்றுதானே தொண்டர், தகவுடையோர் ஒருவர், எடுத்துரைத்தார். அதற்கு மறுப்புச் சொல்ல வேண்டாம்' சொல்வதும் அவ்வளவு எளிதன்று, ஆகவே வேறு ஒரு காரணத்தைச் சொல்லலாமா? அம்மையார் யோசிக்கிறார். அவருக்கு ஒரு காரணம் தோன்றுகிறது. ஆம்! அந்தக் காரணத்தை யாரும் மறுக்க முடியாது.

"நீங்கள் சொல்வது சரியாகவே இருக்கட்டும். பாம்பு எம்பெருமானை ஒன்றும் செய்யாது என்பதை இப்போதைக்கு ஒப்புக்கொள்கிறேன். ஆனால் மற்றோர் ஆபத்து இருக்கிறதே அது வராமல் தடுப்பது எப்படி?"

"என்ன ஆபத்து?"

"எம்பெருமான் திருமேனியோடு ஒட்டிப் பாதியும் பாதியு மாக இறைவி இருக்கிறாளே, அவள் இமயமலை ராசனுடைய செல்லக்குழந்தை அல்லவா? ஒரு கணமும் எம்பெருமானை விட்டு அகலாமல் அவனுடைய வாம பாகத்தில் ஒட்டி இணைந்து விளங்கும் உமாதேவியை மறந்துவிட்டீர்களே! அந்தப் பாம்பு இறைவன் திருமேனியளவில் நின்றுவிடும் என்று சொல்ல முடியுமா? அதுதான் எப்போதும் நாக்கை நீட்டிக்கொண்டு உணர்ந்தபடியே இருக்கிறதே! மலைமகள் தாவலாமே! ஒரு நாள் அந்தப் பிராட்டியின் மேலே ஊர்ந் தால்? ஏ! அதை நினைத்தாலே பயமாய் இருக்கிறது. அப்படி ஆடும்படி விடுதல் மகா பாவம். பெண் பாவத்தைக் கொட்டிக் கொள்ளாதீர்கள். பெண்ணின் இயல்பு எனக் கல்லவா தெரியும்? இந்தப் பாம்பு இந்த எல்லையை விட்டுத் தாண்டமாட்டேன் என்று முறியா எழுதிக் கொடுத்திருக் கிறது? அம்பிகையின் திருமேனியில் புகாது என்று உறுதி கூறு வீர்களா?"

யாவரும் யோசிக்கிறார்கள்.

"தகவுடையவர்கள் இல்லையா? அம்மையின் மேல் பாம்பு ஊராமல் இருக்க வேண்டுமானால் இறைவன் மார்பிலேயே அது புகும்படி செய்யக்கூடாது. அவனுக்கும் அம்மைக்கும் நெடுந்தூரமா? அவன் மார்புக்கு ஆபரணம் என்று சொல்கிறார்களே! அங்கேதான் தார் இருக்கிறதே! அது போதுமே! இந்தப் பாம்பு எதற்கு? இதுவரைக்கும் இருப்பதுபோலவே அது இருக்கும் என்பது என்ன நிச்சசம்? என்றேனும் ஒருநாள் மலைமகளைச் சாரலாம். அதை நினைத்தாலே பயமாய் இருக்கிறது! அப்படி ஆகிவிட்டால் அதைப் போன்ற மகாபாவம் வேறு இல்லை."

இப்படியெல்லாம் நினைக்கும்படியாக அம்மையார் பாடுகிறார்.

> **"தகவுடையார் தாம்ஊரேல்**
> **தார்அகலம் சாரப்**
> **புகவிடுதல் பொல்லாது**
> **கண்டீர்! - மிகஅடா**
> **ஊர்ந்திடுமா நாகம்**
> **ஒருநாள் மலைமகளைச்**
> **சார்ந்திடுமேல் ஏபாவந்தான்!"**

[அடா நாகம், ஊர்ந்திடும் நாகம் என்று கூட்ட வேண்டும். ஏ: இரக்கக் குறிப்பு]

இது காரைக்கால் அம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியில் 13-ஆம் பாடல்.

இப்படித் தாயன்பும் பரிவும் தோன்றும்படி அம்மையார் பின்னும் சில பாடல்களைப் பாடியிருக்கிறார்.

# 14. பெருஞ் சேமம்

மனிதன் மனத்தின் வசப்பட்டு வாழ்க்கையில் அவலத்தை அடைகிறான். மனம் பேய் போன்றது. பேய் சும்மா இராது. அதற்கு எதையாவது பலி கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். பிறருக்குத் துன்பம் தருவதே பேய்க்கு இயல்பு. தன்னுடைய காட்சியாலே பிறருக்கு அச்சத்தை உண்டாக்கி, தன் தொடர்பாலே துன்பத்தை விளைத்து அதனால் இன்பத்தை அடைவது பேய்க்குணம்.

மனமும் எப்போதும் ஆசையின்மேல் ஆசையாகக் கொண்டு நம்முடைய காலத்தைப் பலி கொள்கிறது; வாழ்க்கையையே அழித்து விடுகிறது. "மனம் போன போக்கெல்லாம் போக வேண்டாம்" என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

ஆனால் மனத்தை அடக்கத் தெரிந்து கொண்டால் அதுவே நமக்கு ஏவல் செய்யும். பேயை ஒருவன் அடக்கும் ஆற்றல் பெற்றுவிட்டால் அது வேறு யாரும் செய்ய முடியாத காரியத்தையெல்லாம் சாதித்துத் தரும். மதம் பிடித்த யானை போன்றது அடங்காத மனம். அதனால் எந்தச் சமயத்தில் எந்தத் தீங்கு வருமோ தெரியாது. பழகிய யானை ஐம்பது மனிதர்கள் செய்யும் வேலையைச் செய்யும் மரங்களை உருட்டிக் கொண்டு வரும். பெரும் போரில் பகைவர்களை அழிக்கும். பாகன் தன்னைக் கட்ட வரும்போது தானே சங்கிலியை எடுத்துக் கொடுக்கும்.

மனத்துக்கு உள்ள சக்திக்கு அளவே இல்லை. மனத்தினை அடக்கியவர்கள் பல சித்திகளைப் பெறலாம். எல்லாச் சித்தி

களையும்விட மனத்தை அடக்கும் சித்தியே பெரிதென்று தாயுமானவர் சொல்கிறார்.

'சினம்இறக்கக் கற்றாலும்
சித்தியெல்லாம் பெற்றாலும்
மனம்இறக்கக் கல்லார்க்கு
வாய்ஏன் பராபரமே.''

மனத்தை அடக்கியவர்கள் பிறர் உள்ளத்தில் ஓடும் எண்ணங்களை அறிவார்கள்; எதிர்காலத்தில் நிகழப் போவதை அறிவார்கள்; எல்லாவற்றையும் மறந்த ஆனந்த நிலையைப் பெறுவார்கள்.

நமக்குப் பகையாகிற மனம் மேலும் மேலும் பிறவிகளை எடுப்பதற்குக் காரணமாக நிற்கிறது. உறவான மனம் தானே தன்னை அடக்கிக் கொண்டு நம்முடைய வாழ்வைப் பயனுடையதாக்கிப் பேரின்பப் பெருவாழ்வைப் பெறத்துணையாகிறது.

மனம் மூன்று குணங்களை உடையது. நமக்குப் பெரும்பாலும் தாமத குணமே மிகுதியாக இருக்கிறது. ராஜச குணமும் இருக்கிறது. சத்துவகுணம் மிகக் குறைவு. சத்துவ குண மனம் வலிமையுடையதானால் அது மற்றக் குணங்களை அழித்து விடும்.

கிராமங்களில் பிணத்தைச் சுடும் வெட்டியான் தன் கையில் ஒரு மூங்கில் தடியை வைத்திருப்பான். பிணம் எரியும் போது நீர் சுருங்குவதனால் கைகால்கள் விறைக்கும். அந்தத் தடியால் அவற்றை அடித்து ஒழுங்குபடுத்துவான். விறகைக் தள்ளி யாவும் எரியும்படி செய்வான். எல்லாவற்றையும் எரியப் பண்ணின பிறகு அந்தத் தடியை அந்த நெருப்பிலேயே போட்டு எரித்து விடுவான். யாவற்றையும் எரிக்க உதவிய அந்தத் தடி கடைசியில் தானும் நெருப்பில் எரிந்து போகிறது.

அவ்வாறே சத்துவகுண மனப்பகுதி மற்றப் பகுதிகளை யெல்லாம் அழித்துவிட்டுத் தானும் அழிந்துவிடும். மனத்தை அடக்கி ஒருமைப்பாட்டை உண்டாக்கிக் கொண்டால் மனோ வயம் உண்டாகும். பிறகு மனோநாசம் உண்டாகும். அதுவே ஜீவன் முக்த நிலை.

சத்துவகுணம் விஞ்சி நிற்கும்போது மனம் இறைவன் திருவருளை நாடும். அவன் திருவுருவத்தைத் தியானிக்கும். தன் விருப்பப்படி திரிந்த மாட்டை ஒரு முளையடித்துக் கட்டி விட்டால் அது அந்த முளையையே சுற்றிச் சுற்றி வரும். ஒவ்வொரு சுற்றுக்கும் கயிற்றின் நீளம் குறைந்து கொண்டே வரும். கடைசியில் கயிறு, முளை, கழுத்து எல்லாம் இணைந்து விடும்.

இறைவன் என்ற முளையை அடித்து அதைச் சுற்றி மனம் வளைய வருமானால் எப்போதும் இறைவன் நினைவு என்ற வட்டத்துக்குள் சுற்றும். பிறகு மெல்ல மெல்ல இயக்கமே ஒழிந்து இறைவனோடு ஒன்றி விடும்.

காரைக்கால் அம்மையார் தம் மனத்தை அடக்கிப் பழகி னவர். இறைவனுடைய திருவுருவத்தைத் தியானித்து நலம் பெற்றவர். உலகியலில் உண்டாகும் அல்லல்கள், அவலங் கள் தம்மைத் தாக்காமல் பாதுகாப்புச் செய்து கொண்டவர். க்ஷேமமாக வாழ்வும் வாழ்வையே நாம் விரும்புகிறோம். உடம்பு நோய் நொடியின்றி சுகமாக இருந்தால் அதையே க்ஷேமமாகக் கருதுகிறோம். ஆனால் இந்த உடம்பைக் காட்டி லும் சிறந்தது உயிர். அதற்கு க்ஷேமம் உண்டாக வேண்டும். பிறப்பு அதற்கு வேண்டும். அதுதான் மகா க்ஷேமம், அதைப் பெருஞ்சேமம் என்கிறார் காரைக்கால் அம்மையார்.

தம்முடைய மனமே தமக்கு உறுதுணையாக இருந்துதான் உய்வதற்காக 'இந்தப் பெருஞ் சேமத்தைச் செய்தது என்று சொல்ல வருகிறார். தன்னுடைய அருமை மகள் தன் கணவ னைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு யாருடைய உதவியும்

இல்லாமல் சாமர்த்தியமாகக் குடித்தனம் செய்கிறதைப் பார்த்த தாய், "என் குழந்தை தனியாகவே இருந்து தானே எல்லாவற்றையும் செய்து கொண்டு கெட்டிக்காரியாக வாழ்கிருள்" என்று பெருமைப்பட்டுக் கொள்வதைப் போலப் பேசுகிருர் அம்மையார்.

"என்னுடைய நெஞ்சம் யாருடைய உதவியையும் பெறவில்லே. பாவம்! தனியாகவே இருக்கிறது. ஒன்றிக்கட்டை. அது எத்தகைய வியப்பான செயலேச் செய்திருக்கிறது தெரியுமா!" என்று தொடங்குகிருர்.

**"தானே தனிநெஞ்சம்."**

"தன்னே உய்யும்படி செய்வதற்கு வேறு யாரையும் நாடவில்லே. தன்னேத் தானே உயர்த்திக் கொண்டது தான் உய்வதற்கு இதுதான் வழி என்பதை அறிந்து கொண்டு தனக்குத் தானே பெருஞ் சேமத்தைச் செய்து கொண்டது" என்கிருர்.

**"தன்னே உயக் கொள்வான்**
**தானே பெருஞ்சேமம் செய்யுமால்."**

கெட்டிக்காரப் பையன் வருங்காலத்தில் நன்ருக வாழ வேண்டுமென்று விரும்புகிருன். அவனேக் கைதூக்கிவிட யாரும் இல்லே. இருந்தாலும் அவன் தன்னுடைய சொந்த முயற்சியால் முன்னுக்கு வர எண்ணுகிருன். எவ்வளவோ பேரை நாம், "தாமே உயர்த்திக் கொண்ட மனிதர் (Self-made man) என்று சொல்வதில்லேயா? அத்தகையவர்களுள் ஒருவன் அவன்."

மற்றவர்களேப் போலப் பொழுதை வீணுக்காமல் உழைத்து ஊதியம் பெற்றுக்கொண்டு கண்ட செலவு செய்யாமல், பெற்றதைச் சேமிக்கிருன். அவனுடைய உழைப்பினுல் பணம் சேர்கிறது. பெரிய சேமிப்பை அவன் செய்து விடுகிருன். அவனே சேர்த்த சேமிப்பு இது.

காரைக்கால் அம்மையார் மனம் அவ்வண்ணமே, 'தானே பெருஞ்சேமம் செய்த' பெருமையை உடையது.

எப்படி அந்தப் பெருஞ் சேமத்தைச் செய்தது? எந்தப் பொருளை ஈட்டிச் சேமித்து வைத்தது? இன்று வந்து நாளை போகும் பொருளை அது சேமிக்கவில்லை. பரம்பொருளையே சேமித்து வைத்திருக்கிறதாம். அதைச் சொல்கிறார்.

அந்தப் பொருள் எப்படி இருக்கிறது? சிவபெருமான் தானே அப்பொருள்? அவன் திருக்கோலம் எவ்வாறு இருக்கிறது?

அவனுடைய திருமார்பில் நாகப்பாம்பு இருக்கிறது. அதை இறைவன் அணிகலமாகப் பூட்டிருக்கிறான். திருமண முழுவதுமே பாம்பை ஆபரணமாகப் போட்டிருக்கிறான். நீண்ட பாம்பு அது. அது நஞ்சை உமிழும் நாகம். அந்த நஞ்சு நெருப்பைப் போன்ற வெம்மையை உமிழ்கின்றது. அது நஞ்சு ஆதலால் கண்டவர்கள் கண் எரியும்; பட்டவர்கள் உடம்பு எரியும். பொங்குகின்ற அழலின் வெம்மையையுடைய நஞ்சை உமிழும் நீண்ட நாகம் அது.

**"பொங்கு அழல்சேர் நஞ்சுஉமிழும்**
**நீள்நாகம்."**

நாகத்தை இறைவன் அணிகலனாகப் பூண்டிருக்கிறான். பூண்களால் உடம்புக்கு அழகும் பொலிவும் மிகுதியாகும். ஆனால் இறைவனுக்கு அப்படி இல்லை. பூண்களால் அவனுடைய ஆகம் பொலிவு பெறவில்லை. அவனுடைய ஆகத்தால் அந்தப் பாம்பு பொலிவைப் பெறுகிறது.

எப்படிப் பொலிவைப் பெறுகிறது? நஞ்சு உமிழும் நாகத்தைக் கண்டு யாவரும் அஞ்சுவார்கள்; அடித்துக் கொல்லப் பார்ப்பார்கள். கருடனைக் கண்டால் நாகம் அஞ்சும். ஆனால் இறைவன் திருமேனியிலுள்ள நாகத்தைக்

கண்டு பக்தர்கள் அஞ்சுவதில்லை. அந்த நாகம் பக்தர்களை ஒன்றும் செய்யாது. ஆகவே அதைச் சங்கராபரணமாகப் பார்த்து வணங்குகிறார்கள் அன்பர்கள். கருடனைக்கண்டால் அதற்கு அச்சம் இல்லை. இவை அந்தப் பாம்புக்குரிய பெருமை, பொலிவு அல்லவா? அத்தகைய பாம்பை உடையவன் எம்பெருமான்.

பூண்ஆக த்தால்பொலிந்து
பொங்குஅழல்சேர் நஞ்சுஉமிழும்
நீள்நாகத் தான்.

இந்தத் திருக்கோலம் உள்ள சிவபெருமானை நெஞ்சம் நினைத்து நினைத்து உள்ளுக்குள்ளே வைத்துப் பெருஞ்சேமமாகச் சேகரித்துக் கொண்டது. தன்னை விட்டு நழுவ விடாமல் தியானித்துத் தியானித்து உள்ளே வைத்துப் பூட்டிக் கொண்டு விட்டது. இனிக் கவலை இல்லை.

பெரிய தொகை ஒன்றை ஈட்டிப் பெட்டிக்குள்ளே வைத்துப் பூட்டிக் கொண்டவர்களுக்கு வருங்காலத்தில் துன்பம் இராது. அந்தச் சேமப் பொருளால் அவர்கள் நன்றாசு வாழலாம்; உய்தி பெறலாம்.

இந்த நெஞ்சம் பெரிய பொருளாகிய நீண்ட நாகத்தானை நினைந்துப் பெருஞ்சேமம் செய்து கொண்டது; பெரிய சேமிப்பைச் சேர்த்து உள்ளே வைத்துக்கொண்டிருக்கிறது.

பெரும் சேமம் செய்யுமால்
..................................
நீள்நாகத் தானை நினைந்து.

இவ்வாறு பெரிய சேமிப்பைச் சேர்த்துக்கொண்ட பிறகு அது உய்வதற்கு என்ன தடை? மனம் வேறு, தாம் வேறு என்று இல்லாத ஒற்றுமை இருப்பதால் தம் அநுபவத்தையே மனத்தின் செயலாக வைத்துக் கூறுகிறார்.

**தானே தனிநெஞ்சம் தன்னை**
**உயக்கொள்வான்**
**தானேபெருஞ்சேமம் செய்யுமால்**
**—தானே ஓர்**
**பூண்ஆகத் தால்பொலிற்று**
**பொங்கழல்சேர் நஞ்சுமிழும்**
**நீள்நாகத் தானைநினைந்து**

[என்னுடைய நெஞ்சம் தானே தனியாக வேறு துணையின்றி இருக்கும் நெஞ்சம். இது தன்னைத்தானே உய்யக்கொள்ளும் பொருட்டு, ஒப்பற்ற, தன்னைப் பூணும் திருமேனியால் பொலிவு பெற்றுக் கொழுந்து பொங்கும் அழலின் வெம்மை யைச் சேர்ந்த நஞ்சை உமிழும் நீண்ட நாகத்தை உடைய வனைத் தியானம் செய்து, அவனைத் தனக்குள்ளே பெரிய சேமிப்பாகச் சேர்த்துக் கொள்ளும்.

தனி - துணையில்லாத உயக் கொள்வான் - நல்வாழ்வு பெரும்பொருட்டு; உஜ்ஜீவனம் அடையும் பொருட்டு பெரும் சேமம் - பெரிய சேமிப்பு. பூண் ஆகத்தால் - பூணுகின்ற திருமேனியினால். அழல் - ஆகுபெயர்; வெம்மைக்கு ஆயிற்று தானே நினைந்து தானே பெருஞ்சேமம் செய்யும் என்று கூட்டுக. ஆல்; அசை]

இது அற்புதத் திருவந்தாதியில் 14-ம் பாடல்.

# 15. அடி பொருந்தும் அன்பு

இறைவனை வழிபடுகிறவர்கள் எல்லோருமே ஒரே மன நிலை உடையவர்கள் அல்லர். இறைவனை வழிபட்டால் தமக்கு உலகியல் வாழ்வில் நல்ல வசதிகள் கிடைக்கும் என்ற எண்ணத்தோடு உள்ளவர்களே பெரும்பாலும் உலகத்தில் இருக்கிறார்கள். தங்கள் குறைகள் நீங்க வேண்டுமென்றும், தங்கள் பதவிக்கு ஊறு நேராமல் இருக்க வேண்டுமென்றும் எண்ணி, இறைவனைப் பூசிக்கிறார்கள். தம்முடைய பகைவர்கள் அழிய வேண்டுமென்று ஆண்டவனை வேண்டிக் கொள்கிறவர்களும் உண்டு.

பணக்காரர்களும், பதவியில் இருப்பவர்களும் கடவுளைப் பணிந்தால், அவர்களுக்கு ஏதோ குறை இருக்கிறதென்று தெரிந்து கொள்ளலாம். "நான் உனக்கு லட்சார்ச்சனை செய்கிறேன். எனக்கு ஒரு பிள்ளை பிறக்க அனுக்கிரகம் செய்ய வேண்டும்" என்று வியாபார முறையில் வேண்டுகிறவர்களையும் பார்க்கிறோம்.

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறான் இறைவன்.

இறைவனை உடம்பினால் வணங்கி, வாயினால் புகழ்ந்து, மனத்தினால் தியானிக்க வேண்டும். அவன் நமக்கு எல்லாவற்றையும் வழங்கிக் காப்பாற்றும் வள்ளல் என்பதை நினைந்து உருகவேண்டும்.

ஒருவன் செய்த நன்றியை மறப்பது, எல்லாப் பாவங்களிலும் கொடிய பாவம் என்று சொல்கிறார்கள்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்று திருவள்ளுவர் சொல்கிறார். உலகில் மக்கள் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ்கிறார்கள். அவ்வாறு உதவி செய்தவர்களை அந்த உதவியைப் பெற்றவர்கள் நன்றியறிவுடன் நினைக்கவேண்டும். அதுதான் மனிதப் பண்பு.

மக்கள் பிறருக்கு எவ்வளவு சிறந்த உபகாரங்களைச் செய்தாலும் இறைவன் செய்த உபகாரத்துக்கு அவை சிறிதேனும் ஈடாவதில்லை. இந்த அற்புதமான உடம்பை அளித்திருக்கிறான். இது எவ்வளவு பெரிய உபகாரம்! இந்த உடம்பில் ஏதேனும் ஓர் உறுப்புப் போய்விட்டால் மனிதன் போலி உறுப்பைப் பொருத்திக் கொள்கிறான். ஆனாலும் இயல்பான உறுப்பைப் போல அது ஆகுமா? பதிலாக வேறு ஒன்றைப் பொருத்திக் கொள்ள முடியாத அங்கவீனம் பலருக்கு உண்டாகிறதே! அவர்களைப் பார்த்தால் நல்ல உறுப்புக்களை உடையவர்கள், 'இறைவன் நமக்கு உறுப்பிலே குறை வைக்காமல் நன்மை செய்திருக்கிறானே!' என்று எண்ணி உருக வேண்டாமா? ஊமை ஏதோ உளறுவதைக் கேட்டால் நாம் சிரிக்கிறோம். நம்மையும் ஊமை ஆக்காமல் பேச வாய் தந்திருக்கிறானே, இறைவன்; அதை நினைப்பூட்டிக் கொள்ள அந்த ஊமை உதவுகிறானே! அவனைப் பார்த்துச் சிரிக்காமல், ஆண்டவன் நமக்குச் செய்திருக்கும் நலங்களை எண்ணி அப்பெருமானைப் பாராட்டுவதல்லவா அறிவு படைத்த மனிதனுடைய கடமை?

கருவி கரணங்களைத் தந்து, ஓடியாடப் பூமியை வைத்து, மழையைத் தந்து, சூரியசந்திரர்களைத் தந்து, மனைவி மக்களைத் தந்து, நண்பர்களைத் தந்து வாழ வைத்திருக்கிறானே, அதை நினைத்துப் பார்த்தால் உள்ளம் உருகாதா? அண்டத்தில் உள்ள அதிசயங்களையும் உடம்பாகிய பிண்டத்தில் உள்ள அதிசயங்களையும் எண்ணிப் பார்த்தால் இறைவனுடைய

பெருங்கருணையை எண்ணி வியந்து வியந்து பாராட்டத் தோன்றும். நாம் செய்கிறோமா?

இனிமேல் நமக்கு அவன் சொர்க்க இன்பத்தையோ மோட்சத்தையோ வழங்குவது இருக்கட்டும். இப்போது எல்லாவற்றையும் தந்து வாழ வைத்திருக்கிறானே, அதுவே பெரிய காரியமல்லவா? அதற்காகவாவது நாம் நன்றிப் பெருக்குடன் அவனை வழிபட வேண்டாமா? 'ஒன்றுக்கும் பற்றாத எளியேனுக்கு எத்தனை நன்மைகளைச் செய்திருக்கிறாய்!' என்று உருகுவது பெரியவர்கள் இயல்பு. ஆழ்வார் திருவாக்கு களிலும் அப்படி உள்ள பாடல்கள் பலப்பல.

நம்மைப் பெற்றுப் பாலூட்டிக் காப்பாற்றும் தாயை விட, நமக்கு வேண்டியவற்றையெல்லாம் வாங்கி அர வணைக்கும் தந்தையைவிட ஆண்டவன் பெரியவன். நம் தாய் தந்தையரிடத்தில் நமக்கு இயற்கையாகவே ஒரு பாசம் உண் டாகிறது. தாய் அடித்தாலும் குழந்தை அவளிடமே ஒட்டிக் கொள்கிறது.

இறைவனிடம் அப்படி ஒரு பாசம் நமக்கு இருக்க வேண்டும். "பாசம் பரஞ்சோதிக்கு அன்பாய்" என்று திரு வெம்பாவையில் வருகிறது. உண்மையான பக்தர்கள் இன்பம் வந்தாலும் துன்பம் வந்தாலும் அவனோடு பின்னிப் பிணைந்து கிடப்பார்கள்; அவன் அடியையே பற்றிக் கொண்டிருப் பார்கள். "நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்று இருப்பார்கள். அவன் திருவடி யையே புகலாக அடைந்து பற்றிக் கிடப்பதனால்தான் அடி யார் என்ற பெயர் வந்தது.

வழிபாட்டை வியாபாரமாகப் பண்ணுகிறவர்களும் இறைவனுக்கு அபிஷேகம் செய்வார்கள்; அர்ச்சனை செய் வார்கள்; தம்முடைய செல்வச் செழிப்பை விளம்பரப் படுத்தும் வகையில் அலங்காரம் செய்வார்கள். இவ்வளவும் இறைவனுக்கு லஞ்சம் கொடுத்து ஒன்றைப் பெறுவதற்காகச்

செய்கிற காரியங்கள் அவர்கள் இவ்வாறு விளம்பரத்துக் காகச் செய்யும் போலிப் பக்தியைக் கண்டு இறைவன் சிரிக் கிருனும். அவர்களுடைய நெஞ்சிலேயே அவன் இருக்கிருன். ஆகையால் அந்த நெஞ்சில் என்ன எண்ணுகிருர்கள் என்பதை அவன் நன்ருக அறிந்து கொள்கிருன். 'நம்மைப் பூவாலும் நீராலும் ஏமாற்றப் பார்க்கிருர்கள்!' என்று அவன் அங்கிருந்த படியே சிரிக்கிருனும்.

> **"பொக்கம் மிக்கவர் பூவும்நீ ருங்கண்டு**
> **நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே"**

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிருர்.

இந்த ஆடம்பரப் பக்தர்கள் தாம் செய்கிற பூசையை இறைவன் ஏற்றுக் கொள்ள வேண்டுமே என்று கவலைப்பட மாட்டார்கள். நாலுபேர் பார்த்துத் தம்மை மகா பக்தர்கள் என்று பாராட்ட வேண்டும் எண்ணுவார்கள். இறைவன் திருக்கோயிலுக்குக் கற்பூரத்தட்டு வாங்கி அளிப்பார்கள். அதன் விலை இருபது ரூபாய் இருக்கும். அதில் தம் பட்டங் களுடன், விலாசத்துடன், முழுப் பெயரையும் பொறிக்க வேண்டும் என்று விரும்புவார்கள். எல்லாம் சேர்ந்து 200 எழுத்துக்கள் இருக்கும். எழுத்துக்குக் கால் ரூபாய் வீதம் மொத்தம் ஐம்பது ரூபாய் கொடுப்பார்கள்; தட்டின் விலை யைப்போல இரண்டு பங்கு தகுமே! தட்டின் விலை இருபது ரூபாய்; வெட்டின் விலை ஐம்பது ரூபாய்! எல்லாம் விளம்பர மோகம்! இவற்றையெல்லாம் பக்தியின் வெளியீடு என்று சொல்லலாமா?

நாம் நம் கண் முன்னல் பணக்காரர்கள் செய்யும் விளம் பரப் பகுதியை, ஆடம்பரஆராதனையைப் பார்த்திருக்கிறேம். காரைக்காலம்மையார் எல்லோரையும் விடப் பெரிய பணக் காரர்கள் செய்யும் ஆரவாரத்தை மனக் கண்ணல் பார்க் கிருர்.

மனத்தை இறைவன் திருவடியில் ஈடுபடுத்தாமல் செய்யும் பூஜை பயனற்றது.

> " கைஒன்று செய்ய விழிஒன்று நாடக்
> கருத்தொன்று எண்ணப்
> பொய்ஒன்று வஞ்சக நாஒன்று பேசப்
> புலால்கமழும்
> மெய்யொன்று சாரச் செவியொன்று
> கேட்க விரும்புமியான்
> செய்கின்ற பூசைஎவ் வாறுகொள்
> வாய்வினை தீர்த்தவனே"

என்று பட்டினத்தார் பாடுகிறார். இந்த எண்ணம் இருந்தால் இறைவனைப் பற்ற முடியாது.

இறைவனுடைய திருவடியில் மலரிட்டு அருச்சிக்கிறோம். மற்ற அங்கங்களுக்குத் தனியே அர்ச்சனை பண்ணினாலும் திருவடிக்கே மலரிட்டு அருச்சிப்பது சிறப்பு. அப்படி அருச்சிக்கும் போது வெறும் மலரை மட்டும் திருவடியில் இட்டால் போதாது.

ஆண்டவன் திருவடியை நேரே பார்த்தால் மனம் அங்கே பதியாது. ஓரிடத்தில் அடையாளம் செய்து அங்கே அம்பை எய்வது போல, மலரைத் திருவடியிலே வைத்து இனம் கண்டுகொண்டு, அங்கே நம் மனத்தை வைத்துப் பழக வேண்டும். மலரைப் பொருத்துவதோடு நிற்கக் கூடாது; மனத்தையும் பொருத்த வேண்டும்.

> " தகட்டிற் சிறந்த கடம்பையும்
> நெஞ்சையும் தாளிணைக்கே
> புகட்டிப் பணியப் பணித்தருள்வாய்"

என்று இந்த அரிய கருத்தை அருணகிரிநாதர் கந்தர் அலங்காரத்தில் சொல்கிறார்.

மலரைத் திருவடியிலே இயந்திரத்தைப் போலப் போடு கிறவர்களே பலர். அப்படிச் செய்வதனால் அருச்சனையின் பயன் கிடைக்காது. ஆண்டவன் அடியே மலர். அந்த மலரைக் குறிவைத்து மலரை இட்டு அருச்சித்து அதன் வழியே மனமாகிய மலரையும் இடவேண்டும். மலர் பொருந் தும் திருவடியிலே மனமும் பொருந்த வேண்டும்.

அர்ச்சனை செய்பவர்களிடம் இந்த இயல்பைக் காணமுடி கிறதா? உண்மை அன்பர்களிடம் காணலாம்.

தேவர்கள் இறைவனை வழிபடுகிறார்கள். அவனை வழிபட வேண்டும் என்றும் நினைக்கிறார்கள். அதனால் தமக்கு என்ன என்ன பயன் விளையும் என்று நினைந்து பார்க்கிறார்கள். தம் முடைய வானுலகப் பதவி நிலைத்திருக்க வேண்டும் என்றும், அந்தப் பதவிக்குரிய இன்ப வாழ்வில் இடையூறின்றி வாழ வேண்டும் என்றும், அதற்கு இறைவனைப் பூசிப்பது உபாயம் என்றும் பலகால் நினைக்கிறார்கள்.

> “வாழ்த்துவதும் வானவர்கள்
> தாம்வாழ்வான்; மனம்நின்பால்
> தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
> தம்மைஎல்லாம் தொழவேண்டி”

என்பது திருவாசகம்.

தேவர்களுடைய நினைப்பை அறிந்தவர் மாணிக்கவாசகர். அவர்கள் தம் நலத்தை முதலில் நினைந்து பிறகே இறைவனை வழிபடுவதை நினைக்கிறார்கள். அவர்களுடைய நினைப்பிலே ஆசை இருக்கிறது; பதவி மோகம் இருக்கிறது.

வானவர்கள் நினைக்கிறார்கள்; தம் வாழ்வையும் அதை வளப்படுத்துவான் இறைவன் என்பதையும் நினைக்கிறார்கள். உடனே அவனிடம் சென்று வழிபட மனம் இடம் கொடுக்க வில்லை. அவர்களுடைய அகந்தை தளர்வதில்லை. பலகாலும்

தம் நலத்தை நினைக்கிறார்கள். இறைவனை வழிபட்டால் தான் தம் பதவியை நிலைநிறுத்திக்கொள்ள முடியும் என்பதை எண்ணுகிறார்கள். "சரி; இது செய்யத்தான் வேண்டும்" என்று ஆண்டவனை அணுகுகிறார்கள்.

இறைவனுக்குப் பூசை செய்ய எண்ணி விட்டார்கள். பணக்காரர்கள் செய்கிற பூசை எப்படி இருக்கும்? மற்றவர்களுக்குக் கிடைக்காத மலர்களையும் பிற பொருள்களையும் சேமிக்கிறார்கள். அவர்கள் நினைத்தால் காமதேனுவின் பாலாலே அபிஷேகம் செய்யலாம். கற்பக மலராலே அருச்சிக்கலாம். அமுதத்தையே நிவேதனம் செய்யலாம்.

'பூசை செய்யலாமா, வேண்டாமா?' என்று நினைத்திருந்து, பிறகு, 'செய்யலாம்' என்று தீர்மானித்த பிறகு பூசைக்குரிய திரவியங்களைச் சேகரிக்க முற்படுகிறார்கள்; பெரிய பெரிய மலர்களைப் பறித்து வருகிறார்கள். நீளமான மாலைகளைக் கொணர்கிறார்கள்.

ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்து தாம் கொண்டு வந்த மலரால் திருவடிக்கு அருச்சனை செய்கிறார்கள். பிறகு நீண்ட மலர் மாலைகளால் புனைகிறார்கள். அந்த மாலைகளைப் பார்க்கும் போது, நமக்கு, "அடே அப்பா! எவ்வளவு பெரிய மாலை!" என்ற வியப்புத் தோன்றுகிறது.

"வானவர்கள் பெரியவர்கள்; பணத்தால் பெரியவர்கள்; பதவியினால் உயர்ந்தவர்கள். தம்முடைய நிலைக்கு ஏற்றபடிதான் பெரிய மாலைகளைப் புனைந்திருக்கிறார்கள்." என்று நாம் வியக்கிறோம்.

ஆனால் காரைக்கால் அம்மையார் என்ன சொல்கிறார்? நாம் புறக் காட்சியையே கண்டு மயங்குகிறவர்கள். அம்மையாரோ உள்ளத்தினுள்ளே புகுந்து சோதனை போடுகிறவர். "எல்லாம் வெளி வேஷம்! உள்ளே ஒன்றும் இல்லை. அந்த மாலைகளால் ஆண்டவன் அடியை அலங்காரமா செய்

கிறார்கள்? அந்த அடிகள் கண்ணுக்குத் தெரியாமலே மறைத்து விட்டார்கள். கருத்திலும் அந்த அடிகளை அவர்கள் வைக்கவில்லை. மாலை பொருந்தியதே ஒழிய மனம் பொருந்தவில்லை. அவ்வாறு பொருந்துவதற்குரிய சக்தி அவர்களிடம் இல்லை. அதற்கு எவ்வளவோ காலம் பழக வேண்டும். அடியோடு ஒட்டி உறவாட வேண்டும். அவர்கள் அந்தத் திறமை இல்லாதவர்கள்; மாட்டாதவர்கள்" என்கிறார்.

**நினைந்திருந்து வானவர்கள்**
**நீள் மலரால் பாதம்**
**புனைந்தும் அடிபொருத்த**
**மாட்டார்.**

ஃ ஃ ஃ

பிறகு அம்மையார் தம்மையே சோதனை போட்டுக் கொள்கிறார். "அவர்கள் அடியை மலராற் புனைந்தும் அடியோடு பொருந்துவதில்லை. நானோ—?"

அவரும் நினைந்திருக்கிறார். அவர்களைப் போல அல்ல தம் பதவியையும் தமக்குக் கிடைக்க வேண்டிய நன்மை களையும் இறைவனிடம் அவற்றைப் பெறலாம் என்பதையும் தேவர்கள் நினைத்தார்கள் அவர்கள் நினைத்தது ஒன்றல்ல; பல. அவற்றை நினைந்து நினைந்து தியங்கியிருந்து பிறகே பூசை செய்யப் புகுந்தார்கள். அம்மையார் அப்படியா நினைந் திருந்தார்? அவர் தாம் நினைந்தபடியே முன்பே சொல்லி யிருக்கிறார்.

**ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே**
**துணிந்தொழிந்தேன்,**
**ஒன்றேஎன் உள்ளத்தின்**
**உள்ளடைத்தேன்"**

என்று சொல்லியிருக்கிறுரே, ஆகவே பலவற்றையும் நினைந் திருந்த தேவர் நிலை வேறு; ஆண்டவனையே நினைத்திருந்த அம்மையார் நிலை வேறு.

இறைவனை நினைந்து நினைந்து வாயார அவன் திருநாமங் களையும் இயல்புகளையும் கூறிக் கூறிப் புகழ்பவர் அம்மையார். ஆண்டவனுடைய திருவுருவத்தை மனத்தில் வைத்துத் தியானித்து அவன் அங்கங்களின் எழிலை வாயாரச் சொல்லிப் பாடுகிறவர்.

'மின்னலைப் போன்ற சடையையுடையவனே, பெரிய சடையையுடையவனே!' என்று ஏத்துகிறவர்; 'வேதம் ஓதும் எம்பெருமானே, வேதியனே' என்று துதிக்கிறவர். அப்படிப் பாடும்போதெல்லாம் அவன் திருவுருவத்திலும் திருவடியிலும் நெஞ்சு பதிந்து நிற்கிறவர். தேவர்கள் மலரை இட்டுப் பூசை செய்தும் மலர் இடும் திருவடியில் மனத்தைப் பொருத்துவ தில்லை. அம்மையார் பூசை செய்யவில்லை. மனத்தால் தியானிக் கிருர்; வாயிஞல் ஆண்டவனைத் துதிக்கிருர். அவர் உள்ளம் இறைவன் திருவடியிலே பொருந்தியிருக்கிறது.

சிவபெருமான் தேவர்கள் இடும் மாலைகளையும் புனைந்து கொள்கிருன். அம்மையாருடைய அன்பையும் ஏற்றுக்கொள் கிருன். வெளிப் பார்வையில் தேவர்கள் நினைப்பதும் இருப்ப தும் பிறகு மலரால் பாதத்தைப் புனைவதும் சிறப்பாகத் தோற்றுகின்றன. ஆனுல் அவர் உள்ளம் இறைவன் அடியில் பொருந்தவில்லை. அம்மையாரோ நினைந்திருந்து இறைவனை வாழ்த்துகிருர்.

இறைவன் இருவருடைய இயல்பையும் உணர்ந்தவன். தேவர்கள் ஒரு பயனை எதிர்நோக்கி மனம் பொருந்தாமல் வழிபடுகிருர்கள். அம்மையாரோ மனம் பொருந்தித் தியானித்து வாழ்த்துகிருர்.

அப்படியாஞல் அம்மையாருக்கு என்ன செய்வான் இறைவன்? நிச்சயமாக அருள் புரிவான்; பிறப்பின்றிச் செய்து

விடுவான். அம்மையார் இப்படிச் சொல்லவில்லை. "இனி என்ன செய்வானோ?" என்று ஐயப்படுபவர்போல முடிக்கிறார். இதில் நமக்கு ஓர் ஐயமும் இல்லை. உறுதியாக இறைவன் அருளைப் பெற்றவர் அவர். இனியும் பேரருளைப் பெறப் போகிறவர்.

பின், ஏன் அவர் ஐயப்பட வேண்டும்? அதுதான் அன்பின் இயல்பு. 'அவன் திருவுள்ளம் எதுவோ?' என்று ஏங்குவதே அன்பின் இலக்கணம்.

அம்மையார் கூறுவதைக் கேட்கலாம்.

**நினைந்திருந்து வானவர்கள்**
**நீள்மலரால் பாதம்**
**புனைந்தும் அடிபொருந்த**
**மாட்டார்—நினைந்திருந்து**
**மின்செய்வார் செஞ்சடையாய்,**
**வேதியனே, என்கின்றேற்கு**
**என்செய்வான் கொல்லோ இனி?"**

[தேவர்கள் தம் நலத்தையும் இறைவனை வழிபட்டால் அவை மிகும் என்பதையும் நினைந்து, சில காலம் தாழ்த்திருந்து, பிறகு நீண்ட மாலைகளால் இறைவனுடைய பாதத்தை அலங்காரம் செய்தும், அந்தத் திருவடியில் மனம் பொருந்த மாட்டார்; எப்போதும் இடைவிடாது அவனையே நினைத் திருந்து, மின்னலைப் போன்ற பெரிய செம்மையையுடைய சடையையுடையவனே, மறையை எப்போதும் ஓதிக்கொண் டிருப்பவனே என்று வாழ்த்துகிற எனக்கு அவன் இனிமேல் என்ன செய்தருளுவானோ?]

வானவர்கள் நினைந்து, பிறகு சிறிது யோசனை பண்ணிப் பொறுத்திருந்து பிறகே அடி புனைவர். நினைந்து இருந்து என்று பிரித்து, இருந்து என்பதற்குக் கொஞ்சம் பொறுத்துப் பார்த்திருந்து என்று பொருள் கொள்ளவேண்டும்.

செல்வர்கள் ஒருவரைப் பணிய வேண்டும் என்று நினைப் பதே அரிது. அப்படி நினைத்தாலும் எளிதிலே அதைச் செயலிலே காட்டமாட்டார்கள். தம் மதிப்புக்கு இழுக்கு வந்து விடுமே என்று தயங்குவார்கள். அந்த இயல்பையே 'நினைந்து இருந்து' என்ற தொடர் காட்டுகிறது.

அம்மையாரோ எப்போதும் நினைந்து கொண்டே இருப்ப வர். அங்கே நினைப்பதையே தம் செயலாகக் கொண்டிருந்து என்று கொள்ள வேண்டும். இடைவிடாமல் நினைப்பதையே அது குறிக்கிறது.

வானவர்கள் என்பது தேவலோகத்துக்கு உரிமையாளர் கள் என்று பொருள் தந்து, பதவியால் பெரியவர்கள் என்ப தைப் புலப்படுத்தியது.

நீள்மலர் என்பதில் மலர் ஆகுபெயர்; மாலைக்கு ஆயிற்று. பாதம் புனைந்தும் என்ற உம்மை இழிவு சிறப்பு. பாதத்தைத் தொட்டு அலங்கரித்தும் தம் உள்ளத்தில் கொள்வதில்லை என்பதைச் சுட்டியது. பொருந்த மாட்டார் - பொருந்தும் வன்மையில்லாதவர். இப்போது பொருந்த மாட்டார் என்றால் பொருந்தார் என்ற பொருளில் சொல்வோம். பழைய இலக்கியங்களில் பொருந்தார் என்றே சொல் வார்கள். பொருந்த மாட்டார் என்றால் பொருந்தும் வன்மை பெறார் என்று பொருள் கொள்ள வேண்டும்.

தேவர்களுக்குத் தம் நலமே மனத்தில் இருப்பதால் அடியை உள்ளத்தே வைக்கும் உரன் அவர்களுக்கு இல்லை. அந்த உரம் பக்தர்களுக்கே உண்டு; அதனால் அடியார் என்ற பெயர் அவர்களுக்கு வந்தது. தேவர்கள் பூசை செய்தாலும் அடியார் ஆகமாட்டார்கள்; அவர்கள்உள்ளத்தில் இறைவன் அடி பொருந்துவதில்லை.

மின் செய்: செய், உவம உருபு; மின்னைப் போன்ற தோற்றத்தைச் செய்யும் என்றும் பொருள் கொள்ளலாம். வான்-பெருமை.

தேவர் அடி பொருந்த மாட்டார் என்றதால் அம்மை யார் அடி பொருந்தியவர் என்பது தானே தெளிவாகும்.

இறைவன் எப்போதும் வேதத்தைச் சொல்கிறவன்; அதனால் அவன் அநாதி வேதியன்; "வேதியா வே கீதா" என்பது தேவாரம், என்கின்றேற்கு - என்று வாழ்த்தும் எனக்கு. என் செய்வான் கொல்லோ: கொல்லும் ஓவும் அசைநிலைகள், இனி-இனிமேல்.

இறைவன் அடி உள்ளத்திற் பொருந்த அன்பு செய்கிற வர்களுக்கு அருள்பவன் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 15-ஆம் பாட்டு.

# 16. இருமையிலும் இன்பம்

மனிதன் இந்த உடம்பு பெற்றதன் பயன் மறுபடியும் இத்தகைய உடம்பினுள் வராமல் இருப்பதே. முள்ளை முள்ளால் எடுப்பதைப் போல இந்தப் பிறவியால், இனிப் பிறவியே வராமல் செய்துவிட வேண்டும். பிறவி எல்லையில்லாமம் தொடர்ந்து வருவது. முன் பிறவியிலே செய்யும் கன்மத்துக்கு ஈடாக ஜன்மம் கிடைக்கிறது. இந்த ஜன்மத்தில் மறுபடியும் கன்மங்களைச் செய்கிறோம். அவற்றின் விளைவாக மீட்டும் மீட்டும் பிறவிகள் தொடர்ந்து வருகின்றன. இப்படி எல்லை இல்லாமல் தொடர்ந்து வருவதால், அலைகள் தொடர்ந்து வரும் கடலைப் பிறப்புக்கு உவமையாக்குவது மரபு.

> " **தனியனேன் பெரும்பிறவிப் பவ்வத்து எவ்வத்**
> **தடந்திரையால் எற்றுண்டு**"

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். இந்தக் கடலைக் கடப்பது எப்படி?

திருவள்ளுவர் சொல்கிறார் :

> " **பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்**
> **இறைவன் அடிசேரா தார்.**"

பெரிய கடலாகிய பிறவியை நீந்துவதற்கு இறைவன் திருத்தாள் புணையாக உதவும். கடலில் ஆழாமல் மிதந்து கடக்க வேண்டுமானால் கடலில் ஆழாத பொருள்தான் புணையாக உதவும். நாமோ நெஞ்சமென்ற கல்லைக் கட்டிக் கொண்டு பிறவிக் கடலில் விழுந்திருக்கிறோம்:

கல் சிறியதானாலும் நீரில் போட்டால் அமிழ்ந்துவிடும். ஆனால் மிகப் பெரிய கல்லானாலும் நீரின் மேல் மிதக்கும். பெரிய கட்டையின் மேல் வைத்தால், அந்தக் கட்டையின் சார்பால் அது கீழே ஆழாது. அதற்கு ஆதாரமாக உள்ள கட்டை ஆழாமல் காத்து நிற்கும்.

இறைவன் பிறவிக் கடலில் அமிழாதவன். ''பிறவா யாக்கைப் பெரியோன்'' என்று சிலப்பதிகாரம் கூறும். ஆதலால் அவன் திருத்தாள் நமக்குப் புணையாக உதவும். இயல்பாகப் பிறவிக் கடலில் ஆழ்வது ஆன்மா. இறைவனுடைய திருவடியைப் பற்றிக் கொண்டால் ஆழாது.

இறைவனுடைய திருவடியை மனத்தால் நினைப்பதும், வாயினால் புகழ்வதும், உடம்பால் வணங்குவதும் அவ்வடியோடு சேர்வதாகும். இடைவிடாது நினைப்பவர் திருவடியைச் சேர்ந்தவர்; அவரையே அடியார் என்பர். காரைக்கால் அம்மையார் அப்படி இறைவன் தாளைச் சேர்ந்தவர் அதனால் அவருக்குத் துன்பமே இல்லாமல் போயிற்று. ''தாம்ஆர்க்கும் குடியல்லாத் தன்மை யான சங்கரன்நற் சங்கவெண் குழை ஓர் 'காதில்கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க் கொய்ய மலர்ச்சேவடியிணையே குறுகின'' அப்பர் சுவாமிகள் அந்தச் செயலால்

> ''..................... நமனை அஞ்சோம்
> நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;
> ஏமாப்போம்; பிணி அறியோம்; பணிவோம் அல்லோம்;
> இன்பமே எந்நாளும்; துன்பம் இல்லை''

என்று வீறு பேசுகிறார். கடலை நீந்தின பிறகு கடலில் உள்ள அலைக்கும் திமிங்கிலத்துக்கும் அஞ்ச வேண்டிய நிலை இல்லை அல்லவா?

பெரிய கடலில் அகப்பட்டு அலைகளால் மோதுண்டு அல்லற்பட்டுத் தடுமாறிய ஒருவர் தமக்குக் கிடைத்த ஒரு

தெப்பத்தைப் பற்றிக்கொண்டு கரையேறிய பிறகு, "அப்பாடா! இனித் துன்பமே இல்லை!" என்று இன்பப் பெரு மூச்சு விடுவதுபோல அம்மையார் பாடத் தொடங்குகிறார். "ஓ! இப்போது நாம் கரையேறி விட்டோம்; உய்ந்து போகிறோம்" என்று பெருமிதத்தோடு பன்மையில்சொல்கிறார்.

**இனி ஓநாம் உய்ந்தோம்.**

"எப்படி உய்ந்தீர்கள்?" என்று அவர் நெஞ்சம் கேட்கிறது. அவர் தம் நெஞ்சை வேருக வைத்துப் பேசுகிறார். அவரோடு இணைந்து நின்று பெருஞ் சேமம் செய்த நெஞ்சு அல்லவா? அது தவித்த தவிப்பை அவர் அறிவார். ஆகவே, "நெஞ்சமே, நாம் உய்ந்து போனோம்" என்று மகிழ்ச்சிக் குரலை எடுத்துச் சொல்கிறார்.

"எப்படி உய்ந்தோம் என்று கேட்கிறாய்? இதோ பார்: இறைவன் திருத்தாள். எதை எதையோ அடைந்தும் இடர் அருமல் இன்னலுற்ற நமக்கு இறைவன் திருத்தாள் புணையாகக் கிடைத்தது. அதைப் பற்றிக் கொண்டு உய்ந்தோம். புணையைக் கடலில் நீந்தியவுடன் விட்டு விடுவார்கள். இறைவன் திருவடி அத்தகையது அன்று. சுரைக்காயைக் கட்டிக் கொண்டு நீந்தியவன் அதைத் தன் வீட்டுக்கு எடுத்துச்செல்வது போல நாம் அந்தத் திருவடியை விடாமல் சேர்ந்து விட்டோம். பிறவிக் கடலில் நீந்தும் போது புணையாக இருந்த அதுவே, நமக்கு இன்பம் தரும் பொருளாக இருக்கிறது. ஆதலால் அதைச் சேர்ந்த நமக்கு இனி ஓர் இடரும் இல்லை."

**இனியோ நாம்உணர்ந்தோம்**
**இறைவன்தாள் சேர்ந்தோம்**
**இனிஓர் இடர்இலோம், நெஞ்சே!**

இந்த உலக வாழ்வில் இனிமேல் எந்த வகையான துன்பமும் இல்லை. இது மட்டுமா? இனிமேல் பிறவித் துன்பமே இல்லை.

பிறந்தவர்கள் கன்மங்களைச் செய்து கொண்டே இருக்கிறார்கள். பிறவி மேலும் மேலும் புண்ணிய பாவங்களைப் பெறச் செய்து அவற்றுக்கு உரத்தை ஊட்டுகிறது. அலைமேல் அலை வந்து மோதுவது போலப் பிறவியின் மேல் பிறவி வந்து கொண்டே இருக்கிறது. பிராரப்த வினையைக் கழிப்பதற்குப் பிறவி வருகிறது. அப்படிப் பிறந்து வினைப்பயனை நுகர்ந்து கொண்டிருக்கும்போதே புதிய வினைகளைச் செய்கிறோம். அவை ஆகாம்யம் எனப்படும். அவை வரும் பிறவிகளுக்கு வித்தாக இருக்கின்றன. ஆகவே முன்னை வினை பிறவிக்கு ஏது ஆகிறது; பிறவியோ மறுபடியும் வினைக்கு ஏதுவாக நிற்கிறது. இந்தச் சுழற்சியில் அகப்பட்டவர்களுக்கு மீட்சியே இல்லை. இறைவன் திருத்தாளாகிய புணை இல்லாவிட்டால், மீளாப் பிறவியில் அலைக்கழிய வேண்டியதுதான்.

**வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாப்பிறவி**

என்று காரைக்கால் அம்மையார் சொல்கிறார்.

இறைவன் தாளைப் பற்றிக் கொண்டமையால் இந்த வாழ்வே இன்ப வாழ்வாகி விடுகிறது. இனிமேல் வரும் வாழ்வோ என்றும் மங்காத பேரின்ப வாழ்வு. பிறப்பென்னும் கடலில் விழவேண்டிய நிலை இனி இல்லை.

இப்போது எந்தவிதமான இடரும் இல்லை என்றவர், 'இனிமேல் துன்பத்துக்கு இடமாகிய பிறவியே இல்லை. அந்தப் பெருங்கடலை நீந்தி விட்டோம்' என்கிறார். இப்போதே இந்த உறுதி வந்துவிட்டது. சீவன் முக்தி நிலை என்று அதைச் சொல்வார்கள்.

வறுத்த நெல்லுக்கும் மற்ற நெல்லுக்கும் வேறுபாடு உண்டு. வறுத்த நெல் முளைக்காது. சீவன் முக்தர்கள் வறுத்த நெல்லுக்கு ஒப்பானவர்கள், வறுத்த நெல்லை நிலத்தில் போட்டுப் பார்த்துத்தான், முளைக்குமா, முளைக்காதா என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்பது இல்லை. வறுத்த நெல்

என்ருலே முளைக்காத நெல் என்று உறுதியாகச் சொல்லலாம் அவ்வாறே இந்தத் தேகம் உள்ள போதே இறைவன் திருத் தாளில் ஒன்றிய சீவன் முக்தர்களுக்கு இனிப் பிறப்பில்லை என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆதலிஞல்தான் அம்மையார், 'இனிப் பிறவிக்கடல் இல்லை; அதை நீந்திவிட்டோம்' என்று சொல்கிருர்.

**—இனிஓர்**
**வினைக்குஅடலை ஆக்குவிக்கும்**
**மீளாப் பிறவிக்**
**கனைக்கடலை நீந்திஞேம் காண்.**

இறைவன் திருத்தாளை நினைந்து அதனேடு இணைந்தவர் களுக்கு இந்த வாழ்விலேயே இடரில்லா இன்பநிலை உண்டா கும்; இனிமேல் பிறவாத பேரின்பப் பெருவாழ்வு கிடைக்கும்: இப்படி ஒரு சிறந்த நிலை வந்துவிட்டால், "ஓ! நாம் உய்ந்து விட்டோம்" என்று பெருமிதம் அடைவது நியாயந்தானே?

**இனியோநாம் உய்ந்தோம்;**
**இறைவன்தாள் சேர்ந்தோம்;**
**இனிஓர் இடர்இலோம்; நெஞ்சே!—**
**இனிஓர்**
**வினைக்குஅடலை ஆக்குவிக்கும் மீளாக்**
**கனைக்கடலை நீந்திஞேம் காண்.**

[என் நெஞ்சே, இப்போது நாம் உய்ந்து போஞேம்; இறைவன் திருத்தாளைச் சேர்ந்துவிட்டோம்; ஆகையால் இனி ஒரு துன்பமும் நாம் இல்லோம்; இதை இப்போது சிந்தித்துப் பார்; கன்மங்களுக்கு உரிய வலிமையை உண்டாக்குவதும், தன்பால் விழுந்தவர் மீளாமல் இருக்கப் பண்ணுவதும் ஆகிய பிறவியாகிய ஒலித்தலையுடைய கடலை நாம் நீந்திவிட்டோம்.

இனி ஓ: ஓ, மகிழ்ச்சிக் குறிப்பு. உய்ந்தோம்—கரை ஏறினோம். இனி—இனிமேல். ஓர் இடரும் இலோம் என்ற உம்மை தொக்கது. இனி ஓர்—இப்போது சிந்தித்துப் பார்; ஓர் வினைக்கு—மூன்று வினைகளில் ஒன்றாகிய ஆகாமியத்துக்கு என்றும் பொருள் கொள்ளலாம். சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்பன மூன்று வகை வினைகள். இவற்றில் நாம் செய்த பழவினைகளின் குவியலுக்குச் சஞ்சிதம் என்று பெயர். இந்தப் பிறவியில் அனுபவிக்க வாய்ந்த பகுதிக்குப் பிராரப்தம் என்று பெயர். இங்கே செய்யும் புதிய வினைக்கு ஆகாம்யம் என்று பெயர். இந்த உடம்பு புதிய வினைகளைச் செய்வதற்குக் கருவியாக இருத்தலின், உடம்பைத் தந்த பிறவியை, வினைக்கு அடலை ஆக்குவிக்கும் பிறவி, மீளாப் பிறவி என்று கூட்டிப் பொருள் கொள்க. பிறவியாகிய கடல். கனைக் கடல்—கனைத்தலை உடைய கடல்; கனைத்தல்—ஒலித்தல், காண்: அசை.]

இறைவன் தாளை இடைவிடாது சிந்திப்பார்க்கு இம்மை இன்பமும் மறுமை இன்பமும் எய்தும் என்பது இப்பாட்டின் கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 16-ஆவது பாட்டு.

# 17. காண்பவர் மூவர்

ஏதேனும் ஒரு பொருளைப் பலபேர் காண்கிறார்கள். அவர் காணும் பொருள் ஒன்றே ஆயினும், அவரவர்களுடைய பார்வையில் வெவ்வேறான விளைவு உண்டாகும். பச்சைப் பசேலென்று இலை அடர்ந்த கொடிக்கு நடுவே வெள்ளை வெளேரென்ற மல்லிகைப் பூக்கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்குகிறது. அதை ஓர் ஓவியன் பார்க்கிறான். அதன் அழகைக் கண்டு சுவைக்கிறான். தன்னுடைய தூரிகையினால் அதைப் போலவே வண்ணப்படம் ஒன்றைத் தீட்ட எண்ணுகிறான். அவனுடைய பார்வை ஓவியக்காரன் பார்வை.

வேறு ஒருவன் அந்தக் கொடியைப் பார்க்கிறான். அவன் தோட்டக்காரன். வளமாக வளர்ந்துள்ள கொடியைக் கண்டு மண்வாகையும் அதை வளர்ப்பவருடைய முயற்சியையும் பாராட்டுகிறான். அவனுடைய பார்வை தோட்டக்காரன் பார்வை.

புதிதாக மணம் செய்து கொண்ட இளைஞன் அந்தக் கொடியைப் பார்க்கிறான். பூத்திருக்கும் பூங்கொத்தைப் பார்க்கிறான். உடனே அவனுடைய காதலியின் கருங்கூந்தல் நினைவுக்கு வருகிறது. 'இந்தப் பூங்கொத்து அவள் தலையில் இருந்தால்—?' அதைப் பறித்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவல் முந்துகிறது. அவன் பார்வை காதலன் பார்வை.

ஒரு பக்தன் மல்லிகைக் கொடியைப் பார்க்கிறான். இறைவனுடைய திருவடியில் மலரைப் பறித்து அருச்சனை செய்ய வேண்டுமென்ற எண்ணம் தோன்றுகிறது. வேறொருவன்

அங்கேயே பறித்து மோந்து பார்க்க விரும்புகிறான். மலர் விற்கிறவன் மலரைப் பறித்து மாலைகட்டி விற்க நினைக்கிறான்.

ஒரு கவிஞன் அங்கே வருகிறான். மலர்க் கொடியை உற்றுக் கவனிக்கிறான். இலைகளின் பசுமையில் மனத்தைச் செருகுகிறான். கொடியின் நளினத்தில் ஈடுபடுகிறான். மலரின் அழகிலே எல்லாவற்றையும் மறந்து நின்று விடுகிறான். அந்த அழகநுபவமே அவனுக்கு யோகமாகி விடுகிறது.

இத்தனை பேரும் மல்லிகைக் கொடியைப் பார்த்தார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையான எண்ணம் உண் டாகிறது. அந்தக் காட்சி அவரவர் உள்ளப்பாங்குக்கு ஏற்ற விளைவை எழுப்புகிறது.

இறைவனுடைய திருக்கோலத்தைக் காண்கிறவர்களும் இப்படிப் பல வகையான உணர்வை அடைகிறார்கள். இறைவன் பொறிபுலன் கடந்து நின்றாலும் யாவரும் காணத் திருக்கோயில்களில் விக்கிரக வடிவில் எழுந்தருளியிருக்கிறான். அந்த உருவம் சிற்ப நலன் பொருந்தியதாக இருக்கிறது. கோயிலில் பூஜை செய்கிறவர்கள் அலங்காரம் செய்து காட்டு கிறார்கள். வண்ண வண்ண மலர்மாலைகள் புனைந்து அழகு செய்கிறார்கள். விழாக் காலங்களில் சிறப்பான அலங்காரங் களைச் செய்கிறார்கள். உற்சவ மூர்த்திக்கு ஹஸ்தம் பாதங் களைப் பொருத்தி ஆடை அணிகள் அணிந்து வெவ்வேறு கோலத்தில் காட்சியளிக்கும்படி செய்கிறார்கள். நாளுக்கு ஓர் அலங்காரம்; தினத்துக்கு ஒரு வாகனம். மேளதாளம், வாணவேடிக்கை, பஜனை, வேதபாராயணம் — இவ்வளவு கோலாகலத்துடன் இறைவன் எழுந்தருளுகிறான். அப்போது கண் கொள்ளாத காட்சியாக இருக்கிறது. நெடுந்தூரத்தில் உள்ளவர்கள் எல்லாம் இந்த விழாக்காட்சியைத் தரிசிப்பதற் காக வந்து கூடுகிறார்கள்; இறைவனைத் தரிசித்து மகிழ் கிறார்கள்.

மிகப் பழையதாகிய உலகம் இறைவன் படைத்தது. அவனே உலகத்துக்கு ஆதியாக இருக்கிறவன்.

"அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று திருவள்ளுவர் சொல்கிறார். அவன் எல்லா உலகுக்கும் ஆதி. தொல்லுலகுக்கு ஆதியாய் நின்ற அரன் உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டுப் பல்வேறு வடிவம் எடுத்து வருகிறான். அப்படி அவன் எடுத்த வடிவங்களையெல்லாம் விக்கிரக வடிவில் பெரியோர்கள் அமைத்து எல்லாரும் கண்டு மகிழும்படியும் வழிபடும்படியும் செய்திருக்கிறார்கள்.

அப்படி உள்ள வடிவங்களைக் காண்கிறவர்கள் ஒரே மாதிரியாகப் பார்ப்பதில்லை. அவரவர்களுடைய இயல்புக்கு ஏற்றபடி பார்வை இருக்கிறது. அப்படிப் பார்க்கிறவர்களை ஒரு வகையில் மூன்று வேறு பிரிவினராகப் பிரித்துச் சொல்லலாம்.

ஆண்டவன் திருவீதி உலா வருகிறான். அமெரிக்க நாட்டிலிருந்து வந்தவன் அந்தக் காட்சியைப் பார்க்கிறான். மலர்மாலைகளும் அலங்காரங்களும் அழகாக இருக்கின்றன. அவற்றைக் கண்டு மகிழ்கிறான். இறைவனுடைய திருவுருவத்தைப் பார்க்கிறான். சிற்ப எழிலை வியக்கிறான். கையில் வைத்திருக்கும் காமிராவைத் தட்டிப் படமும் எடுத்துக் கொள்கிறான். அவன் கண்களுக்கு ஆண்டவன் அழகிய சிற்ப வடிவாகத் தெரிகிறான். அழகைச் சுவைக்கும் கண்களுக்கு அந்தக் கோலம் இன்பத்தை ஊட்டுகிறது.

அமெரிக்காக்காரன் என்ன? நம் நாட்டிலும் இப்படி வரும் இறைவன் கோலத்தைக் கண்டு, "நன்றாக அலங்காரம் செய்திருக்கிறார்களே!" என்று மதிப்புரை கூறுகிறவர்கள் பலர் உண்டு. "இத்தனை மாலைகளை எங்கே வாங்கினார்கள்?" என்று ரசிக்கிறவர்களும் இருக்கிறார்கள். இவர்கள் யாவரும் கண்ணிற் கண்ட காட்சியைச் சுவைக்கிறவர்கள். கண்ணில் மட்டும் நிறுத்திப் பார்க்கிறவர்கள், சிறிது நேரம் இந்த

அழகை நின்று பார்க்கிறவர்கள். இவ்வாறு பார்க்கிறவர் களுக்கும் மகிழ்ச்சி உண்டாகும்படி இறைவன் காட்சி தருகிருன்.

**தொல்லுலகுக்கு**
**ஆதியாய் நின்ற அரன்,**
**காண்பார்க்கும் காணலாம் தன்மையனே!**

என்று இந்த வகையினரை நினைந்து பாடுகிருர் காரைக்கால் அம்மையார்.

மற்ருெரு வகையினரைப் பார்க்கலாம். அவர்களும் இறைவன் திருக்கோல அழகைக் கண்டு மகிழ்கிருர்கள். ஆனல் அவர்கள் பார்வையிலே ஆழம் இருக்கிறது, வெறும் வடிவத்தை மட்டும் அவர்கள் காண்பதில்லை. வெறும் கண் பார்வையோடு அவர்கள் நிற்பதில்லை. அவர்களுடைய பார்வையில் கருத்தும் கலக்கிறது. கண்ணும் கருத்தும் இணைந்து பார்க்கும் பார்வை அது. கண், வடிவத்தின் அழகிலே ஈடுபடும்போது கருத்து, "இவன் நம்மை ஆண்டருளும் இறைவன்" என்ற எண்ணத்தைக்கொள்கிறது; பார்வையில் ஓர் ஒட்டுறவும் இணைகிறது. அழகும் அந்த உறவுணர்ச்சியும் சேரும்போது அவர்கள் பார்ப்பதோடு நின்று விடுவதில்லை. "நம் இறைவன்" என்ற அன்புள்ளம் உந்துவதனல் கையெடுத்துக் கும்பிடுகிருர்கள்.

நாம் தெருவிலே போகும் போது எவ்வளவோ பேரைப் பார்க்கிறேம். அழகிய உருவம் உடைய ஒருவர் போகிருர். அவரைக் கண்டு வியப்போம், ஆனல் அவர் நம்முடைய நண்பராகவோ, நமக்குப் பழக்கமான பெரியவராகவோ இருந்தால் கை எடுத்து அஞ்சலி செய்கிறேம். நமக்குத் தெரிந்தவர் என்பதை அந்த அஞ்சலி காட்டுகிறது. அந்த இருவரையும் வேறு ஒருவர் பார்த்தால் அவர்கள் ஒருவருக் கொருவர் பழக்கம் உள்ளவர் என்பதை அந்த அஞ்சலியினல் அறிந்து கொள்வார்.

அப்படியே இறைவனிடம் அன்புடையவர் அவனுடைய திருக்கோலத்தைக் கண்டால் கையெடுத்து அஞ்சலி செய்வார்கள். வெறும் அழகுக் கோலத்தைக் கண்டு அந்த அளவிலே நின்றவர்களுக்கு ஒரு வகையில் இன்பம் உண்டாகிறது. ஆனால் அன்பர்கள் கண்டால் அவர்களுக்கு உண்டாகும் இன்பம் அதைவிடப் பெரிது. முன்னாலே கண்டவர் கண்களால் மட்டும் கண்டவர்கள். இவர்களோ கைதொழுது காண்பவர்கள். இவர்களுக்கும் இறைவன் காட்சி தருகிறான். அந்தக் காட்சியிலே இவர்கள் மனம் உருகுகிறார்கள்.

கைதொழுது
காண்பார்க்கும் காணல் ஆம்.

இனி மூன்றாவது வகையினர் வருகிறார்கள். அவர்கள் எப்படிக் காணுகிறார்கள்? முதலில் பார்த்தவர்கள் கண் ஒன்றையே கொண்டு வடிவத்தைப் பார்த்தார்கள். அடுத்தபடி கண்டவர்கள் கண்ணோடு கருத்தையும் இணைத்து, எம் இறைவன் என்ற நினைவோடு கைதொழுது பார்த்தார்கள். மூன்றாம் நிலையில் இருப்பவர்களோ, கண்ணாலும் பார்த்தார்கள்; கருத்தோடும் பார்த்தார்கள். அவர்களுடைய உள்ளத்தில் இறைவன்பால் முறுகிய அன்பு இருக்கிறது; அவனுக்காக எல்லாவற்றையும் அர்ப்பணம் செய்துவிடும் காதலே இருக்கிறது. அவர்கள் காண்கிறார்கள். கண்ணோடும் கருத்தோடும் கண்டவர்கள் இப்போது கண்ணை மூடிக்கொள்கிறார்கள். கருத்து மட்டும் தொழிற்படுகிறது. சித்தத்தில் அவனைச் சிறைப்படுத்துகிறார்கள். சிந்தையில் காதலால் காண்கிறார்கள். அப்போது அவர்களுக்கு உண்டாகும் அநுபவம் எவ்வளவு உயர்ந்ததாக இருக்கிறது! அவர்களுடைய காதல்மயமான சிந்தையில் இறைவன் சோதிப் பிழம்பாகத் தோன்றுகின்றான். அவர்களுக்கு இப்போது எல்லாம் மறந்து போகின்றன. உண்முகக் காட்சியிலே ஈடுபட்டுப் போகிறார்கள். மாறிலா மகிழ்ச்சியில் மலர்ச்சி பெறுகிறார்கள். அவர்களுக்கு இறைவன் உள்ளே புகுந்து சிந்தையுள்ளே சோதியாய்த் தோன்றுகிறான்.

காதலால் - காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே.

கண்ணினால் மட்டும் காண்பவர்களுக்கு அழகு வடிவமாகத் தோன்றுகிறான் இறைவன். கண்ணோடும் கருத்தோடும் இறைவனைக் காண்பவர்களுக்கு ஒட்டுறவை உணர்த்திக் கைதொழும்படி செய்து காட்சி அளிக்கிறான். காதலால் கண்ணாலும் கருத்தாலும் கண்டு பிறகு கண்ணை மூடி உண்முகமாகப் பார்க்கிறவர்களுக்குச் சிந்தையுள்ளே சோதியாக நின்று இன்பம் பொழிகிறான்.

முதலில் காண்பவர்கள் அழகுணர்ச்சியால் மகிழ்ச்சி அடைகிறார்கள். அடுத்தபடி காண்பவர்கள் அன்புணர்ச்சியால் கைதொழுது இன்புறுகிறார்கள். மூன்றாமவர் காதலுணர்ச்சியால் உண்முக தரிசனம் பெற்று ஆனந்தத்தில் ஆழ்கிறார்கள். இந்த மூன்று வகையான அநுபவங்களில் ஒன்றைவிட ஒன்று விஞ்சி நிற்கின்றது. இறைவன் பொதுவாகக் காட்சி அளித்தாலும் அவரவர்களுடைய பக்குவத்துக்கு ஏற்றபடி அநுபவம் அமைகிறது. மூன்று வகையான நிலையிலுள்ள மக்களுக்கு மூன்று வகையில் மகிழ்ச்சி விளைகிறது. ஒன்று பொதுவாக இருப்பது. மற்றொன்று காண்பவருக்கும் இறைவனுக்கும் உள்ள உறவினால் அமைவது. இறுதியில் உள்ளது எல்லாவற்றையும் மறந்து இறைவனையே காணும் அநுபவத்தை உண்டாக்குவது.

இந்த மூன்று வகையிலும் இறைவன் காட்சி தருவதைக் காரைக்கால் அம்மையார் தெரிவிக்கிறார்.

நாண்பார்க்கும் காணலாம்
தன்மையனே; கைதொழுது
காண்பார்க்கும் காணல்ஆம்;
காதலால்—காண்பார்க்குச்
சோதியாய்ச் சிந்தையுளே
தோன்றுமே, தொல்உலகுக்கு
ஆதியாய் நின்ற அரன்.

[பழமையான உலகத்துக்கு மூலகாரணமாக நின்ற சிவ பெருமான், வடிவத்தை மட்டும் காண்பவர்களுக்கும் காணத் தக்க இயல்புடையவன்; அன்பினுல் இவன் நம் இறைவன் என்று எண்ணிக் கை தொழுது காணும் பக்தர்களுக்கும் காணுதல் கூடும். உள்ளே நிறைந்த பேரன்பால் காணுகிறவர் களுக்கும் அவர்களுடைய சித்தத்துக்குள்ளே சோதிமயமாகக் காட்சியளிப்பான்.]

முதல் நிலையினர் பொதுமக்கள். அடுத்த நிலையினர் பக்தர். கடைசியில் வருகிறவர் அநுபூதிமான். முதலில் காண்பவர் உலகத்தில் அழகுள்ள பல பொருள்களைப் பார்க் கிறதைப் போலப் பார்க்கிருர். இரண்டாமவர் மற்றப் பொருள்களைப் போலல்லாமல் தமக்கு இறைவன் என்ற உணர்வோடு மற்றவற்றை விலக்கித் தம்மையும் இறைவனை யும் பார்க்கிருர். மூன்ருமவர் எல்லாவற்றையும் மறந்து தம்மையும் மறந்து அவன் மயமாக நின்றுவிடுகிருர்.

இறைவனை அழகிய வடிவமாகப் பார்த்துப் பழகி, பிறகு அவன் நம் இறைவன் என்ற ஒட்டுறவோடு பார்த்து வழி பட்டு, அப்பால் உண்முகமாகத் தியானித்து நின்ருல் இன்ப அநுபவம் பெறலாம் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாயில் பதினேழாவது பாட்டு.

# 18. எப்படிச் சொல்வேன்!

கடவுள் ஒருவரே. அவரைத் தத்தமக்கு விருப்பமான வடிவத்தில் கண்டு அன்பர்கள் வழிபடுகிறார்கள். அவரவர்கள் தாம் வணங்கும் வடிவில் உள்ளவனே மேலான தெய்வம் என்று சொல்கிறார்கள்.

பொம்மைப் பிஸ்கோத்து என்று கடையில் விற்பார்கள். மனிதரைப் போலவும் நாயைப் போலவும் யானையைப் போலவும் குதிரையைப் போலவும் வெவ்வேறு வடிவத்தில் அந்தப் பிஸ்கோத்துகள் இருக்கும். ஒரு வீட்டில் உள்ள குழந்தைகளுக்கு அந்த வீட்டுக்காரர் இந்தப் பொம்மைப் பிஸ்கோத்தை வாங்கிக்கொண்டு வருகிறார். ஆளுக்கு ஒரு பிஸ்கோத்துத் தருகிறார். ஒவ்வொன்றும் வெவ்வேறு பொம்மை போல இருக்கிறது. ஒரு குழந்தையிடம் யானைப் பிஸ்கோத்து இருக்கிறது. அது, "என்னுடைய பிஸ்கோத்துத்தான் உயர்ந்தது" என்று வாதிக்கிறது. பெண்ணைப் போல உள்ள பிஸ்கோத்தை வைத்திருக்கும் குழந்தையோ தன் பிஸ்கோத்துத்தான் உயர்ந்தது என்று சொல்கிறது. தன் கையில் கிடைத்தது உயர்வானது என்ற பிரமை அந்தக் குழந்தைகளுக்கு உண்டாகிறது.

உண்மையில் எல்லாம் ஒரே சுவையுடைய பிஸ்கோத்துக்களே. அவற்றில் உயர்வு தாழ்வே இல்லை. யானை வடிவமே பெரிது என்று அதைக் கையில் வைத்திருக்கிற வரையில் ஒரு குழந்தை வாதிக்கலாம். ஆனால் உண்ணும்போது எல்லாம் ஒரே சுவை என்று தெரியும். இரண்டு மூன்றை உண்டு பார்த்

தால் தெளிவாகத் தெரியும். காட்சியிலே மயக்கம் ஏற்பட் டாலும் சுவைக்கும்போது உண்மை புலனாகும். எல்லாம் தித் திப்புச் சுவையுடையவை என்பது தெரிய வரும்.

பலவேறு சமயங்களில் வெவ்வேறு பெயர்களுடனும் இறைவனை வழிபடும் மக்கள் குழந்தைகளைப் போல இருந் தால் என் தெய்வம் பெரிது, உன் தெய்வம் சிறிது என்று பேதபுத்தியோடு பார்ப்பார்கள்; அறிவைக் கொண்டு இந்த வேற்றுமையைப் பெரிதாக்கிக் காட்டிச் சண்டை போடுவார் கள். ஆனால் அநுபவம் ஏற்பட்டுவிட்டாலோ இந்தச் சண்டை ஒய்ந்துபோகும். இறைவனை எப்படிச் சொன்னாலும் சரி என்று தோன்றும். இவ்வளவு வகையாகச் சொல்வதுகூடப் போதாது; இன்னும் வேறு வேறு வகையாகவும் சொல்லலாம் என்றுகூடத் தோன்றும். காரணம், எல்லாம் ஒன்றே என்று அநுபவத்தில் அறிந்ததுதான்.

சமயவாதிகள், அறிவைக் கொண்டு ஆராய்கிறார்கள். மனித அறிவுக்கு எல்லாம் புலப்படுகிறதில்லை. விருப்பு வெறுப்பையுடைய மனிதன் கடவுளைப் பற்றிய எண்ணத்தி லும் அவற்றை நுழைக்கிறான். உணவு, உடைகள், மனிதர்கள் ஆகிய பல துறைகளில் அவனுக்கு வேண்டியவை உண்டு; வேண்டாதவை உண்டு. அறிவைக் கூர்மையாக்கிக்கொண்டு படிக்கின்ற நூல்களில்கூட அவன் விரும்பிப் படிப்பன சில உண்டு; விரும்பாமல் வெறுப்பனவும் உண்டு.

இறைவனை வழிபடும் முறைகளிலும் அவனுக்கு விருப்ப முள்ளவை சில; வெறுப்பானவை சில. அவனுடைய மனத் தைப் பொறுத்து இந்த விருப்பு வெறுப்பு அமைகின்றன.

சிவபெருமானிடம் பக்தி கொள்கிறவன் அவன் திருவுரு வத்திலே ஈடுபடுகிறான். தானே பெரியவன், மற்றவர்களெல் லாம் அவனுக்கு அடங்கியவர்கள் என்ற எண்ணம் அவனுக்கு உண்டாகிறது. மற்றத் தெய்வங்களிடத்தில் சில சமயம் வெறுப்புக்கூட உண்டாகிவிடுகிறது. மறந்தும் புறந்தொழா மாந்தனாகிறான். திருமாலைத் தெய்வமாகக் கொண்டவர்

களிடையிலும் இப்படி விருப்பு வெறுப்புடையவர்கள் இருக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம், சமரசம் பேசுகிறவர்களைக் கண்டால் ஆத்திரம் ஆத்திரமாக வரும். தாம் வழிபடப் புகுந்த தெய்வமே எல்லாமாக நிற்கிறது என்ற எண்ணம், உபாசனையில் அநுபவம் தலைப்படும்போது உண்டாகும். அது வரையில் பேதபுத்தி இருந்துகொண்டே இருக்கும்.

இந்தப் பேதபுத்தி எத்தனை விசித்திரமான விளைவுகளை உண்டாக்கும் என்பதற்கு ஓர் உதாரணம் சொல்கிறேன்.

சென்னையில் ஒரு வீட்டில் முன்கட்டில் ஒருவரும் பின் கட்டில் ஒருவருமாகக் குடியிருந்தார்கள். இரண்டு பேரும் முருகன் அடியார்கள். முன்கட்டில் உள்ளவர் கோயம் புத்தூர்க்காரர். அவருடைய குலதெய்வம் பழனியாண்டவர். அவர் அடிக்கடி பழனியாண்டவருடைய பெருமையை எடுத்துச் சொல்வார். பின்கட்டில் உள்ளவர் திருநெல்வேலிக் காரர். அவருக்குச் செந்திலாண்டவன் குலதெய்வம். அவர் எப்போதும் திருச்செந்தூரைப்பற்றியே சொல்லிக்கொண்டிருப்பார்.

“எங்கள் பழனிக்கு வந்து பாருங்கள். ஏழைகள் பணக் காரர்கள் என்ற வித்தியாசம் இல்லாமல் காவடி எடுத்து வார்கள். அந்தக் காட்சியைக் கண்டால் உடம்பு புல்லரிக்கும். பழனிப் பஞ்சாமிர்தம், பழனியாண்டவன் விபூதி — இவற்றிற்குச் சமானம் உண்டா?” என்பார் முன்கட்டுக்காரர்.

“அலைவாய் என்று திருச்செந்தூருக்குப் பெயர். எவ்வளவோ ஆயிரமாயிரம் ஆண்டவன் அந்தக் கடற்கரையில் கோயில் கொண்டிருக்கிறான். அலைவாயில் இருந்தாலும் கோயிலுக்கு ஆபத்து இல்லை; கடல் அடங்கியே இருக்கிறது. அங்கே போனால் சந்தனம் மணக்கும். ஷண்முக விலாசத்திலே நுழையும்போதே கந்த லோகத்துக்குப் போகிற மாதிரி இருக்கும்” என்பார் பின்கட்டுக்காரர்.

போட்டி போடுபவர்களைப் போல் இருவரும் பேசுவார்கள். சில சமயங்களில், “பழனி ஆறுபடை வீடுகளில்

ஒன்றுதான்; என்றாலும் எங்கள் செந்திலாண்டவனைப் போல வருமா?" என்பார் பின்கட்டுக்காரர். "ஆயிரம் சொன்னாலும் பழனியாண்டவன்தான் ஆண்டவன்" என்பார் முன்கட்டுக்காரர்.

முன்கட்டுக்காரருக்கு ஓர் ஆண்குழந்தை; மூன்று வயசு. பின்கட்டுக்காரருக்குக் குழந்தை இல்லை. அந்தக் குழந்தையே இரண்டு குடும்பத்தாருக்கும் ஒரு குழந்தையாக வளர்ந்து வந்தது. குழந்தைக்குப் பகல் வேளை உணவு பின்கட்டில்; இரவுணவும் உறக்கமும் முன்கட்டில். இரண்டு குடும்பத்தினரும் குழந்தையிடம் போட்டி போட்டுக் கொண்டு அன்பு காட்டினார்கள்.

அந்தக் குழந்தைக்குக் காய்ச்சல் வந்தது. கொஞ்சம் கடுமையாக இருந்தது. "பழனியாண்டவனே, உன்னைத்தான் நம்பியிருக்கிறேன். நீதான் குழந்தையைக் காப்பாற்ற வேண்டும்" என்று முன் கட்டுக்காரராகிய குழந்தையின் தந்தை வேண்டிக் கொண்டார்.

பின்கட்டுக்காரர் வந்தார். "என் தாத்தா மிகவும் காய்ச்சலாகக் கிடந்தார். வைத்தியர்கள் கைவிட்டு விட்டார்கள். அப்போது எங்கள் பாட்டி செந்திலாண்டவனை நினைந்து மனமுருகி ஒரு ரூபாய் மஞ்சள் துணியில் முடிந்து நேர்ந்து கொண்டாள். அடுத்த வாரம் தாத்தாவுக்குச் சௌக்கியம் உண்டாயிற்று. திருச்செந்தூர் ஆண்டவன் கண்கண்ட தெய்வம். அவனுக்குப் பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள்" என்றார்.

"ஆகட்டும்" என்று அசுவாரசியமாகப் பதில் சொன்ன தந்தை தம் குடும்ப வழக்கப்படி பழனியாண்டவனைப் பிரார்த்தனை செய்துகொண்டு ஒரு ரூபாய் முடிந்து வைத்தார். இது பின்கட்டுக்காரருக்குத் தெரிந்தது. அவர் முன் கட்டுக்காரரோடு பேசுவதை நிறுத்திக் கொண்டார்.

குழந்தைக்குக் காய்ச்சல் அதிகமாகி இறந்து விட்டது. அப்போது பின்கட்டுக்காரர் ஆத்திரத்தோடு வந்தார்; "ஓய், அநியாயமாய்க் குழந்தையைக் கொன்று விட்டீரே! உங்கள் பழனியாண்டவன் காப்பாற்றினுனு? எங்கள் செந்திலாண்டவனுக்கு நேர்ந்து கொண்டிருந்தால் கைவிட்டிருப்பானு?" என்று சொல்லி அழுதார்.

இருவரும் முருக பக்தர்களே. ஆனால் தம் ஊர் என்ற பற்று அவர்கள் கண்ணை மறைத்துவிட்டது. இவர்கள் செயல் பைத்தியக்காரர் செயல் என்று விளக்கமாகத் தெரிகிறது. சற்றுக் கூர்ந்து சிந்தித்தால் சிவபிரான் வேறு, முருகன் வேறு என்று சொல்வதும் பித்தர் செயலென்று தெரியவரும். இன்னும் ஆழ்ந்து பார்த்தால் அரன், அரி என்ற வேறுபாடும் இந்த ரீதியில் அமைவது என்பது புலனுகும். இன்னும் விரிவாகப் பார்த்தால் எந்த வடிவம் ஆனாலும் எந்தப் பெயர் ஆனாலும் ஒன்றையே சுட்டும் என்பது தெளிவாகும்.

அறிவினுல் பாராமல் ஆண்டவன் அருளினுல் பார்த்தால் இந்த விரிந்த பார்வை உண்டாகும். முதலில் வெவ்வேருகப் பார்த்துப் பக்தி செய்து, பிறவற்றை மறந்து ஒரு வடிவத்திலே லயித்து ஈடுபட்டு அநுபவம் பெற்று, பிறகு புறத்தே பார்த்தால் இதுவே அவை யாவும் என்று புலனுகும். முதலில் பலவாகத் தோற்றிய தோற்றம் இப்போதும் இருக்கும். ஆனால் அப்போது வெவ்வேறு பொருளாகத் தோற்றியவை இப்போது ஒரே பொருளின் வெவ்வேறு வடிவாகத்தோற்றும். கண்ணினுல் கண்டபோது வெவ்வேருகத் தோற்றிய பிஸ்கோத்து, கடித்துப் பார்த்தபோது ஒன்றின் வெவ்வேறு வடிவம் என்று தெளிவானது போலத் தெளிவு பிறக்கும்.

காரைக்காலம்மையாருக்கு இந்தத் தெளிவு அநுபூதியினுல் உண்டாயிற்று. "நான் உன்னை எவ்வாறு, இதுதான் என்று சுட்டிக் காட்டுவது? எல்லாம் நீயாக இருக்கிருய். உன் பண்பு முழுவதையும் அறியும் வல்லமை எனக்கு இல்லையே!

நீ எப்படி எப்படி எல்லாம் இருக்கிறாய் என்று தனித் தனியே சொல்லி எல்லை வரையறுக்க முடியுமா?" என்று வியக்கிறார்.

அவர் முதலில் கடவுளைச் சிவபெருமானாகப் பார்த்தவர்; கைலாசபதியாகக் கண்டவர். இராவணன் கைலை மலையைச் செருக்கினால் எடுக்க, அவனை ஒரு விரலால் அமுத்தின பெருமானாகக் கண்டு அன்பு செய்தவர். அன்று அவனை அவ்வாறு கண்டு, 'எம்மான்' என்று அணுகிப் பக்தி செய்தார். அதன் பயனாக அநுபூதி பிறந்தது. அன்று கண்ட அவனை இன்று எப்படிக் காணுகிறார்? யார் என்று சொல்கிறார்?

—முரண் அழியத்
தானவனைப் பாதத் தனிவிரலால் செற்றானை
யான்அவனை, எம்மானை இன்று.

தானவனாகிய இராவணனுடைய வலிமை அழியும்படி தன் திருப்பாதக் கட்டைவிரலால் அமுத்தினான் இறைவன். அவனையே, "எங்கள் தெய்வம்; எம்பெருமான்" என்று போற்றி வழிபட்டார் அம்மையார். அவனை இப்போது எவ்வாறு சொல்கிறார்?

"நான் என்னவென்று சொல்வது?" என்று திகைக்கிறார். "வெவ்வேறு பண்புகளுடன் வெவ்வேறு உருவத்தில் நீ விளங்குகிறாய். பண்பு அற்ற பாழாகவும் இருக்கிறாய். உன் பண்புகள் யாவும் தெரிந்தால் ஒவ்வொரு பண்பையும் உடைய ஒவ்வொரு மூர்த்தியாகச் சொல்லிக்கொண்டே வரலாம். நானோ உன் பண்புகள் யாவற்றையும் உணராதவள்" என்கிறார்.

## பண்பு உணர மாட்டேன்

[நான் பண்புகள் அனைத்தையும் உணரும் அறிவாற்றல் உடையவள் அல்லள்.]

"ஆகவே நான் எப்படிச் சொல்லட்டும்? எல்லாவற்றை யும் இறுதிக் காலத்தில் சங்காரம் செய்யும் ஹரன் என்று சொல்லட்டுமா? அல்லது உலகத்தைப் படைக்கும் நான்முகன் என்று சொல்லட்டுமா? இப்படியே சொல்லிக்கொண்டு போக லாம். அதற்கு எல்லை ஏது? யாராலும் உணர்வரிய, எல்லா வடிவங்களுக்கும் மேலான பரம்பொருள் என்று சொல்லட் டுமா? எப்படிச் சொன்னாலும் பொருந்தும். ஆனால் அவ்வள வோடு நின்றுவிட முடியுமா? வெவ்வேறு வடிவாக வெவ்வேறு பண்புடையவனாக நீ நிற்கும் கோலம் ஒன்றா இரண்டா? உன் குணங்களையும் எண்ணி அளவிட முடியாது; உன் கோலங்களை யும் எல்லைகட்டிச் சொல்லிவிட முடியாது; உன் திருநாமங்களை யும் எண்ணிக்கையில் அடக்கிச் சொல்லிவிட முடியாது. நான் எப்படிச் சொல்வேன்!" என்றார்.

**அரன் என்கோ! நான்முகன் என்கோ! அரிய பரன்என்கோ!**

"எப்படிச் சொன்னாலும் தகும்; ஆனால் எப்படி சொன் னாலும் போதாது. முன்பு உன் வடிவத்தையும் பெயரையும் எளிதில் சொல்லி விட்டேன். அன்று என் பார்வை குறுகிய தாக இருந்தது. இன்று எப்படிச் சொல்வது என்று தெரி யாமல் மயங்குகிறேன்" என்கிறார்.

**அரன்என்கோ? நான்முகன் என்கோ! அரிய**
**பரன்என்கோ? பண்புணர மாட்டேன்; முரண் அழியத்**
**தானவனைப் பாதத் தனிவிரலால் செற்றானை**
**யான்அவனை எம்மானை இன்று.**

[வலிமை அழியும்படி இராவணனைத் தன்னுடைய திரு வடியிலுள்ள கட்டை விரலால் அடர்த்தவனை, இறைவனாகிய அவனை, என் தலைவனை இன்று அடியேன், அவன் பண்பை உணர மாட்டாதேன், அரன் என்பேனா? பிரமதேவன் என்பேனா? யாவர்க்கும் அரிய சர்வ சூட்சுமப் பொருளான பரம்பொருள் என்பேனா?

அரன்-அழிக்கும் கடவுள். நான்முகன்-படைக்கும் கடவுளாகிய பிரமதேவன். என்கோ-என்பேனு? அரிய-பொறிகளுக்கும் அறிவுக்கும் அறிவரிய. பரன்-எல்லோருக்கும் மேலான பரம்பொருள் என்னும் நிலையில் உள்ளவன். பண்பு-அநந்த கல்யாண குணங்கள். உணரமாட்டேன்-உணரும் ஆற்றல் இல்லாத நான். முரண்-வலிமை; மாறுபாடான செருக்கு என்பதும் ஆம். தானவன் என்பது அசுரனைக் குறிக்கும் சொல். இங்கே அரக்கனுகிய இராவணனைக் குறித்தது. அவன் செருக்கினுல் திருக்கயிலையைத் தூக்கியபோது இறைவன் ஒரு விரலால் அமிழ்த்தி அவனை நசுக்கினுன். தனிவிரல்-ஒற்றை விரல்; ஒப்பற்ற விரல்; என்றது கட்டை விரலை. செற்றுன்-ஒறுத்தான்.

'செற்றுனை, அவனை, எம்மானை, பண்புணர மாட்டேனுகிய யான் இன்று அரன் என்கோ, நான்முகன் என்கோ, அரிய பரன் என்கோ' என்று அந்வயம் செய்து பொருள் கொள்ள வேண்டும்.

அவனை என்பது அவன் என்று சுட்டும் கடவுளை என்று பொருள் கொள்ள நின்றது. இன்று என்றது அவனருளால் அநுபவம் பெற்ற செவ்வியைச் சுட்டியது.

'அன்று அரன் என்று சுட்டி அதனேடு நின்றேன்; இன்று இன்னுன் என்று சுட்ட முடியாத நிலையில் இருக்கிறேன்' என்பது குறிப்பாகப் புலப்பட்டது.

இறைவன் பலவகைத் தெய்வமாகவும் இருப்பவன் என்பது கருத்து.]

இது அற்புதத் திருவந்தாதியில் உள்ள 18-ஆவது பாடல்.

# 19. அருமையும் எளிமையும்

நம்முடைய புராணங்களிலுள்ள கதைகள் யாவும் தத்து வங்களை உள்ளடக்கியவை. சிவபெருமான் திரிபுரங்களைச் சங்காரம் செய்தான். மும்மலங்களையும் அழிக்கும் ஞான உரு வுடையவன் என்பதையே அது காட்டுகிறது என்று திருமூலர் சொல்வார்.

கடவுள் ஒருவரே. அவரே வேறு வேறு வடிவில் அன்பர் களுக்கு அருள் செய்ய எழுந்தருளுகிறார். புராணங்கள் ஒவ் வொரு மூர்த்திக்கு உயர்வு கூறும் தன்மையைக் காணலாம். சிவபுராணங்களில் சிவபெருமானே பரதெய்வ மென்றும் மற்றவர்கள் எல்லாம் அவனுக்குள் அடங்குவர் என்றும் இருக்கும்; அந்தக் கொள்கையை வெளிப்படுத்தும் கதைகளும் இருக்கும். அப்படியே விஷ்ணு புராணங்களைப் பார்த்தால் சிவனைவிடத் திருமால் உயர்ந்தவர் என்ற கருத்தையும் அதற்கு ஏற்ற கதைகளையும் காணலாம்.

சிவ புராணங்களைச் சைவத்தில் ஆழ்ந்த பற்றுள்ள ஒருவர் இயற்றினார் என்றும், விஷ்ணு புராணங்களை வைஷ்ண வத்தில் ஆழ்ந்த பற்றுள்ள வேறு ஒருவர் இயற்றினார் என்றும் இருந்தால் அவரவர்கள் தம் தம் தெய்வத்தை உயர்த்திக் கூறு வது இயல்பென்று கொள்ளலாம். ஆனால் இரண்டு வகையான புராணங்களையும் ஒருவரே இயற்றியிருக்கிறார். வியாசரே பதினெண் புராணங்களையும் இயற்றினார். அப்படி இருக்க அவர் இரண்டு வேறு விதமாகச் சொல்லலாமா?

ஒரு நாடகக் கம்பெனியில் அண்ணன் தம்பி இருவர் சிறப்பான நடிகர்கள். அவர்களே அந்த நாடகக் குழுவிற்குக்

கூட்டுத் தலைவர்கள். திங்கட்கிழமை நடைபெறும் நாடகங்களில் அண்ணன் அரசனாக இருப்பான்; தம்பி வேலைக்காரனாக இருப்பான். புதன் வெள்ளிக் கிழமைகளும் அப்படித்தான். செவ்வாய், வியாழன், சனி, ஞாயிற்றுக் கிழமைகளில் தம்பி அரசனாக இருப்பான்; அண்ணன் வேலைக்காரனாக நடிப்பான். அவரவர்கள் நடிப்புக்கு ஏற்ப நாடகங்கள் இருக்கும். இந்தக் குழுவுக்கு நாடகங்களை எழுதித் தரும் நாடகப் புலவர் ஒருவர் இருந்தார்.

ஒருவருக்குப் புதன்கிழமைதான் ஓய்வு. அவர் நாடகம் பார்க்கும் போதெல்லாம் அண்ணன் அரசனாக இருப்பான்; தம்பி வேலைக்காரனாக இருப்பான். சில சமயங்களில் திங்கட்கிழமையும் ஓய்வு கிடைக்கும். அப்போதும் அண்ணன் தம்பிகள் அரசன்,வேலைக்காரனாக நடிப்பதைப் பார்ப்பார் மற்றொருவர் செவ்வாய்க்கிழமை, ஞாயிற்றுககிழமைகளில் நாடகம் பார்ப்பார். அவருக்குத் தம்பியே அரசனாகவும், அண்ணனே வேலைக்காரனாகவும் காட்சியளிப்பார்கள். முன்னே சொன்னவர் தாம் பார்க்கும் காட்சிகளிலிருந்து அண்ணனே உயர்ந்த வேஷம் போடுகிறவனென்றும், தம்பியே தாழ்ந்த பாத்திரமாக நடிப்பான் என்றும் தீர்மானித்துக் கொண்டார். பின்னவரோ அதற்கு நேர்மாறாக, தம்பியே உயர்ந்த பாத்திரமென்றும் அண்ணனே தாழ்ந்த பாத்திரமென்றும் எண்ணினார்.

எல்லாக் கிழமைகளிலும் நாடகம் பார்க்கிறவர்கள் அண்ணனும் தம்பியும் சந்தர்ப்பம் போல உயர்ந்த பாத்திரமாகவும் தாழ்ந்த பாத்திரமாகவும் மாறி மாறி நடிப்பார்கள் என்ற உண்மையைத் தெரிந்து கொள்வார்கள். அது மட்டும் அன்று. அண்ணன் தம்பி இருவரும் ஒத்த கலைத் திறமையையுடையவர்களென்றும், உயர்ந்த பாத்திரமானாலும், தாழ்ந்த பாத்திரமானாலும் அவ்வளவும் நடிப்பே என்றும், அதைக் கொண்டு அவர்கள் கலைத்திறமைக்கு உயர்வு தாழ்வு ஏதும் கூடாது என்றும் கலையின் உண்மையைத் தெரிந்தவர்கள் உணர்ந்து கொள்வார்கள்.

சைவ வைஷ்ணவ வேறுபாடுகளும் இத்தகையனவே. இருவகைப் புராணங்களையும் இயற்றிய வியாசர் நாடகம் எழுதிய புலவரைப் போன்றவர். நாடகங்களில் நடிக்கும் அண்ணன் தம்பிகளைப் போன்றவர்கள் சிவபெருமானும் திருமாலும். அவர்களுள் வேறுபாடு இல்லை. இரு வகைப் புராணங்களையும் படித்தால் உண்டாகும் வேறுபாட்டு உணர்ச்சி இந்த உண்மையை உணர்ந்தால் நீங்கும். இல்லையானால் வியாசர் இரு வேறு வகையில் சொன்னார் என்ற குற்றத்துக்கு ஆளாவார். அவர் ஆளுக்குத் தகுந்தபடி சாட்சி சொல்லும் கூட்டத்தைச் சேர்ந்தவர் அல்லவே!

சிவ விஷ்ணு புராணங்களில் வரும் வரலாறுகளை இந்தக் கண் கொண்டு பார்க்க வேண்டும். இறைவன் செய்யும் திரு விளையாடல்கள், அருட்பெருங் கூத்துக்கள், நாடகங்கள் என்பவற்றினூடே பொதித்திருக்கும் உட்கருத்தை உணர வேண்டும்.

திருமாலும் பிரமனும் தான்தானே உயர்ந்தவன் என்று வாதிடச் சிவபெருமான் சோதி மலையாக நின்று தன் அடி முடியைத் தேடப் பணித்ததாகவும், அவர்கள் காண முடியாமல் அயர்ந்து சிவனே உயர்ந்தவன் என்று அறிந்து கொண்டதாகவும் வரும் புராண வரலாற்றைப் பல முறை நாம் கேட்டிருக்கிறோம்.

திருமால் திருமகளுக்கு அதிபதியாக,எல்லாரிலும் சிறந்த செல்வராக இருப்பவர். 'செல்வந்தான் எல்லாவற்றிலும் உயர்ந்தது. ஆகவே செல்வம் படைத்தவனே யாரினும் உயர்ந்தவன்' என்று செருக்கடையும் பாத்திரமாக அவர் வேஷம் போட்டார். பிரமனோ கலைமகளுக்கு நாயகன்; படைக்கும் தெய்வம். அறிவாற்றலும் படைப்பாற்றலும் மிக்கவன். அறிவும் படைப்பாற்றலும் உடையவனே உயர்ந் தவன் என்ற கட்சிக்குப் பிரதிநிதியாக வேஷம் போட்டான் அவன்.

செல்வத்தாலும் அறிவினுலும் உண்மையைக் காண முடியாது. செல்வச் செருக்கும், அறிவினுல் உண்டாகும் செருக்கும் ஒருவனுடைய பண்பைத் தாழ்த்தி விடும். அவர்களுக்கு மெய்ஞ்ஞானம் புலப்படாது. இதை அறிவுறுத்தும் நாடகம் திருமாலும் பிரமனும் அடிமுடி தேடிய கதை. சிவபெருமான் ஞானத்தின் வடிவாக, சத்தியத்தின் உருவமாக, ஆனந்தத்தின் அடையாளமாகச் சத்திதானந்த மூர்த்தியாக நின்முன். செல்வச் செருக்கும் கல்விச்செருக்கும் உண்மையை உணர மாட்டாமல் தடுக்கும்; மெய்ஞ்ஞானத்தை அடையவும் அமைதியான ஆனந்தத்தைப் பெறவும் அவ்விரண்டும் தடைகள். இந்த உண்மையையே இந்தப் புராணக் கதை புலப்படுத்துகிறது.

இந்த நாடகத்தை மிகமிகப் பழங்காலத்திலேயே இந்த மூன்று நடிகர்களும் நடித்துக் காட்டினுர்கள். நாடகத்தின் உட்கருத்து, செல்வச் செருக்கும், கல்விச் செருக்கும் தீயவை என்பது. நாடகத்தைப் பார்க்கிறவர்கள் அந்தக் கருத்தை மனம் கொள்ள வேண்டும்.

அதை விட்டு விட்டு அண்ணனை அரசனுகப் பார்க்கிறவர் அண்ணனே எப்போதும்அரசன் என்று சாதிக்கிறதைப்போல, சிவபெருமானே எல்லாரினும் உயர்ந்தவன் என்று சாதிக்கிறது, இந்தக் கதைக்கு உரிய பயன் அன்று. வியாசர் அந்தப் பயனுக்காகப் புராணத்தை இயற்றவில்லை.

செல்வம் முதலியவற்முல் உண்டாகும் அகங்காரத்தை வரவிடாமல் ஒடுக்குவது பக்தர்கள் இயல்பு. எங்கே அகங்காரம் தலை காட்டுகிறதோ அங்கே ஆண்டவனைக் காண முடியாது. இறைவன் செல்வத்தாலும் கல்வியினுலும் அளப்பதற்கு அரியவன்; அன்பு செய்வாருக்கு அருட்கண் அளித்துத் தன் உண்மையை உணரச் செய்வான்.

"அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே"

என்பது அப்பர் வாக்கு.

"அருளால் எவையும்பார் என்றான், அதை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லால் கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி"

என்பார் தாயுமானவர். அவனருள் கிடைத்தால், இது வரைக்கும் நாம் பார்த்த பார்வை மருட்பார்வை என்று தெரியவரும். அந்த அருளைப் பெறுவதற்கு வழி யாது? அவனிடம் இடைவிடாது முறுகிய அன்பை வளர்த்தல். அந்த அன்பே அவன் அருளைப் பெறச் செய்யும். அந்த அருளே கண்ணாக நின்று உண்மையை உணர்த்தும்.

அருளினால் உண்மையை உணரவேண்டும் என்ற கருத் தின்றிச் செல்வச் செருக்கும் கல்விச் செருக்கும் மீதூர்ந்து நிற்க, அன்று, பல பல காலத்துக்கு முன்பே, மாலும், நான் முகனும் சிவபெருமான் அடிமுடியைத் தேடினார்கள். அடியும் முடியும்அகப்பட்டால்பொருளின் நீளமோ உயரமோ தெரிந்து விடும் அல்லவா? அவர்களுக்கு அடியும் முடியும் தெரியவில்லை. அதனால் சிவபெருமானுடைய அளவு தெரியவில்லை. அவன் அளப்பரியனாக நின்றான்.

மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை

என்று இதைக் காரைக்காலம்மையார் சொல்கிறார். 'அன்றும் அளப்பரியன்' என்பதில் உள்ள உம்மை, 'இன்றும் அவன் அப்படியேதான் இருக்கிறான். செல்வத்தாலும் கல்வியாலும்

அதனை அறிந்து கொள்ள முடியாது' என்ற பொருளைத் தந்தது.

அவனை அன்பினால் சாராதவர்களுக்கு அவனை அறியவே முடியாது. எப்படியாவது அவன் காலில் விழும் வாய்ப்புக் கிடைத்தவர்களுக்கு மிக மிக உயர்ந்த நிலை கிடைக்கும். சந்திரன் தக்க யாகத்துக்குப் போனான். மற்றத் தேவர்களும் போனார்கள். அவைதிகமான யாகத்தைச் செய்தான் தக்கன். அகந்தையின் விளைவாக, இறைவனை மறந்து அந்த யாகத்தைச் செய்தான். அவன் சிவபெருமானுடைய மாமனார். யாராக இருந்தால் என்ன? தவறு செய்தவர் தண்டனைக்கு உள்ளாக வேண்டியதுதான். அவன் செய்த அந்த முறையற்ற செயலுக்கு உடந்தையாகத் தேவர்கள் இருந்தார்கள். அவர்களும் குற்றத்துக்கு ஏற்ற தண்டனையை அடைய வேண்டியவர்களே. இறைவன் அவர்களுக்கு உரிய தண்டனையை அளித்தான்.

சந்திரனுக்கும் தண்டனை கிடைத்தது. அவனை இறைவன் காலாலே தேய்த்தான். சந்திரன் அந்தக் காலைப் பற்றிக் கொண்டான். அதன் பயனாக இறைவன் தன் தலையிலே அவனை வைத்துக் கொண்டான்; அவனை சிரஞ்சீவியாக்கி விட்டான். வானத்திலுள்ள மதி தேயும், வளரும். இறைவன் திருமுடியில் உள்ள சந்திரன் தேய்வதில்லை; வளர்வதில்லை. இறைவன் திருவடித் தொடர்பால் இத்தகைய உயர்ந்த நிலை அவனுக்குக் கிடைத்தது. அவன் இறைவனுடைய காலையும் கண்டான்; முடியையும் கண்டான். மாலுக்கும் நான்முகனுக்கும் அளப்பரியவனாகிய இறைவன் சந்திரனுக்கு அளப்பதற்கு எளியனாகி விட்டான். காலைப் பிடித்துக் கொண்டதனால் ஆகிய பலன் இது.

**என்றும்ஓர்**
**மூவா மதியானை.**

[மூவா - முதுமையை அடையாத.]

இறைவனைத் தெரிந்து கொள்ள எங்கெங்கோ போய்த் தேட வேண்டும் என்பது இல்லை. அன்பினால் நெக்குருகினால் எந்த இடத்திலும் அவனைக் காணலாம். அவன் எல்லா உலகங்களுமாக இருக்கிறான். இருபத்தோர் உலகங்கள் என்று ஒரு கணக்குச் சொல்வதுண்டு. மேலேழு, கீழேழு, உலகம் ஏழு பிரிவாக உள்ளது; ஆக இருபத்தொன்று. "எல்லா உலகமும் ஆனாய் நீயே" என்று அப்பர் பாடுவார்.

மூவே ழுலகங்கள் ஆவானை.

அப்படி உள்ள பெருமானைக் காண வேண்டும்; காண்பது என்பது இரு வகைப்படும். முகக் கண்ணினால் பார்ப்பது ஒன்று: அகக் கண்ணினால் பார்ப்பது ஒன்று. அகக் கண்ணினாற் பார்ப்பது என்பது எதையோ காட்சியாகக் காண்பது அன்று; அநுபவமாக அறிவதே அது. இறைவனிடம் அன்பு செய்து, அகந்தையைப் போக்கி, அவன் அடியே பற்றாகக் கொண்டு நின்றால் நம் அகக் கண் திறக்கும். அப்போது இறைவனைக் காணும் அநுபவம் கிடைக்கும். அந்த அநுபவமே உண்முகக் காட்சி; அதுவே ஆனந்தம்.

"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற
மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே
ஆனந்தம்"

என்பது திருமந்திரம். அந்த அநுபவத்தை அறிவென்றும் காட்சி என்றும் சொல்வதுண்டு.

மாலுக்கும் நான்முகனுக்கும் அளப்பரியனாகிய இறைவன் காலைப் பற்றிக் கொண்ட சந்திரனுக்கு உயர்ந்த நிலையை அளித்தான். இவை பழைய கதைகள். இறைவன் தன்பால் அன்பு செய்வோருக்கு உண்மை நிலையை அருளுவான் என்பது அந்தக் கதைகளில் தோன்றும் உண்மை. அது இன்றைக்கும் பொருந்தும்.

இதைத் தம்முடைய அநுபவத்தால் உணர்ந்தவர் காரைக்கால் அம்மையார்.

"தேடிக் கொண்டு கொண்டேன்-திரு
மாலொடு நான்முகனும்
தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டுகொண்டேன்"

என்று அப்பர் ஆனந்தக் கூத்திடுகிறார். பலர் தேடிய ஒரு பொருள். பல காலமாகத் தேடியும் காண முடியாத பொருள் ஒருவருக்குக் கிடைத்துவிட்டால் அவருக்கு உண்டாகும் ஆனந்தத்தை அளவிட முடியுமா?

அதே நிலையில் உள்ள காரைக் காலம்மையார் சொல்கிறார். அந்தப் பழைய கதை, செருக்குற்ற மாலுக்கும் நான் முகனுக்கும் காணுவதற்கு அரியான் என்று இறைவனைச் சொல்லுகிறது. அன்றும் இன்றும் அளப்பரியவனாக நிற்கிறான் எம்பெருமான். ஆனால் காலைப் பற்றிய சந்திரனுக்கு அருள் செய்தான். இன்று, அவனை உள்ளே காணும் அறிவு, அநுபவிக்கும் அனுபவம் மிகவும் எனக்கு எளிதாகிவிட்டது என்றார். இந்த ஆனந்த அனுபவத்தில் உண்டான பெருமிதத்தால், "இன்று நமக்கு எளிதே!" என்று பன்மையினால் சொல்லிக் கொள்கிறார். 'அவனைக் காணும் அறிவு இன்று நமக்கு எளிதே' என்று தெள்ளத் தெளிவாகச் சொல்கிறார்.

இன்று நமக்குஎளிதே; மாலுக்கும் நான்முகற்கும்
அன்றும் அளப்பரியன் ஆனானை,— என்றும்ஓர்
மூவா மதியானை மூவே முலகங்கள்
ஆவானைக் காணும் அறிவு.

[திருமாலுக்கும் நான்முகனாகிய பிரம தேவனுக்கும் (இன்று போல) அன்றும் அளப்பதற்கு அரியவனாக நின்றவனும், என்றைக்கும் முதுமையடையாமல் உள்ள ஒப்பற்ற சந்திரனை

(தலையில் அணியாக) உடையவனும், இருபத்தொரி லகங் களுமாக உள்ளவனும் ஆகிய சிவபெருமானை உண்முகத்தே கண்டு அனுபவிக்கும் அநுபவம் இன்று நமக்கு எளிதாக இருக்கிறதே! இது என்ன வியப்பு!

எளிதே, ஏ, வியப்பைக் குறித்தது. அன்றும் என்ற உம்மை எச்சவும்மை; இன்றும் அளப்பரியன்என்ற பொருளைத் தந்தது. மூவாமை — முதுமையை அடையாமை; தேய்ந்து வளராமல் இருக்கும் தன்மை. காணும் அறிவு—அநுபவிக் கும் அநுபவம்.]

செருக்கினால் இறைவனை அறிய முடியாது என்பதும், அன்பினால் அவன் அருளைப் பெற்று ஆனந்தம் உறலாம் என்பதும் இந்தச் செய்யுளின் கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 19-ஆவது பாடல்.

# 20. எல்லாம் அவன்

"கடவுள் எங்கே இருக்கிறான்?" என்ற கேள்வியைக் கேட்பதைவிட, "அவன் எங்கே இல்லை?" என்று கேட்பது எளிது. அவன் இல்லாத இடம் ஏது? அவன் எப்படி இருக்கிறான்?

மனிதனுடைய அறிவு சிற்றறிவு என்றாலும் பிறந்தது முதல் அவன் அறிவு வளர்கிறது. அநுபவத்தாலும் ஆராய்ச்சியாலும் கேள்வியாலும் நூல்களைப் படிப்பதனாலும் அவனுடைய அறிவு விரிகிறது. முதலில் திட்பமானவற்றை அறிந்து கொள்கிறான். பிறகு நுட்பமானவற்றை அறிந்து கொள்கிறான்.

குழந்தை முதலில் அன்னையை அறிந்து கொள்கிறது; அவள் தனக்குப் பால் கொடுப்பதைத் தெரிந்து கொள்கிறது; அணைப்பதை அறிகிறது. ஆனால் அவளுடைய அன்பின் பெருமையை வளர்ந்த பிறகே தெரிந்து கொள்ள முடிகிறது. அன்பினால் செய்யும் செயல்கள் திட்பமாக இருப்பதனால் அவற்றைக் கண்முன்னே பார்த்துத் தெரிந்து கொள்ளும் அறிவுதான் ஆரம்பத்தில் இருக்கிறது. காட்சிப் பொருளை அறியும் அறிவு அது. பிறகு இந்தச் செயல்களுக்கெல்லாம் காரணமான அன்பை உணர அறிவு வளர்ச்சி பெறவேண்டும். திட்பத்தை அறியும் அறிவு முதலில் இருக்கிறது. வளர வளர நுட்பத்தை அறியும் ஆற்றல் வருகிறது. இது பருவத்தால் அமையும் வேறுபாடு.

மனிதர்களுக்குள்ளே அறிவில் வேறுபாடு இருக்கிறது. ஒரே பிராயம் உடையவர்கள் ஒரே மாதிரி அறிவுடையவர்

களாக இருப்பதில்லை. சிலர் சிறிய பருவத்திலேயே பிறர் வியக்கும் அறிவாற்றல் உடையவர்களாக விளங்குகிறார்கள். சிலரோ மந்த புத்தி உடையவர்களாக இருக்கிறார்கள். பிறவி தோறும் அறிவு, விளக்கம் பெற்று வரும். முன் பிறவியில் அறிவு விளக்கம் பெற்றவர்கள் இந்தப் பிறவியில் இளமை யிலேயே பேரறிவுடையவர்களாக இருக்கிறார்கள்.

> "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி
> ஒருவற்கு
> எழுமையும் ஏமாப் புடைத்து"

என்ற திருக்குறள் பிறவிதோறும் அறிவு தொடர்ந்து வரு வதைத் தெரிவிக்கிறது.

விலங்குகளைவிட அறிவிற் சிறந்தவன் மனிதன். மனிதர் களுள் ஞானிகள் சிறந்த அறிவுடையவர்கள். மனிதர்களை விடத் தேவர்கள் மிக்க அறிவுடையவர்கள். அவர்களைப் புலவர் என்று சொல்வார்கள். அதற்கு மிக்க அறிவுடையவர் கள் என்பது பொருள்.

இவ்வாறு அறிவின் தரம் பலபடியாக இருந்தாலும் அறிவின் உச்ச நிலையை அடைந்தவர் யாரும் இல்லை; முழுமை யான அறிவை உடையவர் மனிதருள் யாரும் இல்லை. மனித ரைக் கிஞ்சிஜ்ஞர் என்று சொல்வது வழக்கம்; சிற்றறிவுடைய வர் என்று பொருள்.

பஞ்சபூதங்களை அடக்கி ஆண்டு, வானத்தில் பறக்கவும், கடலில் மூழ்கிச் செல்லவும், சந்திர மண்டலத்துக்குச் செல்ல வும் விஞ்ஞானம் வழிகாட்டியிருக்கிறது. எத்தனையோ அற்புத மான சாதனைகளை விஞ்ஞானிகள் சாதித்து வருகிறார்கள். ஆண்டுக்கு ஆண்டு இந்தச் சாதனைகள் பெருகி வருகின்றன. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு காணாத விஞ்ஞான அதிசயங் களை இப்போது கண்டு வியக்கிறோம். மனிதனால் முடியாத

காரியமே இல்லை என்றும் சொல்லும் அளவுக்கு விஞ்ஞானம் வளர்ந்து வருகிறது.

எவ்வளவுதான் அவன் சாதித்தாலும் அவன் சிற்றறிவுடையவன்தான். அவன் அறியாதவைகளே அதிகம்.

> **"கற்றதுகைம் மண்ணளவு கல்லா**
> **துலகள வென்**
> **றுற்ற கலைமடந்தை ஓதுகிறுன்"**

என்பது விஞ்ஞானிகளுக்கும் பொருந்தும். சந்திரமண்டலத்துக்குப் போய் அங்குள்ளவற்றைத் தெரிந்து கொண்டாலும், மற்றக் கிரகங்களை இன்னும் தெரிந்து கொள்ளவில்லை. எல்லாக் கிரகங்களையும் அறிந்து விட்டாலும் சூரிய மண்டலத்துக்குச் சென்று கால் வைப்பது எளிதென்று சொல்ல இயலாது. அதன் பக்கத்திலேகூடச் செல்லமுடியாது அந்த அற்புதமும் நடந்து விட்டால் நட்சத்திரங்களை அளந்தறிய முடியாத நிலையில்தான் இருப்பான். எல்லாவற்றையும் அறிந்து கொள்ளும் நிலை என்றும் மனிதனுக்கு வரப் போவதில்லை. மனிதன் என்ன? தேவர்களுக்கும் கூடத்தெரியாது.

அப்படியாஞல் எல்லாவற்றையும் அறிந்தவர் யாரும் இல்லையா? ஒருவன் இருக்கிருன், அவன்தான் இறைவன். அவனே சர்வஜ்ஞன்; முற்றறிவுடையவன்; பரிபூரண அறிவேமயமானவன். சச்சிதானந்தம் என்பதில் சத், சித், ஆனந்தம் என்ற மூன்று சொற்கள் அடங்கியுள்ளன. அவற்றுல் இடையிலுள்ள, 'சித்' என்பது இந்த முற்றறிவைக் குறிக்கிறது. இறைவனே மூற்றறிவுடையவன்; முழுமையும் அறிந்தவன்.

ஞான பரிபூரணஞகிய அவனை எண்ணிப் பார்க்கிருர் காரைக்கால் அம்மையார். எல்லாவற்றையும் அறிந்தவன் அவனே.

அறிவானும் தானே.

எல்லாவற்றையும் அறிந்தவனுகிய அவனே யாவருக்கும் அறிவிக்கிருன். படித்தவன் ஒருவன் கல்லாதவனுக்குத் தான் அறிந்ததைக் கற்றுக் கொடுக்கிருன். அறிந்தவன் அறியாதவனுக்கு அறிவிக்கிருன். இப்படி அறிவிக்கிறவன், வேறு ஒருவரிடம் அறிந்துகொண்டவன். அவனும் தன் குருவின் மூலம் அறிந்து கொண்டிருக்கிருன். இப்படியே ஆராய்ச்சி பண்ணிக்கொண்டு போனுல் முதலில் அறிவித்த வன் இறைவன் என்று முடிவாகும். அவன் அறிவிக்க அறிந்தவர்கள் தாம் பெற்ற அறிவை வழிவழியே அறிவித்து வருகிருர்கள். எல்லாருக்கும் அறிவு பரவுவதற்கு மூல புருஷனுக அறிவித்தவன் இறைவனே.

அது மட்டுமா? சிறிய ஆசிரியனிடம் சில ஐயங்களைத் தெரிந்து கொள்ளலாம். அந்த ஆசிரியனுல் விளக்கம் பெருத சந்தேகங்களை அவனைவிடப் பெரிய ஆசிரியனிடம் தெளிய லாம். அந்தப் பெரிய ஆசிரியனுக்கும் விளங்காத இடங்கள் இருக்கும். அவற்றை இன்னும் பெரிய ஆசிரியனிடம் அணுகித் தெரிந்து கொள்ளலாம். இப்படி மேலே மேலே போனுல் யாவராலும் தெரிவிக்க முடியாத ஐயங்கள் எஞ்சி நிற்கும். அவற்றை இறைவன்தான் தெரிவிக்க முடியும்; அறிவிக்க இயலும். திருமுருகாற்றுப்படை முருகனுடைய ஆறு திரு முகங்களின் செயல்களைச் சொல்லும் போது இந்தக் கருத்தைச் சொல்கிறது.

"ஒருமுகம்

**எஞ்சிய பொருளை ஏமுற நாடித்**
**திங்கள் போலத் திசைவிளக் கும்மே."**

ஆகவே முதலில் அறிவிப்பவனும், எல்லாம் தெரிந்தும் தெரியாததை இறுதியில் அறிவிப்பவனும் இறைவனே.

"அறிவிப்பான் தானே."

'தானே அறியும் தன்மை பசுவுக்கு இல்லை; பதியாகிய இறைவன் அறிவித்தால்தான் பசு அறிய முடியும். யாரும்

அறிவிக்காமல் இயல்பாகவே அறிபவன் இறைவன். அறிவித்தால் அறிவது ஆன்மா' என்ற கருத்தையும் இது தெரிவிக்கிறது.

அறிவை ஞானமென்றும், அறியும் பொருளை ஞேயம் என்றும், அறிபவனை ஞாதா என்றும் கூறுவர். இந்த மூன்றையும் 'திரிபுடி' என்றும், 'முப்புடி' என்றும் வழங்குவர். எல்லாவற்றையும் அறியும் ஆண்டவன் எல்லா உயிர்களுக்கும் அறிவிப்பானாக, காட்டுபவனாக இருக்கிறான்.

ஜடம் அறியாது; பசுவும் இயல்பாக அறியாது. ஜடம் அறிவித்தாலும் அறியாது; பசு அறிவித்தால் அறியும். அறிவதற்குரிய கருவியாகிய அறிவு, பசுவாகிய ஆன்மாவிடம் இருக்கிறது. அறிவு நுட்பமானது. நுட்பமான யாவும் இறைவன் மயம். ஆகவே அறிவும் அவன்தான். அறிவாகிய கருவியாக இருந்து அறிகின்றவனும் அவன்தான். உயிர் அறிவைப் பெறும்போது அதனிடம் தெய்வத்தின் அம்சம் உண்டாகிவிடுகிறது. அவன் பேரறிவுடையவனாகும்போது அந்த அறிவே இறைவனாகிறது. அதைக் கருவியாகக் கொண்டு அறிவானும் இறைவனாகி விடுகிறான். 'மாணிக்க வாசகர் அறிவாற் சிவன் என்பது திண்ணம்' என்று எழுதுவார் சிவஞான முனிவர். அம்மையார் இதைச் சொல்கிறார்.

**அறிவாய் அறிகின்றான்தானே.**

அறிவு என்பது ஏதேனும் ஒன்றை அறிவது. அறியப்படும் பொருள் ஒன்று இருக்க வேண்டும். அறிபவன், அறிவதற்குரிய கருவியாகிய அறிவு இரண்டும் அவனே என்று சொன்ன காரைக்காலம்மையார் அடுத்தபடி மூன்றாவதாக உள்ள அறியப்படும் பொருளும் அவனே என்கிறார்.

**அறிகின்ற**

**மெய்ப்பொருளுந் தானே.**

நாம் காணுகின்ற நிலையாத பொருள்களுக்கப்பால் மெய்யான பொருள் ஒன்று உண்டு. அதனை மெய்ப்பொருள், செம்பொருள் என்பார்கள். அதுவே பரம்பொருள், இறைவன்; மெய்யறிவாக நிற்பவன். அதனால் காணும் மெய்ப் பொருளாகவும் அவன் இருக்கிறான்.

அப்படியானால் சில காலம் தோற்றி மறையும் பொய்ப் பொருள்கள் அவனிலும் வேறு?

ஐம்பெரும் பூதங்களாக விரிந்தது பிரபஞ்சம். அவை நிலையாதவை. நம் கண்ணுக்கு அவைகளே தோற்றம் அளிக்கின்றன. இந்தத் தோற்றங்கள் எல்லாம் அவன்தான். கடலில் அலை தோன்றுகிறது. கடலிலிருந்து கழி பிரிந்து நிற்கிறது. அலை என்றும் கழி என்றும் தோன்றினாலும் எல்லாம், கடல் தான். அவ்வாறே, பிரபஞ்சத்தில் வெவ்வேறு வடிவில் தோன்றுகின்றவனும் இறைவன்தான்.

சிவபெருமானுக்கு, 'அட்டமூர்த்தி' என்று ஒரு பெயர் உண்டு; எட்டு வடிவுடையவன் என்பது பொருள். நிலம், நீர், தீ, வளி, வெளி என்ற ஐம்பெரும் பூதங்களும், திங்களும், ஞாயிறும், உயிரும் ஆகிய எட்டும் அவன் வடிவங்கள்

**"இருநிலனாய்த் தீயாகி நீரும் ஆகி**
**இயமான னாய்எரியும் காற்றும் ஆகி**
**அருநிலைய திங்களாய் ஞாயி றாகி**
**ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி"**

என்று பாடுவார் திருநாவுக்கரசர். எல்லாமே இறைவன்தான்.

**விரிசுடர்பார் ஆகாசம்**
அப்பொருளும் தானே அவன்

என்று முடிக்கிறார் அம்மையார்.

'எல்லாவற்றையும் அறிபவன் அவன்'. என்று நுட்பமான பொருளைச் சொல்லி, 'நமக்கு அறிவிக்கிறவனும், நம்முள் அறிவாய் நிற்பவனும், நாமாக இருந்து அறிபவனும்' என்று நம்முடன் தொடர்புடையவனாகச் சொல்லி, 'மெய்ப் பொருளும் பொய்ப் பொருளுமாக இருப்பவன்' என்று எல்லாம் அவன் தான் என்பதை இறுதியாகச் சொல்லி முடிக்கிறார்.

**அறிவானும் தானே; அறிவிப்பான்**
**தானே;**
**அறிவாய் அறிகின்றான் தானே;—**
**அறிகின்ற**
**மெய்ப்பொருளும் தானே; விரிசுடர்பார்**
**ஆகாசம்**
**அப்பொருளும் தானே அவன்.**

(இறைவன் எல்லாவற்றையும் அறிபவனும் தானாக இருக்கிறான்; உயிர்களுக்கு அறிவிப்பவனும் அவனாகவே இருக்கிறான். அறிவாகவும் அறிகின்றவனாகவும் தானே; அறிகின்ற மெய்ப்பொருளும் அவனே; விரிந்த சுடரும் விரிந்த பாரும் விரிந்த ஆகாசமும் ஆகிய அப்பொருள்களும் அவன்,

அவன் - இறைவன்; எழுவாய். 'அவன் தானே அறிவானும், அவன் தானே அறிவிப்பான்' என்று ஒவ்வொன்றிலும் கூட்டிப் பொருள் கொள்க. 'விரி' என்பதை, 'சுடர்' என்ற மூன்றுக்கும் சேர்த்துக் கொள்க; முதல்நிலை விளக்கு.)

இறைவனே நுட்பப் பொருள்களாகவும் திட்பப் பொருளாகவும் இருக்கிறான் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் இருபதாவது பாடல்.

# 21. அட்டமூர்த்தி

ஓர் அழகான மாளிகை. எங்கே பார்த்தாலும் வண்ண வண்ணச் சித்திரங்கள், வேண்டிய வசதிகளெல்லாம் அமைந்த அறைகள், கூடங்கள், அங்கங்கே கட்டில்கள், அலமாரிகள், நாற்காலிகள். இத்தனை அழகான மாளிகையைக் கட்டினவர் மாளிகைக்கு வேண்டிய மூலப்பொருள்களை உள்ளூரிலே உண்டாக்கினார். செங்கற் சூளை போட்டுச் செங்கல்லை அறுத்தார். சுண்ணாம்புக் காளவாய் போட்டார். தம்முடைய காட்டிலிருந்து மரங்களை வெட்டி வந்து பயன்படுத்தினார். மரம், மண், கல் இவ்வளவையும் வைத்துக்கொண்டு மாளிகையை உருவாக்கிவிட்டார். மண்ணைக் குவித்திருந்த போது பார்த்தால் இதுவே செங்கல்லாகும் என்று தெரியாது. கட்டைகளை அடுக்கியிருந்தபோது பார்த்தால் இவையே கதவாகும் என்று தெரியாது. மூலப்பொருளாக இருந்த வற்றைப் பார்த்தால் அவற்றில் கவர்ச்சி இல்லை. மாளிகை யைப் பார்த்தால், பார்க்கப் பார்க்க அழகாக இருக்கிறது.

அவ்வளவு தூரம் போவானேன்? வெறும் களிமண் அழகிய குடமாகிறது; மண்கூஜா ஆகிறது. மண்ணும் நீரும் கலந்து குழைத்து உருவாக்கிக் கனலில் சுட்டபிறகு வடிவும் வண்ண மும் உண்டாகிவிடுகின்றன. பார்க்க அழகிய குடமாக, கூஜா வாகத் தோன்றுகின்றன. வெறும் கட்டையில் அற்புதமான சிற்பத்தைச் செதுக்கவில்லையா?

இப்படி, மனிதன் சில மூலப்பொருள்களை வைத்துக் கொண்டு எத்தனை அழகிய படைப்புக்களைப் படைக்கிறான்! அந்த மூலப்பொருள்கள் இல்லாவிட்டால் அழகான வடிவங் களைப் படைக்க முடியாது.

மனிதனுடைய படைப்பே இவ்வளவு அற்புதமானுல் இறைவனுடைய படைப்பின் அற்புதத்தைச் சொல்ல வார்த்தை ஏது? அண்டத்தையும் பிண்டத்தையும் படைத்துக் தந்திருக்கிறுன் ஆண்டவன். அண்டம் என்பது பிரபஞ்சம்; பிண்டம் என்பது உடம்பு.

உயிர் குடியிருக்கச் சிறிய வீட்டைப் போல இந்த உடம்பைப் படைத்துத் தந்திருக்கிறுன். இந்தச் சிறிய வீட்டைப் போலப் பல கோடி வீடுகளை நடமாடும்படி வைத் திருக்கிறுன். இவை அசையும் வீடுகள். இவை யாவும் உலவ மிகப் பெரிய இடமாகிய பிரபஞ்சத்தையே படைத்திருக் கிறுன். உடம்பும் சரி, பிரபஞ்சமும் சரி, ஒரே வகையான மூலப்பொருள்களால் ஆனவை. அவை பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்னும் ஐந்து. அந்த ஐந்தே பிரபஞ்சமாக வடிவெடுத்திருக்கின்றன; உடம்பாகவும் உருவெடுத்திருக் கின்றன. அதனுல்தான், "அண்டத்தில் உள்ளது பிண்டத் துக்கும்" என்ற பழமொழி எழுந்தது.

ஐந்து பூதங்களால் அமைந்த பொம்மையாகிய உடம்பு அதே ஐந்து பூதங்களாலான பிரபஞ்சமென்னும் பெரிய மாளிகையில் உலவுகிறது. ஐந்து பூதங்கள் தனித்தனியாகவும் இருக்கின்றன; ஒன்ருேடு ஒன்று கலந்தும் இருக்கின்றன; வானுகவும் காற்ருகவும் கனலாகவும் நீராகவும் மண்ணுகவும் இருக்கின்றன;இவையெல்லாம் கலந்த மரமாக, மட்டையாக, வெவ்வேறு பண்டமாக இருக்கின்றன. இந்த அற்புதமான பிரபஞ்ச வீட்டுக்குப் பகலில் ஒளிதரக் கதிரவனுகிய விளக்கை யும், இரவில் ஒளிதரத் திங்களாகிய விளக்கையும் ஏற்றிவைத் திருக்கிறுன் இறைவன். இவ்வளவு வசதிகளைச் செய்து உடம் பையும் தந்து உயிரை உலவ விட்டிருக்கிறுன்.

எந்த விதமான ஆழமான தத்துவ ஆராய்ச்சியும் பண்ணுமல் பார்த்தால், இந்த விரிந்த உலகத்தில் வானமும் காற்றும் அனலும் புனலும் மண்ணும் தெரிகின்றன; சந்திர

சூரியர்களைக் காணுகிறோம்; இவற்றினிடையே உயிர் தன் வாழ்வை நடத்திக் கொண்டு வருகிறது. உயிர் இன்ப துன்பங்களை நுகர்வதற்காகவே இறைவன் இவ்வளவையும் படைத்து தந்திருக்கிறான் என்று தோன்றுகிறது. ஐந்து பூதங்களும் சூரிய சந்திரர்களுமாகிய ஏழும் ஜடப்பொருள்கள். உயிர் மட்டும் சித்துப் பொருள்.

இறைவனை நாம் கண்ணிலே காணுவதில்லை. ஏழு ஜடப் பொருள்களையும் காணுகிறோம். உயிர்கள் இருப்பதையும் உணர்கிறோம். எந்த வகையால் உணர்ந்தாலும் அவற்றைப் பிரத்தியட்சம் என்று சொல்வோம். ஜடப்பொருள்கள் ஏழும் புலன்களால் உணர்வதற்குரியவை; பிரத்தியட்சப் பிரமாணத்தால் அறியத் தக்கவை. உயிரை அநுமானத்தால் ஊகிக்கிறோம், ஆகவே இந்த எட்டுப் பொருள்களையும் ஓரளவு அறிவுடையவனும் தெரிந்துகொள்ள முடியும்.

இறைவன் பொறிகளுக்கும் அறிவுக்கும் எட்டாதவன். உடம்பு இயங்குவதைக் கொண்டு அதனூடே உயிர் இருப்பதை உய்த்துணர்ந்து கொள்வது போலப் பிரபஞ்சம் ஓர் ஒழுங்கு முறையில் நடைபெற்று வருவதைக் கொண்டு, அவற்றை அவ்வாறு நடத்தும் ஓர் ஆற்றல், ஒரு சித்துப் பொருள் இருக்க வேண்டும் என்று உய்த்துணர வேண்டும்,

உயிருக்கு வடிவம் இல்லை. ஆனால் தான் எடுத்த உடலையே தனக்கு வடிவாக ஏற்றுக் கொள்கிறது. இந்த வடிவத்தை உயிர் இயக்குகிறது. பஞ்சபூதங்களும் எப்போதும் தொழிற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. கதிர்களும் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கின்றன. இவற்றைச் செயற்படுத்தும் ஆற்றலாகிய சித்துப் பொருள் இவற்றினூடே இருந்து இயக்குகிறது. அந்தப் பொருள் கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் இந்த ஜடப் பொருள்களையே தனக்குரிய வடிவமாகப் பெற்று இவற்றை இயக்குகிறது.

இறைவன் குறி குணம் கடந்து நிற்பவன். அவனை வடிவத்தில் பாவித்து வணங்குகிறோம்; வடிவம் அமைத்து வழிபடுகிறோம். ஒவ்வொரு காலத்தில் அன்பர்களுக்கு இறைவன் வெவ்வேறு வடிவத்தில் எழுந்தருளி வந்து அருள் பாலித்திருக்கிறான். விடையேறும் வித்தகனாகவும், தட்சிணா மூர்த்தியாகவும், அர்த்த நாரீசுவரனாகவும், நடராசனாகவும், விநாயகனாகவும், குமரனாகவும், உமையாகவும், வடிவெடுத்து வந்து காட்சி அளித்திருக்கிறான். அவற்றை நினைப்பூட்டிக் கொள்ள அந்த வடிவத்தின் சின்னங்களை வைத்து நாம் பூசிக்கிறோம். இவற்றையே விக்கிரகம் என்றும் திருமேனிகள் என்றும், அர்ச்சை என்றும் மூர்த்திகள் என்றும் சொல்லி வணங்குகிறோம். மூலப்பொருளாகவே எண்ணிப் பக்தி செய்கிறோம்.

ஆனால், இறைவன் எப்போதுமே மேலே சொன்ன ஐந்து பூதங்களையும் சூரிய சந்திரர்களையும் அதிஷ்டித்து நின்று அவற்றை இயக்குகிறான். அவற்றையே தன் மூர்த்தங்களாக வைத்து, உள்ளிருந்து இயக்குகிறான். நாம் வழிபடும் மூர்த்தங்களுக்கும் இந்த மூர்த்தங்களுக்கும் ஒரு வேறுபாடு உண்டு: நாம் வழிபடுபவை நாமாக உண்டு பண்ணுபவை. பஞ்ச பூதம் முதலியவை இறைவனே படைத்துக் கொண்டவை. நாம் வழிபடும் விக்கிரகங்கள் நாம் கண்ட திருமேனிகள், பஞ்ச பூதங்களும் சந்திர சூரியர்களும் அவன் கண்ட திருமேனிகள்.

ஜடமாகிய ஏழு பொருள்களையும் உள்ளிருந்து இயக்குவது போலவே, சித்தாகிய உயிரையும் இறைவன் உள்ளிருந்து இயக்குகிறான். அதனால்தான் அவனை **உயிர்க்கு உயிராகி** நிற்பவன் என்று பெரியவர்கள் சொல்வார்கள். உடல் இயங்க உயிர் இன்றியமையாமல் இருப்பது போல, உயிர் இயக்கவும் உயிர்க்குயிர் ஒன்று வேண்டும். ஒன்று ஆத்மா; மற்றொன்று பரமாத்மா.

இயக்கப்படுவன எல்லாம் இறைவனுடைய வடிவுகள் என்ருல், உயிரும் இறைவனுடைய வடிவென்றே கொள்ள வேண்டும். வடிவத்தையும் வடிவை உடையவனையும் வேறு பாடின்றிப் பார்ப்பது ஒரு முறை. விக்கிரகங்களை இறைவனுகவே பாவிப்பது பக்தர்கள் இயல்பு. "இவன் அவனெனவே" என்று மாணிக்கவாசகர் பாடுலார். நாமாகச் சிலையிலும் செம்பிலும் வடித்த வடிவுகளையே இறைவனின்றும் வேருக எண்ணுமல் பக்தி பண்ண வேண்டுமென்ருல், இறைவன் தானுகக் கொண்ட வடிவங்களையும் அவனுகவே எண்ணி வழிபடுவதும் முறைதான்.

ஆகவே பஞ்சபூதங்களையும் சந்திர சூரியர்களையும் உயிரையும் அவனுகவே கண்டு வழிபடுவார்கள் பெரியவர்கள். இறைவன் இப்படி அமைந்த எட்டு வகை வடிவாகவும் இருப்பதால் அவனை அட்டமூர்த்தி என்று சொல்வார்கள். போன பாடலின் விளக்கத்தில் காட்டிய அப்பர் சுவாமிகள் திருப்பாட்டில், "அட்ட மூர்த்தியாகி" என்று வருவதைப் பார்த்தோம்.

அவனுடைய மூர்த்தங்களை அவனுகவே பாவிக்கும் சிறந்த பக்தி உணர்வில் காரைக்கால் அம்மையார் பாடுகிருர்.

வானத்தில் பகலிலும் இரவிலும் தோன்றிச் சுடர் விடும் கதிரவனையும் திங்களையும் அவர் வேருகக் காணவில்லை. அந்த இரு சுடரும் சிவபிரானே என்று கண்டு கும்பிடுகிருர்.

**அவனே இரு சுடர்.**

அவை மட்டுமா? விரிந்து எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி வைத்திருக்கும் வானத்தைப் பார்க்கிருர். எல்லை காண முடியாத அந்த ஆகாசத்தைச் சிவனுகவே காண்கிருர். எல்லாவற்றையும் எரித்தும், பக்குவப்படுத்தியும், ஒளிதந்தும் நிலவும் தீயும் சிவனுகவே தோன்றுகிறது.

**அவனே தீ ஆகாசம் ஆவான்.**

அவை மட்டுமா? நமக்கு ஆதாரமாக இருந்து நம்மைத் தாங்கும் புவியும் அவன்தான். நமக்கு உணவாகவும் உணவை உண்டாக்க இன்றியமையாத கருவியாகவும் இருக்கும் புனலும் அவன்தான். நமக்கு மூச்சுக் காற்ருக நிற்கும் வாயுவும் அவன்தான்.

**அவனே புவி புனல் காற்று ஆவான்.**

இதுவரையில் சொன்னவை ஜடமாகிய ஏழு பொருள்கள். இனி, சித்துப் பொருளாகிய உயிரைச் சொல்ல வருகிருர், அட்டமூர்த்திகளில் யஜமானன் என்று உயிரைக் குறிப்பார்கள். வேள்வி செய்யும் தலைவனுக்கு யஜமானன் என்று பெயர். தமிழில் இயமானன் என்று வரும். உயிர்களில் மனிதன் உயர்ந்தவன். மனிதர்களில் வேள்வித் தலைவன் உயர்ந்தவன். ஆதலின் அட்டமூர்த்திகளைச் சொல்லும் போது இயமானனைச் சொல்வர். உயிர் என்றும் சொல்வதுண்டு. காரைக்காலம்மையார் இயமானன் என்றே சொல்கிருர். முன்னே சொன்ன ஏழோடு இயமானனும் சேர்ந்து இறைவன் எட்டு மூர்த்தங்களை உடைய அட்டமூர்த்தியாக விளங்குகிருன்.

**இயமானனாய் அட்ட மூர்த்தியுமாய்.**

இவ்வாறு இறைவன் இருப்பினும் இவற்றை எல்லாம் கடந்து நிற்கிருன் அவன். சிற்றறிவுடைய உயிரையும் தன் வடிவங்களில் ஒன்ருக மேற்கொண்டிருந்தாலும் அவன் முற்றறிவுடையவன்; எல்லாம் அறிந்த ஸர்வஜ்ஞன்; பூரண அறிவுடையவன். அவன் ஞானமே வடிவானவன்; ஞானமயன்,

பஞ்சபூதங்களென்றும் இரு சுடரென்றும் இயமானனென்றும் சொல்லி விட்டதைக் கொண்டு அவனை எல்லைக்குள் அடக்கி வைத்து, அளவுக்குள் அடங்குபவன் என்று நினைக்கக்கூடாது; அவன் பரம சூக்குமமான ஞான சொரூபி என்பதை நினைவுறுத்துகிருர்.

ஞான

**மயனாகி நின்றானும் வந்து.**

*பிரத்தியட்சப் பொருளாகிய ஏழு ஜடப் பொருளாகவும், அநுமானப் பொருளாகிய இயமானனாகவும் தோற்றம் அளித்தாலும்! அவன் பரமஞானமயனாய், அதிசூட்சுமமான பொருள் என்பதை மறக்கக் கூடாது. ஆதலின் இறுதியில் அதைச் சொல்லிப் பாட்டை நிறைவேற்றுகிறார், காரைக் கால் அம்மையார்.*

**அவனே இருசுடர், தீ, ஆகாசம்**
**ஆவான்;**
**அவனே புவி, புனல், காற்று ஆவான்;**
**—அவனே**
**இயமான னாய், அட்ட மூர்த்தியுமாய்,**
**ஞான**
**மயனாகி நின்றானும் வந்து.**

*[இயமானனாய் அட்டமூர்த்தியுமாய் ஞான மயனாகி வந்து நின்றானும் அவனே என்று பின்பகுதியில் கூட்டிப் பொருள் செய்க. இயமானனாய் ஆகிய அட்ட மூர்த்தியுமாய் என்று ஒரு சொல் வருவிக்க.]*

**இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 21-ஆவது பாட்டு.**

# 22. பிறையும் பாம்பும்

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் நெருங்கி அன்பு செய்யும் பேரன்புடையவர். அன்பர்கள் இறைவனுடன் நெருங்கிப் பேசும்போது பலவகையில் அசதியாடுவது—பரிகாசமாகப் பேசுவது—உண்டு. அப்பர் சுவாமிகள், சுந்தர மூர்த்தி நாயனர் முதலியவர்களின் திருவாக்கிலும் இப்படி வேடிக்கையாகப் பேசும் பாடல்கள் உண்டு. காரைகால் அம்மையாரும் அவ்வாறு பேசும் இயல்புடையவர். முன்பு ஒரு பாட்டில், "ஐயோ! இந்தப் பாம்பை இறைவனுடைய மார்பில் சேரும்படி செய்யாதீர்கள்! அது உமாதேவியை ஏதாவது செய்துவிட்டால்? அது மகா பாவம்!" (13) என்று சொன்னதைப் பார்த்தோம். இறைவனையே முன்னிலைப் படுத்தி அசதியாடும் இடங்களும் உண்டு.

இப்போது அத்தகைய பாடல் ஒன்று வருகிறது.

இறைவன் பிறையை அணிந்திருக்கிறுன். பாம்புகளை அணிகலனுகப் பூண்டிருக்கிறுன். பொதுவாகச் சந்திரனுக்கும் பாம்புகளுக்கும் பகை என்று சொல்வார்கள். கிரகண காலத் தில் இராகு கேதுக்கள் சந்திரனை விழுங்குவதாகக் கொள்வது உலக வழக்கு. அதிலிருந்து உண்டானது இந்த எண்ணம். பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை என்று சொல்லி அதனடி யாகப் பல கற்பனைகளை அமைப்பது கவிஞர்களின் வழக்கம். இப்படி வரும் கவிஞர் மரபுகளைக் கவிசமயம் என்பார்கள். இயற்கையிலே இப்படி நடக்கும் என்று நாம் எண்ணக் கூடாது. இவை யாவும் கற்பனை. அடிப்பட்ட வழக்கு ஆதாரமாக இருப்பதனுல் இந்தக் கற்பனை நமக்கு விளங்கு கிறது. இந்தப் பொய்யை—தீமையில்லாத பொய்யை—நாம் சுவைக்கிறேம்.

பாம்பையும் சந்திரனையும் வைத்துக்கொண்டு காரைக்கால் அம்மையார் இப்போது அசதியாடுகிறார். இறைவனை நோக்கியே பேசுகிறார்.

"எம்பெருமானே! உம்முடைய திருக்கழுத்து மிகவும் கறுப்பாக இருக்கிறது. அது உம்முடைய கழுத்தில் வந்து தன்னுடைய இயல்பாகிய நிறம் பின்னும் கறுப்பாகிக் கட்டி தட்டித் தங்கியிருக்கிறது என்று சொல்லும்படி உள்ளது. அத்தகைய கண்டத்தை உடையவரே!" இறைவனை சின்னிலைப்படுத்துகிறார். அம்மையார் அடிக்கடி இறைவனை அம்மையார் அடிக்கடி நீலகண்டன் என்று குறிப்பதை நாம்பார்த்து வருகிறோம். தேவர்கள் உய்யவும் வயிற்றி லுள்ள உயிர்கள் உய்யவும்நஞ்சைத் திருக்கழுத்திலே இறைவன் தேக்கி வைத்தான். அந்தக் கருணை மிகப் பெரியது.

"புவனங்கள் உய்ய ஐயர்
பொங்குநஞ்சு உண்ண யாம்செய்
தவம்நின்று தடுத்த தென்னத்
தகைந்துதான் தரித்த தென்று
சிவன்எந்தை கண்டந் தன்னைத்
திருநீல கண்டம் என்பார்"

என்று அந்தத் திருக்கழுத்தைச் சிறப்பிப்பார் சேக்கிழார்.

வந்துழோர்.
இராநீர் இருண்டனைய கண்டத்தீர்

என்று இறைவனை விளிக்கிறார்.

இரவு கதிரவன் வந்தவுடன் போய்விடுகிறது. ஒவ்வொரு நாளும் வந்து வந்து போகிறது. 'எங்கேனும் நிலையாக இருந்து இளைப்பாற இடம் கிடைக்குமா?' என்று நாடிப் பார்த்து, 'இந்த இடந்தான் நிலையாக இருக்கத் தக்க இடம். இங்கே யாரும் வந்து துன்புறுத்த மாட்டார்கள். நம்முடைய இயல்பாகிய இருட்டு இங்கே முதிர்ந்து விளையும்படி தங்கி

விடலாம்' என்று இறைவன் திருக்கழுத்தைத் தேர்ந் தெடுத்தது. ஆகவே அங்கே வந்து, தன் நீர்மை பின்னும் நன்றாக இருண்டு அமையும்படி இரவு தங்கிவிட்டதாம். இப்படிக் கற்பனை பண்ணும்படி இறைவன் திருக்கழுத்து அமைந்திருக்கிறது. 'இரவின் நீர்மையாகிய இருள் பின்னும் இருண்டாற் போன்ற திருக்கழுத்தை உடையவரே!' என்று விளிக்கிறார். 'இத்தகைய கண்டத்தையுடைய எம் பெருமானாரே!' என்கிறார்.

**வந்துஓர்**
**இராநீர் இருண்டனைய கண்டத்தீர்! எங்கள்**
**பிரானீர்!**

கழுத்திலே இரவின் இருளைப் போன்ற கருமை இருந் தாலும் இறைவன் தன் சென்னியிலே பிறையை அணிந்திருக் கிறான். இரவும் பிறையும் இணைந்திருப்பது உலக இயல்பு. இங்கே இரவின் இருள் ஒரு பக்கம் ஒதுங்கியிருக்கிறது; பிறை ஒரு பக்கம் இருக்கிறது. அந்தப் பிறை இறைவனிடம் அடைக்கலம் புகுந்தது. தக்கன், "நீ தேய்ந்து மாய்ந்து போவாயாக" என்று சாபம் இட்டான். அது கண்டு சந்திரன் இறைவனிடம் அடைக்கலம் புகவே, அவனைத் தன் தலையிலே எடுத்து அணிந்து கொண்டான். அது முதல் அவன் தேயாமல் வளராமல் என்றும் ஒரே நிலையில் இருக்கிறான். வளர்வதும் தேய்வதும் இல்லாத சிரஞ்சீவித் தன்மையைப் பெற்று விட்டான்.

இப்போது அந்தப் பிறைக்கு ஆபத்து வந்துவிடும் போலல்லவா இருக்கிறது? அச்சத்தினால் பேசுகிறவர்கள் முன் பேசுவதைப் பின்னும், பின் பேசுவதை முன்னும் பேசுவார் கள்; "போச்சு, போச்சு!" என்று கத்துவார்கள். எது போயிற்று என்று விளங்காது. பிறகுதான் விளங்கும். அவ்வாறே, அம்மையார் சொல்லத் தொடங்குகிறார். முதலில் சிவபெருமானை விளிக்கவில்லை.

"ஐயோ! இதற்கு ஆபத்து வந்துவிடும்போல் இருக்கிறதே!" என்று தொடங்குகிறார். "எதற்கு ஆபத்து? யாரால் ஆபத்து வந்து இதைச் சாப்பிட்டுவிடும் போல இருக்கிறதே!" என்கிறார்.

வந்து இதனைக் கொள்வதே ஒக்கும்!
எதைக்கொள்ளும்? எதுகொள்ளும்?

"உம்முடைய திருமேனியிலே தேவரீர் அணிகலனாக அணிந்திருக்கிறீரே, அந்தப் பாம்பைத்தான் சொல்கிறேன். அது வாள் அரவு; கொலை செய்யும் அரவு அல்லவா?"

"இந்தப் பாம்பு அப்படிச் செய்யாது."

"நான் நம்ப மாட்டேன். பாம்பு என்றால் படையும் நடுங்கும். பாம்புக்கும் பிறைக்கும் பகை என்பதை உலகம் அறியும்; ஆகவே இந்தப் பாம்பு நல்ல பாம்பு என்று நான் நம்பமாட்டேன். இது எந்தச் சமயத்தில் ஆபத்தை உண்டாக்குமோ? இதன் திருட்டுப் புத்தியைத் தேவரீர் நன்றாக ஆராயவேண்டும். ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வாருங்கள்."

இவ்வாளரவின்
சிந்தையது தெரிந்து காணமினே?

[இந்தப் பாம்பின் எண்ணத்தை ஆராய்ந்து தெரிந்து கொள்ளுங்கள். வாள்—ஒளி என்று பொருள் சொல்வது வழக்கம். தக்கயாகப் பரணி உரைகாரர் வாள் என்பதற்குக் கொலை என்று ஒரு பொருள் கூறுகிறார். அந்தப் பொருளையே இங்கே கொள்வது சிறப்பு. 'இது கொலைகாரப் பாம்பு. இதனிடம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும்' என்கிறார் அம்மையார்.]

எதற்கு ஆபத்து? 'இதனைக் கொள்வதே ஒக்கும்' என்று சுட்டியது எதனை? அதை உடனே சொல்லவில்லை. இறைவனை விளித்துவிட்டுப் பிறகே அதைச் சொல்கிறார். "நீலகண்டப் பெருமானே! உம்முடைய திருமேனியில் உள்ள பிறையைத் தான் சொல்கிறேன்" என்று முடிக்கிறார்.

> வந்து ஓர்
> இராநீர் இருண்டனைய கண்டத்தீர்! எங்கள்
> பிரானீர்! உம் சென்னிப் பிறை.

அச்சத்தால் உண்டான படபடப்பும் தடுமாற்றமும் முன் பின் மாற்றிக் கூறும் குழப்பமும் இந்தப் பாட்டில் இருக்கின்றன.

> வந்துஇதனைக் கொள்வதே ஒக்கும்; இவ்
> வாளரவின்
> சிந்தை யதுதெரிந்து காண்மினோ;—வந்து ஓர்
> இராநீர் இருண்டனைய கண்டத்தீர்!எங்கள்
> பிரானீர்! உம் சென்னிப் பிறை.

[ தேடி வந்து ஓர் இரவானது தன் இயல்பு பின்னும் இருண்டாற் போலக் கறுத்திருக்கும் கண்டத்தை உடையவரே, எங்கள் தலைவரே உம்முடைய திருமுடியில் உள்ள பிறையாகிய இதனை, ஊர்ந்து வந்து பற்றிக் கொள்வது போல இருக்கிறது, இந்தக் கொலைகாரப் பாம்பின் கருத்தை ஆராய்ந்து தெரிந்து கொள்ளுங்கள்.

வந்து-தான் இருக்குமிடத்திலிருந்து வந்து, வாள் அரவு-கொலைத்தன்மையை உடைய பாம்பு. சிந்தை-

எண்ணம். அது: பகுதிப் பொருள் விகுதி. தெரிந்து-ஆராய்ந்து. காண்மின் - தெளியுங்கள். இராநீர் - இரவின் தன்மை என்றது கருமையை. பிரானார் என்ற சொல் விளி வேற்றுமையில் பிரானீர் என வந்தது. 'கொள்வதே' என்பதில் உள்ள 'ஏ'யும், 'காண்மினோ' என்பதில் உள்ள 'ஓ'வும் அசைகள்.

'பாம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். அது உம்மிடம் புகல் அடைந்த பிறையை விழுங்கினாலும் விழுங்கி விடும்' என்று அசதியாடுகிறார் அம்மையார்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 22-ஆம் பாடல்.

# 24. சோதி தரிசனம்

இறைவன் திருவருள் அனுபவம் பெற்றவர்கள் அந்த அனுபவத்தை எண்ணி இன்புறுவார்கள்; வியப்பார்கள். பல காலும் முயன்று சாதனங்களை மேற்கொண்டு படிப்படியாக ஏறி அவனுடைய அருளில் தோய்ந்து தம்மை மறக்கும்போது அந்த இன்பம் இத்தகையது என்று எண்ணும் நிலை இராது. தம்மை மறந்து தூங்குபவர்களுக்கே, தூங்கும்போது ஒன்றும் தெரிவதில்லையே! தூங்கி விழித்த பிறகுதானே, "அப்பாடி! சுகமாகத் தூங்கினேன். எவ்வளவு நேரம் தூங்கினேன் என்று தெரியவில்லை" என்ற உணர்வு வருகிறது? அதுபோல மனோ லயம் பெற்று, அதற்கு மேல் சமாதி இன்பத்தில் திளைப்பவர் களுக்கு அந்த நிலையினின்றும் விழிப்பு நிலைக்கு வந்தபோது, அந்த இன்ப நிலையை நினைக்க நினைக்க ஆனந்தமும் வியப்பும் மீதூரும். முன் அனுபவித்த ஆனந்தம் எல்லாம் மறந்த நிலை யில் அடைவது. இப்போது உண்டாகும் ஆனந்தம்; ஓர் எக்களிப்பு; ஆனந்த உணர்ச்சி அலையெழும்பும் இன்பக் கொந்தளிப்பு.

இறைவனுடைய திருவுருவத்தை ஒரு மகா பக்தர் தியானிக்கிறார். எம்பெருமானுடைய வடிவம் உண்முகத்தே தெளிவாகத் தெரியும் அளவுக்கு அவருடைய உபாசனை முறுகியிருக்கிறது. தூங்கும்போது கனவில் காணும் பொருள் கள் தெளிவாகத் தெரிவதில்லையா? அதுபோல இந்தத் தூங் காத தூக்கத்திலும் இறைவனுடைய திருவுருவம் தெளிவாகத் தெரிகிறது.

உடல் உணர்ச்சி மறந்து மனம் அந்த உள்மனக் காட்சி யிலே ஒன்றிவிடுகிறது. அப்போது ஒரு மாற்றம் உண்டாகிறது. அளவுக்குள் அகப்பட்டதாகத் தோன்றும் அந்த வடிவம் வளர்

கிறது. கை கால்கள் மறைகின்றன. சோதி வடிவாகத் தோன்றுகிறது; வடிவு சோதி வீசுகிறது; பிறகு வடிவு கரைகிறது. சோதியே பிழம்பாக நிற்கிறது. இப்போது சோதி, வெள்ளமாகப் பரந்து விரிவடைகிறது. அதற்கு எல்லை காண முடிவதில்லை. மனிதன் கடலுக்குள் மூழ்குவது போல உள்ளம் அந்தச் சோதி வெள்ளத்தில் மூழ்கி விடுகிறது. அப்பால் மனம், செயலற்றுப் போய்விடுகிறது. அதற்கு மேல் அங்கே ஒன்றும் இல்லை.

காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்று முப்புடிகளும் நழுவி விடுகின்றன. எல்லாம் இழந்த நிலை அது. நிரந்தர உண்மையான இன்பம் ஆதலால் ஒன்று என்று சொல்லலாம். ஒன்றும் புலனாகாத, அனுபவிக்கிறோம் என்பதற்குச் சாட்சியே இல்லாத நிலையாதலின் அதைச் சூன்யம் என்றும் சொல்லலாம். "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்" என்று சொல்வார்கள். அது கண்டமற்ற அகண்ட பரிபூரண அனுபவம். அந்தப் பூரணத்தை, 'எல்லாமான ஒன்று' என்றும் சொல்லலாம். ஒன்று என்று சுட்டுவதற்கும் சாட்சியின்மையால் சூன்யம், 'பாழ், வெறுமை' என்றும் சொல்லலாம். இது ஒளி நிறைந்த சூன்யம்.

இப்படித் தம்மை மறந்த சமாதி நிலையில் ஒன்றியபின் விழிப்பு நிலையை அடையும்போது முதலில் சோதி வெள்ளம் தோன்றிய நிலைக்கு இறங்கிப் பிறகு முழு விழிப்பு நிலைக்கு வர வேண்டும். வடிவம் மறைந்து சோதி வெள்ளம் தோன்ற, அப்பால் எல்லாம் மறந்த நிலை அனுபவ எல்லைக்கு ஏறும் போது உண்டாவது. அதே போலத் தம்மை மறந்த நிலையி லிருந்து இறங்கும்போது அதே சோதி வெள்ளத் தோற்றம் தோன்றும். பிளாட்பாரத்திலிருந்து வண்டியில் ஏறுகிறோம்; இறங்கும்போது பிளாட்பாரத்தில் இறங்குகிறோம். அந்தப் பிளாட்பாரம் போன்றது சோதி தரிசனம்.

அந்த நிலைக்கு இறங்கி வந்தவர்கள் எளிதில் பின்னும் கீழே இறங்க முடியாது. சுழுத்திக்கும் (ஸுஷுப்திக்கும்)

ஜாக்கிரத்துக்கும் இடைப்பட்ட அந்த நிலையில்தான் அபிராமி பட்டர் 'பௌர்ணமி' என்று சொன்னார். இறைவனைத் தனியே வேருகப் பார்க்கும் கடைசி நிலை அந்தச் சோதி உருவம். இறங்கும்போது முதலில் பார்ப்பது அந்தச் சோதி உருவம்.

மேலே ஏறுகையில் அந்தச் சோதி உருவம் தோன்றும் போது, 'இனி அனுபவ எல்லைக்குள் புகுந்து விடுவோம்' என்ற எண்ணம் தோன்றுது. இயல்பாகவே சோதி நிலையிலிருந்து அகண்ட நிலைக்கு நழுவி விடுவோம்.

ஆனல், விழிப்பு நிலையில் மீண்டும் ஆய்ந்து பார்க்கும் போது அந்தச் சோதி நினைவுக்கு வருகிறது. எல்லா வடிவமும் அதற்குள்ளே கரைந்துவிடும். ஆகவே அது ஆண்டவனுடைய மூல வடிவம்; அதாவது அதற்கு அப்பால் வடிவம் இல்லை.

இந்தச் சோதி வடிவக் காட்சியைக் காரைக்கால் அம்மையார், "காதலால், காண்பார்க்குச் சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே" (17) என்று முன் ஒரு பாட்டில் சொன்னார்.

இப்போது அந்தச் சோதியான ஒளி வெள்ளத்தைப் பற்றி விழிப்பு நிலையிலிருந்து எண்ணிப் பார்க்கிருர். அதற்கு மேல் உள்ளது நினைப்பில் தட்டுப்படும் அனுபவம் அல்லவே! இறைவனுடைய மூலத் திருவுருவம், அவனை வேருகப் பார்க்கும் அந்தச் சோதிதான் என்று தெளிவாக உணர்கிருர் மனத்துக்குள் தோன்றும் அதை அணிமைச் சுட்டினல், 'இது' என்று சொல்கிருர். அதை நினைந்து வியக்கிருர். "இது அல்லவா ஈசனுடைய திருவுருவம்!" என்று ஆச்சரியப்படுகிருர்

**இதுஅன்றே ஈசன் திருவுருவம் ஆமாறு !**

இந்த உருவத்தைக் காணும் அளவுக்கு ஏற்றம் பெற்றவர் களுக்குப் பக்குவ உயர்ந்தவர்களுக்கு, பிறகு ஆபத்தே இல்லை. பாதுகாப்பான இடத்திற்குப் போனது போன்ற நிலை அது.

அப்புறம் மேலே போக வேண்டியதுதான். பரமபத சோபான படம் என்ற ஒன்றை வைத்துக்கொண்டு விளையாடுவர். ஏணியிலே ஏறியும் இறங்கியும் போக வேண்டும். கடைசியில் ஒரு பெரிய பாம்பு இருக்கும். எல்லாவற்றுக்கும் தப்பிக் கொண்டு மேல் வரிசைக்குப் போய்விட்டால் பிறகு பாம்போ ஏணியோ இராது. அடுத்த நிலை பரமபதந்தான். பரமபதத் துக்கு முந்தின வரிசை அது அதற்குப் போய்விட்டால் அதுவே சேமமான, பாதுகாப்பான இடமாக இருக்கும்; பாம்புக்கும் பயப்பட வேண்டாம்.

சோதி தரிசன நிலையும் அத்தகையதுதான். அதுவரையில் ஏற்றம் உண்டு. அந்த நிலையில் இறக்கம் இல்லை. அது பாதுகாப்பான நிலை. அதை அடைந்துவிட்டால் அடுத்த நிலை நிச்சயமாகக் கிடைத்துவிடும், ஆகவே அந்தப் பெரிய நிலை யைப் பெரிய சேமம் என்று சொல்கிறார் அம்மையார்.

**இது அன்றே என்றனக்கோர் சேமம் !**

இப்போது நினைத்துப் பார்க்கும் போது இன்னும் அந்த இன்ப மயக்கம் தெளியவில்லை. சோதியின் எண்ணம் மறைய வில்லை. கீழே வந்தும் மீண்டும் அந்த அனுபவத்தை எண்ணிப் பார்க்கிறார். சிந்தனையில் சுடருருவம் சுழல்கிறது. இன்னும் சுழன்று கொண்டே இருக்கிறது. மின்னும் சுடருருவாக இன்னும் சுழல்கிறதாம். மீண்டு அந்த அனுபவத்தை எண்ணிப் பார்க்கும் போது அந்தச் சோதி - சுடர் - உள்ளத் திலே சுழன்று இன்ப மயக்கத்தை உண்டாக்குகிறது. "மீண்டும் ஆயும் என் சிந்தனையில் மின்னும் சுடருருவாய் அது இன்னும் இங்குச் சுழல்கின்றது' என்கிறார்.

**—இதுவன்றே**

**மின்னும் சுடர் உருவாய் மீண்டு ஆய்என்**
**சிந்தனைக்கே**
**இன்னும் சுழல்கின்றது இங்கு.**

இப்போது விழிப்பு நிலையில் இருக்கிறார். விமானம் தரைக்கு வந்து விட்டது. ஆனால் விமானத்தில் பறக்கிறது போன்ற உணர்ச்சி இன்னும் மறையவில்லை. இங்கு, இந்த நிலையிலும் அந்தச் சுடர் உருவம் உள்ளே சுழல்கிறது.

இதுஅன்றே ஈசன் திருவுருவம் ஆமாறு:

இது அன்றே என்றனக் கோர் சேமம்—இது அன்றே

மின்னும் சுடர்உருவாய் மீண்டு ஆய்என் சிந்தனைக்கே

இன்னும் சுடர்கின்றது இங்கு.

[இந்தச் சோதி வடிவம் அல்லவா இறைவனுடைய திரு வுருவம் ஆகும் வண்ணம்? இது அல்லவா எனக்கு ஒரு பாது காப்பான இடம்? அனுபவத்தை மீண்டும் எண்ணிப் பார்க் கின்ற என் சிந்தனையில், மின்னுகின்ற சோதி வடிவாகி இன்னும், இந்த விழிப்பு நிலையிலும், சுழன்று கொண் டிருக்கிறது.]

விழிப்பு நிலைக்கு வந்ததும் அந்தச் சோதி தரிசனத்தின் உறைப்பு உள்ளத்துள்ளே இருக்கும் அதிசயத்தை இந்தப் பாட்டில் சொல்கிறார். 'இதுவன்றே என்றனக்கோர் சேமம்' என்பதற்கு, 'இந்தச் சுடர் உருவமல்லவா எனக்குச் சேமிக்கும் பொருள்?' என்றும் பொருள் சொல்லலாம். மனத்துக்குள்ளே பொதிந்து வைத்தலால் 'சேமம்' என்றார். 'மீண்டாய்' என்று இறைவனை நோக்கிச் சொல்வதாகக் கொண்டால், முன்னே, 'ஈசன்' என்று படர்க்கையிலே சொன்னதோடு இயையாது. ஆகவே, 'மீண்டு ஆய்' என்று பிரித்து, 'முன் பெற்ற அனுபவத்தை மீண்டும் எண்ணிப்

பார்க்கும்' என்று சிந்தனைக்கு அடையாகச் சொல்வதே பொருந்தும்.

இறைவனுடைய சோதியுருவக் காட்சி அனுபவநிலைக்கு இட்டுச் செல்வது என்ற உண்மை இதனால் புலனாகிறது.

இது அற்புதத் திருவந்தாதியில் 24-ஆம் பாட்டு.

# 25. எதற்கு?

அன்னைக்கு அவனை நினைத்தால் ஒரு பக்கம் இன்பம் உண்டாகிறது; ஒருபக்கம் துன்பம் எழுகிறது.

சிறிய சிறிய பதவி உடையவர்களெல்லாம் எவ்வளவு ஆடம்பரமாக இருக்கிறார்கள்! எவ்வளவு பெரிய மாளிகையில் வாழ்கிறார்கள்! பிறருடைய தயவாலே பிழைப்பவர்கள் கூட, அதைக் காட்டிக் கொள்ளாமலே, தாமே சுதந்திரமாக வாழ்பவர்களைப் போலல்லவா தோற்றம் அளிக்கிறார்கள்?

அப்படியிருக்க இந்தப் பெருமான் மட்டும் தன்னைக் குறைத்துக் கொள்வானேன்?

அவன் அருள் செய்ததனால் இந்த உலகம் இயங்குகிறது. மக்கள் வாழ்கிறார்கள். வானம் மழையைப் பொழிகிறது. சூரிய சந்திரர்கள் ஒளியை வீசுகிறார்கள். தேவலோகத்தில் பலபல பதவிகளில் இருப்பவர்கள் யாவரும் அவனுடைய அருளாணையால் வளைய வருகிறார்கள். இந்திரன் கற்பகம், காமதேனு, சிந்தாமணி என்ற அரிய பொருள்களை உடையவனாய், இணையில்லாத போகத்தை நுகர்கிறான். இப்படியே எல்லாத் தேவர்களும் வாழ்கிறார்கள். அவ்வளவு பேருக்கும் வாழ்வளிக்கிறவன் எம்பெருமான். எல்லாருக்கும் உணவும் உறையுளும் வழங்குகிறவன் அவன்.

அத்தகையவன், எல்லோருக்கும் எல்லாவற்றையும் வழங்கும் பெருவள்ளல், கையில் ஓடு ஏந்திப் பிச்சைக்குப் போவது என்றால் பொருத்தமாக இருக்கிறதா? பெரிய மனிதர் வீட்டுக்குப் போய் யாருக்கும் தெரியாமல் வாங்கி

ஞலும் குற்றம் இல்லை. எங்கும் போகிறுன்; யாரிடமும் பிச்சை வாங்குகிறுன். இந்த வெட்கக்கேட்டை யாரிடம் சொல்வது?'

அவனை ஈசுவரன் என்று பெரியவர்கள் சொல்கிறுர்கள். அவனிடம் இல்லாத ஐசுவரியம் ஏதும் இல்லை. ஐசுவரியம் என்பதே ஈசுவரன் என்றதிலிருந்து வந்தது தானே? "சென்று அடையாத திருவுடையவன்" அவன். அவனிடம் உள்ள செல்வம் குறையாது; கூடாது. அது பூரணமானது. அப்படி இருந்தும் இப்படிப் பிச்சை எடுக்கலாமா?

அவன் தன் தகுதியை எண்ணுகிறுஞ? நாம் அவனுடைய பெருமையை எண்ணிக் கவலைப்படுகிறேம்; 'தன் கௌரவத்துக்கு ஏற்றபடி நடந்துகொள்ளவில்லையே!' என்று அங்கலாய்க்கிறேம். அவனே எதையும் எண்ணுவதில்லை. மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதையும் எண்ணுவதில்லை. எண்ணுதே எங்கும் பலி எடுக்கிறுன்.

தாருகாவனத்து மங்கையர்முன் போய்ப் பிச்சை கேட்டான். திகம்பரனுகச் சென்று பிச்சை கேட்டான். திருமாலின் முன் பிச்சை ஓட்டை நீட்டினுன். கையில் கபாலத்தை வைத்துக் கொண்டு பிச்சை கேட்டான். கபாலி என்று வேறு பேர் பெற்று விட்டான் அவன் எப்படி எங்கே பிச்சைக்குப் போகிறுன் என்ற வரையறை உண்டா? எத்தனையோ விதங்களில் அவன் கோலம் கொண்டு ஊரூர்தோறும் பலிக்கு உழலுகிறுன்.

பகலெல்லாம் பிச்சை வாங்குகிறுன், இராத்திரியிலே அவனுக்கு ஒரே களியாட்டம்; நடனமாடுகிறுன். வீதியிலே பிச்சை எடுப்பது கிடக்கட்டும் இரவிலே நடனமாடுகிறுனே, அதற்கு அரங்கமா இல்லை? அவன் எங்கே ஆடுகிறுன் தெரியுமா? சுடுகாட்டில், நள்ளிரவில் ஆடுகிறுன். அந்த ஆட்டத்தைக் கண்டு ரசிப்பவர்கள் ஆர் தெரியுமா? சொன்னுல் வெட்கக் கேடு. பேய்கள்தாம் அவனுடைய ரசிகர்கள். அவனைப் பித்தனென்றும் பேயனென்றும் சொல்வது எவ்வளவு சரி என்று இப்போது தெரிகிறது.

"இப்படிப் பகலிலே ஊர்தோறும் திரிந்து பிச்சை எடுப்பதும், இரவிலே ஈமவனத்தில் ஆடுவதும் ஏன் ஐயா? உமக்கு என்ன தலை எழுத்தா?" என்று யாராவது அவனைக் கேட்கிறார்களா? வேண்டியவர்கள் கேட்க அஞ்சி நடுங்குகிறார்கள். வேண்டாதவர்கள், "இப்படியே அலையட்டும்; நாம் அவனைப் பரிகசித்துக் கொண்டே இருப்போம்" என்று இருக்கிறார்கள். நாமே சும்மா கிடந்து புலம்புகிறோம். அவனுக்கு இப்படி எல்லாம் ஏன் புத்தி போகிறதென்று சொல்லிச் சொல்லி வருந்துகிறோம்.

'அவனைப் பற்றி இங்கே இருந்து நாம் என்ன புலம்பினால் தான் என்ன? மற்றவர்கள் தடுக்க மாட்டார்களா என்று சொல்லித்தான் என்ன பயன்? நாமே கேட்டால் என்ன? ஆம், அதுதான் சரி. இங்கே அவன் இல்லாத போது எத்தனை சொன்னாலும் யார் கேட்கப் போகிறார்கள்? அவனைக் காணும் போது நேரே வைத்து, "ஏன் ஐயா, இபபடியெல்லாம் செய்கிறாய்? இந்தப் பிச்சைக்காரக் கோலம் எதறகு? இந்தப்பேய் நடனம் எதற்கு?' என்று கேட்டு விடுவோம்.

இப்படியெல்லாம் தாயன்பினாலே காரைக்கால் அம்மையார் எண்ணுகிறார். அந்த எண்ணம் பாடலாக உருவெடுக்கிறது.

**இங்கிருந்து சொல்லுவதுஎன்? எம்பெருமான் எண்ணாதே,**
**எங்கும் பலிதிரியும் எத்திறமும், — பொங்கு இரவில்**
**ஈமவனத்து ஆடுவதும்என்றுக்கு? என்று ஆராய்வோம்,**
**நாம் அவனைக் காணலுற்ற ஞான்று.**

(இங்கே அவனைக் காணாமல் இருந்துகொண்டு அவனைப் பற்றிக் குறை கூறுவது ஏன்? நாம் அவனை நேரிலே காணும் அன்று, "எம்பெருமானே, உன்னுடைய பெருமையையும்

மற்றவர்கள் கூறும் பழியையும் எண்ணாமல், எவ்விடத்திலும் பிச்சைக்காகத் திரிகின்ற இந்தக் கோலமும், மிக்க இரவில் சுடுகாட்டில் ஆடுவதும் எதற்காக?" என்று கேட்போம்.

எத்திறமும் - எந்தக் கோலமும்; எந்த வகையும். பொங்கு - மிக்க. ஈமவனம் - ஈமமாகிய சுடுகாடு; என்னுக்கு - எதற்காக. ஆராய்வோம்-கேட்போம். ஞான்று- நாள், சமயம்.)

இது அற்புதத் திருவந்தாதியில் 25-ஆவது பாட்டு.

# 26. தொங்கும் பொருள்கள்

சிவபெருமானுடைய திருமேனி செவ்வண்ணமாக இருக்கும். "பவளம் போல் மேனி" என்று அப்பர் சுவாமிகள் பாடுவார். அதுவே செம்பொன்மயமாகச் சோதி விட்டு விளங்கும். "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்று பொன்வண்ணத்தந்தாதி கூறும்.

இறைவனுடைய திருமேனி பொன் போன்றதுதான். பொன்னை விரும்பாதவர் யார்? அவனுடைய பளபளப்பான திருமேனியின் பேரழகைக் கண்டு தாருகாவனத்து முனிபுங்கவர்களின் மனைவியரே மயங்கினர். அழகருக்கெல்லாம் அழகனைக் காட்சி கொடுக்கிறவன் அவன், "சிவம் ஸுந்தரம்" என்று பேசுகிறது, மறை. "கண்ட கண்கொண்டு பின்னைக் காண்ப தென்னே?" என்று நாவுக்கரசர் மயங்கிப் போவார்.

உள்ளத்திலே தூய்மையை உண்டாக்கி மனோலயம் உண்டாகும்படி செய்யும் சாந்தமான பேரழகு படைத்தவன் சிவபெருமான். அதனால் மதுரையில் எழுந்தருளும் அவனுக்குச் சுந்தரேசன், சொக்கநாதன் என்ற திருநாமங்கள் உண்டாயின. "புக்கு வந்தார் தம்மேற் பொடிபோட்டுள மயக்கின், சொக்கலிங்கம் என்றெவரும் சொல்லாரோ?" என்பது தமிழ்விடுதூது.

இத்தகைய திருமேனியைக் கூர்ந்து பார்த்தால் சற்றே அச்சம் உண்டாகிறது, அழகைக் கண்டு மனம் மயங்கும், அந்தக் கவர்ச்சிக்குத் தடையாக எம்பெருமானிடம் சில உறுப்புக்களும் பொருள்களும் இருக்கின்றன. அவனை

அணுகிப் பார்த்தால் செம்பொன் மலை போலுள்ள திருமேனி யில் சில தொங்கும் பொருள்களைக் காணலாம்;

அவன் அழகன்; ஆனால் துறவியைப் போலச் சடைகளைப் பூண்டிருக்கிறான். அவன் கழுத்தைப் பார்த்தால் ஒரு கறை. திருமார்பைப் பார்த்தால் எலும்பு மாலையும் பாம்பும் தொங்குவதைக் காணலாம். அழகைக் கண்டு களிக்கலாம் என்று போனால் அச்சம் தரும் இந்தப் பொருள்கள் அந்த மகிழ்ச்சியைத் தடுக்கின்றன.

ஆனால் புற அழகை மட்டும் பாராமல் தத்துவத்தையும் அக அழகையும் பார்க்கும் நுண்ணறிவை உடையவர்களுக்கு அவற்றைப் பார்த்தால் அச்சம் உண்டாகாது, மேலும் அப் பெருமானுடைய பெருமையே தெளிவாகும்.

அவனுடைய பொன்மேனியில் மேற்பகுதியில் தலையிலிருந்து சடைகள் தொங்குகின்றன. அவற்றைப் பார்த்தால் பொன் மலையின்மேல் மின்னல் தவழ்வதைப் போலே தோற்றும். அந்தச் சடைகளும் செந்நிறம் பெற்றவையே; 'அழகிய மணவாளனாகத் தோன்றும் இவன் ஏன் இப்படித் துறவியைப் போலச் சடையைத் தரித்திருக்கிறான்?' என்று புறக் கண் கொண்டு நோக்குபவர்களுக்குத் தோன்றும். உண்மையில் அவன் ஞான சொரூபி; சதா யோகியாக இருப்பவன். மங்கை யோடு இருந்தாலும் யோகியாக விளங்குபவன். "மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை" என்பது திருமுறை. அவன் இல்லறத்தார் வழிபடும் மங்கலப் பொருளாக விளங்குபவன்; அதே சமயத்தில் பற்றற்று நிற்கும் துறவியருக்கு ஞானவடி வினனாய்த் தோற்றமளிப்பவன். அவனுடைய சடைகள் இந்தக் கருத்தையே புலப்படுத்துகின்றன.

காரைக்காலம்மையார் இறைவன் பொன் திருமேனியில் காணும் பொருள்களைச் சொல்ல வருகிறார். முதலில் சடை களைச் சொல்கிறார்.

**ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன போன்ற.**

[தொங்கும் கேசத்திலுள்ள சடைகள் பொன்மலையின் மேல் மின்னும் மின்னல்களைப்போல உள்ளன. குழற்சடைகள் —குழலிலுள்ள சடைகள். பொன்வரை—பொன்மலை; மேரு, பொன்வரை மின்னுவன—மின்னுகின்ற மின்னல்கள்; வினையாலணையும் பெயர். பொன்வரை மேல் மின்னுவன என்ற பாடம் இருந்தால் சிறப்பாக இருக்கும். ஏட்டுச் சுவடியைப் பார்த்து ஆராய வேண்டிய இடம் இது.]

அவன் நீலகண்டப் பெருமான்; கறுப்பான கழுத்தை யுடையவன். பொன்மேனியிலே அது சிறிதே மாறுபாடாகத் தோற்றினாலும் உண்மையை உணர்வாருக்கு அது அழகாகவே இருக்கும்.

"கறைமிடறு அணியலும் அணிந்தன்று"

என்ற புறநானூற்றில் வருகிறது. அந்தக் கறைமிடறு அழகாக இருக்கிறதாம். இறைவன் நஞ்சை உண்டு கண்டம் கறுத்தத ஞல்தான் தேவர்கள் பிழைத்தனர். தேவமகளிர் மங்கல முடையவரானார்கள். காரைக்கால் அம்மையார் இந்த நீல கண்டத்தை அடிக்கடி எடுத்துக் கூறுவார்.

**கறைமிடற்றான்.**

[நஞ்சினால் கறுப்பைப் பெற்ற திருக்கழுத்தை உடையவன்.]

அடுத்தபடி அவன் மார்பைக் காட்டுகிறார். அது பொன் மார்புதான். ஆனால் அங்கே தொங்குவன எவை? வண்ணத் தால் அழகு பெற்ற மலர்மாலைகளா? இல்லை, இல்லை. ஒன்றிரண்டு மலர்மாலைகள் இருந்தாலும் அவற்றையெல்லாம் மறைத்துக்கொண்டு மிகுதியாக விளங்குபவை எலும்பு மாலை

கள்; அவற்றுக்கு அருகில் பாம்புகள் புரண்டு புரண்டு விளங்கும்.

**கறைமிடற்றான் பொன்மார்பின்—ஞான்றுஎங்கும்**
**மிக்குஅயலே தோன்ற விளங்கி மிளிருமே**
**அக்குஅயலே வைத்த அரவு.**

[நீலகண்டப் பெருமானுடைய பொன்னிறம் பெற்ற திருமார்பில் எங்கே பார்த்தாலும் தொங்கியபடியே மிகுதியாகத் தோற்றப் பொலிவு தரும்படி அருகருகே என்புமாலையும் அவற்றுக்கு அருகே அணிகலனாகப் பூண்ட பாம்புகளும் விளங்கிப் புரண்டு தோன்றும். ஞான்று—தொங்கி, மிளிரும்—புரண்டு தோன்றும்; விட்டு விளங்கும். அக்கும் அவற்றின் அயலே பூணாக வைத்த அரவும் என்று பொருள் கொள்க. உம்மைகள் தொக்கன. அக்கும் அவற்றின் அயலே வைத்த அரவும் பொன்மார்பில் எங்கும் ஞான்று மிக்கு அயலே தோன்ற விளங்கி மிளிரும் என்று கூட்டுக.]

தேவருடைய என்புகளையே இறைவன் மாலைகளாக அணிந்துள்ளான். அவை மற்றத் தேவர்களின் பதவிகள் நிலையாதன என்பதைக் காட்டும் அடையாளங்களாக நிலவுகின்றன.

தாருகாவனத்து முனிவர்கள் யாகம் செய்து அவற்றிலிருந்து தோன்றிய பாம்புகளை இறைவனைக் கொல்லும்படி அனுப்பினார்கள். இறைவனுக்கு அவற்றால் எந்தத் துன்பமும் உண்டாகவில்லை. மிகக் கொடிய நஞ்சாகிய ஆலகாலத்தையே அவன் உண்டு கழுத்தில் வைத்தவனாயிற்றே! அந்த ஆலகால நஞ்சை உண்டு சீரணிக்காமல் அதற்கே சிரஞ்சீவித்தன்மை கொடுத்தது போலக் கண்டத்தில் வாழ வைத்தான். பாம்புகளையும் கொல்லாமல் அவற்றையே அணிகலனாகப் பூண்டு கொண்டான். இறைவனைச் சார்ந்ததனால் அவை அச்சந்தரும் நிலையினின்றும் நீங்கி, அணிகலனாக அழகு தரும் பொருளாகி

விட்டன. பொல்லாத பிள்ளைகளைத் திருத்தி நல்ல பிள்ளைகளாக்கி அணைப்பது போன்ற அருமையான அருட்செயல் இது. இறைவனை அடைந்தால் பொல்லாதவர்களையும் நல்லவர்களாக்கி ஏற்றுக்கொள்ளும் பெருங்கருணைப்பிரான் இறைவன் என்பதை அந்தப் பாம்புகள் புலப்படுத்திக் கொண்டு விளங்குகின்றன. 'தோன்ற விளங்கி மிளிருமே' என்று பல சொற்களாலே அவற்றின் விளக்கத்தைச் சொன்னதற்குக் காரணம், இறைவனுடைய கருணையை விளக்கும் அடையாளமாக அவை இருப்பதுதான்.

**ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன**
**போன்ற: கறைமிடற்றான் பொன்மார்பில்—ஞான்றுஎங்கும்**
**மிக்குஅயலே தோன்ற விளங்கி மிளிருமே,**
**அக்குஅயலே வைத்த அரவு.**

*அற்புதத் திருவந்தாதியில் 26-ஆம் பாட்டு இது.*

# 27. பாம்பை அணையாதே!

காரைக்கால் அம்மையாருடைய உள்ளத்தில் தாய் அன்பு சுரக்கிறது. இறைவன் அவரை, "அம்மையே!" என்று அழைத்தான். "இவர் நம்மைப் பேணும் அன்னை" என்று உமாதேவியாரிடம் சென்ருன். அவரிடம் அன்னைக்குரிய பண்பு இருப்பதனுல்தான் அப்படிச் சென்ருன்.

ஒரு குழந்தை கண்டதைத் தின்ருல் அதன் தாய் தடுப்பாள்; "உன்உடம்புக்கு ஆகாது" என்று கூறுவாள். கத்தியை எடுத்தால், "எடுக்காதே; கையில் காயம் பட்டுக் கொள்வாய்" என்று எச்சரிப்பாள்; அதை அவன் கையிலிருந்து வாங்கிவிட முயல்வாள்.

இத்தகைய மனேபாவத்தோடு அம்மையார் பேசுகிருர். வாத்ஸல்ய பாவத்தோடு, குழந்தையிடம் தாய்க்கு உள்ள தூய அன்போடு பேசுகிருர்.

சிவபெருமான் தன் திருமேனியில் அரவங்களையே அணிகலனுகப் பூண்டிருக்கிருன். அவை அவனை ஒன்றும் செய்யா; ஆனுல் தாயுள்ளத்துக்கு அவற்றைக் கண்டால் பயமாக இருக்கிறது.

பட்டாஸைக் கையில் வைத்துப் பொருத்தி எறியும் குழந்தையைக் கண்டு கலவரப்பட்டு, "போட்டு விடடா! போட்டுவிடடா!" என்று அலறும் தாய்மார்களை நாம் கண்டிருக்கிருேம். அந்தப் பையன் சிறிதும் அச்சமின்றி அதைப் பிடித்திருப்பான். அவன் சிறிதும் கலவரம் அடைவதில்லை. ஆனுல் தாய்க்கோ நெஞ்சு படக்குப் படக்கு என்று அடித்துக் கொள்ளும். உண்மையில் பையனுக்கு ஒன்றும்

நேராது. அவனுக்குத் தெரியும், எந்த நேரத்தில் அதை எறிய வேண்டுமென்று. ஆனல் தாய் அதையெல்லாம் எண்ண மாட்டாள். பட்டாஸ் கையிலே வெடித்து விட்டால் கையில் தீப்புண் உண்டாகிவிடுமே என்று அவள் அஞ்சி நடுங்குவாள்.

அந்த நிலையில் நின்று பேசுகிருர் காரைக்காலம்மையார், ''எம்பெருமானே, இந்தப் பாம்பை நீ பூணக்கூடாது. இதை விட்டுத்தள்ளு. உனக்கு வேறு ஆரமா கிடைக்காது? நல்ல பொன்னுரங்கள் இருக்கின்றனவே! அவற்றில் ஒன்றை அணிந்து கொள்'' என்கிருர். அரவைக் கண்டு அஞ்சி முன்பும் இவர் பாடியிருக்கிருர்.

**தகவுடையார் தாம்உளரேல் தார்அகலம் சாரப்**
**புகவிடுதல் பொல்லாது கண்டீர்; - மிக அடா**
**ஊர்ந்திடுமா நாகம் ஒருநாள் மலைமகளைச்**
**சார்ந்திடுமேல் ஏபாவந் தான்.**

என்று 13ஆம் பாட்டில் சொன்னுர். 22ஆம் பாட்டில், 'வாளரவு பிறையை விழுங்கிவிடும். அதன் சிந்தையைத் தெரிந்து கொள்ள வேண்டும்' என்று எச்சரித்தார். இப்படிச் சொல்லி யும் அவன் அந்த நாகாபரணத்தை விடவில்லை. 'பல நாள் உன்னைப் புகழ்ந்து வணங்கி, இந்த நாகப் பாம்பு வேண்டாம் என்று சொன்னேனே! அது உன் காதில் ஏறவில்லையா? முதலில் ஊராரைப் பார்த்துச் சொன்னேன். யாராவது அதைக் கேட்டு உன்னைத் தடுப்பார்கள் என்று எண்ணினேன். யாரும் ஏதும் செய்யவில்லை. பிறகு உன்னைப் பார்த்தே சொன்னேன் உனக்கு ஆபத்து வருமென்று சொல்ல வேண் டாமென்று, நயமாக, உன் தலையில் அணிந்த பிறைக்கு ஆபத்து வரும் என்று சொன்னேன். குறிப்பை அறிந்து நீக்கிவிடுவாய் என்று எண்ணினேன். நீயோ விட்டபாடில்லை. பலகால் சொல்லியும், பலநாள் சொல்லியும், கெஞ்சிக் கேட்டு இது வேண்டாம் என்று சொல்லியும் நீ கவனிக்க

வில்லை. மறுபடியும், சொல்கிறேன்.' இவ்வாறு கருத்து அமைய அம்மையார் சொல்கிறார்

"நீ ஒரு பாம்பைக்கூட உன் திருமேனியிலே பூணாதே!" என்று தொடங்குகிறார்.

**அரவம் ஒன்று ஆகத்து நீ நயந்து பூணேல்.**

[ஒன்றும் என்பதில் உள்ள உம்மை தொக்கது.]

"நீ நயந்து பூணுகிறாய்; நான் பயந்து நடுங்குகிறேன். நான் மட்டுமா சொல்கிறேன்? என்னோடு உள்ள அடியார்களும் சேர்ந்து சொல்கிறார்கள். தொழுது இரந்து பரவிப் பல நாள் சொன்னோம்."

**பரவித் தொழுது இரந்தேம் பன்னாள்.**

'உன்னுடைய பராக்கிரமத்தை நான் நன்கு அறிவேன். பொல்லாத அசுரர்கள் மூன்று புரங்களுக்கு அதிபதியாக இருந்து அந்தப் பறக்கும் கோட்டைகளால் உலகுக்குத் தீங்கு விளைத்தார்கள். அந்த மூன்று புரங்களாலும் மக்களுக்குத் தீங்கு விளையுமே என்று உணர்ந்து அவற்றை அழித்தாய். பிறருக்கு வரும் தீங்குகளை மாற்றத் தெரிந்த உனக்கு உனக்கே வந்திருக்கும் தீங்கை உணர முடியவில்லையே! உனக்காகத் தெரியாவிட்டாலும் நாங்கள் எடுத்துச் சொல்லியும் தெரியவில்லையே! பல நாள் எடுத்துச் சொல்லுகிறோம். இனிமேல் இந்த அணிகலம் வேண்டாம்.'

**முரண் அழிய**
**ஒன்னாதார் மூவெயிலும் ஓரம்பால் எய்தானே!**

[முரண்-வலிமை. ஒன்னாதார்-பகைவர்கள் மூ எயில்-திரிபுரங்கள்; எயில்-மதில்.]

இறைவன் திரிபுரங்களைச் சிரித்து எரித்தானென்றும், விழித்து எரித்தானென்றும், அம்பெய்து அழித்தான் என்றும் வெவ்வேறு வகையாகச் சொல்வதுண்டு. தேவாரப் பாசுரங்களில் இந்த மூன்று வகையையும் பார்க்கலாம். இவற்றைக் கற்ப பேதங்களில் நிகழ்ந்தவை என்பார்கள். அதாவது ஒவ்வொரு கற்பத்திலும் இறைவன் இத்தகைய திருவிளையாடல்களை மீட்டும் மீட்டும் செய்தருளுகிறான். அப்போது சில சிறிய வேறுபாடுகள் அமையும். அப்படி அமைந்த வேறுபாடுகள் இவை.

'எனக்கு அணிகலன்களாக உள்ளவை அந்தப் பாம்புகள் அணிகலன்கள் இல்லாமல் வெற்றுடம்பாக இருந்தால் நன்றாயிராதே?' என்ற கேள்வியை இறைவன் எழுப்பலாம். அம்மையார் அதை எதிர்பார்த்து யோசனை சொல்கிறார். 'எத்தனையோ வகையான ஆரங்கள் இருக்கின்றன. முத்தாரம், மணியாரம், பொன்னாரம் என்று பல வகை உண்டு. நீ விரும்பினால் உனக்குக் கிடைக்காதா? பொன்னாரம் ஒன்றை நீ அணிந்து கொள்வாயாக?' என்கிறார்.

**பொன்னாரம் மற்றொன்று பூண்.**

[ஆரம்-மாலை. மற்றொன்று-இந்த நாகம் அல்லாத ஒன்றை.]

தாயன்பினால் வாத்ஸல்ய ரஸம் தோன்றக் காரைக்காலம்மையார் இந்தப் பாட்டைப் பாடுகிறார்.

**அரவம் ஒன்று ஆகத்து நீயந்து பூணேல்,**
**பரவித் தொழுதிரந்தேம் பன்னாள்;—முரண் அழிய**
**ஒன்னாதார் மூஎயிலும் ஓர்அம்பால் எய்தானே;**
**பொன்னாரம் மற்றொன்று பூண்.**

[மூன்று அசுரர்களாகிய பகைவர்களுடைய வலிமையும் அழியும்படி அப்பகைவர்களுடைய மூன்று மதில்களாகிய

திரிபுரங்களையும் ஓர் அம்பால் எய்தவனே, உன் திருமேனியில் ஒரு பாம்பையும் நீ விரும்பி அணிந்து கொள்ளாதே; வேறு ஒரு பொன்னாரத்தைப் பூண்பாயாக.]

இரும்பு, வெள்ளி, பொன் என்னும் மூன்று உலோகங்களாகிய மதிலைப்பெற்ற மூன்று பறக்கும் கோட்டைகளுக்குத் தலைவராக வித்யுன்மாலி, தாரகாட்சன், வாணன் என்ற மூன்று அசுரர்கள் இருந்தார்கள். அவர்கள் தம் கோட்டைகளைத் திடீரென்று எங்கேனும் இறக்குவார்கள். அவற்றின் கீழ் மக்கள் அகப்பட்டு இறந்து போவார்கள். தேவர்கள் முறையிட ஆண்டவன் அந்த முப்புரங்களை மட்டும் அழித்தான். அசுரர் மூவரும் அடிபணிய, இருவரைத் தம் வாயில் காவலராகவும், வாணனை முழவு வாசிப்பவனாகவும் இருக்கும்படி அருளினான் ஆண்டவன். இது புராண வரலாறு.

மேலே சொன்னது அற்புதத் திருவந்தாதியில் உள்ள 27-ஆம் பாடல்.

# 28. எங்கும் பாம்பு

"பாம்பை நீ பூண வேண்டாம்; வேறு ஏதேனும் பொன் னாரத்தைப் பூண்பாயாக!" என்று தாயன்பினால் இறைவனைப் பார்த்துப் பேசிய காரைக்கால் அம்மையார், இப்போது எம்பெருமானைக் கூர்ந்து நோக்குகிறார். ஆரம் மட்டுமா பாம்பு? இறைவனுடைய திருமேனியில் எங்கே பார்த்தாலும் பாம்பு. எத்தனை வகையாகப் பாம்புகளை அவன் பயன்படுத்தி யிருக்கிறான்! பார்க்கிதவர்களுக்கே குலை நடுங்குகிறது. எப்படி இவற்றை அணிந்து கொண்டிருக்கிறான்? ஏதாவது ஆபத்து நேர்ந்து விட்டால்? ஐயோ! அதை நினைக்கவே பயமாக இருக் கிறதே! அவனுக்கு உண்டாகும் ஆபத்துக் கிடக்கட்டும். அவனிடம அன்பு வைத்து அவனுடைய திருவருளுக்காக ஏங்கி நிற்கும் பக்தர்கள் காணச் சகிப்பார்களா? அவர்கள் கற்பனையில் கூட ஆபத்தை எண்ண மாட்டார்கள். ஆனால், இதோ கண்கூடாக அவன் நஞ்சு மிகுந்த பாம்புகளையல்லவா அணிந்திருக்கிறான்?

'இதைப் பார்த்த எனக்கே மனம் தடுமாறுகிறதே! எதற் காக இவர் இப்படியெல்லாம் பாம்பை அணிந்திருக்கிறார்? எனக்கு இதைப் பார்க்கிறபோது ஏதோ ஒரு விதமாக வருகிறதே; எனக்கு என்ன நிலை உண்டாக வேண்டும் என்று உளம் கொண்டு இவர் இவற்றை அணிந்திருக்கிறார்? ஐயோ! இதைக் கண்ட எனக்கு என்ன ஆகுமோ, தெரியவில்லையே!' என்று உணர்ச்சி வசப்பட்டு அங்கலாய்க்கிறார் காரைக்கால் அம்மையார்.

இறைவன் பாம்பை எப்படியெல்லாம் பூண்டிருக்கிறான்? ஒரு பாம்பை மார்பில் பூணாகப் புனைந்திருக்கிறான். முதலில் நம்

கண்ணுக்கு பளிச்சென்று அது படுகிறது, கழுத்தைச் சுற்றிக் கொண்டு மார்பிலே மாலை புரளுவது போல புரண்டு கொண்டிருக்கிறது அந்தப் பொல்லாத பாம்பு.

**பூணாக ஒன்று புனைந்து.**

அது மட்டுமா? சற்றே கண்ணைத் தாழ்த்திப் பார்த்தால் அவன் இடையிலே ஒரு நாகம் தெரிகிறது. அவன் தன் இடையிலே புலித்தோலை உடுத்தியிருக்கிறான். ஆடுகின்ற அழகனாகிய அவன் அந்த உடை நழுவாமல் அதன் மேல் கச்சை கட்டியிருக்கிறான் அந்த புலித்தோலை இறுகப் பிணித்து நழுவாமல் செய்யும் கயிற்றைப் போலே ஒரு நாகப்பாம்பை கட்டியிருக்கிறான். சில செல்வர்கள் ஆடையின்மேல் தங்கஅரைஞாணைப் பூட்டியிருப்பார்கள். இந்தச் செல்வன் மாணிக்கத்தை உடைய அரைஞாணென்றோ என்னவோ, பாம்பைக் கட்டியிருக்கிறான்-

**ஒன்று பொங்கு அதனின்**

**நாணாக மேல்மிளிர நன்கு அமைத்து**

இந்த அரைஞாணாகிய பாம்பு பளபளக்கிறது. அதை நன்றாக இறுக்கிக் கட்டிக் கொண்டிருக்கிறான்.

இந்த இரண்டும் போதா என்று பின்னும் ஒன்றைப் புனைந்திருக்கிறான். இடையிலே பாம்பு; மார்பிலே பாம்பு; தலைமேலும் பாம்பு! அவன் தன்னுடைய சடை முடியின் மேலும் பாம்பை அணிந்திருக்கிறான். அந்த முடி பொன் போலப் பளபளக்கிறது. சடையையே பொன்முடி போல வைத்திருக்கிறான். அந்த அழகிய முடிமேலே இந்த கொலைகாரப் பாம்பையல்லவா சூடிக் கொண்டிருக்கிறான்? கீழே, இடையே, மேலே எங்கும் பாம்பு; எல்லாப் பாம்புகளும் கொலை புரியும் நாகங்கள்; கொடிய நஞ்சையுடைய பாம்புகள்.

கோள்நாகம்
பொன்முடிமேல் சூடுவதும்.

இந்தக் கோலத்தைக் காணும்போது அம்மையாருக்குப் பகீர் என்கிறது. 'இவ்வளவு பெரிய பெருமான் இவற்றை யெல்லாம் ஏன் பூணுகிருர்? என் அறிவுக்கு ஒன்றும் புலப்பட வில்லையே! இன்னும் இதைப் பார்த்துக்கொண்டே இருந்தால் எனக்கு என்ன ஆகுமோ, தெரியாது. எதற்காக இப்படி யெல்லாம் செய்கிருர்?' என்று புலம்புகிருர் காரைக்கால் அம்மையார்.

எல்லாம் பொறியிலியேற்கு
என்முடிவ தாக?

தாருகாவனத்து முனிவர்கள் இறைவன் மேற் கோபம் கொண்டு யாகஞ் செய்து பலவற்றை வருவித்து அவனை அழித்து வரும்படி விட்டார்கள். புலி ஒன்றை உண்டாக்கிச் சிவனைக் கொன்று வா என்று அனுப்பிஞர்கள். இறைவன் அதனை அழித்து அதன் தோலை ஆடையாக அணிந்துகொண் டான். ஆணவமுடையவர்களின் முயற்சிகள் பயன்படா என்பதை உலகுக்குக் காட்டுவதற்காக அந்தத் தோலை இடையில் உடுத்துக் கொண்டான். பிறகு பாம்புகளை விட்டார்கள் அவை மிகவும் கொடிய நஞ்சையுடையவை. அவற்றை இறைவன் கொல்லவில்லை. எல்லாவற்றையும் பற்றி, அணி கலன்களைப் போல அணிந்து கொண்டான். பிறருக்குத் துன்பம் தருகிற பாம்புகள் இறைவனுக்கு ஆபரணங் களாயின. அவனுடைய கருணை, பாம்புகளையும் நல்லவை களாக ஆக்கிவிட்டது.

அந்தப் பாம்புகளைக் கண்டு அஞ்சிப் பேசுவது போல அம்மையார் பாடுகிருர். அவற்ருல் இறைவனுக்கு ஒரு தீங்கும் நேராது என்பதை அறிந்தவர் அம்மையார். என்ருலும் ஒரு கணம் அஞ்சுபவரைப் போல இருக்கிருர்.

அப்போது இந்தப் பாடலைப் பாடுகிறார். பக்தி விசித்திரங்களில் ஒன்று இது. தாயன்புக்கு இப்படியெல்லாம் தோன்றும். அன்பு அதிகமாகி விட்டால் அறிவு சற்றே ஒளிந்து கொள்ளும்.

'அறிவு இல்லாமல் இறைவனுக்கு ஆபத்து வந்து விடுமே என்று அஞ்சலாமா?' என்று கேட்கலாம். அன்பும் உணர்ச்சியும் மீதூரும் போது ஆராய்ந்து பார்க்கும் அறிவு தலைப்படாது இத்தகைய இடங்களில் நாம், அறிவின்மை வெளிப்பட்டதாக எண்ணக் கூடாது. அன்பின் விசித்திரம் இது என்று எண்ணிப் பார்க்க வேண்டும். 'ஆனையைக் கெடுத்தவன் பானையிலும் தேடுவான்' என்பது ஒரு பழமொழி. ஆனை பானைக்குள் நுழையாது என்பதை அவன் அறிந்தவன் தான்: என்றாலும் ஆனையை இழந்த துயரம் அறிவை மறைத்து விடுகிறது. பக்தி உணர்ச்சியிலும் இப்படிப் பல நிலைகள் உண்டு. அங்கெல்லாம் பக்தியின் அற்புத நிலைகளைப் பார்த்து நாம் வியக்க வேண்டும். அப்படி வியக்கும் பாடல்களில் ஒன்று இது.

பூணாக ஒன்று புனைந்து ஒன்று பொங்கு அதனின்
நாணாக மேல்மிளிர நன்கு அமைத்துக்—கோள் நாகம்
பொன்முடிமேல் சூடுவதும் எல்லாம் பொறியிலியேற்கு
என்முடிவ தாக இவர்?

இதன் பொருள் : [இதய-இறைவராகிய இவர், கோள் நாகம் ஒன்று-கொலை புரிவதாகிய நாகப் பாம்பு ஒன்றை. பூணாகப் புனைந்து-மார்பில் ஆபரணமாக அணிந்து, ஒன்று பொங்கு அதனின் நாணாக-மற்றொரு பாம்பை, சிறந்து தோன்றும் புலித் தோலாடையை இறுகக் கட்டும் அரை நாணாக. மேல் மிளிர-மேலே விளங்கும்படி, நன்கு அமைத்து-நன்றாகச் செறித்துக் கொண்டு, (மற்றொரு பாம்பை) பொன் முடிமேல் - அழகிய திருமுடியின்மேல், சூடுவதும் எல்லாம் —அணிந்திருப்பதும் ஆகிய இந்தச் செயல் எல்லாம். பொறி

இலியேற்கு-அறிவில்லாத எனக்கு, என் முடிவது ஆக-என்ன முடிவு உண்டாவதற்காக?]

இவற்றைக் கண்ட எனக்கு என்ன ஆபத்து வரப்போ கிறதோ தெரியவில்லை என்று கவலையுறுகிருர். கண்ட எனக்கே இப்படியாஞல், பூணகக் கொண்ட இவருக்கு என்ன ஆகும் என்பது குறிப்பு.

கோணகம் என்பதை முன்னும் கூட்டிப் பொருள் செய்க. இங்கே இடைநிலை விளக்காக நின்றது. கோள் நாகம் ஒன்று புனைந்து, கோள்நாகம் ஒன்று நன்கமைத்து. கோள் நாகம் சூடுவது என்று கூட்டுக. ஒன்று என்பதை வருவித்துச் சூடு வதற்கும் சேர்த்துப் பொருள் செய்க.

அதன்-தோல்; இங்கே புலித் தோல். நாண்-ஆடை நழுவாமற் கட்டும் அரை ஞாண். கோள்-கொலை. பொறி-அறிவு; நல்வ தலையெழுத்து என்றும் பொருள் கொள்ளலாம். இத்தகைய அவலக் காட்சியைக் காணும் தீயூழ் வந்ததே என்று துயடுறுவதாகக் கொள்ள வேண்டும்.

அறிவு என்று பொருள் கொண்டால், 'இந்தப்பெருமான் இப்படிச் செய்வதற்குரிய காரணமும் கருத்தும் அறியாத அறிவிலி' என்ற குறிப்புப் பெறப்படும். என் முடிவது ஆக-என்ன துன்ப அநுபவத்தில் முடியப் போகிறதோ என்றபடி.

இவர் என்பதை முதலில் கூட்டி, இவர் புனைந்து என்றும், இவ்வாறே பிற வினைகளோடும் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.

இது அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதியில் 28-ஆம் பாட்டு.

# 29. பேய்க் கோலம்

இறைவனுடைய திருக் கோலம் கண்டு எள்ளி நகையாடுவார் இருக்கின்றனர். அவர்கள் அவனிடம் அன்பில்லாத அயலார்; அவனுடைய பெருமையை அறியாதவர்கள்.

இறைவனுடைய திருமேனியில் உள்ள பொருள்கள் யாவும் சில கருத்துக்களைப் புலப்படுத்துகின்றன. அவை சில உண்மைகளை உள்ளடக்கிய அடையாளங்கள், அவன் செய்த திருவிளையாடல்களும் சில உண்மைகளைப் புலப்படுத்துபவை.

"குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நீர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
பொறிய வீர்உமக்கு என்கொல் புகாததே!"

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். அவனுடைய திருவுருவம் முதலியன சிலவற்றின் அடையாளங்கள். அந்த நுட்பத்தை அறியாமல் கோலத்தைப் புறக்கண்ணால் கண்டு குறை கூறுவோர் இறைவனுடைய அன்பர் கூட்டத்திற் சேரத் தக்கவர் அல்லர்: அவர்கள் புறம்பானவர்கள்: பிறர்.

இறைவன் திருக்கோலத்தை அவர்கள் எங்கே கண்ணால் பார்த்திருக்கப் போகிறார்கள்? தேவர்கோ அறியாத தேவ தேவனாகிய அவன், குறை கூறும் பிறருக்கு எளிதில் காட்சி அளிப்பானா? அப்படியானால் அவர்கள் குறை கூறுகிறார்களே! எதைக் கண்டு திருக் கோயில்களில் வைத்து வழிபடும் உருவங்களிலும், பிற இடங்களில் உள்ள ஓவியங்களிலும், இறைவனைப் பற்றிய தோத்திரங்களிலும், புராணங்களிலும்

காணும் செய்திகளைக்கொண்டு குறை கூறுகிறார்கள். அவற்றை முற்றும் கண்டறிவதில்லை. ஏதோ சில இடங்களைக் கண்டு பரிகாசம் செய்யத் தலைப்படுகிறார்கள்.

உண்மை அன்புடையவர்கள் இறைவனுடைய இயல்பைத் தெரிந்து கொள்ள முயல்வார்கள். "ஏன் இவ்வாறு இருக்கிறது" என்று ஐயம் எழுந்தால் ஆழ்ந்து படிப்பார்கள்; சிந்திப்பார்கள். பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்வார்கள்.

இறைவனுடைய இயல்புகளில் தம் சிற்றறிவுக்குப் புலப்படாத பல இருக்கலாம். நம் அறிவுக்குப் புலப்படாமையால் அவை பயனற்றவை, குறைபாடு உள்ளவை என்று எண்ணக் கூடாது. நாம் எல்லாம் அறிந்த முற்றறிவுடையவர்களா? முற்றும் உணர்ந்தவர் யாரும் இல்லை. அப்படியிருக்க, ஒரு பொருள் நமக்கு விளங்காவிட்டால் அந்தப் பொருளே இல்லையென்றோ, அது குறையுடையது என்றோ சொல்லக்கூடாது. "எனக்கு விளங்கவில்லை" என்று சொல்வதுதான் முறை.

கடவுள் இருக்கிறது நமக்குக் கண்கூடாகத் தெரிகிறதா? இல்லை அதனால், 'கடவுள் இல்லை' என்று சொல்லி விடலாமா? ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதை அழகான உவமையால் விளக்குகிறார். "பகல் நேரத்தில் வானத்தில் நட்சத்திரங்கள் இல்லை என்று சொல்லலாமா? அதுபோல் கடவுள் நமக்குத் தெரியவில்லை என்பதனால் கடவுள் இல்லை என்று சொல்லுவது முறையன்று" என்கிறார் அந்த மகான்.

நுட்பமான கருத்துக்கள் எளிதில் விளங்குவதில்லை. விளங்காதபோது அவை பயனற்றவை என்று கருதி எள்ளி இகழக்கூடாது. அந்த நுட்பத்தை அறிந்துகொள்ள முயல வேண்டும். நுட்பம் விளங்காத வரையில், "நமக்குப் புரிந்து கொள்ளும் தகுதி வரவில்லையே!" என்றே எண்ணவேண்டும்.

எல்லாக் கருத்துக்களுக்கும் இந்த நியாயம் பொருந்தாது. பெரியவர்களால் சொல்லப் பெற்றுப் பல காலம் பலருடைய,

அந்த எலும்பு எல்லாத் தேவர்களின் பதவிகளும் ஒரு காலத்தில் அழிந்துவிடும் என்பதைக் காட்டுகிறது. தன்னுடைய அருளாணையின்படி ஒழுகிய தேவர்கள் மறைந்த பிறகு அவர்களிடம் உள்ள அன்பினால் இறைவன் அவர்களுடைய எலும்பை அணிகலனாக ஏற்றுக்கொண்டிருக்கிறான். இறந்து போன அன்புக் குழந்தையின் பொருளைத் தாய் பாது காத்து வைத்திருப்பது போன்றது இது. ஆகவே எலும்பைக் கண்டால் பக்தர்களுக்கு இறைவனுடைய நித்தியத் தன்மையும், பதவிகளின் நிலையாமையும், இறைவனுடைய தியாக சீலமும், அவனுடைய பெருங்கருணையும் புலனாகும். பிறருக்கோ, "இவன் சுடுகாட்டு எலும்பைப் பொறுக்கி அணிந்து கொண்டிருக்கிறான்" என்று தோன்றும்.

இறைவன் பேயோடு மயானத்தில் நடமாடுகிறவன். அவனுக்குத் தேவரென்றும் பேயென்றும் வேறுபாடு இல்லை. யார் அன்பு செய்கிறார்களோ அவர்களோடு இணங்கியிருப்பான். மயானத்தையே தன் இருப்பிடமாகக் கொண்டவன் சிவபெருமான்; "கோயில் சுடுகாடு" என்று மாணிக்கவாசகர் சொல்கிறார் அல்லவா? பிற தேவர்கள் வாழ மாளிகைகளையும் அரண்மனைகளையும் கொடுத்துவிட்டு அவன் பேயோடு பேயாக மயானத்தில் வாழ்கிறான். எல்லோரும் கடைசிக் காலத்தில் போய்ச் சேரும் இடம் மயானம். எல்லோரையும் தனித் தனியே பார்க்காமல், எப்படியாவது அவர்களைச் சந்திப்பதற்கு, அவர்கள் இறுதியில் வந்து சேரும் இடத்தில் அவன் காத்திருக்கிறான். 'இந்த இடம் தூய்மையற்றதாயிற்றே, பேய் கூத்தாடும் இடம் ஆயிற்றே' என்று அவன் எண்ணுவதில்லை. 'தம்முடைய குழந்தைகள் வந்து சேருமிடம் அல்லவா?' என்று எண்ணி அங்கே நடிக்கிறான். பேயைப்போல உலவுகிறான். அவனுடைய அணியும் கோலமும் பேய்க் கோலமாக இருக்கின்றன. அந்தக் கோலத்தைக் கண்ட அன்பர்கள் அவனுடைய எளிய தன்மையையும், பிறருக்கே நலம் வழங்கும் பெருந் தன்மையையும், பெருங்கருணையையும் எண்ணி உருகுவார்கள். பிறரோ, "இவனோர் பேயாண்டி" என்று நகையாடுவார்கள்.

இவர்தமது
பூக்கோல மேனிப் பொடிபூசி என்புஅணிந்த
பேய்க்கோலம் கண்டார் பிறர்.

அவர்கள் இறைவனோடு ஒன்றிய கூட்டத்தினர் அல்லர். அவர்கள் புறத்தார்; அயலவர்; பிறர்.

அவர்கள் ஏன் இகழ்கிறார்கள்? இறைவனுடைய உண்மையை உணரும் ஆற்றல் இல்லாதவர்கள் அவர்கள். அவனைத் தெரிந்துகொள்வதற்கு அறிவாற்றல் இருந்தால் மட்டும் போதாது; அவனுடைய அருளாற்றலும் வேண்டும். வெறும் அறிவினால் விளங்காதது அருளினால் விளங்கும்.

''அருளாலே எவையும்பார் என்றான்—அதை
அறியாமலேஎன்றன் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி''

என்று தாயுமானவர் இந்தக் கருத்தைச் சொல்கிறார்.

இறைவனுடைய பெருமையையும், அவனுடைய திருக்கோலத்தின் உண்மையையும், அவனுடைய திருவிளையாடல்களின் உட்கருத்தையும் உணரும் ஆற்றல் இல்லாதவர்களாகிய பிறர் அவனை இகழ்கிறார்கள். ''ஐயோ பாவம்! அவருடைய அறியாமையைப் பாருங்கள்'' என்று அம்மையார் சொல்கிறார்.

இவரைப் பொருள்உணர மாட்டாதார் எல்லாம்
இவரை இகழ்வதே கண்டீர்!

இறைவனை இகழ்வதற்குக் காரணம் இறைவனிடம் இகழ்ச்சிக்குரிய இயல்பு உண்டென்று கொள்ளக்கூடாது. இகழ்பவர்களுக்கு உண்மையை உணரும் வல்லமை இல்லை;

அவர்கள் அறிவு வன்மையுடையவர்கள் அல்லர்;மாட்டாதார் —பொருளை —உண்மையை— உணர மாட்டாதார்.

'ஆகவே பக்தர்களே, எம் இறைவனை இப்படி இகழ்கிறார் களே என்று நீங்கள் வருந்தாதீர்கள்; கோபமும் அடையா தீர்கள். பாவம்! இவர்களுக்கு உண்மை தெரியவில்லையே என்று இரங்குங்கள்' என்று குறிப்பாகப் புலப்படுத்துகிறார் அம்மையார். அப்பர், "பொறியிலீர் உமக்கு என்கொல் புகாததே" என்றுதானே கேட்கிறார்?

**இவரைப் பொருள்உணர மாட்டாதார் எல்லாம்**
**இவரை இகழ்வதே கண்டீர்!—இவர்தமது**
**பூக்கோல மேனிப் பொடிபூசி என்பணிந்த**
**பேய்க்கோலம் கண்டார் பிறர்.**

[இதன் பொருள்: இவர் தமது — இந்தச் சிவபெரு மானுடைய. பூக்கோல மேனி-தாமரைப் பூவின் அழகை யுடைய சிவந்த திருமேனியில். பொடி பூசி-சுடுகாட்டுத் திரு நீற்றைப் பூசி. என்பு அணிந்த-எலும்பை ஆபரணமாக அணிந்த. பேய்க் கோலம்-பேய் போன்ற வடிவத்தை. கண் டார் பிறர்-பார்த்தவர்களாகிய, அன்பர் அல்லாத பிறர். இவரை-இந்தப் பெருமானுடைய, பொருள் உணர மாட்டா தார்-உண்மையை உணரும் அறிவு வன்மையும் அருள் வன் மையும் இல்லாதவர்கள்; எல்லாம்—அவர்கள் யாவரும். இவரை-இப்பெருமானை. இகழ்வதே-இழித்துப்பேசுவதையே. கண்டீர்-பாருங்கள்! (என்ன அறியாமை இது?)

இவரை என்றது உருபு மயக்கம். இவர்: நெஞ்சுக்கு அணியராக இருத்தலின் அண்மைச் சுட்டால் சொன்னார்; இது நெஞ்சறி சுட்டு. பொருள்-உண்மை; "பொருள்சேர் புகழ்" (குறள்) என்பதில் பொருள் என்பது உண்மை என்னும் பொருளில் வந்தது காண்க. மாட்டாதார்-வன்மையற்றவர். இகழ்வதே - புகழ்வதோ புறக்கணிப்பதோ இன்றி இகழ்

வதையே. கண்டீர்-பாருங்கள்; அன்பர்களைப் பார்த்துச் சொன்னபடி; பார்த்து இறங்குங்கள் என்பது குறிப்பாகப் புலப்படுகிறது. மேனிப் பொடி பூசி-மேனியில் பொடியைப் பூசி. கண்டாராகிய பிறர்; பிறர் என்பது நம்மைப் போன்ற அன்பர்கள் அல்லாத அயலவர் என்றபடி.

"பிறர், மாட்டாதார்' இகழ்வதே, கண்டீர். என்று கூட்டிப் பொருள் செய்க.]

இறைவனுடைய அன்பர்கள் இறைவனுடைய திருக்கோலத்தின் உண்மையை உணர்ந்து புகழ்வார்கள் என்பது இதிலுள்ளதை எதிர்மறுத்துக் காணும்போது தெளிவாகும்.

இது அற்புதத் திருவந்தாதியில் 29-ஆவது பாட்டு.

# 30. சச்சிதானந்த மூர்த்தி

இறைவன் பேய்க்கோலம் கண்டு எள்ளி நகையாடுவதைச் சொன்ன அம்மையார், மீட்டும் அந்தக் கோலத்தையே எண்ணிப் பார்க்கிறார். அவன் என்பை அணிந்து பேய்களோடு ஆடுகிறான். ஆடும் இடமாவது பார்க்க அழகாக இருக்கக் கூடாதா? மயானத்திலே தீயில் ஆடுகிறான். பேய்கள் நள்ளிரவில் ஆடும். அவனும் இரவில்தான் ஆடுகிறான். "நள்ளிரவில் நட்டம் புரிந்தாடும் நாதனே" என்று மாணிக்கவாசகரே சொல்கிறார். எல்லாம் ஒரே பயங்கரமான சூழ்நிலை.

"இப்படி ஆடுகிறானே; எதற்காக? அவனுக்கு இவ்வளவும் சிறுமையல்லவா?' நாம் இப்படி எல்லாம் நினைக்கிறோம்.

அம்மையார் அவன் பெருமையை உடையவன் என்று சொல்கிறார். அந்தப் பெருமை அவனிடத்தில் ஈடுபட்டு அன்பு செய்பவர்களுக்குத்தான் தெரியுமாம். பிறருக்குத் தெரியாதாம்.

அப்படிப் பெருமையுடையவர் இப்படி ஏன் செய்ய வேண்டும்?

இறைவன் சோதி வடிவானவன். அவன் நெருப்பாகவும் நிற்பான். அவனுடைய அம்சம் பெற்ற ருத்திரமூர்த்தி ஒருவரைக் காலாக்கினி ருத்திரர் என்று சொல்வார்கள்.

அக்கினி எல்லாவற்றையும் அழிப்பது; தூய்மைப்படுத்துவது; தூய்மையை உடையது. அக்கினியில் அழுக்குச் சார்ந்தாலும் அழகு சார்ந்தாலும் இரண்டையும் அது நீறாக்கிவிடும். அழுக்கினால் அது அழுக்காவதில்லை. அழகினால் அது அதிக அழகு பெறுவதில்லை. அக்கினியைத் தேஜஸ் (தேயு) என்று

சொல்வார்கள். தேவர்களுக்கெல்லாம் வாயாக இருப்பது அது. அதனால் தேவர்களை நோக்கி வழங்கும் ஆகுதிகளை அக்கினியில் பெய்கிறார்கள்.

அத்தகைய தூய்மையையுடைய அக்கினி எந்த இடத்தில் இருந்தாலும் தூய்மை கெடுவதில்லை. மயானத்தில் இருந்தாலும், சமையலறையில் இருந்தாலும், வேள்விக்குண்டத்தில் இருந்தாலும் அக்கினி அக்கினிதான். அது என்றும் தூய்மை உடையது

அந்த அக்கினியில் இறைவன் ஆடுகிறான். அந்த அக்கினி அவனை நீறாக்குவதில்லை; சுடுவதே இல்லை. இந்த அக்கினி பௌதிக அக்கினி; அதாவது பஞ்சபூதங்களில் ஒன்றான அக்கினி. இறைவனோ எல்லாவற்றுக்கும் மேலான தேஜஸ் ஆக இருப்பவன். சர்வப் பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் எரித்து விடும் மகாதேஜஸ் அவன். அந்தக் காலத்தில் இந்த அக்கினியும் அழிந்தொழியும். ஆகவே அவனை அக்கினி ஒன்றும் செய்யாது.

அவன் அழிவற்றவன் என்பதை அவன் அக்கினியில் ஆடும் செய்கை காட்டுகிறது.

இரவில் அவன் ஆடுகிறான். எல்லாரும் உறங்கும் சமயம் அது. தன்னுடைய குழந்தைகளாகிய ஆருயிர்கள் எந்தச் செயல்களையும் செய்யாமல், புண்ணிய பாவங்களைப் புரியாமல் உறங்கும்போது ஆண்டவன் ஆடுகிறான். தன்னுடைய குழந்தைகள் குறும்பு செய்வதையும் சண்டையிடுவதையும் மறந்து உறங்கும்போது தாய் களித்திருப்பது போல ஆண்டவன் இருக்கிறான். இந்த உறக்கத்தைத் தினப் பிரளயம் என்பர். எல்லா உயிர்களும் இறைவன் திருவடிக் கீழ் ஒடுங்கிக் கிடக்கும் சர்வப் பிரளயம் போன்றது அது. பிரளய காலத்திலும் இறைவன் மகிழ்ந்து ஆடுகிறான். எல்லா உயிரும் இன்பதுன்ப நுகர்ச்சியின்றி, நன்மை தீமை செய்யாமல் அடங்கிக் கிடக்கும் காலத்தில் இறைவன் ஓய்வு

பெற்றவனைப் போலக் களிக்கூத்தாடுகிறான். எல்லாம் ஒடுங்கவும் தான்மட்டும் நித்தியப் பொருளாக நின்று இயங்குவதைக் குறிப்பது அந்தச் செயல்.

வலிய பேயும் அவனும் சேர்ந்து மயானத்தில் ஆடுகிறார்கள். மயானமும் ஒரு கோயிலுக்கு ஒப்பானது. மக்கள் ஒரு பிறவியில் இன்பதுன்பங்களை அநுபவித்துப் பிறகு இறக்கிறார்கள். இறப்பும் ஒருவகையில் உறங்குவதைப் போன்றது. "உறங்குவது போலும் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" என்னும் குறளினால் இதனை உணரலாம். எல்லோரும் உறங்கும் இரவில் இறப்பாகிய உறக்கத்தைப் பெறுவதைக் காட்டும் மயானத்தில் இறைவன் ஆடுவது அவன் எப்போதும் இயங்கிக் கொண்டிட இருக்கிறான் என்பதைக் காட்டுகிறது.

நம்முடைய உடம்பிலுள்ள உறுப்புக்களை நாம் பயன்படுத்துகிறோம். சில சமயங்களில் சில உறுப்புக்களைப் பயன்படுத்துவதில்லை. நடக்காமல் இருக்கும்போது கால் இயங்குவதில்லை. கண்ணை மூடி உறங்கும்போது கண் இயங்குவதில்லை. இப்படியே ஒவ்வோர் உறுப்பும் இயக்கமில்லாத காலம் உண்டு உறங்கும்போது எல்லா உறுப்புக்களும் இயங்காமல் இருக்கின்றன. ஆனால் இதயம் எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்கிறது. மற்ற அங்கங்கள் இயங்கும் போதும் அது இயங்குகிறது. அவை செயல் செய்வதின்றிச் சும்மா இருந்தாலும் அது சும்மா நிற்பதில்லை. இதயம் இயங்காமல் உடம்பில் உயிர் வாழ்வதில்லை.

இறைவனும் இதயத்தைப் போல இருக்கிறான். அவன் இயங்குவதனாலே எல்லாப் பொருள்களும் இயங்குகின்றன. அவன் தன் இயக்கத்தால் மற்றவற்றை இயக்குகிறான். அவன் இன்றி எதுவும் இயங்காது. மற்றவை யாவும் இயங்காமல் ஒழிந்தாலும் அவன் தன் இயக்கத்தை, தன் ஆட்டத்தை நிறுத்துவதில்லை.

இதனால் அவனுடைய நித்தியத்தன்மையும், சர்வ காரணனாக இருக்கும் இயல்பும் புலனாகின்றன. அவன் அணிந்த என்பும் மற்றவர்களின் அநித்திய வாழ்வையும் அவனுடைய நித்தியத் தன்மையையும் காட்டுகின்றது.

இப்படி ஆய்ந்து பார்த்தால் அவன் கோலம், அவன் ஆடும் ஆட்டம் யாவுமே அவனுடை தூய பெருமையையே காட்டுகின்றன. இதைக் காரைக்கால் அம்மையார் சொல்கிறார்.

பிறருடைய என்புகளை அணிந்து இரவிலே வலிய பேயும் தானும் மகிழ்ந்து ஆடுகிறான் இறைவன்; தீயில் எம்பெருமான் ஆடுகிறான். இதன் அருமை பெருமைகளை அவனுடைய அன்பர் அல்லாத பிறர் அறியலாகாது. அப்படி ஒருகால் பிறர் அறியமுடியுமானால் அப்போது அவர்கள் மற்றவர்களைப் போன்ற சாமானிய அறிவுடையவர்கள் ஆகமாட்டார்கள். அவர்கள் அநுபவத்தோடு ஒட்டிய பெரிய உணர்வை உடையவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அந்தப் பேருணர்வாக விளங்குபவனும் அந்தப் பெருமான்தான்.

இப்படி அம்மையார் பாடுகிறார்:

**பிறர்அறியல் ஆகாப் பெருமையரும் தாமே;**
**பிறர்அறியும் பேருணர்வும் தாமே; —பிறருடைய**
**என்பே அணிந்துஇரவில் தீஆடும் எம்மானர்**
**வன்பேயும் தாமும் மகிழ்ந்து.**

[வன் பேயும் தாமும் மகிழ்ந்து-வன்மையையுடைய பேய்களும் தாமும் கூடி மகிழ்ந்து. பிறருடைய என்பே அணிந்து—மற்ற தேவர்களுடைய என்பைப் புனைந்து கொண்டு. தீஆடும் எம்மானர்-மயானத்தில் தீயில் கூத்தாடும் எம்பெருமானர். தாமே பிறர் அறியல் ஆகாப் பெருமையரும்-தாம் ஒருவரே அன்பர் அல்லாத பிறர் அறிவதற்கு இயலாத பெருமை

உடையவரும் ஆவார். பிறர் அறியும் பேர் உணர்வும் தாமே-பிறர் தம்மை அறிவதற்குரிய பெரிய அநுபவஞானமாக இருப்பவரும் தாம் ஒருவரே ஆவர்.]

பிறருடைய என்பே அணிந்தவர் என்பதனால் அவர் என்றும் உள்ளவர் என்றும், பேருணர்வும் தாமே என்பதனால் அவர் சித் உருவினர் என்றும், ஆடும் எம்மானர் என்பதனால் ஆனந்த வடிவினர் என்றும் புலனாகும். இதனால் அவர் சச்சிதானந்தமூர்த்தி என்று சொன்னவாறாயிற்று.

**இது அற்புதத் திருவந்தாதியில் 30-ஆம் பாட்டு.**

# 31. அன்பைப் பெருக்கு

காரைக்கால் அம்மையார் இறைவனை வேண்டித் தம்முடைய அழகிய வடிவத்தைத் தாங்கினார். அந்த வடிவத்தோடே இறைவனைத் தரிசித்தார்; பாடினார். அந்தப் பாடல்களில் அவர் தம்மைப் பேயென்றே சொல்லிக் கொள்வார். "செடிதலைக் காரைக்காற் பேய், செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்"(மூத்த திருப்பதிகம், 1 : 11) என்றும், "காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக் காரைக்காற் பேய்தன், பாடல் பத்தும்" (மூத்த திருப்பதிகம், 2 : 11)என்றும் பாடியிருக்கிறார். அற்புதத் திருவந்தாதியையும் பேய் வடிவம் கொண்டிருந்தபோதே பாடினார் என்பதை, இந்த அந்தாதியின் இறுதிப் பாட்டில், "உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக், கரைவினால் காரைக்காற் பேய்சொற் - பரவுவார்" என்று வருவதனால் அறியலாகும்.

அவர் பேயுருவத்தை அடைந்ததனால் வடிவம் மாறிற்றே அன்றி மனப்பக்குவம் மாறவில்லை. அது மேலும் மேலும் உயர்ந்தது, இறைவனுடைய திருவருளையே நினைவதில் உறுதியாக நின்றது.

மனம் என்பது விலங்கினங்களுக்கும் உண்டு. நாய் தன் எஜமானனை அறிந்து வாலாட்டுகிறது மனம் இல்லாவிட்டால் அந்த நன்றியுணர்வு இருக்க முடியுமா? யானை தனக்கு யாரேனும் தீங்கு செய்தால் அதை நினைவில் வைத்துக் கொண்டு, பிறகு பழி வாங்குகிறது. அந்த ஞாபகசக்தி, மனம் இருந்தால்தானே இருக்கமுடியும்? குரங்காட்டியினால் பழக்கப் பட்ட குரங்கு அவன் சொல்கிறதை அறிந்து செய்கிறதே,

அதுவும் மனமும் பழக்கப்பட்டதை நினைக்கும் சக்தியும் இல்லாமல் செய்ய முடியுமா?

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா நின்னடி
என்மனத்தே
வழுவா திருக்க வரம்தர வேண்டும்"

என்று அப்பர் சுவாமிகள் பாடுகிறார். புழுவானாலும் அதற்கும் மனம் உண்டு என்ற கருத்தை அது தெரிவிக்கிறது.

ஆகவே, எல்லாப் பிராணிகளுக்கும் மனம் உண்டென்பது தெளிவாகிறது. ஆனால் எல்லாப் பிராணிகளுடைய மனமும் ஒரே மாதிரி இருப்பதில்லை. மனவளர்ச்சியின் போக்குக்கு ஏற்ப, விலங்கினங்கள் சிறப்பை அடைகின்றன. மன வளர்ச்சியை முழுமையாகப் பெற்றவன் மனிதன். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்றவை ஒன்றாக இணைந்த அந்தக்கரணத்தை அவன் படைத்திருக்கிறான். விஞ்ஞான ஆராய்ச்சியாளரும் பரிணாம முறையில் மனிதன் மூளைச் சக்தியை அதிகமாகப் பெற்றிருக்கிறான் என்று சொல்கின்றனர். சில சமயங்களில் தேவர்களையும்விட மனிதன் வல்லவனாக இருக்கிறான். பழைய புராண இதிகாசங்களில் தசரதன் முதலியோர் தேவர்களுக்கு உதவி செய்ததாகப் படிக்கிறோம். அதிலிருந்து இது புலனாகிறது.

பக்தி செய்யும் தூறத்தில் மனிதனே சிறந்தவன். தேவர்கள். தம்முடைய நலத்தை எண்ணியே இறைவனிடம் அன்பு செய்கிறார்கள்.

"வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான்: மனம்நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
தம்மைஎல்லாம் தொழவேண்டி"

என்று மணிவாசகர் பாடுகிறார். ஆகவே, எதையும் எதிர் பாராமல் இறைவனிடம் பக்தி வைக்கிறவர்கள் மனிதர்களில்

மெய்யடியாராக உள்ளவர்கள். அவர்கள் மோட்சத்தைக் கூட விரும்புவதில்லையாம்.

"கூடும் அன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினுர்"

என்பது பெரியபுராணம்.

ஆகவே, மனித மனம் வளர்ந்திருக்கிறது. அது பின்னும் வளர வளர மனிதன் கடவுளை உணர்ந்துகொள்கிருன்; கடைசியில் கடவுளோடு கலந்து கரைந்துவிடுகிருன். மனிதன் ஒருவனுக்கு மட்டும் வாய்த்த சிறப்பு இது.

காரைக்கால் அம்மையார் மனித வடிவத்தை விடுத்தவர். அவர் நிலை என்ன? அவர் வடிவம் பேயாக இருந்தாலும் மனம் மனித மனந்தான். சாமானிய மனித மனம் அன்று; இறையருளில் ஈடுபட்ட எயர்ந்த மனம் அது இறைவனிடம் வைத்த அன்புக்குத் தடையாகத் தன் பெண் வடிவம் இருக்கக்கூடாது என்றே அதை உதறித் தள்ளினர். அவருடைய மனம் இப்போது தடையைவிலக்கிவிட்ட பெருமிதத்தோடு இருக்கிறது. ஆண்டவனிடத்தில் வைத்த அன்பு இப்போது வளர்ந்து வருகிறது. அதனுல் அவருடைய நெஞ்சம் மகிழ்கின்றது. 'மனித வடிவம் போயிற்றே' என்று அவலமுருமல், அது போனதனுல்தான் மகிழ்ச்சியை அடைகிறது. மடியிலே கனம் இருந்தால் வழியிலே பயம். அந்தக் கனத்தை உதறிவிட்டு வந்ததனுல் இப்போது பயம் இல்லை. எங்கே வேண்டுமானுலும் போகலாம்; என்ன வேண்டுமானுலும் செய்யலாம். யாருக்கும் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை.

ஆண்டவனிடம் அன்பை மேலும் மேலும் வளர்த்துக் கொண்டு போவதனுல் மனத்திலே மேலும் மேலும் மகிழ்ச்சி பெருகுகிறது. இறைவனுகிய பெரிய பாதுகாப்புக் கிடைத்திருக்கிறது. இனி என்ன கவலை?

இந்த நிலையில் நின்று அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துப் பேசுகிறார்.

'முன்பெல்லாம் தெளிவு பெறாமல் அறியாமை காரணமாக, என்னாகுமோ என்று அஞ்சினாயே! பேய்வடிவம் பெற்றால் நன்மை உண்டாகுமோ என்று ஐயுற்றாயே! இப்போது எப்படி இருக்கிறோம்? யாராலும் நமக்கு அச்சம் இல்லை. தேவர்களுக்குக்கூட இந்த நிலை கிடைக்குமா? நீ இப்போது மகிழ்கிறாயே! இதை எண்ணிப் பார்.'

**மகிழ்தி மடநெஞ்சே!**

'மனித வடிவத்தோடு இருக்கும் அடியவர் இறைவனைத் தொழுது இன்புறுகிறார்கள். அதனால் அவர்கள் பெருமை அடைகிறார்கள். விளக்கம் பெறுகிறார்கள். இறைவன் அவர்களை இனம் கண்டுசொள்கிறான். நமக்கு இப்போது என்ன குறை வந்துவிட்டது? உண்மை அடியார்களாகிய மனிதர்களுக்கு உள்ள இன்ப நிலை நமக்குந்தான் இருக்கிறது. அதில் வேறுபாடு இல்லையே! மனிதர்களில் சிலர் இறைவனுக்கு அடியார்கள் என்று விளங்குவதைப் போலவே நாமும் இருக்கிறோம். நீ அவர்களைப் போலவே திகழ்கிறாய்.

**மானிடரின் நீயும் திகழ்தி.**

[மானிடரின்-மனிதர்களைப் போல.]

"இவ்வாறு மகிழ்வதற்கும் திகழ்வதற்கும் காரணம் என்ன? பாதுகாப்பான இடத்தைச் சேர்ந்து விட்டால் ஒரு கவலையும் இராது. சேரிடம் அறிந்து சேர்ந்தவர்கள் நன்மையை அடைவார்கள் என்பது உலகம் அறிந்த உண்மை. நீ சாமானியமான பாதுகாப்பைப் பெறவில்லை. எந்த இடத்தை அடைந்தால் எந்த விதமான இன்னலும் அணுகாதோ, அந்த இடத்தைச் சேர்ந்திருக்கிறாய்."

எல்லாப் பயத்தையும்விட மரண பயந்தான் பெரிது. பசியை மாற்றிக் கொள்ளலாம், சோற்ருலே. பிணியைத் தீர்த்துக் கொள்ளலாம், பருந்தாலே. பகையைப் போக்கிக் கொள்ளலாம், படைப் பலத்தாலே. பசிக்குப் பாதுகாப்பாக இருப்பது உணவு. பிணிக்குப் பாதுகாப்பாக உள்ளது மருந்து. பகைக்குப் பாதுகாப்பாக இருப்பது படை. இவை யாவுமே சிறிய பாதுகாப்புக்கள்; சிறு சேமங்கள்.

நாயைக் காவலாக வைக்கிருேம். அது தன் சக்திக்கு ஏற்ற அளவில்தான் நம்மைக் காப்பாற்றும். ஒருவன் துப்பாக்கியால் அதைச் சுட்டு விட்டால் என்ன செய்வது? காவல்காரனைப் பாதுகாவலுக்கு வைக்கிருேம். அவன் கையையும் காலையும் கட்டிப் போட்டு உருட்டி விட்டுத் திருடர்கள் கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுகிருர்கள். இத்தகைய பாதுகாப்புக்கள் சிறிய பாதுகாப்புக்கள். படையை ஓரரசன் பாதுகாப்புக்குத் திரட்டி வைத்திருந்தால் அவனை விடப் பெரிய படைஉடையவன் அந்தச் சிறுபடையை அழித்து விடுகிருன்.

யாராலும் தடுக்க முடியாத மரணத்தை எந்தப் படையும் மாற்ற முடியாது. அதை மாற்றுகிறவனே எல்லாரையும் விடப் பெரிய காவலன்; பெரிய பாதுகாப்பாளன். சிவபெருமானே அந்தச் செயலைச் செய்கிறவன். ஆகவே, அவன்தான் பெரிய பாதுகாப்பாளன்; பெருஞ் சேமம்.

'இறைவனுகிய பெருஞ் சேமத்தை நீ சேர்ந்து விட்டாய்; அதனால்தான் உனக்குக் கவலை இல்லை; அச்சம் இல்லை; மகிழ்கிருய்; மனிதரைப் போல இன்புறுகிருய்; விளக்கம் பெறுகிருய்.'

> **மகிழ்தி மடநெஞ்சே! மானிடரின் நீயும்**
> **திகழ்தி பெருஞ் சேமம் சேர்ந்தாய்.**

பெருஞ் சேமமாக உள்ள அந்தப் பெருமான் எப்படி இருக்கிருன்? அவன் எலும்பை அணிந்து கொண்டிருக்கிருன்.

மிகவும் பெரியவர்களின் என்பை அவர்கள் மீதுள்ள மதிப்பினால் அணிந்திருக்கிறான் என்று சொல்லலாமா? யாருடைய என்பாக இருந்தாலும், சிறிதும் இகழாமல், அதை எடுத்து அணிந்து கொண்டிருக்கிறான். மயானத்தைக் கோயிலாகக் கொண்டவனுக்கு அங்கே சுட்டபின் எஞ்சி நிற்கும் என்பே ஆபரணமாகிறது. அந்த என்புகளை அணிந்து கொண்டு யாருக்கும் நாணாமல் அவன் எங்கும் திரிந்து கொண்டிருக்கிறான்.

எல்லோருடைய எலும்பையும் அணிந்து கொண்டு, 'யாவரும் முடிவில் இப்படி என்பு ஆவார்கள். நான் மாத்திரம் நித்தியன்' என்பதைக் காட்டிக் கொண்டு அவன் திரிகிறான். அவன்தான் பெரிய பாதுகாப்பு. அவனை அடைந்து அவனுக்கு ஆட்பட்டதனால்தான் அவனுடைய பாதுகாப்புக் கிடைத்தது. அவனுக்கு ஆட்பட்ட அன்பு பேரன்பு. அதனால்தான் மகிழ்ந்து திகழும் நிலை உண்டாயிற்று.

இதோடு நின்றுவிடலாமா? இன்னும் நாம் அடைய வேண்டியது இருக்கிறது. என்றும் பொன்றாத இன்ப நிலையை அடைய வேண்டும். இதுவரைக்கும் வந்த நமக்கு வழி தெரிந்துவிட்டது. இடையிலே நின்றுவிடாமல் தொடர்ந்து செல்லவேண்டும். எந்தப் பேரன்பு நம்மை இந்தப் பெருஞ் சேம நிலைக்கு அழைத்து வந்ததோ, அதை இன்னும் பெருக்க வேண்டும்; அந்த அன்பு இன்னும் மிகுதியாக வேண்டும். அப்போது வழியின் முடிவை அடையலாம். வழி தெரியாமல் தொல்லைப்பட்ட காலம் போய்விட்டது. தடை வருமோ என்று அஞ்சிய காலம் போய்விட்டது. அச்சமும் கவலையும் ஐயமும் திரிபும் இல்லாத சேமமான இடத்துக்கு வந்தாயிற்று. இங்கே நின்றுவிடக்கூடாது. இதுவரையில் பேரன்பு கொண்டு வந்தாயிற்று. இனியும் அந்த அன்பைப் பெருக்கி, முடிந்த முடிவான நிலையை அடையவேண்டும்.

—இகழாதே

யார்என்பே யேனும்
 அணிந்துஉழல்வோர்க்கு ஆட்பட்ட
பேரன்பே இன்னும் பெருக்கு.

ஓரளவு முயற்சி செய்து பயன் பெற்ற ஒருவனைப்பார்த்து, "இந்தப் பயன் பெற்றிருக்கிறாயே! இது எதனால் விளைந்தது? உன் முயற்சியால் இன்னும் முயல்; இடைவிடாது முயற்சி செய். பெரும் பயன் பெறலாம்" என்று முன்னை அநுபவத்தை சுட்டிக்காட்டி ஊக்குவதைப்போல அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துச் சொல்கிறார்.

உடம்பைக் காப்பாற்ற உணவும் மருந்தும் வேண்டும். உள்ளத்தைக் காப்பாற்றக் கல்வியும் அறிவும் வேண்டும். உயிரைக் காப்பாற்ற வேண்டுமானால் அன்பு வேண்டும். உணவை உண்டு உடம்பு வலிமை பெறுவது போல, அறிவு பெற்று உள்ளம் தெளிவை அடைவது போல, அன்பைக் கொண்டு உயிர் வளர்ந்து இன்பத்தை அடையும்; மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து வரும் தீங்கை அடையாமல் காக்கப் பெறும்.

"அன்பைப் பெருக்கிஎன்
 ஆருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே!
 இறையே! பராபரமே"

என்று தாயுமானவர் பாடுகிறார். அன்பு பெருக்கினால் ஆருயிர் காப்பைப் பெற்று இன்னல் அகன்று இன்பத்தை அடையும்.

எனவே, அம்மையார் தம் நெஞ்சை நோக்கி அன்பைப் பெருக்கு என்று கூறுகிறார். 'இதுவரைக்கும் அன்பைப் பெருக்கியதனால் பெற்ற பயன் பெரிதுதான். ஆனால் அது போதாது. இன்னும் அன்பைப் பெருக்கு. முடிந்த முடிவாகிய இன்ப நிலையை அடையலாம்' என்று சொல்கிறார்.

**மகிழ்தி மடநெஞ்சே! மானிடரின் நீயும்**
**திகழ்தி; பெருஞ்சேமம் சேர்ந்தாய்;—இகழாதே**
**யாரென்பே யேனும் அணிந்துழல்வார்க் காட்பட்ட**
**பேரன்பே இன்னும் பெருக்கு.**

[*அறியாமை யுடையையாக இருந்த நெஞ்சே, முன்பு துன்புற்ற நீ இப்போது மகிழ்கிறாய்; 'பேயாகிவிட்டோமே, இனித் தாழ்ந்த நிலை வருமே' என்று அஞ்சிய நீயும் மானிடரைப் போன்ற சிறப்பைப் பெற்று விளங்குகிறாய்! இதற்குக் காரணம், நீ பெரிய பாதுகாப்பான இடத்தைச் சேர்ந்துவிட்டாய். யாருடைய எலும்பாக இருந்தாலும் இது தொடுவதற்கும் உரியதன்று என்று பிறர் இகழ்வது போல இகழாமல் அதை அணிந்துகொண்டு ஊரூர்தோறும் பிச்சைக்காகத் திரிகிற இறைவருக்கு ஆளாகப் புகுந்ததற்குக் காரணமான பெரிய அன்பையே, இன்னும் பெருகச் செய்வாயாக.*

*மானிடரின்—மானிடரைப் போல. சேமம்—க்ஷேமம்; பாதுகாப்பு.*]

அன்பு பெருகப் பெருக மேலும் மேலும் நன்மை உண்டாகும் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 31-ஆம் பாடல்.

# 32. திருமார்பின் நூல்

அம்மையார் சிவபெருமான் திருமேனியைப் பார்க்கிறார். அவருடைய சடையைப் பார்க்கிறார். அது செக்கச் செவேல் என்று இருக்கிறது. அதனால் பெருமானுக்குச் செஞ்சடையப்பன் என்ற திருநாமம் உண்டாயிற்று. திருப்பனந்தாளில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்குச் செஞ்சடையப்பர் என்பது பெயர்; அருணஜடேசுவரர் என்று வடமொழியில் கூறுவார்கள். அந்தச் சடையின் செவ்வொளி எங்கும் பரவு கிறது. அதன் இடையே பிறையை அவன் அணிந்திருக்கிறான். அது மிகவும் இளம்பிறை. மேற்கில் செவ்வானத்தினிடையே சிறுபிறை தோன்றினால் எப்படி இருக்குமோ, அப்படிச் செவ் வொளி வீசும் சடைக்கு இடையே அந்தப் பிள்ளைப்பிறை இருக்கிறது. அதிலிருந்து கதிர்கள் வீசுகின்றன.

இப்போது இறைவனுடைய திருமார்பைப் பார்க்கிறார் அம்மையார். அங்கே பளிச்சென்று முப்புரிநூல் தெரிகிறது. சடையின் மேல் சிவப்புக்கு நடுவே வெண்பிறை தெளிவாகத் தெரிகிறது போல, சிவந்த திருமார்பில் வெண்மையான முப் புரிநூல் தெரிகிறது. இறைவன் திருமேனி செவ்வண்ண மானது. "சிவனெனும் பெயர் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" என்று அப்பர் சுவாமிகள் பாடியதைக் கேட்டிருக் கிறோமே! மேலே சிவப்புக்கு நடுவே வெண்மை; கீழேயும் சிவப்புக்கு நடுவே வெண்மை. ஆனால் மேலே வெண்மை சற்றுப் பெரிதாக இருக்கிறது. கீழே மெல்லியதாக இருக் கிறது. 'ஒருகால் மேலே இருக்கும் வெண்மைதான் இங்கே இழை ஓடுகிறதோ? இல்லை இல்லை; கதிர்களை உடைய பிறை யிலிருந்து ஒரு கதிர் மார்பின் வழியே ஒழுகுகிறதோ? அது தான் இவ்வளவு நீளமாக இருக்கிறது'

இப்படி எல்லாம் அம்மையாருக்கு எண்ணம் ஓடியது. 'எம்பெருமான் திருமார்பின் நூல் செஞ்சடைமேல் உள்ள பிள்ளைப் பிறையின் ஒரு கதிர் ஒழுகியதை ஒக்கும்' என்று எண்ணினார்.

பெருகொளிய செஞ்சடைமேல் மிள்ளைப் பிறையுள்,
ஒருகதிரே போந்துஒழுகிற்று ஒக்கும்--தெரியின்,
....மார்பின் நூல்.

இப்போது சிவபெருமானைப் பற்றிச் சிந்திக்கிறார். அவர் தம் கண்ணால் பார்த்ததை இப்படி ஒருகற்பனைக் காட்சியாகச் சொன்னார். இனிக் கருத்தினால் அவன் இயல்பைக் காண கிறார். இறைவன் எல்லாப் பொருளுக்கும் முதலில் நிற்பவன்.

"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு"

என்று திருக்குறள் சொல்கிறது. அவனை முழுமுதல் என்றும், முதல்வன் என்றும், முதல் என்றும் பெரியோர் அழைக் கிறார்கள். அதுமட்டுமன்று; அவன் கண்ணாகவும் இருக்கிறான், கண் எல்லா உறுப்புக்களிலும் சிறந்தது. அப்படியே இறைவன் எல்லாரினும் சிறந்தவனாக இருக்கிறான். நமக்குப் பொருள்களின் வண்ணத்தையும் வடிவத்தையும் காட்டுவது கண்தான். இறைவன் நமக்கு எல்லாவற்றையும் காட்டு கிறவன். அவன் காட்டாவிட்டால் யாரும் எதையும் காண முடியாது.

"காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே" என்று அப்பர் சொல்கிறார். ஆன்மாக்கள் இறைவன் காட்டக் காணுமேயன்றித் தாமே காணும் தன்மை உடையன அல்ல. இறைவன் முதலாகவும் இருக்கிறான்; கண்ணாகவும் இருக் கிறான்.

"கருவாய் உலகுக்கு முன்னே தோன்றும்
கண்ணும் கருகாவூர் எந்தை தானே"

என்பது திருத்தாண்டகம்.

இந்த இயல்பு அம்மையாரின் நினைவுக்கு வருகிறது.

**முதற்கண்ணன்**

பிறகு அவனுடைய அருட்செயல் நினைவுக்கு வருகிறது. திரிபுரசங்காரம் செய்தான் அவன். இரும்பு, வெள்ளி, பொன் என்ற மூன்று மதில்களையுடைய புரங்களுக்குத் தலைவர்களாக வாணன், வித்யுன்மாலி, தாரகாக்ஷன் என்ற அசுரர்கள் இருந்தார்கள். அந்த மூன்று புரங்களும் வானிலே பறந்து கொண்டிருந்தன. பறக்கும் கோட்டைகள் அவை. திடீரென்று அவை எங்கேனும் இறங்கிப் படியும். கீழிருந்த மக்கள் நசுங்கிப் போவார்.

அந்த அசுரர்களால் உண்டாகும் தீங்கை அறிந்து தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டார்கள். அவன் சிரித்து அந்த முப்புரங்களையும் எரித்தான். திரிபுரங்களை அழித்தானே யன்றி அவற்றில் இருந்த அசுரர்களை அழிக்கவில்லை. அவர்கள் திருந்தியமையால் அவர்களுக்கு அருள்பாலித்து வாணனைத் தன் சந்நிதியில் முழவு வாசிப்பவனாகவும், மற்றவர்களை வாயில் காவலர்களாகவும் வைத்துக்கொண்டான்.

முப்புரங்களை எரித்து அசுரர்களை ஆட்கொண்ட செயல், பிறப்புக்குக் காரணமாகிய மும்மலங்களை அழித்து ஆன்மாக்களை ஆட்கொள்ளும் திருவருட்செயலைக் குறிப்பிக்கும் திருவிளையாடல்.

"முப்புரம் என்பது மும்மல காரியம்"

என்று திருமூலர் பாடுவார்.

சிவபெருமான் என்றும் அழியாதவன்; முதுமை அடையாதவன். அவனுக்கு முக்கியமான அடையாளம் அவன் திருநுதலில் இருக்கும் ஞானக்கண். "இமையாத முக்கண் மூவரிற் பெற்றவன்" என்று மாணிக்கவாசகர் சிறப்பிப்பார். "நெற்றிமேல் ஒற்றைக்கண் உடையான் கண்டாய்" என்று அப்பர் பாராட்டுவார். "நெற்றியிலே கண்படைத்தவனோ?" என்று உலக வழக்கில் கேட்கும் கேள்வி, சிவபெருமான் யாராலும் செய்ய முடியாததைச் செய்யும் பேராற்றல் உடையவன் என்பதைக் காட்டும். சிவபெருமானுடைய சிறப்பான அடையாளம் அது.

இவற்றையெல்லாம் நினைந்து பார்க்கிறார் காரைக்கால் அம்மையார்.

முதற்கண்ணான், முப்புரங்கள்
அன்றுஎரித்தான்; மூவா
நுதற்கண்ணான்.

'அத்தகைய பெருமானுடைய மார்பிலே விளங்கும் நூல், அவன் தலையிலுள்ள பிறையின் ஒரு கதிர் கீழே வந்து ஒழுகியது போல் இருக்கிறது' என்கிறார் அம்மையார்.

பெருகுஒளிய செஞ்சடைமேல் பிள்ளைப் பிறையின்
ஒருகதிரே போந்துஒழுகிற்று ஒக்கும்—தெரியின்
முதற்கண்ணான், முப்புரங்கள் அன்றுஎரித்தான், மூவா
நுதற்கண்ணான் தன்மார்பின் நூல்.

'எல்லாப் பொருளுக்கும் முதலிலே உள்ளவனும், எவ்வுயிர்க்கும் கண்ணைப் போன்றவனும், மூன்று புரங்களையும் பழங்காலத்தில் எரித்தவனும், அழியாதவனும், நெற்றியிலே கண்ணை உடையவனுமாகிய சிவபெருமானுடைய திருமார்பில் உள்ள முப்புரி நூலானது, ஆராய்ந்து பார்த்தால், பெருகும்

ஒளியை உடைய செம்மையான சடையின்மேல் உள்ள இளம் பிறையின் ஒரு கதிர் கீழே வந்து ஒழுகியதை ஒக்கும்' என்பது இதன் பொருள்.

[பெருகு ஒளிய என்ற அடையைப் பிறைக்கு ஏற்றியும் சொல்லலாம். ஒழுகிற்று—ஒழுகியது. தெரியின்—ஆராய்ந்து பார்த்தால். மூவா—அழியாத, மூப்பை அடையாத. அன்று: பண்டறிசுட்டு. தன் சாரியை. நூல் ஒக்கும் என்க.]

இது அற்புதத் திருவந்தாதியில் 32-ஆவது பாட்டு.

# 33. கோலமும் வடிவும்

அறிவில் இரண்டு வகை உண்டு; நூலறிவு, வாலறிவு என்பன அவை. பல நூல்களைக் கற்று அதனால் பெறும் அறிவு நூலறிவு; அது மூளையைச் சார்ந்தது. அநுபவத்தோடு கூடி இறைவனிடம் ஈடுபடுவது வாலறிவு. அது இதயத்தோடு ஒட்டியது; ஆன்மலாபத்தைத் தருவது. நூலறிவை அபர ஞானம் என்றும், பரோட்ச ஞானம் என்றும் ஒரு வகையில் சொல்லலாம். அப்படியே வாலறிவைப் பர ஞானம் என்றும், அபரோட்ச ஞானம் என்றும் சொல்லலாம்.

இந்த இரண்டு அறிவையும் பற்றி ஒரு குறள் சொல்கிறது. கற்றதனால் உண்டாவது நூலறிவு: இறைவனை வணங்கி அருளநுபவம் பெறுவது வாலறிவு என்பதை அந்தக் குறள் உள்ளடக்கி வைத்திருக்கிறது.

"கற்றதனால் ஆய பயன்என்கொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்பது அந்தக் குறள். கற்பது என்பது பயிற்சி அல்லது சாதனம்; அதனால் வரும் பயன் அல்லது சாத்தியம் வேறு. அது வாலறிவனுடைய நற்றாளைத் தொழுதல் என்று இந்தக் குறள் சொல்கிறது. இறைவனை வாலறிவன் என்பதனால் அவனைத் தொழுவதனால் வாலறிவு உண்டாகும் என்ற குறிப்பைத் தெரிந்துகொள்ளலாம். 'பிறவிப் பிணிக்கு மருந்தாகலின் நற்றாள் என்றார்' என்று பரிமேழலகர் எழுதுவார். கல்வி என்பது மிகப்பெரிய அளவுள்ளது, அதைக் கடலாகவே சொல்வர்; "கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்" என்று மாணிக்கவாசகரும், "ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும்

அளக்கர்" என்று கம்பரும் பாடியிருக்கிறார்கள். அப்படி விரிந்திருக்கும் கடலைக் கடந்தால் உடனே பெற வேண்டிய பேறு வந்துவிடாது. அதற்கு மேல் மற்றொரு விரிந்த கடல் இருக்கிறது. அதுதான் வாலறிவு. கல்வி கற்கும் போது படிப்படியாக ஏற வேண்டியிருக்கிறது. அப்படியே இறைவன் அருளைப் பெறும் வாலறிவிலும் எத்தனையோ படிகள் இருக் கின்றன. கல்வியை முற்றக் கற்றுவிட்டோம் என்று சொல் கிறவன் அதனால் திருப்தி அடைய முடியாது. உண்மையாக அவன் கல்வி கற்று நிரம்பினால் உடனே வாலறிவுப் பிரதேசத் தில் அடிவைக்க வேண்டும். கல்வியின் கடை வாயிலுக்கு அடுத்தபடி இருப்பது ஞானவாயில். கல்வியின் கடை வாயி லுக்கு வந்துவிட்டோம் என்று மேலே உள்ள ஞானவாயிலைக் காணாமல், அதனுள்ளே நுழைய முயலாமல் இருந்தால் கல்விப் பிரதேசத்தில் இத்தனை தூரம் கடந்து வந்தது அவ்வ ளவும் வீணாகிவிடும்; பயனின்றி ஒழியும். கற்று நூலறிவை முற்றப் பெற்றதற்குப் பயன் வாலறிவுப் பிரதேசத்தில் நுழை வாயிலாகிய கடவுட் பக்தி உண்டாக வேண்டும்; வாலறிவன் நற்றாளை வணங்க வேண்டும்.

எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குப் போகிறான் ஒருவன். பதினோராண்டுகள் படித்துப் பள்ளி இறுதித் தேர்வை எழுது கிறான்; தேர்ச்சி பெறுகிறான். அவ்வாறு தேர்ச்சி பெறுகிறவர் களில் இரண்டு வகையினர் இருக்கிறார்கள். எல்லாப் பாடங் களிலும் தேர்ச்சி பெற்றுக் கல்லூரிக்குச் செல்லும் தகுதி பெறுகிறவர்கள் ஒரு சாரார், ஓரிரண்டு பகுதிகளில் தேர்ச்சி பெறாமல், மறுபடியும் அவற்றை மட்டும் எழுதி நிறைவேற்று கிறவர்கள் ஒரு சாரார். ஆனால் அப்படித் துண்டு துண்டாக எழுதினவர்கள் கல்லூரியில் நுழைய முடியாது. கல்லூரியில் நுழையும் தகுதியுடையவர்களே சிறந்தவர்கள்.

பள்ளியிறுதிப் படிப்போடு நின்றுவிடுகிறவர் போன்ற வர்கள் நூலறிவோடு நிற்பவர்கள். கல்லூரியில் நுழைகிற வர்களைப் போன்றவர். வாலறிவன் நற்றாளைத் தொழுகிற

வர்கள், பயன் இல்லாமல் ஒரு காரியத்தைச் செய்தல் வீண்; கற்றதற்குப் பயன் வாலறிவன் நற்றாள் தொழல்; அவ்வாறு தொழாவிட்டால் கற்றது அவ்வளவும் வீண்.

இந்தக் கருத்தையே முன் சொன்ன குறளால் நாம் அறிகிறோம். வாலறிவன்தான் பிறவிப் பிணிக்கு மருந்தாத லால் அவனைத் தொழுபவன் முடிந்த பயனாக வீட்டைப் பெறுவான். இதை வேறு ஒரு பாட்டுச் சொல்கிறது.

"எழுத்தறியத் தீரும் இழிதகைமை; தீர்ந்தான்
மொழித்திறத்தின் முட்டறுப்பான் ஆகும்;
—மொழித்திறத்தின்
முட்டறுத்த நல்லோன் முழுநூற் பொருள்அறிந்து
கட்டறுத்து வீடு பெறும்."

வெறும் நூலறிவைக் கொண்டவர் பேச்சில் வல்லவர் களாக இருக்கலாம்; ஆனால் மேலே செய்ய வேண்டியதைச் செய்யாமல், வாலறிவன் தாளைத் தொழாமல், இருந்தால் அவர்களுக்கு அமைதியே இராது. ஒரு பிறவி போனால் மறு பிறவி பெற்றுத் திரிந்துகொண்டே இருப்பர். இந்தப் பிறவி யிலும் மெத்தப் படித்ததனால் ஐயங்கள் உண்டாகி, அநுபவம் இன்மையால் தெளிவு உண்டாகாமல் திரிந்துகொண்டே இருப்பர்.

'வாலறிவுலகத்தையே எட்டிப் பாராமல், இறைவனைப் பற்றி எண்ணாமல், நூலறிவைப் பேசிப் பேசி வாழ்கிறவர்கள், போக வேண்டிய பிரதேசத்தில் நுழையாதவர்கள், திரிந்து கொண்டே இருக்கட்டும்!' என்று காரைக்கால் அம்மையார் சொல்கிறார்.

**நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக!**

நூலறிவுக்கு மேலே போக வேண்டுமானால் நுட்பம் வேண்டும். நுட்பத்தை நுழைபுலம் என்பார்கள். 'நுண்மாண்

நுழைபுலம்' என்று சொல்வது வழக்கம். வெறும் நூலறிவு திட்பமானது; சடலத்தைப் போன்றது. வாலறிவு நுட்பமானது; உயிரைப் போன்றது.

நூலறிவுக்கு மேலே வாலறிவு என்பது என்ன? அது எங்கே தொடங்குகிறது?

'வாலறிவன் நற்றுள் தொழுவதே' வாலறிவின் தொடக்கம். அப்படியானுல் வாலறிவன் யார்? அவன் எப்படி இருப்பான்?

இதற்கு விடை சொல்கிறுர் அம்மையார் 'என்னுடைய அநுபவத்தை நான் சொல்கிறேன். இறைவன் பல்வேறு வடிவங்களைக் கொண்டவன், அவனை அவரவர்கள் விரும்பிய வண்ணம் தொழலாம். எனக்கு அவனை எண்ணும் போதெல்லாம் அவனுடைய நீலமணி மிடறுதான் எல்லா வற்றுக்கும் மேலாக லந்து நிற்கிறது. தன்னிடம் வந்து சரணம் அடைந்த அமரர்கள், முன்பு தன்னை நினைக்காது பாற்கடலைக் கடைந்தார்களே என்று எண்ணுமல், இப்போதாவது வந்தார்களே என்று எண்ணி, அவர்கள் அழியாமல் இருப்பதற்காக ஆலால நஞ்சை உண்டு தன் அழகிய கழுத்தில் அதை வைத்து, நீலகண்டப் பெருமாைக இருக்கிறவன் அவன். நீலமணிமிடற்றுனுடைய நீர்மையை எண்ண எண்ண என் உள்ளம் அவன்பால் ஈடுபடுகிறது. அவன் தன்னை அடைந்தார்களின் குற்றங்களை எளிதில் மன்னிப்பவன் என்பதும், அவர்களுக்கு வரும் மரணபயத்தைப் போக்குபவன் என்பதும், அவன் நஞ்சாலும் அழியாத நித்தியன் என்பதும், பிறர் அஞ்சி ஒதுங்கி ஓடச் செய்யும் நஞ்சு அணிகலனுவது போலப் பொல்லாதவர்களையும் நல்லவர்களாக ஏற்றுக் கொள்ளும் கருணையாளன் என்பதும் அவனுடைய நீர்மைகள் என்று அந்த மணிமிடறு காட்டுகிறது.'

**நீல மணிமிடற்றுன் நீர்மையே—மேல்உவந்தது.**

"நாங்கள் அந்த நீலகண்டப் பெருமானைப் போற்றினால் தான் நலம் உண்டாகுமா?" என்று கேட்கிறோம்.

'அவன் எத்தனையோ கோலங்களை உடையவன். அவன் அடியார்களுக்கு அருள் செய்வதற்காக மேற்கொள்ளும் கோலங்களுக்குக் கணக்கே இல்லை. எந்தக் கோலத்திலே எப்படி வழிபட்டாலும் வழிபடலாம். சிவபெருமான் என்பது அவன் உருவம். நடராஜன் என்பது ஒரு கோலம். தட்சிணா மூர்த்தி என்பது ஒரு கோலம். முருகன் என்பது ஓர் உருவம்; தண்டாயுதபாணி என்பது ஒரு கோலம்; ஆறுமுகன் என்பது ஒரு கோலம். எந்த மூர்த்தியை எந்தக் கோலத்திலே வழி பட்டாலும் வழிபடலாம். அவன் அந்த மூர்த்தியாக, அந்தக் கோலத்திலே வந்து அருள் புரிவான். அவன் தனக்கென்று ஒரு கோலமும் வடிவும் இல்லாவிட்டாலும் அடியார்களுக் காக எந்தக் கோலத்திலும் வருவான்; எந்த வடிவிலும் வருவான்.'

அடுத்த கேள்வி : "அவனை எப்படி வழிபடுவது?"

'தன்னலத்தை மறந்துவிட்டு இறைவனையே எண்ணிப் பூஜை செய்யலாம்; பாடிப் பாடி உருகலாம்; உள்ளத்தே தியானித்து யோகம் செய்யலாம்; தலந்தோறும் சென்று வழிபடலாம்; இறைவன் திருக்கோயிற் பணி செய்து விழா நடத்தலாம்; பக்தர் கூட்டத்தோடு ஒன்றிப் பஜனை செய்ய லாம். எல்லாம் ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படுபவை ஆதலின். எல்லாமே தவத்தின் வகைகள். எது செய்தாலும் தவந்தான், சித்தகத்தியோடு இறைவனை எண்ணிச் செய்வன எல்லாம் தவம். "சித்தம் சிவமாக்கிச் செய்வனவே தவமாக்கும் அத்தன்" என்று பாடுவார் மாணிக்கவாசகர்,

ஆகவே இறைவனை எந்த வடிவிலும் எந்தக் கோலத் திலும் வழிபடலாம். ஆனால் அந்த வழிபாடு தவமாக இருக்க வேண்டும். ஒருமைப்பட்ட மனத்தோடு எதற்கும் ஆசைப்படாமல் பக்தி பண்ணுவதே தவந்தான்.

**எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்.**

அவ்வாறு இறைவனிடம் ஈடுபடுபவர்களுக்கு இறைவன் திருவருள் செய்வான். "இன்ன வடிவில் என்னை வழிபட்டால் தான் அருள் செய்வேன்" என்று சொல்லமாட்டான். அவன் தனக்கென்று வரையறையாக ஒரு வடிவத்தை மட்டும் கொண்டிருந்தால் அதையே வழிபட வேண்டுமென்று வற்புறுத்துவான். அவன் தனக்கு என்று வடிவம் இல்லாதவன். என்றாலும் மனம் மொழி மெய்களை உடைய மக்களை ஆட்கொள்வதற்காக அவன் பல்வேறு வடிவங்களை எடுத்துக்கொள்கிறான்: பல திருநாமங்களை ஏற்கிறான்.

"ஒருநாமம் ஓருருவம் ஒன்றும் இலார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ?"

என்று மணிவாசகர் பாடுவார்.

அவன் அவ்வாறு எடுக்கின்ற வடிவங்களும் கோலங்களும் ஒரு காலத்தோடு நின்றுவிட்டன என்று சொல்ல முடியாது. அந்த அந்தக் காலத்துக்கு ஏற்ப அந்த அந்தச் சூழ்நிலைக்கு ஏற்றபடி அவன் திருவவதாரம் செய்கிறான்; வடிவமும் திருநாமமும் ஏற்கிறான்.

உண்மையில் ஒவ்வொரு பக்தனுடைய உள்ளத்திலும் ஒவ்வொரு கோலத்தில் எழுந்தருளி இறைவன் அருள் சுரக்கிறான். பொதுவாகக் கண்ணன், முருகன், இராமன் என்று சொன்னாலும் அந்த அந்தப் பக்தனின் உள்ளக் கோயிலில் உறைகின்ற கண்ணன் வேறு; முருகன் வேறு; இராமன் வேறு. நாரதர் பதினாறாயிரம் கோபிமார் வீட்டிலும் ஒரே சமயத்தில் தனித்தனியே கண்ணன் ஒவ்வொரு கோலத்தில் இருந்து திருவிளையாடல் புரிந்ததைக் கண்டதாகப் பாகவதம் சொல்கிறது. அது இந்தக் கருத்தையே புலப்படுத்துகிறது.

ஆகவே இறைவனை எந்த வடிவில், எந்தக் கோலத்தில் வழிபட்டாலும் அவன் அந்த வடிவிலும் அந்தக் கோலத்திலும் வந்து அருள் செய்வான்.

எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே ஆம்.

ஒரு வேடன் ஒரு காட்டில் வாழ்ந்திருந்தான். ஒரு நாள் ஒரு பெரியவர் காட்டு வழியே வந்தபோது அவனைச் சந்தித்தார். "அப்பா, நீ இப்படி நாள்தோறும் வேட்டையாடிப் பிராணி ஹிம்சை செய்து கொண்டிருந்தால் எப்படிக் கடைத்தேறுவாய்?" என்று அவ.ர் வேடனைக் கேட்டார். அவனுக்கு நல்ல காலம் வந்துவிட்டபலியால், "நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான். "இதோ இந்தக் காட்டின் ஓரத்தில் ஒரு பர்ணசாலையில் ஒரு மகான் இருக்கிறார். அவரிடம் போ. அவரை உனக்குக் குருவாகக் கொள். அவர் ஏதாவது உபதேசமாகச் சொல்வார். அதைப் பிடித்துக் கொள்" என்று சொல்லிப் போய்விட்டார்.

வேடன் அந்தப் பர்ணசாலைக்குப் போனான்: உள்ளே நுழைவதற்கு அச்சமாக இருந்தது. வெளியிலே காத்துக் கிடந்தான். அவர் வரவில்லை. மாலை நேரத்தில் ஒளிமங்கிய வேளையில் அவர் வெளியே வந்தார். வேடன் மரத்தின் பின்னுலிருந்தான். அவரைக் கண்டவுடன் அவரை, குரு என்று அழைக்க எண்ணினான். சரியாக வார்த்தை வரவில்லை. குர் என்றான். அந்த ஒலி மட்டும் காதில் விழுந்த முனிவர் ஏதோ பன்றி போலும் என்று எண்ணி, "பன்றி" என்றார். வேடன் அதையே உபதேசமாக எடுத்துக்கொண்டு போய் ஓரிடத்தில் உட்கார்ந்து தவம் செய்யத் தொடங்கினான். அன்ன ஆகாரம் இல்லாமல் தவம் செய்தான். "பன்றி, பன்றி" என்று சொல்லியும் பன்றியின் வடிவத்தை நினைந்தும் தவம் புரிந்தான். வேறு எந்த நினைவும் இல்லாமல் அதே தியானத்தில் இருந்தான்.

இறைவன் அவன் தவத்துக்கு இரங்கி வராகாவதார மூர்த்தியாக அவன் முன் தோன்றி; "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான். "நீ யார்?" என்று வேடன் கேட்டான். "நான்தான் நீ தியானித்த மூர்த்தி" என்றான்

இறைவன். "அப்படியானால் என் குருவினிடம் வா. அவர் தாம் எனக்கு உபதேசம் செய்தார். அவரைக் கேட்டுக் கொண்டு எனக்கு வேண்டுவதைச் சொல்கிறேன்" என்று அவன் புறப்பட்டான். இறைவன் அவனை அந்த வராக உருவத்தோடு பின் தொடர்ந்தான். குருவின் ஆசிரமத்தை அணுகினவுடன், "குருமூர்த்தியே, இதோ இது சொல்வது சரியா? நீங்கள் உபதேசித்த மந்திரத்துக்கு இதுதான் அர்த்தமா?" என்று கேட்டான். வராக மூர்த்தி அவர் கண்ணுக்குத் தெரியவில்லை. "என்ன அப்பா சொல்கிறாய்?" என்று முனிவர் கேட்டார்.

"இதோ பன்றியாக வந்து நிற்கிறதே; இது நான் தன்னை நினைத்ததாகச் சொல்கிறது. உங்கள் உபதேசத்துக்கு இது வந்தது சரியா?" என்று கேட்டான் வேடன்.

"யாரைச் சொல்கிறாய்? இங்கே யாரும் இல்லையே!" என்றார் முனிவர்.

உடனே வராகமூர்த்தியிடம், "இவருக்கு நீ தெரியவில்லையாமே! இவருக்கு முன்னாலே வா" என்று சொல்ல, எம்பெருமான் வராகக் கோலத்தை அந்த முனிவருக்கும் தெரியும்படி காட்டினார். முனிவர் ஆச்சரியத்தில் மூழ்கிப் பெருமானைக் கீழே விழுந்து வணங்கி, "எம்பெருமானே, உன்னுடைய கருணையை என்ன என்று சொல்வது?" என்று கண்ணீர் வார நின்றார்.

பிறகு அப்பெருமான் இருவருக்கும் திருவருள் பாலித்தான்.

இது ஒரு பழங்கதை. இக்கதை, தீவிரமான முயற்சி உடையவனுக்கு எந்தக் கோலத்திலும் இறைவன் எழுந்தருளி வந்து கருணைபுரிவான் என்பதைக் காட்டுகிறது.

இந்தக் கருத்தையே அம்மையார் சொல்கிறார். 'சும்மா புத்தகத்தைப் படித்துவிட்டு, எனக்கு அது தெரியும், இது தெரியும் என்று பிதற்றித் திரிந்து கொண்டிருக்க வேண்டாம்.

இறைவனை வழிபட்டுக் கரையேறப் பயிற்சி செய்ய வேண்டும். அந்த உலகத்தில் நுழைய வேண்டும். நான் நீலகண்டப் பெருமானையே எனக்குரிய மேலான மூர்த்தியாக மனமுவந்து ஏற்று வழிபடுகிறேன். நீங்கள் எந்தக் கோலத்திலும் எந்த வடிவிலும் வழிபடலாம். அந்த வழிபாடு முறுகிய பக்தியுடன் தவமாக அமைய வேண்டும். இங்கொரு காலும் அங்கொரு காலுமாக வைக்கக்கூடாது. அப்படித் தவம் செய்தால் இறைவன் அந்தக் கோலத்தோடு எழுந்தருளி நலம் செய்வான்' என்று பாடுகிறார்.

**நூல்அறிவு பேசி நுழைவுஇலா தார்திரிக!**
**நீல மணிமிடற்றான் நீர்மையே—மேல்உவந்தது**
**எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்**
**அக்கோலத்து அவ்வுருவே ஆம்.**

[நூலைக் கற்று அதனால் வந்த அறிவையே பெரிதாக எண்ணி வீண் பேச்சுப் பேசி, நுட்பமான வாலறிவுலகத்தில் புகாதவர்கள் ஒருபயனும் பெறாமல் திரிந்து கொண்டே இருக்கட்டும். நீலமணி போன்ற திருக்கழுத்தையுடைய பெருமானுடைய அனந்த கல்யாண குணங்களின் தொகுதியே, நான் மேலாக உவந்து ஏற்று வழிபடுவது; இறைவனை எந்தக் கோலத்தில், எந்த வடிவாக எண்ணி, எத்தகைய தவம் செய்தாலும் அவன் அந்தக் கோலத்தில் அந்த வடிவுடையவனாகவே வந்து அருள்புரிவான்.

நுழைவு-வாலறிவுலகத்தில் புகுதல். நீர்மை-கல்யாண குணங்களின் தொகுதி; உவந்தது என்று ஒருமை முடிபு பெற்றது. ஆம்-ஆவான்; அந்தக் கோலத்தையும் அந்த உருவத்தையும் எடுத்து வந்து அருள் செய்வான் என்பது குறிப்பு.]

இறைவனை எந்த வடிவில் வழிபட்டாலும் அவன் அருள் கிடைக்கும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியின் 33-ஆவது பாட்டு இது.

# 34. அணையாதார் பெறும் துன்பம்

சிவபெருமான் திரிபுரசங்காரம் செய்தான். வெள்ளி, பொன், இரும்பு என்ற மூன்று உலோகங்களாலும் பறக்கும் கோட்டைகளை அமைத்துக்கொண்டு வித்யுன்மாலி, தாரகாட்சன், வாணன் என்ற மூன்று அசுரர்கள் எங்கும் பறந்து வந்தார்கள். திடீரென்று ஓரிடத்தில் இறங்குவார்கள். அந்தக் கோட்டைகள் பூமியில் படியும்போது அங்கிருந்த அத்தனை பேர்களும் நசுங்கி அழிந்து போவார்கள். இப்படியே அவர்கள் செய்து வந்தார்கள். இதனால் அவர்களுக்கு எந்த லாபமும் இல்லை. ஆனாலும் அப்படி மக்கள் அழிவதைப் பார்ப்பதில் அவர்களுக்கு ஆனந்தம். பிறர் துன்பப்படுவதைக் கண்டு பொறுக்காமல் அந்தத் துன்பத்தை நீக்க முற்படுகிறவர்கள் தேவசாதியைச் சேர்ந்த உத்தமர்கள். அந்தத் துன்பத்தைக் கண்டு வருந்தி. "நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லையே!" என்று இரங்குபவர்கள், நல்ல மனிதர்கள். பிறர் துன்பத்தைக் கண்டு மனத்தில் எந்த வேறுபாடும் இல்லாமல் இருக்கிறவர்கள் விலங்குச் சாதியினர். பிறர் துன்பத்தைக் கண்டு மகிழ்பவர்கள் அசுர சாதியினர்.

இந்த மூன்று கோட்டைகளையும் திரிபுரங்கள் என்று சொல்லுவார்கள்; அதைத் தமிழ் வடிவமாகக்கொண்டால் இரண்டு வகையில் பொருள் கொள்ளலாம். மூன்று நகரங்கள் என்பது ஒரு பொருள்; வானத்தில் பறந்து திரியும் நகரங்கள் என்பது மற்றொரு பொருள். முப்புரம் என்று தமிழில் சொல்வார்கள்.

திரிபுரத்துக்கு உரியவர்களால் உண்டாகும் துன்பத்தைத் தாங்க முடியாமல் தேவர்கள் சிவபெருமானிடம் முறை

யிட்டுக் கொண்டார்கள். சிவபெருமான் திரிபுர சங்காரம் செய்யப் புறப்பட்டான்.

பூமியையே தேராகவும் சந்திர சூரியர்களையே தேர்ச் சக்கரங்களாகவும் நான்கு வேதங்களையே குதிரைகளாகவும் அமைத்து அந்தத் தேரில் ஏறினன். பிரமதேவன் தேரை ஓட்டும் சாரதியாக அமர்ந்தான்.

சிவபெருமான் மேருமலையை வில்லாக வளைத்து ஆதிசேடனை நாணுகப் பூட்டித் திருமாலையே அம்பாக வைத்துக்கொண்டு புறப்பட்டான். திரிபுரங்களை அணுகிய போது திருமாலுக்குச் சிறிதே தருக்கு உண்டாயிற்றும். 'நாம் அம்பாக இருந்து திரிபுரத்தை அழிக்கப் போகிறோம். நம்மால் தான் திரிபுரசங்காரம் நிகழப்போகிறது' என்று எண்ணினாராம். அதை அறிந்து சிவபெருமான் புன்னகை பூத்தான். அந்தப் புன்னகையின் ஒளி பட்டு மூன்று புரங்களும் அழிந்து விட்டன. மூன்று நகரங்கள் மட்டும் அழிந்தனவேயன்றி, அவற்றுக்குத் தலைவர்களாகிய அசுரர்கள் அழியவில்லை. தங்கள் புரங்கள் அழிந்தது கண்ட அந்த அசுரர்கள் சிவ பெருமான் அடியை வணங்கித் தாம் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும் என்று வேண்டிக்கொண்டார்கள். இறைவன் அவர்களுக்கு அருள்புரிந்து வாணனைத் தன் திருக் கோயிலில் முழவு வாசிப்பவனுகவும், மற்ற இருவர்களையும் வாயில் காவலராகவும் இருக்கும்படி பணித்தான்.

இறைவன் நெற்றிக் கண்ணுல் திரிபுரங்களை எரித்தான் என்றும், ஓர் அம்பை எய்து அழித்தான் என்றும் கூறுவதுண்டு.

புராணக் கதைகள் யாவும் உட்கருத்தை உடையவை. குழந்தைகளுக்கு நீதிக்கதைகள் சொல்லும்போது, "ஒரு நரி காக்கையைப் பார்த்து ஒரு பாட்டுப் பாடு என்று சொன்ன தாம்" என்று சொல்வார்கள். நரி எப்படிப் பேசும்? நீதியைப் புலப்படுத்த இத்தகைய கதைகளைச் சொல்வது உலகத்தில் எல்லா நாடுகளிலும் வழக்கம். உயர்ந்த கருத்துக்களை நுட்ப

மாகச் சொன்னால் விளங்காதென்று கதை வடிவில் சொல்வது புலவர்களின் இயல்பு. புராணங்கள் அத்தகையனவே. அவற்றைச் சிசுஸம்மிதம் என்பார்கள்; குழந்தைகளுக்கு உள்ளே கருத்தை வைத்துக் கதை சொல்வதுபோல அமைந்தவை என்பதனால் அவ்வாறு கூறுகிறார்கள்.

அப்படியானால் சிவபெருமான் முப்புரம் செற்றதற்கு என்ன கருத்து?

ஆன்மாவைக் கட்டுப்படுத்தும் பாசம் மும்மலம் எனப்படும். அவை ஆணவம், கன்மம், மாயை என்பன. இந்த மூன்றோடும் உயிர் இருக்கிறவரைக்கும் முத்தியை அடைய முடியாது, இவை நீங்கினால்தான் இறைவனோடு ஒன்றி அத்துவித முத்தியை அடையும். அந்த மும்மலத்தை ஞானத்தால் அழிக்கவேண்டும். மலம் அழியுமே அன்றி, அதனோடுள்ள ஆன்மா அழியாது. இறைவன் ஞானத்தைத் தந்து ஆன்மாக்களின் மலங்களை அழியச் செய்து, மோட்சத்தை அருளுவான்.

திரிபுரங்கள் மும்மலங்களைக் குறிப்பவை. அவற்றையுடைய அசுரர்கள் மலங்களோடு இணைந்த ஆன்மாக்கள். மும்மலத்தோடு இணைந்த உயிர் பிறவிதோறும் சுழன்று திரிந்து வரும். அசுரர்கள் பறந்து திரிந்தார்கள். இறைவன் திருவருளால் ஞான ஒளி உண்டாகும். சிவபெருமான் புன்முறுவல் பூக்க அந்த ஒளி திரிபுரங்களின்மேற் பட்டது. ஞானத்தால் மும்மலங்கள் அழியும். புன்முறுவலின் ஒளியால் திரிபுரங்கள் எரிந்தன. மலம் நீங்கிய ஆன்மா இறைவனை அடைந்து இன்புறும். திரிபுரம் அழிந்தவுடன் அசுரர்கள் இறைவனைச் சார்ந்தார்கள்.

திரிபுரசங்காரத்தின் உட்பொருள் இது என்பதைத் திருமூலர் திருமந்திரத்தில் சொல்கிறார்:

> **அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்**
> **முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்;**

முப்புர மாவது மும்மல காரியம்;
அப்புரம் எய்தமை யாரறி வாரே?

மூன்று மலங்களில் ஒன்று கன்மம். அதுவே, பிறப்புக்குக் காரணமாவது. அது நல்வினை, தீவினை என்று இருவகைப்படும்; புண்ணியம், பாவம் என்றும் சொல்வார்கள். அந்த வினைகளுக்குரிய இன்ப துன்பங்களை அநுபவித்துக் கழிக்கப் பிறவி எடுக்கவேண்டும். நல்வினைகூடப் பிறப்புக்குக் காரணந்தான். அதனால் இரண்டு வினைகளையும், "இருள்சேர் இருவினை" என்று திருவள்ளுவர் கூறுகிறார். நல்வினை பொன் விலங்கு போன்றது; தீவினை இரும்பு விலங்கு போன்றது. பொன் உயர்ந்ததே ஆனாலும் விலங்கு விலங்குதானே?

அப்படியானால், பெரியவர்கள், 'நல்ல வினைகளைச் செய்ய வேண்டும். புண்ணியத்தை ஈட்ட வேண்டும்' என்று உபதேசிக்கிறார்களே, ஏன்? நாம் அதிகமாகத் தீவினைகளைத் செய்கிறோம். அவற்றை ஈடுகட்ட நல்வினை செய்ய வேண்டும். அப்போதுதான் வினைகள் இல்லாத சமநிலை வரும். கடன் நிரம்ப வாங்கினவன் தொழில் செய்து லாபம் சம்பாதித்துப் பொருளை ஈட்டினால் அதைக் கொண்டு கடனை அடைத்து விடலாம். பிறகுஅவனுக்குத் தொல்லையே இராது. கடனுக்கு மேல் அதிகப் பணம் ஈட்டினால் அதை யாருக்காவது தானம் பண்ணிவிடலாம். அப்படியே, புண்ணியம் அதிகமாகச் செய்தால் பாவம் நீங்கிப் புண்ணியப் பயனாகிய சொர்க்க பதவி கிடைக்கும்: புண்ணியப் பயன் தீர்ந்தால் உலகிற் பிறந்து ஞானம் பெற்று இறைவன் திருவடியை அடையலாம்.

தீய வினையை வல்வினை என்றும் சொல்லலாம். அதனுடைய விளைவு துன்பம். இந்தப் பிறவியில் நல்ல செயல்களையே செய்கிறவனும் துன்பம் அடைகிறதைக் காண்கிறோம். அதற்குக் காரணம் என்ன? முற்பிறவியில் செய்த தீவினையின் பயனை இப்போது அநுபவிக்கிறான்.

தீவினை சேராமல் இருக்க வேண்டுமானால் இறைவனை மூன்று கரணங்களாலும் வழிபட வேண்டும. பிறப்புக்குக் காரணமான நல்வினை, வல்வினை என்னும் இரண்டுமே இறைவனை வழிபடுபவர்களிடமிருந்து அகன்றுவிடும்.

இருள்சேர் இருவினையும் சேரா. இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு
என்பது திருக்குறள்.

இறைவனை வழிபடாதவர்கள் தீவினை செய்வதில் ஈடுபடுவார்கள். செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருப்பதும் தீவினைதான். இறைவனை ஏத்தாமல் இருப்பது கடமையை மறந்த பாவம். அது எப்படி என்று கேட்டலாம்.

'இனிமேல் நமக்கு மோட்சப் பதவி கிடைக்க வேண்டும்' என்று இறைவனை வழிபட்டுப் புகழ்வது கிடக்கட்டும். அவன் இதுவரைக்கும் நமக்குச் செய்த நன்மைகளை எண்ணி நாம் நன்றியறிவோடிருக்க வேண்டும். நமக்குத் தனு கரண புவன போகங்களைத் தந்து வாழ விட்டிருக்கிறானே, இந்த உபகாரத்தை நினைக்க வேண்டாமா? நாம் அவனுக்குத் தனு முதலியவற்றைத் தர முடியுமா? அவன் கைம்மாற்றை எதிர் பார்க்கிறதில்லை. நம்மால் அவனுக்கு எதையும் செய்ய முடியாது. பொன்னை அணிந்தவர்களுக்கு அந்தப் பொன்னணிகளால் அழகும், ஆபத்துக்கு உதவும் நன்மையும் உண்டாகும். ஆனால், அந்தப் பொன்னுக்கு அவர்களால் என்ன பயன்?

பொன்னால் ப்ரயோசனம் பொன்படைத்தாற்குண்டப்
பொன்படைத்தான்
தன்னால் ப்ரயோசனம் பொன்னுக்கங் கேதுண்டு? அத்
தன்மையைப்போல்
உன்னால் ப்ரயோசனம் வேணதெல் லாமுண்டாம்
இங்குனக்கென்
தன்னால் ப்ரயோசனம் ஏதுண்டு காண்கச்சி ஏகம்பனே.

என்று பட்டினத்தார் பாடுவார்.

ஆகவே, இறைவன் நமக்குச் செய்த உபகாரங்களுக்கு மாருக நாம் ஏதும் செய்ய முடியா விட்டாலும், நன்றியறிவுடன் அவனை நினைக்க வேண்டும்; வழிபட வேண்டும். இல்லையாளுல் நன்றி கொன்ற பாவம் உண்டாகும். அந்தப் பாவம் மிகவும் கொடுமையானது. அதனுல் விளையும் துன்பம் மிகப் பெரிது. செய்ந்நன்றி கொன்ற பாவம் எல்லாவற்றிலும் பெரிது என்பதை வள்ளுவர் சொல்லியிருக்கிருரே!

எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

ஆகையால் நமக்குப் பல வகையில் நலம் செய்த ஆண்டவனை நெஞ்சார நினைக்க வேண்டும்; உருக வேண்டும். அப்படி நினைக்க நினைக்க அவன் நமக்கு அருகில் வருவான்; நாம் அவனை நெருங்கிக் கொண்டே இருக்கலாம். அதனுல் நம்மைத் தீவினைகள் அணுகா. அவ்வாறு செய்யாவிட்டால் அதுவே தீவினையாம். தீவினையினுல் ஒருகாலும் நல்லது வராது; வல்வினைகள் யாருக்கும் நலம் உண்டு பண்ணுவதில்லை; ஆக்கம் அல்லது ஆமாற்றுக்கும் அவற்றுக்கும் நெடுந்தூரம்.

இந்தக் கருத்தைச் சொல்ல வருகிருர் காரைக்கால் அம்மையார். திரிபுராதிகள் அசுரர்களானது எப்படி? இறைவனைத் தலைவனென்று அறிந்து, அவனுக்கு நாம் அடிமைகள், ஆட்கள் என்று உணர்ந்து, அவனை ஏத்தவில்லை. தாமே தலைவர்கள் என்று எண்ணிக் கொண்டு திரிந்தார்கள். அதனுல் அசுரர்களானுர்கள். அவர்களுடைய நகரங்கள் மூன்றும் அவர்களுடைய அழிவு வேலைக்குத் துணையாக இருந்தன. அந்த நகரங்களை இறைவன் ஒரு கணையால் அழித்தான். அவனை நாம் நினைத்து வழிபடவேண்டும்.

**அந்தரத்தே**

**நாம் ஆள்என்று ஏத்தார் நகர்மூன்றும்—வேமாறு**
**ஒருகணையால் செற்ருனை உள்ளத்தால் உள்ளி.**

அவனை நாம் அணுக வேண்டும். அவன் நுட்பமான பொருள். மனத்தால் நினைத்து நினைத்து அவனை அணுக வேண்டும். பக்கத்துப் பக்கத்து வீட்டில் இருந்தாலும் மனத்தால் விலகியிருக்கும் பல பேரை நாம் பார்க்கிறோம். தன் காதலன் நெடுந்தூரத்தில் இருந்தாலும் அவனை நினைத்து நெருக்கமாக இருப்பாள் காதலி. இந்த உணர்ச்சியே உறவுக்கு வலிமை. அதனால்தான்,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்."

என்று வள்ளுவர் சொன்னார். இறைவனை உள்ளத்தால் உள்ளி அருகு அணைய வேண்டும். அப்போது அவன் அருளால் தீவினைகள் நம்மைச் சாரா. இல்லையானால், அவை நம்மை வந்து துன்புறுத்தும். அவற்றால் நலம் உண்டாகாது. 'எங்கே பொல்லாதவர்கள் இருக்கிறார்கள், இறைவனை மறந்து நன்றி கொன்றவர்கள் எங்கே இருக்கிறார்கள்;' என்று வல்வினைகள் காத்துக் கொண்டே இருக்கும்; அவர்களைக் கண்டால் வேட்டைநாய் பாய்வதுபோல் பாய்ந்து குலைத்துவிடும்.

அருகணையாதரை....வல்வினைகள் அடும்.

என்கிறார் அம்மையார். பாட்டு முழுவதும் பார்க்கலாம்.

ஆமாறு அறியாலே வல்வினைகள்; அந்தரத்தே
நாம்ஆள்என்று ஏத்தார் நகர்மூன்றும்—வேமாறு
ஒருகணையால் செற்றானை உள்ளத்தால் உள்ளி
அருகுஅணையா தாரை அடும்.

[நன்மைகள் உண்டாகும் வழியைத் தீவினைகள் அறியா; நாம் இறைவனுக்கு அடிமைகள் என்பதை உணர்ந்து அவனைத் துதித்து வணங்காத மூன்று அசுரர்களுக்குரியன வாகிய, வானத்தில் பறந்த மூன்று நகரங்கள் வெந்து எரியும்

படியாக ஓர் அம்பினால் அழித்தவனை மனத்தினாலே தியானித்து, அவனை நெருங்கிப் பக்தி செய்யாதவர்களை அந்த வினைகள் துன்புறுத்தும்.

வினைகளுக்கு நல்லது செய்யத் தெரியாது; துன்பத்தையே செய்யும் என்றார்.

ஆமாறு—வளர்ச்சி பெறும் வழி; ஆக்கத்தைப் பெறும் நெறி. அந்தரம்-வானம். வேமாறு-வேகும்படி. நகர் மூன்றும் செற்றானை வல்வினைகள் ஆமாறு அறியா; அடும் என்று கூட்டிப் பொருள் கொள்க.]

இறைவனை வழிபட்டு அன்பு செய்யாதவர்கள் வல்வினையால் துன்புறுவார்கள் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் 34-ஆவது பாட்டு இது.

# 35. இருள் இருக்கும் இடம்

தாய்க்குக் குழந்தையைக் கண்ணாரக் கண்டு கண்டு மகிழ்வதில் ஒரு திருப்தி. தன் மைந்தனின் ஒவ்வோர் அங்கத்தையும் கண்டு கண்டு, மனம் குளிர்வாள். அவளுக்கு வாக்கு வன்மை இருந்தால் பிற பெண்களோடு தன் குழந்தையின் அழகையும் இயல்பையும் வருணித்து வருணித்துப் பேசுவாள். இது தாய்மையின் இயல்பு.

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் ஈடுபட்டு அன்பு செய்வதில் பல பல வகையான நிலையிலிருந்து மகிழ்கிறவர். தன் குழந்தைக்கு ஏதேனும் தீங்கு வரப்போகிறதே என்று அஞ்சும் தாயைப் போலச் சில சமயம் பேசுவார். "இப்படியெல்லாம் செய்யக்கூடாது அப்பா" என்று அறிவுரை சொல்வது போலச் சொல்வார். இவை தாய்நிலையிலிருந்து பேசுபவை.

"எனக்கு இரங்கமாட்டாயா?" என்று கெஞ்சுவார். "உன்னுடைய அருளை உலகத்தார் அறியவில்லையே!" என்று அங்கலாய்ப்பார். "உன்னுடைய பெருமைக்கு ஈடு உண்டா?" என்று பெருமைப்படுவார். "நீ என் துன்பத்தைப் போக்காவிட்டாலும் நான் உன்னைமறக்கமாட்டேன்" என்று கூறுவார். இவ்வாறு கூறும் இடங்களில் எல்லாம் அவருடைய பக்தி பரவசம் மீதூர்ந்து நிற்கும்.

இப்போது தாய் தன் குழந்தையின் எழிலை அநுபவிக்கும் பாங்கில் அவர் பேசுகிறார். அம்மையாருக்கு இறைவனுடைய நீலகண்டத்தில் ஈடுபாடு அதிகம். வெவ்வேறு வகையில் அதன் பெருமையை எடுத்துரைப்பார். அதனால் விளைந்த

# 35. இருள் இருக்கும் இடம்

தாய்க்குக் குழந்தையைக் கண்ணாரக் கண்டு கண்டு மகிழ்வதில் ஒரு திருப்தி. தன் மைந்தனின் ஒவ்வோர் அங்கத்தையும் கண்டு கண்டு மனம் குளிர்வாள். அவளுக்கு வாக்கு வன்மை இருந்தால் பிற பெண்களோடு தன் குழந்தையின் அழகையும் இயல்பையும் வருணித்து வருணித்துப் பேசுவாள். இது தாய்மையின் இயல்பு.

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் ஈடுபட்டு அன்பு செய்வதில் பல பல வகையான நிலையிலிருந்து மகிழ்கிறவர். தன் குழந்தைக்கு ஏதேனும் தீங்கு வரப்போகிறதே என்று அஞ்சும் தாயைப் போலச் சில சமயம் பேசுவார். "இப்படியெல்லாம் செய்யக்கூடாது அப்பா" என்று அறிவுரை சொல்வது போலச் சொல்வார். இவை தாய்நிலையிலிருந்து பேசுபவை.

"எனக்கு இரங்கமாட்டாயா?" என்று கெஞ்சுவார். "உன்னுடைய அருளை உலகத்தார் அறியவில்லையே!" என்று அங்கலாய்ப்பார். "உன்னுடைய பெருமைக்கு ஈடு உண்டா?" என்று பெருமைப்படுவார். "நீ என் துன்பத்தைப் போக்கா விட்டாலும் நான் உன்னை மறக்கமாட்டேன்" என்று கூறுவார். இவ்வாறு கூறும் இடங்களில் எல்லாம் அவருடைய பக்தி பரவசம் மீதூர்ந்து நிற்கும்.

இப்போது தாய் தன் குழந்தையின் எழிலை அநுபவிக்கும் பாங்கில் அவர் பேசுகிறார். அம்மையாருக்கு இறைவனுடைய நீலகண்டத்தில் ஈடுபாடு அதிகம். வெவ்வேறு வகையில் அதன் பெருமையை எடுத்துரைப்பார். அதனால் விளைந்த

நன்மையைச் சொல்வார். அதற்கு உவமை கூறிச் சிறப்பிப்பார். இப்போது சொல்லப்போகும் பாட்டில் நீலகண்டத்தை நினைந்து ஒரு கற்பனை செய்கிறார்.

அவனுடைய நீலமணி போன்ற திருக்கழுத்து விடத்தை உள்ளடக்கியிருக்கிறது. அந்த மறுவே நீலமணி போல் தோற்றுகிறது. இருள் செறிந்தது போலச் சில சமயங்களில் நல்ல கறுப்பாகத் தோன்றும். "கறைமிடறு அணியலும் அணிந்தன்று" (புறநானூறு) என்று அதைக் கறுப்பான கறை என்று புலவர்கள் கூறுவார்கள்.

ஒருகால் இருள் செறிந்து வந்து அங்கே கட்டிதட்டி நிற்கிறதோ? ஏன் அங்கே வந்து இருக்கவேண்டும்? இறைவன் திருமேனி ஒளியையுடையது. அவன் தலையில் இருக்கும் மதி ஒளியை வீசுகிறது. சந்திரனுடைய நிலாவினால் இருள் நீங்கும்.

இறைவன் அரவையே அணிகலனாகப் பூண்டிருக்கிறான். படம் எடுக்கும் நாகப்பாம்புகள் அவை. அவற்றின் கழுத்து அழகாக இருக்கும். வாயோ ஆழமான வாய். அத்தகைய அரவை அவன் முடியின்மேல் கட்டியிருக்கிறான். அரவுகளை அணிந்ததோடு கூட நீலமணியையும் அணிந்திருக்கிறானோ? கழுத்தில் நஞ்சு அப்படித் தோன்றுகிறது. ஆனால் ஒளி வீசும் சந்திரனைக் கண்டால் வேறு ஒரு கற்பனை தோன்றுகிறது.

அவனுடைய திருமேனி சுடர் வீசுகிறது. திருக்கழுத்தும் சுடர் வீசும் கோலம் உடையது. ஆனால் அங்கேதான் இருட்டைப் போல இந்தக் கறுப்பு இருக்கிறது.

அம்மையார் இறைவன் தலைமேல் உள்ள வெண்மதியைப் பார்க்கிறார். இறைவனுடைய திருமுடியாகிய உயர்ந்த இடத்தில் இருப்பதால் அதற்கு அச்சமே இல்லை. நன்றாக ஒளி விடுகிறது. 'இப்போதே இது இப்படி இருக்கிறதே! இது வளர்ந்துவிட்டால் இன்னும் எவ்வளவு ஒளிவிடும்?' என்று

சுற்றிச் சூழ உள்ள இருள் எண்ணிப் பார்க்கிறதாம். 'இப்பொழுதே இதன் ஒளியால் நாம் மெலிந்து வருகிறோம். இனிச் சில காலம் போனால் இது வளர்ந்து தன் ஒளியினால் நம்மை அடியோடு அழித்துவிடும்' என்று அஞ்சுகிறது. என்ன செய்வது? எங்கே பாதுகாப்புத் தேடுகிறது?

நஞ்சுடைய நாகத்துக்கும் புகலிடம் தந்து அதை அணி கலனாகப் பூண்டிருக்கிறான் சிவபெருமான் என்பதை அது பார்க்கிறது. படமெடுக்கும் பாம்பு என்றால் படையும் நடுங்கும். அதை இறைவன் அணிகலனாக ஏற்றிருக்கிறான். 'அவன் அணிந்த வெண்மதியினால் நமக்குத் தீங்கு வருவதற்கு முன்னம் அவனையே புகலடைவோம்' என்று அந்த இருள் எண்ணியதாம். 'இந்த இடந்தான் நமக்கு ஏற்றது' என்று அப் பெருமான் கோலமிடற்றையே அடைந்து செறிவுடைய தாகி, அங்கே இடம் கொண்டுவிட்டதாம். அவ்வாறு இருள் வந்து தங்கியதைப் போல இருக்கிறதாம், ஐயனுடைய மணி மிடற்றின் உள்ள மறு. இப்படி ஒரு கற்பனை செய்து மகிழ் கிறார் காரைக்கால் அம்மையார்.

> "அடும்கண்டாய் வெண்மதிஎன்று
> அஞ்சிஇருள் போந்து
> இடம்கொண்டு இருக்கின்றது
> ஒக்கும்;—படங்கொள்
> அணிமிடற்ற பேழ்வாய்
> அரவுஅசைத்தான் கோல
> மணிமிடற்றின் உள்ள மறு.

[படத்தைக் கொண்டனவும், அழகிய கழுத்தையுடையன வும், ஆழமான வாயை உடையனவுமாகிய நாகப்பாம்புகளை அணிகலனாகக் கட்டியவனுடைய அழகையுடைய நீலமணி போன்ற கழுத்தில் உள்ள நஞ்சின் கறுப்பான அடையாள மானது, 'இந்த வெண்மதி நம்மை அழித்துவிடும்' என்று

பயந்து இருளானது இங்கே வந்து இந்த இடத்தைப் பற்றிக் கொண்டு இங்கேயே தங்கியிருக்கிறதைப்போல இருக்கும்.

மறு ஒக்கும் என்று கூட்டுக. அடும் - அழித்துவிடும். கண்டாய் - அசை. பேழ்வாய் - ஆழமான வாய். அசைத்தான் -கட்டியவன். மிடற்றின் உள்ள மணி போன்ற மறு.]

அம்மையார் இறைவனை நெருங்கிக் கண்டு அவன் எழில் நலத்தை அநுபவிக்கும் பாங்கில் அமைந்தது இந்தப் பாட்டு.

இது அற்புதத் திருவந்தாதியில் 35-ஆம் பாடல்.

# 36. வளராத மதி

இறைவனுடைய திருமுடியில் உள்ள பிறை வளர்வதும் இல்லை; தேய்வதும் இல்லை. தட்சனுடைய சாபத்தால் தேய்வுற்ற மதியை இறைவன் தன் திருமுடியில் அணிந்து காப்பாற்றினன். இறைவனைச் சார்ந்த யாவரும் எந்த மாற்றமும் இல்லாமல் ஒரே நிலையில் இருப்பார்கள் என்ற உண்மையை மதியின் நிலை தெளிவிக்கிறது.

சந்திரன் பிறையாக, தேய்ந்த மதியாக, இறைவன் திருமுடியில் இருப்பதற்குக் காரைக்காலம்மையார் ஒரு காரணம் கற்பிக்கிறார். குழந்தையோடு நெருங்கி வேடிக்கையாகப் பேசும் தாயைப்போல இருப்பவர் அம்மையார். இறைவனே, "அம்மையே!" என்று அழைத்த அம்மையார் அவர். ஆகவே தம்முடைய கற்பனையான எண்ணங்களையெல்லாம் இறைவனை பார்த்தே சொல்கிறார்.

'சுவாமி, உம்முடைய திருமுடியின் மேல் உள்ள மதி தேய்ந்து வருந்துகிறது; அதைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது. நீர் அந்த முடியின்மேல் பாம்பை அணிந்திருக்கிறீர். எல்லோரும் அஞ்சும் பாம்பை நீர் அணிகலனாகக் கொண்டிருக்கிறீர். தேவர்களெல்லாம் அஞ்சி நடுங்கிய ஆலகால விஷத்தையே கழுத்திலே மணிபோல அணிந்தவராயிற்றே, நீர்! இந்தப் பாம்பைக் கண்டு அஞ்சாததில் என்ன வியப்பு இருக்கிறது?' இப்படியெல்லாம் எண்ணி இறைவனை விளிக்கிறார்.

மறுவுடைய கண்டத்தீர்!

'நாகத்தைக் கண்டு மக்கள் யாவரும் நடுங்குவது கிடக்கட்டும். சந்திரனுக்கும் பாம்புக்கும் பகை. கிரகண காலங்

களில் பாம்பு விழுங்கி உமிழும் இன்னலுக்கு உட்படுவது திங்கள். என்றோ ஒருநாள் அந்த விபத்து நிகழ்ந்தாலும், அதை நினைத்து நாகப்பாம்பு என்றாலே அச்சம் கொள்ளும் இயல்புடையது அந்தத் திங்கள். "அருண்டவனுக்கு இருண்ட தெல்லாம் பேய்" தானே?

'இந்தச் சந்திரன் உம்முடைய நீண்ட சடைமேல் உள்ள நாகத்தைக் கண்டு அஞ்சி நடுங்குகிறது, எந்தச் சமயத்தில் அது தன்னை விழுங்கி விடுமோ என்று மறுகுகிறது. அதனால் அது தேய்ந்திருக்கிறது, ஐயோ பாவம்!'

வார்சடைமேல் நாகம்

தெறும் என்று தேய்ந்து உழலும்; ஆவா!

'அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல் நோஞ்சானாகத் தேய்ந்திருக்கிறது இந்த மதி. பாம்பையும் திங்களையும் ஒருங்கே அணிந்ததால் வந்தவினை இது. அந்த நாகம் என்ன செய்து விடுமோ என்று அஞ்சி அஞ்சிச் சாகும்படி வைத்திருக் கிறீரே! நியாயமா? அந்தப் பாம்பு ஏதோ இதுவரையில் சும்மா இருக்கிறது. வானத்தில் உள்ள சந்திரனைப் போல வளரக்கூடாதோ என்று நினைத்துப் பார்க்கிறேன். அது எப்படி வளரும்? அந்தப் பாம்பு வானம் அஞ்சும்படி மேலே தாவி ஓடினால் சந்திரனை எட்டிப் பிடித்துவிடுமே! நீ உச்சியில் அணிந்த பிறை இப்போது நாகத்தோடு தொடர்பு இல்லா மல் இருக்கிறது. ஆனால் அந்தப் பாம்பு எட்டித் தாவ ஆரம் பித்தால் என்ன செய்வது? அப்படி அது தாவுமோ என்று பயந்தபடியே இருக்கிறது அந்த மதி. அது எப்படி வளரும்? நாகப்பாம்பு முழுமதியை விழுங்கிவிடும். மதி வளர்ந்து பூர்ண சந்திரன் ஆகிவிட்டால் அந்தப் பாம்பு ஒரே தாவாகத் தாவி அதை விழுங்கினாலும் விழுங்கும். அது அப்படி முடியின்மேலே தாவும்போது வானில் உள்ளவர்களே அஞ்சுவார்களே! திங்கள் அஞ்சாமல் இருக்குமா? அந்த அச்சத்தால்தான் அது வளராமல் இருக்கிறது, தான் வளர்ந்து முழுமதியாகி விட்

டால் நாகப்பாம்புக்கு இரையாக நேரும் என்ற அச்சம் காரணமாகவே அது வளராமல் இருக்கிறது. நாகத்தை அருகிலே வைத்திருக்கும்போது, சந்திரன் வளருமா?'

....உறுவான்
தரைமீது ஒடுமேல், தான்அதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி?

அது பிள்ளைமதியாக, பிறையாகவே தேய்ந்திருப்பதற்குக் காரணம் இதுதான் என்று காரைக்கால் அம்மையார், கற்பனையாக ஒன்றைச் சொல்கிறார்.

மறுவுடைய கண்டத்தீர்,
வார்சடைமேல் நாகம்
தெறும்என்று தேய்ந்துஉழலும்
ஆவா! — உறுவான்
தளரமீது ஒடுமேல்
தான்அதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி?

[ஆலகால நஞ்சமாகிய மறுவை அளித்த திருக்கழுத்தை உடைய உடைய பெருமானே!, இள்மையையுடைய பிறை, உம்முடைய நீண்ட சடையின்மேல் அணிந்துள்ள நாகப் பாம்பு தன்னை வருத்தும் என்று அஞ்சித் தேய்ந்து மனம் மறுகும். ஐயோ பாவம்! (தான் வளர்ந்து முழுத்திங்களாகி விடும்போது) மேலே உள்ள வானத்திலுள்ளோர் தளரும்படி யாக அந்தப் பாம்பு மேலே தன்னைக் கவ்வ ஓடுமானால், அந்த மதி அஞ்சி நையுமேயன்றி வளருமா?

மறு—கறுப்பு, தெறும்—துன்புறுத்தும், உழலும்—மனம் சுழலும்; கலங்கும், ஆவா; இரக்கக் குறிப்பு, வான்—வானில் உள்ளார், ஓடுமேல் என்றது, வளர்ந்தபோது அதைக் கவ்வ

ஓடும் என்ற கருத்தை உட்கொண்டது, தான் என்றது மதியை. பிள்ளை மதி—பாலசந்திரன்; இளம்பிறை.]

பிறை அச்சத்தினாலே வளராமல் தேய்ந்திருக்கிறது என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் உள்ள 36-ஆம் திருப்பாட்டு.

# 37. திருக்கோல உண்மை

நாம் உலகில் சில காட்சிகளைக் காண்கிறோம். முதலில் தீயனவாகத் தோன்றினாலும் ஆராய்ந்து பார்த்தால் அவை நல்லனவாக இருக்கும். மருத்துவர், அறுவை மருத்துவம் செய்யும்போது பார்க்கப் பரிதாபமாக இருக்கும். அறியாத குழந்தை மருத்துவர் நோயாளியைத் துன்புறுத்துகிறார் என்று எண்ணும். ஆனால் மருத்துவர் செயல் நன்மையையே பயப்பது. சிலர் பார்வைக்கு நல்லவர்களாக இருப்பார்கள்; ஆனால் பண்பில் கொடியவர்களாக இருப்பார்கள். சிலர் பார்ப்பதற்கு முரடர்களைப்போலத் தோன்றுவார்கள்; ஆனால் அவர்கள் நல்ல பண்புடையவர்களாக இருப்பார்கள். ஆராய்ந்து அவர்கள் இயல்பைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

> "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்ற குறளால் இந்தக் கருத்து வெளியாகும்.

உலகியல் காட்சிகளே இப்படியானால் முழுக்க முழுக்கக் குறியீடுகளாக விளங்கும் தெய்வங்களின் தோற்றமும் செயல்களும் நுட்பமாக ஆராய்ந்தாலன்றி உண்மை உணர முடியாதவையாக இருக்கும்.

இந்த நாட்டில் சமய சம்பந்தமான நிகழ்ச்சிகளிலும் அமைப்புக்களிலும் உள்ளுறையாகத் தத்துவம் புதைந்திருக்கும். கோவிலானாலும் மூர்த்தியானாலும், திருவிழாவானாலும், குடமுழுக்கானாலும் எல்லாவற்றுக்கும் உட்பொருள் உண்டு. அந்த உட்பொருளை உணர்ந்தால் நம்முடைய சமயக் கருத்துக்களின் நேர்மை புலப்படும்.

பொதுவாக விஞ்ஞானத்தில் மேல் நிலைக்குப் போகப் போகக் குறியீடுகளே அதிகமாக இருக்கும். அவற்றின் நுட்பத்தை அறியாதவர்கள் அவற்றைக் கண்டு, எள்ளி நகையாடவும் கூடும் அறியாமையுடையவர்கள் மதித்தாலும் அவமதித்தாலும் அதைப் பற்றி அறிஞர்கள் கவலைப்பட மாட்டார்கள். உண்மையை உணர்பவர்கள் அவற்றால் பயன் பெறுவார்கள். அப்படிப் பயன்பெற்றவர்கள், அறியாமை யால் அவற்றைப் பழிப்பவர்களை நோக்கி இரங்குவார்கள். "பாவம்! இவர்கள் உண்மையை அறியாமல், இவற்றால் பயனை அடையாமல் வாழ்க்கையை வீணாக்குகிறார்களே!" என்று இரக்கம் கொள்வார்கள்.

இறைவனுடைய தோற்றம், அவனுடைய திருமேனியில் உள்ள பொருள்கள் யாவுமே பல உண்மைகளைப் புலப் படுத்தும். அவன் தன் திருமேனியில் என்பை அணிந்திருக் கிறான். முழு எலும்பாகிய எலும்புக்கூட்டைக் கங்காளம் என்பார்கள். அந்தப் பெருமான் கங்காளத்தைத் தோளின் மேல் சுமந்துகொண்டிருக்கிறான். அதைக்கண்டு, "அருவருக்கத் தக்க எலும்பை அணிந்தவனையா கும்பிடுவது?" என்று எண்ணக்கூடாது.

சடையப்ப வள்ளல் வீட்டுக்கு ஒருவர் விருந்தாளியாகப் போனார். வள்ளல் பெரிய செல்வர் என்று கேள்வியுற்றிருந் தார். அவர் சடையப்பருடைய வீட்டை அடைந்தபோது, அந்த வள்ளல் கீழே சிந்தியிருந்த நெல்மணிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தார். அதைக் கண்ட விருந்தாளிக்கு, 'சிந்தின சில நெல்லைப் பொறுக்குகிறாரே! இந்த அற்பமான பொருளை இப்படிப் பெரிதாக மதிப்பவர் எப்படிப் பெரிய வள்ளலாக இருக்கக்கூடும்?' என்று எண்ணினார். நெல்லைப் பொறுக்கி எடுத்தபிறகு சடையப்பர், "வாருங்கள், சாப்பிடப் போக லாம்" என்றார். அப்போது விருந்தாளி, "சிந்திய வைரமணி களைப் பொறுக்குவது போல, நெல்லைப் பொறுக்கினீர்களே! யாரையேனும் விட்டு அவற்றைப் பெருக்கித் தள்ளும்படி

செய்திருக்கலாமே!" என்றார். அதைக் கேட்டுச் சடையப்ப வள்ளல் புன்னகை பூத்தார்; ஒன்றும் பேசவில்லை.

இருவரும் உணவு உண்ண அமர்ந்தார்கள். அப்போது சில வைரமணிகளை விருந்தாளியின் இலையில் போடச் சொன்னார் வள்ளல். அதைப் பார்த்துப் பிரமித்தார் விருந்தாளி.

"சாப்பிடுங்கள்" என்றார் சடையப்பர்.
"இதையா?" என்று கேட்டார் விருந்தாளி.

"நெல்மணிகளைவிட வைரமணிகள் உயர்ந்தவை என்றீர்களே! இப்போது இதை உண்ணுங்கள்" என்றார் வள்ளல். விருந்தாளி திகைத்தார்.

"எவ்வளவு செல்வம் இருந்தாலும் உணவுக்கு ஒப்பாகாது. அந்த உணவுப் பொருளை வீணாக்காமல் பயன்படுத்த வேண்டும். சிறிதளவு நெல் என்று ஒதுக்கி விட்டால் அதனால் கிடைக்கும் ஒருபிடி சோற்றை வீணாக்கினவராவோம். அந்த ஒரு பிடி சோற்றுக்குத் திண்டாடுகிறவர்கள் உலகில் இருக்கிறார்கள்" என்று வள்ளல் உண்மையை உணர்த்தியபொழுது விருந்தாளி, தம் அறியாமைக்கு இரங்கினார்.

இவ்வாறு ஊன்றிப் பார்க்காமல், மேலெழுந்தவாரியாகப் பார்த்து ஒன்றைத் தீர்மானிக்கக்கூடாது.

இறைவன் தேவர்களின் எலும்பை அணிந்திருக்கிறான். பிரமன் திருமாலாகியவரின் முழு எலும்பாகிய கங்காளத்தைத் தோள் மேலே புனைந்திருக்கிறான். இவை அவனுடைய நித்தியத் தன்மையைக் காட்டுவதோடு பதவி, பெருமை, பொருள் யாவும் நிலையாதவை என்பவற்றையும் காட்டும். யார் அழிந்தாலும் அவன் அழியாத தகைமையன் என்று அவனை இனம் கண்டுகொள்ளும் அடையாளங்கள் அவை.

"நங்காய்இ தென்ன தவம்?
நரம்போடு எலும்புஅணிந்து
கங்காளம் தோள்மேலே
காதலித்தான் காணேடீ!
கங்காளம் ஆமாகேள்:
காலாந் தரத்துஇருவர்
தம்காலம் செய்யத்
தரித்தனன்காண் சாழலோ"

என்ற திருவாசகப் பாடல் இதனை உணர்த்துகிறது.

ஒரு குழந்தை இறந்தபிறகு அதனிடத்தில் இருந்த அன்பினால் பெற்றோர் அது வைத்திருந்த பண்டங்களைப் பாதுகாத்து வைப்பது போல, இறைவனும் தேவர்களின் எந்தாருப்புகளை அன்பினால் அணியாக அணிந்து கொண்டான். அவனுடைய அழிவின்மையையும், எவ்வளவு சிறந்த பதவியில் இருந்தாலும் உரிய காலம் வந்தால் மற்றவர்கள் மறைவதையும், அந்த என்புகள் காட்டுகின்றன.

ஆகவே அவற்றைக் கண்டவர்கள், 'நாமும் இப்படியே அழிந்து போவோம்' என்று உணர்ந்து கொள்ள வேண்டும்: அப்பால், நாம் அழியாத இன்பத்தைப் பெற வேண்டும் என்ற ஆர்வத்தை மேற்கொள்ள வேண்டும். அழியாதவனைச் சார்ந்தால் அழியாத இன்பம் பெறலாம் என்ற உணர்வு வர வேண்டும். யார் அழிந்தாலும் எது அழிந்தாலும் அழியாதவன் இறைவன் ஒருவனே என்று தெளிய வேண்டும். அப்பால் அவனை நன்கு மதித்து வழிபட வேண்டும்; புகழ வேண்டும்.

இவ்வளவு எண்ணங்களையும், முயற்சிகளையும் உண்டாக்குவதற்குத் துணையாக நிற்பது இறைவன் திருக்கோலம்.

நம்முடைய உடல் முதலியன நிலையாதவை என்பதைப் பல சமயங்களில் மறந்து போகிறோம். யாரேனும் இறந்து போனால் அப்போதைக்கு அது நினைவுக்கு வருகிறது. அடுத்த கணமே மறந்து போகிறது. பிணத்தைக் கண்டால் அச்சம் உண்டாகிறது. பிறகு அந்த அச்சம் போய் விடுகிறது. சுடுகாடு நம்முடைய நிலையாமையைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது. ஆனால் அதை எப்போதுமா பார்த்துக் கொண்டிருக்கிறோம்? இத்தனையும் நம் உணர்வில் படவேண்டிய ஒரு பகுதியையே காட்டுகின்றன; அதாவது நம் வாழ்வு நிலையாதது என்பதை மட்டும் நினைக்கச் செய்கின்றன.

நமக்கு நோய் வந்திருக்கிறது என்று தெரிந்து கொள்வது அவசியம். ஆனால் அதனோடு நின்று விட்டால் போதுமா? நோயை நீக்கும் மருத்துவனை நாடிச் செல்ல வேண்டும். நோயை அறிந்து நோய்க்கு மருந்தையும் தெரிந்த செயற்பட வேண்டும். அப்போதுதான் நோய் நீங்கிச் சுகம் பெறலாம்.

அவ்வாறே, நாம் நிலையாத வாழ்வை உடையோம் என்பதை உணர்ந்து கொண்டு,நிலைத்த வாழ்வைப் பெற என்றும் நிலையான ஒருவனை அடைய வேண்டும். இத்தகைய எண்ணத்தை இறைவன் எலும்பணிந்த திருக்கோலம் உண்டாக்குகிறது. அந்த எண்ணத்தை நாம் கொள்ள வேண்டுமென்றே அவன் எலும்பை அணிந்திருக்கிறான். இங்கே உணவு கிடைக்கும் என்று உணவுச் சாலையில் விளம்பரப் பலகை இருப்பது போல, இங்கே நிலையாத வாழ்வைப் போக்கி நிலைத்த இன்பத்தைப் பெறலாம் என்பதைக் குறிக்க இந்தத் திருக்கோலம் பூண்டிருக்கிறான். அதை அவமதிக்கலாமா? அது அறியாமை அல்லவா? அவமதிக்காமல் மதித்து உண்மையை உணர்ந்து அவனை வழிபட்டால், நாம் இந்த நிலையாத வாழ்க்கையை நீத்து என்றும் அழியாத இன்பநிலையைப் பெறலாம்.

இதைக் காரைக்காலம்மையார் சொல்ல வருகிறார்.

இறைவனுடைய பராக்கிரமத்தை முதலில் சொல்கிறார். அவன் உலகினரைத் துன்புறுத்திய திரிபுராதிகளைத் தண்டித்தான். அவர்கள் ஆட்சி புரிந்த மூன்று பறக்கும் கோட்டைகளாகிய திரிபுரங்களை அழித்து, அவர்களை ஆட்கொண்டான். தக்கனுடைய சாபத்தால் தேய்ந்த மதியைத் தன் வளரும் சடையில் வைத்துப் பாதுகாத்தான்.

**மதியா அடல் அவுணர் மாமதில்மூன்று அட்ட**
**மதிஆர் வளர்சடையி னானை.**

அத்தகைய பெருமான் திருமேனியிலே எலும்புச்சட்டகம் அணிந்ததைக் கண்டு அறியாமையால் இகழக்கூடாது; மதியினால் அதன் உண்மையை உணர்ந்து போற்றி வழிபட வேண்டும். அவ்வாறு வழிபட்டுத் துதித்தால் அவர்கள் மறுபடியும் இந்த உலகில் எலும்புகளையுடைய தேகத்துடன் பிறக்கமாட்டார்கள்.

**மதியாலே என்பாக்கை யால்இகழாது ஏத்துவரேல்**
**இவ்வுலகில் என்பாக்கை யாய்ப்பிறவார் ஈண்டு.**

அவன் மும்மலங்களை அழிப்பவன் என்பதை அவன் திரிபுரசங்காரம் செய்த செயல் காட்டுகிறது. தன்னைச் சரண் அடைந்தாரைக் காப்பவன் என்பதை அவன்மதியை அணிந்த செயல் காட்டுகிறது. அத்தகையவன் செயல்களை எண்ணினால் அவன் திருக்கோலத்தின் உண்மை புலப்படும். மதியின்மையால் மேலெழுந்தவாரியாகக் கண்டு இகழ்வார் உண்டு. அப்படிச் செய்தால் நன்மை பெற முடியாது. மதியினால் உண்மையை உணர்ந்து ஏத்தவேண்டும். இந்த உலகில் வாழும்போதே ஏத்திப் பரவவேண்டும். அப்படிச் செய்தால் மறுபடியும் இங்கே பிறக்கும் அவலநிலை உண்டாகாது. எலும்பால் கட்டிய உடம்பாகப் பிறக்க மாட்டார்கள்.

**மதியா அடல்அவுணர் மாமதில்மூன்று அட்ட**
**மதியார் வளர்சடையி னானை-மதியாலே**
**என்புஆக்கை யால்இகழாது ஏத்துவரேல் இவ்வுலகில்,**
**என்புஆக்கை யாய்ப்பிறவார் ஈண்டு.**

[தன்னை மதிக்காத, வலிமையுடைய அசுரர்களின் பெயரிய மதில்கள் மூன்றை அழித்த, சந்திரன் தங்கும் வளரும் சடையை உடைய சிவபெருமானை, அவனணிந்த என்புச் சட்டத்தை (அறியாமையால்) இகழாமல், அறிவுத்திறத்தால் உண்மையைத் தெரிந்து புகழ்ந்து இவ்வுலகில் வழிபடுவார்களானால், அவர்கள் என்போடு கூடிய உடம்புடன் இங்கே மீண்டும் பிறக்க மாட்டார்கள்.

மாமதில் மூன்று-இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களால அமைந்த மதில்களையுடைய திரிபுரங்கள். 'என்பாக்கையால் இகழாது, மதியால் ஏத்துவரேல்' என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். 'மதியின்மையால் இகழாது' என்று வருவித்துப் பொருள்கொள்க. இவ்வுலகில் ஏத்துவரேல்—ஏத்துதலைச் சொன்னாலும் உபலட்சணத்தால், மனமொழி மெய்களால் வழிபடுவதையும் கொள்ள வேண்டும். என்பு ஆக்கையாகிய தோற்றம் உடையவராய், ஈண்டு-இவ்வுலகத்தில்.]

இறைவனுடைய திருக்கோலத்தின் உள்ளுறையை அறிந்து வழிபட்டால் பிறவி நீங்கி நித்திய சுகத்தை அடையலாம் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 37-ஆம் பாட்டு.

# 38. நல்லோரை மருவுதலும் அல்லோரை ஒருவுதலும்

இறைவனுடைய நினைவு நம் உள்ளத்தில் எப்போதும் இருக்கவேண்டும். அப்படி இருந்தால் நாம் எந்தத் தவறும் செய்யமாட்டோம். மனம் அப்படி ஒன்றையே உறுதியாக எண்ணி நிலைபெறும் ஆற்றலுடைய தன்று. அது வாயுவின் அம்சம். ஆதலின் எப்போதும் சலித்துக்கொண்டே இருக்கும். நாம் இறைவனை நினைந்தும், இறைவன் புகழைப் பேசியும், இறைவன் வழிபாட்டில் ஈடுபட்டும் வாழ வேண்டுமானால், நாம் அவ்வாறு செய்யவேண்டும் என்று விரும்பி முயற்சி செய்தால் மட்டும் போதாது. பல காலத்து வாசனைகள் நம்மைப் பல திசைகளில் இழுக்கும். ஆதலால் நம்முடைய முயற்சிக்கு உறுதுணையாக இறைவனுடைய அடியார்களின் கூட்டத்தில் நாம் சேரவேண்டும். சாது சங்கந்தான் ஒருவனை எளிதில் நல்ல வழியிலே நடப்பதற்குத் துணை செய்யும். மனிதன் சமுதாயத்துக்குள் வாழ்கிறவன். தன்னை அறியாமலே சுற்றுச் சூழ்நிலைக்கு ஏற்ப அவனுடைய பழக்க வழக்கங்கள் மாறிவிடும். ஓநாயால் வளர்க்கப்பட்ட பையன், மனித இனத்தில் சேர்ந்த பிறகும் ஓநாயைப் போலவே உணவுண்ணுதல் முதலியவற்றை செய்து வந்தான் என்ற செய்தியை முன்பு பத்திரிகையில் படித்திருக்கிறோம்.

ஆகையால் பெரியவர்கள், நாம் உய்யவேண்டுமானால் சாது சங்கத்தில் சேர வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். "சார்பினுற் சார்பு கெடஒழுகின்" என்று வள்ளுவரும் சொல்கிறார். அன்பர்களோடு சேர்ந்து பழகினால் நாமும் அவர்களைப் போல ஆகிவிடுவோம். அவர்கள் சேர்ந்துள்ள

சூழலில் நம்மை அறியாமலே அவர்களுடைய பழக்க வழக்கங்களை நாமும் மேற்கொள்ளத் தொடங்குவோம்.

விடியற்காலையில் எழுந்து பழக்கமில்லாதவன் ஒருவன். அவன் நல்லோர் குழுவில் சேர்கிறான். அவர்கள் விடியற்காலையில் நான்கு மணிக்கே எழுந்து நீராடி இறைவனை வழிபடத் தொடங்குகிறவர்கள். அவன் உறங்கினாலும் அவனிடம் உள்ள அன்பினால் அவர்கள் அவனை எழுப்புவதில்லை. என்றாலும் அவன் விழித்துக் கொள்கிறான். பழைய பழக்கத்தினால் படுக்கையில் கிடந்தாலும், எல்லோரும் எழுந்துவிட்ட பிறகு தான் படுக்கையில் இருப்பது முறையன்று என்று நினைக்கிறான். அவன் மனச்சாட்சி உறுத்துகிறது. மெல்ல எழுந்து உட்காருகிறான்; மறுபடியும் படுத்துக் கொள்கிறான். இரண்டு நாள் இப்படிச் செய்தபிறகு மூன்றாவது நாள் எழுந்தவன் படுப்பதில்லை. எழுந்து நீராடப் போகிறான். அந்த நேரத்தில் அவன் நீராடிப் பழக்கம் இல்லை. என்றாலும் அவன் நீராடுகிறான். நாளடைவில் அவன் மற்றவர்களைப் போலவே செய்யத் தலைப்பட்டு அவர்களில் ஒருவன் ஆகிவிடுகிறான். அவனிடம் இருந்த மாறான பழக்கங்கள் மாறி நல்ல பழக்கங்கள் வந்து விடுகின்றன.

சார்பினுடைய பலத்தில் வெறும் ஜடப்பொருள்களே தம்முடைய போக்கிலிருந்து மாறுகின்றன. ரெயில் வண்டி வேகமாக ஓடும்போது, கீழே கிடக்கும் சருகிலைகள் அதனோடு சிறிது தூரம் பறந்து ஓடுகின்றன. தண்ணீரில் ஆழும் கல் மிதக்கும் கட்டையின் மேல் இருந்தால் ஆழ்வதில்லை. ஜடப் பொருளுக்கே சார்ந்த சார்பினால் இயல்பு மாறுமென்றால் அறிவுள்ள மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அதனால்தான் தாயுமானவர், "இறைவனே, நான் பேரின்பப் பெருவாழ்வைத் தேடிப்போய் அடையும் ஆற்றல் இல்லாதவன். என்னை அன்பர் கூட்டத்தில் சேர்த்து அவர்களுக்குத் தொண்டு செய்கின்ற நிலையில் என்னை வைத்தருள். அப்போது அந்தப் பேரின்பப் பெருவாழ்வு என்னை தேடிக்கொண்டு வரும்" என்று சொல்கிறார்.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்

இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

என்பது அவரது திருவாக்கு.

சாது சங்கத்தில் சேர்ந்திருப்பது மட்டும் போதாது; அல்லாதவர்களுடைய சங்கத்தினின்றும் விலகி நிற்க வேண்டும். பயிருக்கு உரம் போடுவது மட்டும் போதாது; களையும் எடுக்கவேண்டும். நல்லவர்களோடும் அல்லாதவர்களோடும் அடுத்தடுத்துப் பழகினால் ஒரு பயனும் உண்டாகாது. நல்லோர் இணக்கத்தினால் உண்டாகும் நற்பயனை அல்லாதவர் இணக்கம் அழித்துவிடும்; தீய பயனை உண்டாக்கும். பயிருக்கு வேலியிட்டு மாடு முதலியவை வராமல் பாதுகாப்பதுபோல,நாம் நம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

நல்லோர் இணக்கமும் அல்லாதாரோடு சேராமையும் நன்னெறியில் நாம் செல்வதற்கு இன்றியமையாதவை. சாது சங்கமும் சாதுக்களல்லாதாரோடு இணங்காமையும் நம்மிடம் நற்பண்புகள் வளரவும் தீயபண்புகள் நெருங்காமல் இருக்கவும் வகை செய்யும்.

இந்த இரண்டையும் எண்ணுகிறார், காரைக்கால் அம்மையார். நல்லோரிணக்கமும் அல்லாதரோடு கூடாமையும் வேண்டும்என்பதைத்தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துவாரைப் போலச் சொல்கிறார்.

'ஏ, அறியாமை நிறைந்த நெஞ்சமே! நீ இறைவனை மீட்டும் மீட்டும் எண்ணி அவன் திருநாமத்தைச் சொல்ல வேண்டும்' என்று தொடங்குகிறார். மனத்தை உருவுடையதாகக் கருதி அதற்குக் கை, கால், வாய் முதலியன இருப்பது போலச் சொல்வது கவிமரபு. தமக்குத் தாமே சொல்ல வேண்டுவதை மனத்தைப் பார்த்துச் சொல்வதுபோலச் சொல்வார்கள். இங்கே மட நெஞ்சைப் பார்த்துப் பேசும் அம்மையார், "மட நெஞ்சே, மீட்டும் மீட்டும் நீ அவன்

நாமத்தையும் 'புகழையும் வாயாலே சொல்லு; எண்ணு" என்கிறார்.

**மறித்தும் மடநெஞ்சே! வாயாலும் சொல்லிக்**
**குறித்து.**

நெஞ்சு நினைப்பதற்குரியது. நினைப்பது போதாது. வாயாலும் சொல்லவேண்டும்; மறுபடியும் தியானிக்கவேண்டும். குறித்தல்—தியானித்தல்.

இப்படி வாயினால் பலகால் சொல்லியும் மனத்தினால் நினைத்தும் இறைவனை வழிபட்டாலும், மனம் சில சமயங்களில் நெறிகெட்டுப் போய்விடும். அதற்கு ஒரு பாதுகாப்பு வேண்டும். அந்தப் பாதுகாப்புத்தான் அடியார் உறவு. அதைச் சொல்கிறார். 'நெஞ்சே, நீ வாயால் சொல்லித் தியானித்தால் மட்டும் போதாது. உன் நிலை உறுதிப்படாது. உறுதிபெற வேண்டுமானால் இறைவனைத் தொழுவதோடு நின்றால் பயனில்லை. உலக வாசனை உன்னை இழுத்துக் கொண்டு போய்விடும். ஆகையால் தொண்டர்களை நாடிச் சென்று அவர்களோடு கூடி அவர்களைப் பணிந்து தொழு; பணிவிடைகள் செய். அப்போது அவர்கள் நிலையாகப் பற்றிய வழிபாட்டு முறை உன்னிடத்தில் வலிமை பெறும்' என்று விரித்து உணரும்படி அவர் சொல்கிறார்.

**மறித்தும் மடநெஞ்சே, வாயாலும் சொல்லிக்**
**குறித்துத் தொழுதொண்டர் பாதம்.**

இது இறைநெறியால் மேலும் மேலும் ஆக்கம் பெறுவதற்குரிய முறை. இப்படிச் செய்தாலும் போதாது. அழிவு வராமல் பாதுகாக்க வேண்டும். நிரம்பிய செல்வத்தைப் பெற்று அதை ஒரு கோட்டைக்குள் சேமித்து வைத்தவர்கள், பகைவர் முற்றுகையிடாமல் அந்தக் கோட்டையைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். விளக்குக்குத் திரியிட்டு எண்ணெயிட்டு ஏற்றியாயிற்று. அதைப் பெருங்காற்று வீசி

அணுகாதபடி பாதுகாத்துக் கொள்ளவேண்டும். அந்தப் பாதுகாப்பை இனிச் சொல்ல வருகிறார்.

இறைவனை எண்ணாதவர்களோடு சேர்வதை விலக்க வேண்டும். அவர்களோடு சேர்வதால் மறுபடியும் மனம் அவர்கள் போகும் வழியைச் சார நினைக்கும். குடத்தில் எவ்வளவு தண்ணீர் ஊற்றினாலும் அது ஓட்டையுடையதாக இருந்தால் அதன் வழியே போய்விடும்; குடத்தை நிரப்ப இயலாது. ஆகவே, அஸாதுக்களுடைய சங்கத்தைச் சேராமல் இருக்கவேண்டும். இறைவனை எண்ணாதவர்களுடைய கூட்டத்தினின்றும் விலகி நிற்கவேண்டும். நெஞ்சுக்கு இந்த உபதேசத்தை அம்மையார் சொல்கிறார்.

**உள்ளாதார் கூட்டம் ஒருவு**

உள்ளாதார் — எண்ணாதவர்கள், யாரை எண்ணாதவர்கள்? இறைவனை எண்ணாதவர்கள். இங்கே இறைவனைப் பற்றிச் சொல்கிறார்.

சிவபெருமான் தனக்கெனச் சிறப்பான சில அடையாளங்களை உடையவன். சந்திரன் தக்கனுடைய சாபத்தால் தேய்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு அருள்புரிந்து பிறையைத் தன் திருமுடியில் தரித்துத் தேயாமலும் வளராமலும் இருக்கச் செய்தான். இறைவனுடைய திருமுடியில் அந்தப்பிறை சிறிய கண்ணிபோல விளங்குகிறது. வேறு யாரும் சந்திரனைக் காப்பாற்றவில்லை. அவன் இன்னவன் என்று எண்ணி யாரும் அவனை ஏற்கவில்லை. இறைவனே அவனை ஏற்றுக்கொண்டு குறுங்கண்ணி போலத் திருமுடி மேல் வைத்துக்கொண்டான்.

**குறித்துஒருவர்**
**கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்.**

என்று சிவபெருமானை இனம் காட்டுகிறார். அடைக்கலம் புகுந்தவரை ஆட்கொள்ளும் பெருமான் அவன். 'அவனிடத்

தில் உள்ளத்தை வைத்து எண்ணுதவர் கூட்டத்தை நீங்கு வாயாக' என்று நெஞ்சுக்கு உபதேசிக்கிருர். துஸ்ஸங்கத்தைச் சேராமல் இருக்கவேண்டும் என்பதைப் பிற அருளாளர்களும் வற்புறுத்துகிருர்கள்.

"திருவே, வெருவிப்
பிறிந்தேன் நினது பெருமைஎண் ணுத
கருமநெஞ்சால்
மறிந்தே விழும்நர குக்குற வாய
மனிதரையே"

என்று அபிராம பட்டர் அம்பிகையினிடம் சொல்கிருர். துஸ்ஸங்கத்தைக் கண்டு பயந்து பிரிந்து விட்டாராம்.

ஆகவே, இறையருள் பெறும் நெறியில் யோகப் புகுந்தவர்களுக்கு இன்றியமையாத வலிமை நல்லோர் இணக்கம்; தளர்ச்சியின்றி அந்த நெறியிற் செல்லப் பாதுகாப்பாக இருப்பது அல்லாதார் கூட்டத்தினின்றும் விலகியிருத்தல்.

**மறித்தும் மடநெஞ்சே, வாயாலும் சொல்லிக்**
**தொழு தொண்டர் பாதாம்; — குறித்து ஒருவர்குறித்துக்**
**கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்மாட்டு**
**உள்ளாதார் கூட்டம் ஒருவு**

[அறியாமையையுடைய நெஞ்சே, இவனைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணி யாரும் ஏற்றுக் கொள்ளாத சந்திரனைக் குறுங்கண்ணியாகத் திருமுடியிலே வைத்துக் கொண்டவரை மீட்டும் வாயினுலும் புகழ்பாடித் தியானித்து, அவருடைய தொண்டர்களின் திருவடிகளைத் தொழுவாயாக; அவரை எண்ணுதவர்களின் கூட்டத்தினின்று நீ விலகி ஒழுகுவாயாக.

மறித்தும்-மீட்டும்; வாயாலும் என்று சொன்னது நெஞ்சால் நினைப்பதற்கு மேலும் என்னும் பொருளுடையது;

எச்சவும்மை. குறித்து - தியானித்து; "குறியைக் குறியாது குறித்து" என்பது **கந்தர் அநுபூதி**. குறித்து-சந்திரனுடைய அவல நிலையை எண்ணி ஒருவரும் என்பதில் உள்ள உம்மை தொக்கது. திங்களாகிய குறிய கண்ணி; கண்ணி-தலையில் சூடும் மாலை. கொண்டார் மாட்டு-கொண்டாரை; உருபு மயக்கம். ஒருவு-நீங்கு.

தொண்டரை மீட்டும் மீட்டும் வாயால் புகழ் கூறி அவர்களை எண்ணி நாடிச் சென்று அவர்கள் பாதத்தைத் தொழு' என்றும் பொருள் கொள்ளலாம்; குறித்து என்பதற்கு, அவர்களை நாடி என்று பொருள் கொள்க.]

நல்லோரின் இணக்கமும் அல்லோரை நீங்குதலும் இறைவன் அருளைப் பெறும் உபாயங்கள் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 40-ஆவது பாட்டு.

# 39. சிறுத்த மதி

மனித மனம் சும்மா இராது. அது அலைந்து திரிந்து கொண்டே இருக்கும். சும்மா இருக்கும்போது பகற்கனவு காணும். தான் கண்ட காட்சிகளையும், பெற்ற அனுபவங்களையும் மீண்டும் சிந்தித்துப் பார்க்கும். நிறைவேறாத ஆசைகளைக் கற்பனையால் நிறைவேற்றிக் கொள்ளும். அதன் விளைவாக, உறங்கும்போது பலவகையான கனவுகள் உண்டாகும்.

இறைவனிடம் ஈடுபட்டவர்களுக்கு எப்போதும் அவனுடைய சிந்தனையே உள்ளத்தில் இருக்கும். மனம், வாக்கு, காயம் என்ற மூன்று கரணங்களும் இறைவனைச் சுற்றியே படரும். அவர்களுடைய சிந்தனைகளும், கற்பனைகளும் இறைவனைச் சுற்றிச் சூழவே விரிந்து நிற்கும்.

உலகியற் புலவர்களுக்கு, கற்பனை உலகியற் பொருள்களிலே படரும். இறைவனுடைய பக்தியில் ஆழ்ந்த புலவர்கள் தம்முடைய கற்பனைக்குப் பொருளாக இறைவனையும் அவனோடு சம்பந்தப்பட்டவற்றையும் வைத்துப் பாடுவார்கள்.

அவர்கள் சிந்தனை அவன் திருவருளில் ஆழும்; இறைவனைப் பற்றிய தத்துவங்களை ஆராயும் அவர்கள் கற்பனை அவனுடைய திருமேனி அழகிலே ஈடுபடும். அவன் அங்கங்களுக்கும், தோற்றத்துக்கு முரிய உவமைகளை நாடி விரிக்கும்; உருவகமாக்கும். அவனுடைய திருவிளையாடல்களையும் பராக்கிரமங்களையும் விரிவுபடுத்தும்; கதையாக்கும்; காவியமாக்கும்; அலங்காரங்களையெல்லாம் செய்து அழகுபடுத்தும்.

செல்வம் மிக்க தாய், தன் குழந்தைக்கு எப்படியெல்லாம் ஆடை, அணி, மலர்களைப் புனைந்து அழகு செய்து பார்க்க

லாமோ, அப்படியெல்லாம் பார்ப்பாள்; புதிய புதிய அணி கலன்களைப் பண்ணிப் பூட்டுவாள். இறைவனுடைய பக்தியில் ஈடுபட்ட அருட்புலவர்கள் இறைவனை எப்படியெல்லாம் பாடலாம் என்று யோசித்து யோசித்துப் பாடுவார்கள். கற்பனையைத் தூண்டி விட்டுச் சொல்லோவியம் படைப்பார் கள். ஆழ்வார்களும் நாயன்மார்களும் திருவாய் மலர்ந் தருளிய அருட்பாடல்களைப் பார்த்தால் இந்த உண்மை புலனாகும்.

அவர்கள் சில சமயம் இறைவனை நோக்கிப் புலம்பு வார்கள்; சில சமயம் அவனுக்கு ஆளான தன்மையை நினைந்து பெருமிதம் அடைவார்கள்; சிலசமயம் அவனுடைய திருமேனி அழகிலே சொக்கிப் போய் விடுவார்கள்; அவன் குணங்களிலே கரைந்து நிற்பார்கள்; அவன் கருணையைக் கூறி உருகுவார்கள்; அவன் பராக்கிரமத்தைச் சொல்லி வியப் பார்கள்; 'அவனை அடைந்து உய்யுங்கள்' என்று உபதேசிப் பார்கள்; அவனையே நோக்கி, 'இப்படிச் செய்ய வேண்டும்' என்று விண்ணப்பித்துக் கொள்வார்கள். இவ்வாறு பல வகையில் பாடும்போது ஒன்பது சுவைகளும் அந்தப் பாடல் களில் தனித்தனியே ததும்பி நிற்கும்.

காரைக்காலம்மையாரும் இந்த இனத்தைச் சேர்ந்தவரே. அவர் பாடிய பாடல்களில், பல வேறு நிலைகளில் அவர் இருந்து பாடுவதை நாம் பார்த்து வருகிறோம். அவருடைய கற்பனை உணர்ச்சி செயற்படும் பாடல் ஒன்றை இப்போது பார்க்கப் போகிறோம். இறைவனுடைய அங்கத்துக்கும் அணி கலன்களுக்கும் உவமைகளைச் சொல்லி மகிழ்கிறார் அம்மை யார்.

இறைவனுடைய திருமேனி செக்கர் வானத்தைப் போலச் சிவந்திருப்பது, அவனுடைய திருமார்பை அம்மை யார் பார்க்கிறார். அது அந்திச் செவ்வானம் போலக் காட்சி அளிக்கிறது. அவன் பாம்பையே அணிகலனாக அணிந்திருக் கிறான். அதுவே அவனுக்கு மாலையாக இருக்கிறது. எல்லோ

ரும் மாணிக்க மாலையைப் புனைவார்கள். அவனே மாணிக் கத்தைத் தரும் பாம்பையே தாராகப் புனைந்திருக்கிறான். மார்பிலே அணியும் மாலைக்குத் தார் என்று பெயர். அவ னுடைய மார்பில் தார் போல அமைத்து பாம்பு விளங்கு கிறது.

—பூண்டதோர்
தார்ஏறு பாம்புடையான் மார்பில்
[தார் ஏறு பாம்பு—மாலையின் தன்மையை உடைய பாம்பு.]

அந்த மார்பில் பளிச்சென்று ஒரு கொம்பு தோன்று கிறது. அது பன்றியின் கொம்பு. பன்றி கருமையாக இருந் தாலும் அதன் கொம்பு வெள்ளை வெளேரென்று இருக்கும். இறைவனுடைய திருமார்பில் அந்த வெண்மை விட்டு விளங் குகிறது; தழைத்து இலங்குகிறது. கூரிய முனையையுடைய கொம்பு அது.

மார்பில் தழைத்து இயங்கு
கூர்ஏறு கார் ஏனக் கொம்பு.
[ஏனம்—பன்றி.]

திருமால் வராகாவதாரம் எடுத்துக் கடலுள் ஆழ்ந்திருந்த பூமியை மேலெடுத்து நலம் செய்தார். அப்பால் அந்த மிடுக்கினால் செருக்குற்று உலகைக் கலக்கியபோது அந்த ஏனத்தின் ஆற்றலை அடக்கி அதன் கொம்பைச் சிவ பெருமான் தன் திருமார்பில் அணிந்து கொண்டார் என்பது புராண வரலாறு.

இப்போது காரைக்காலம்மையார் திருமார்பைப் பார்த்து அதில் தார் போல விளங்கும் பாம்பையும் அங்கே உள்ள பன்றிக் கொம்பையும் பார்க்கிறார். அவருடைய கற்பனை உணர்ச்சி இயங்கத் தொடங்குகிறது.

இறைவனுடைய திருமார்புக்கு அந்திச் செவ்வானத்தை உவமை கூறலாம் என்று எண்ணினார். அந்த வானத்தில் மதியைப் போல இருக்கிறது என்று ஏனக் கொம்பைச்

சொல்லலாமா? இந்தக் கொம்பும் வளைந்திருக்கிறது; வெண்மையாக இருக்கிறது. அதன் அருகே பாம்பு இருக்கிறதே! அதை எப்படி இந்தக் கற்பனைப் படத்தில் பொருத்துவது? பாம்புக்கும் சந்திரனுக்கும் என்ன உறவு? உறவாவது! பகை அல்லவா இரண்டினிடையும் இருக்கும்?

இப்போது அம்மையாருக்குப் பளிச்சென்று ஒரு கருத்துத் தோன்றிவிட்டது. வானத்தில் எழுந்த சந்திரனைப் பாம்பு விழுங்குகிறது; தீண்டி மெல்ல மெல்ல விழுங்குகிறது. முழுச் சந்திரனாக இருந்த வடிவம் வரவரக் குறைந்து பிறையாக ஆகிவிட்டது. விழுங்கின பாம்பு அருகில் இருக்க, முக்கால் பங்கு விழுங்கப்பட்ட சந்திரன் வடிவு குறைந்து சிறுத்துத் தோன்றுகிறது. இப்படிச் சொல்லலாம் அல்லவா?

ஈண்டு ஒளிசேர் வானத்து
எழுமதியை வாளரவம்
தீண்டச் சிறுகியதே போலாதே?

'நிறைந்த ஒளி சேர்ந்த வானத்தில் எழுந்த முழுச் சந்திரனைப் பாம்பு தீண்டி விழுங்கியதனால் அது சிறுத்துப் போனது போல இந்தக் காட்சி இருக்கவில்லையா?' என்று கேட்கிறார் அம்மையார்.

அவருடைய கற்பனையில் மூன்று பொருள்களில் இரண்டுக்கு உவமை சொன்னார். இறைவன் மார்புக்குச் செவ்வானத்தையும் ஏனக்கொம்புக்கு மதியையும் சொன்னார். பாம்பை அப்படியே வைத்துக்கொண்டார். அதை ராகு வென்று கற்பனை பண்ணிக் கொண்டார்; அவ்வளவுதான்.

ஈண்டு ஒளிசேர் வானத்து
எழும்மதியை வாள்அரவம்
தீண்டச் சிறுகியதே

போலாதே? — பூண்டதோர்
தாரேறு பாம்புடையான்
மார்பில் தழைத்திலங்கு
கூர்ஏறு கார்ஏனக் கொம்பு.

[அணிந்த ஒப்பற்ற மாலையின் தன்மையை உடைய பாம்பை உடைய சிவபிரானுடைய திருமார்பில் நன்றாகச் சிறந்து விளங்கும் கூர்மையை உடைய, கடுமையான பன்றியின் வெண்மையான கொம்பு, நெருங்கிய ஒளி சேர்ந்த, வானத்தில் எழுந்த சந்திரனை விடத்தையுடைய பாம்பு தீண்டி விழுங்க அது சிறுத்ததுபோல இருக்கிறதல்லவா?

ஒளிசேர் என்பது மதிக்கு அடை. போலாதே-போலாதோ; வினா. தழைத்து இலங்கு-விட்டு விளங்கும், கார்-கருமை. கொம்பு போலாதே?]

இது அற்புதத் திருவந்தாதியில் 38-ஆவது பாட்டு.

# 40. பொன் மலையும் வெள்ளி மலையும்

இறைவன் தன் அடியார்களுக்கு எத்தனை எத்தனை விதமாகக் காட்சி அளிக்கிறான்! பராசக்தியாகிய அம்பிகையைத் தனக்குள்ளே அடக்கிக்கொண்டு தனியொருவனாகச் சில சமயங்களில் காட்சி அளிக்கிறான்.

"அவ்வுரு, தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்" என்று புறநானூறு சொல்கிறது. உலகத்தை மீண்டும் படைக்கத் தொடங்கும்போது, முதல் படைப்புக் கடவுளாக இருக்கிறான் சிவபெருமான். எவன் சர்வ சங்காரத்தைச் செய்கிறானோ, எவன் எல்லாம் ஒடுங்கத் தான் மாத்திரம் ஒடுங்காமல் இருக்கிறானோ, அவன்தான் முதலில் மீண்டும் படைக்கவேண்டும். உள்ளே இருக்கும் அறைகளை எல்லாம் வெவ்வேறு மனிதர் பூட்டுகிறார்கள். எல்லோரும் பூட்டிக் கொண்டு வெளியில் வந்தபிறகு வாயிற்கதவைக் கடைசியாகப் பூட்டி அதன் சாவியை வைத்திருக்கிறான் ஒருவன். மறுபடியும் அந்த வீட்டையும் அறைகளையும் திறக்க வேண்டுமானால் முதலில் பூட்டின முறைப்படியே திறக்க முடியுமா? முதலில் சமையலறையைப் பூட்டினாள் ஒரு பெண். அவளே முதலில் பூட்டினவளாகையால் அவளே முதலில் திறக்கட்டும் என்று சொல்லலாமா? அவளால்தான் திறக்கமுடியுமா? யார் கடைசியில் வாயிற் கதவைப் பூட்டினானோ, அவன்தான் திறக்கும்போது முதலில் வாசற்கதவைத் திறக்கவேண்டும். அதற்குப் பிறகே மற்றவர்கள் தங்கள் தங்கள் அறையைத் திறக்க முடியும்.

அதுபோல இறுதிச் சங்காரத்தை நிகழ்த்தும் பரமசிவனே முதலில் படைப்பைச் செய்யவேண்டும்; படைப்பு முதலிய

வற்றை இயற்றும் மூர்த்திகளைப் படைக்கவேண்டும். தத்துவங் களையெல்லாம் சர்வ சங்கார காலத்தில் தனக்குள்ளே ஒடுக்கிக் கொண்டவன், படைப்புத் தொடங்குகையில் அவற்றை மலர விடுகிறான்.

இவ்வாறு முதற்படைப்புத் தொடங்கும்போது, அவன் தன்னையே படைத்துக் கொள்கிறான். அருவமாக இருந்த தான், அருவுருவாகிய லிங்கோற்பவ மூர்த்தியாகிறான். பிறகு உருவம் பூணுகிறான். பல பல உருவங்களை எடுக்கும் அப் பெருமான் முதல் முதலாக மாதிருக்கும் பாதியனாக, அர்த்த நாரீசனாகத் தோற்றுகிறான். தன்னுள் அடக்கியிருந்த சக்தியைத் தன்னோடு ஒட்டிய ஒரு பாதியாகக் காட்டுகிறான். அதிலிருந்து மற்றப் படைப்புகள் தொடங்குகின்றன; தத்துவங்கள் விரிகின்றன. இதை ஐங்குறுநூறு என்னும் சங்க நூல் கூறுகிறது.

> "நீலமேனி வாலிழை பாகத்து
> ஒருவன் இருதாள் நிழற்கீழ்
> மூவகை உலகும் முகிழ்த்தன முறையே."

என்பது அதில் உள்ள பாட்டு. நீலமேனி வாலிழையாகிய அம்பிகையை ஒரு பாகத்தில் கொண்ட ஒருவனைக் காட்டிப் பிறகு, அந்த அர்த்தநாரீச வடிவத்திலிருந்து அந்தர்மத்திய பாதலமென்னும் மூவகை உலகங்களையும் தோன்றச் செய்கிறான்.

ஆகவே, இறைவன் அருவிலிருந்து அருவுருவாகி, அதிலிருந்து உருவாகக் கோலம் கொள்ளும்பொழுது, முதல் முதலில் எடுக்கும் வடிவம் இந்த அர்த்தநாரீசத்திருக்கோலம். இதுவே எல்லாவற்றிலும் பழமையானதாலின் இதை, "தொன்மைக் கோலம்" என்று மாணிக்கவாசகர் சொல்வார்.

> " தோலும், துகிலும், குழையும். சுருள்தோடும்,
> பால்வெள்ளை நீறும், பசுஞ்சாந்தும், பைங்கிளியும்,

சூலமும், தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.''

இந்தப் பழைய கோலத்தை நினைக்கிறார் காரைக்கால் அம்மையார். இறைவன் தன் வாமபாகத்தில் பூங்கொம்பு போன்ற இறைவியை வைத்திருக்கிறான். அவன் மிகப் பழையவனானாலும் இளமை மாறாத குழகனாக இருக்கிறான், தன்னைச் சார்ந்த சித்தர்களுக்கும் யோகிகளுக்கும் நரைதிரை மூப்பில்லாத இளமையை வழங்கும் அண்ணல் இளமையெழில் ததும்புவனாக இருப்பது வியப்பன்று. இந்த அர்த்தநாரீசக் கோலத்தை எண்ணுகிறார் அம்மையார்.

### கொம்பினை ஓர் பாகத்துக் கொண்ட குழகன்

இப்போது அவன் வெவ்வேறு வகையாகத் தோற்றம் அளிப்பதை மனக்கண்ணால் எண்ணிப்பார்க்கிறார். அவனுடைய திருமேனி செக்கச்செவேலென்று இருக்கும். "சிவனெனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான்" என்று அப்பர் பாடுவார். அந்த மேனிக்கு அவர் பவளத்தை உவமை கூறுவார். "பவளம் போல் மேனியில்" என்று சொல்வார். அந்த அழகிய பவளம் போன்ற மேனியைத் தியானிக்கிறார் அம்மையார்.

இறைவன் பெரிய திருவுருவத்தோடு காட்சியளிக்கிறான். அடிமுடி காணபுரிய செஞ்சோதி பிழம்பாக நின்றவன் அல்லவா? அம்மையாரின் அகக்கண்ணில் அவன் பூமிக்கும் வானத்துக்குமாக ஓங்கி உயர்ந்து ஆடாமல் அசையாமல் நிற்கிறான்; மலைபோல நிற்கிறான். முன்பு பவளம் போன்ற மேனி என்று சொன்னவர் இந்த வடிவைக்கண்டு, 'இது மலை போல அல்லவா இருக்கிறது?' என்று எண்ணுகிறார்.

மலைகளில் சிறந்தது மேருமலை. அதில் தேவர்கள் குடியிருப்பதனால் சுராலயம் என்ற பெயர் பெறும். சூரிய

சந்திரர்கள் அதை வலமாக வருவார்கள். அது பொன்மய மானது; பொன்மலை என்று பெயர் பெறும். அதை இறைவன் கையில் வில்லாக வளைத்து வைத்துக் கொண்டதுண்டு.

மற்ருெரு மலை கயிலாயமலை. அது மிகவும் புனிதமானது. எம்பெருமான் வீற்றிருக்கும் இடமாதலின் அது மிகமிகப் புனிதமானது. அது வெள்ளிமயமான மலை.

இறைவனுடைய பெரிய வடிவத்தை அகக்கண்ணில் கண்ட அம்மையாருக்கு; 'இந்தப் பெரிய திருமேனிக்கு எதை உவமை சொல்வது?' என்ற ஆராய்ச்சி எழுகிறது. செம் பொன்மலையாகிய மேருவைத்தான் சொல்லவேண்டும் என்று தீர்மானிக்கிருர்.

குழகன்தன்

அம்பவள மேனி அதுமுன்னம்—செம்பொன்
அணிவரையே போலும்.

என்று பாடினுர். இறைவன் திருமேனி செம்பொன் வண்ண முடையது என்பதை, "பொன்னுர் மேனியனே" என்ற சுந்தரர் திருவாக்காலும், "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்ற சேரமான் பெருமாள் நாயனுர் திருவாக்காலும் தெரிந்து கொள்ளலாம்.

அர்த்தநாரீசனுகத் தியானித்தவர், பவள உருவனுகக் கண்டு களித்தவர், இப்போது செம்பொன்மலையாகிய மேருவைப் போலத் தோன்றக்கண்டு இன்புறுகிருர். அதோடு காட்சி நிற்கவில்லை. இறைவன் தன் திருமேனி முழுதும் வெண்ணீற்றைப் பூசிக்கொண்டு தோற்றம் அளிக்கிருன். கால் முதல் தலைவரையில் ஒரே திருநீறு. வெண்ணீறு சண்ணித்த பெரிய திருமேனியை அம்மையார் இப்போது கண்டு வியக் கிருர். சிறிது நேரத்துக்குமுன் அவர் கண்டது பொன்மலை. இப்போது ஒரே வெள்ளை வண்ணம். மேனித்தேசும் வெண்

ணிறமும் ஒன்றிப் பளபளக்கிறது அந்தக் கோலம். இப்போது பார்க்க எவ்வளவு அழகாக இருக்கிறது! வெள்ளிமலை போல அல்லவா இருக்கிறது இக்கோலம்? கைலாசபதி கைலாசத்தை போலவே ஒளிவிடும் வெண்ணிற மலையாக நிற்கிறான். மேரு வானது இப்போது கைலாசம் ஆகிவிட்டது. திருமேனி முழுதும் வெண்பொடி அணிந்தமையால் இந்தக் காட்சி மாற்றம் உண்டாயிற்று.

**பொடி அணிந்தால், வெள்ளி**
**மணிவரையே போலும் மறித்து**

கொம்பினை ஓர் பாகத்துக் கொண்ட குழகன், அந்தக் கொம்பை மறைத்துவிட்டுப் பவள வண்ணப் பெருமானாகக் கோலம் காட்டினான். பிறகு பெருவடிவம்பூண்டு செம்பொன் அணிவரையாகிய மேருவைப்போலக் காட்சியளித்தான். மறுபடியும் திருமேனி முழுதும் வெண்ணீற்றைப் பூசிக் கொண்டு வெள்ளி மணி வரையே போன்றவனானான்.

இப்படி எம்பெருமானுடைய திருக்கோலத்தில் உண்முகப் பார்வையைச் செலுத்தி, அவன் வெவ்வேறு வகையில் தன் கோலத்தைக் காட்டக்காட்ட,நாடகம் பார்ப்பதைவிட மிகுதி யான இன்பத்தைப் பெற்று, வியப்பும் மகிழ்ச்சியும், மீதூர அந்தக் காட்சிகளைத் தம் அழகிய பாடலால் கோலம் செய்து காட்டுகிறார் காரைக்கால் அம்மையார்.

**கொம்பினைஓர் பாகத்துக் கொண்ட குழகன்தன்**
**அம்பவள மேனி யதுமுன்னம்—செம்பொன்**
**அணிவரையே போலும்; பொடிஅணிந்தால் வெள்ளி**
**மணிவரையே போலும் மறித்து.**

[பூங்கொம்பு போன்ற அம்பிகையைத் தன் ஒருபாகமாகிய இடப்பகுதியில் ஏற்றுக் கொண்ட இளமையெழிலையுடைய சிவபெருமானுடைய அழகிய பவளம் போன்ற திருமேனி,

முதலில் செம்பொன்னுலான அழகையுடைய மேருமலையைப் போல இருக்கும்; வெண்பொடியாகிய திருநீற்றை அணிந்து கொண்டால் மறுபடியும் அந்தத் திருமேனி அழகைப் பெற்ற வெள்ளி மலையாகிய கைலாசத்தைப் போல இருக்கும்.

கொம்பு-பூங்கொம்பு. திருமுகம், கண், திருவாய், திருக்கரம், திருவடி ஆகியவைகள் மலர்களைப்போல விளங்க ஒசிந்து மென்மையாக இருத்தலின் பூங்கொம்பு என்று அம்பிகையைச் சொன்னார். ஓர் பாகம் என்றது இடப்பாகத்தை. குழகன்—இளமையுடையவன். மேனி அது: அது, பகுதிப் பொருள் விகுதி, செம்பொன் வரை-மேருமலை, அணி, -அழகு, பொடி-திருநீறு. வெள்ளி வரை-கைலாசம், மறித்து-மீட்டும். முதலில் மேருமலையாகத் தோற்றியது மறுபடியும் கைலாச மலையாகத் தோற்றுமாம்.]

இறைவன் வெவ்வேறு கோலம் காட்டி அடியார்களுக்கு அருள் புரிவான் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 39-ஆவது பாட்டு.

# 41. நல்லோரை மருவுதலும் அல்லோரை ஒருவுதலும்

இறைவனுடைய நினைவு நம் உள்ளத்தில் எப்போதும் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் நாம் எந்தத் தவறும் செய்ய மாட்டோம். மனம் அப்படி ஒன்றையே உறுதியாக எண்ணி நிலைபெறும் ஆற்றலுடையதன்று. அது வாயுவின் அம்சம். ஆதலின் அது எப்போதும் சலித்துக் கொண்டே இருக்கும். நாம் இறைவனை நினைந்தும் இறைவன் புகழைப் பேசியும் இறைவன் வழிபாட்டில் ஈடுபட்டும் வாழ வேண்டு மானால், நாம் அவ்வாறு செய்ய வேண்டும் என்று விரும்பி முயற்சி செய்தால் மட்டும் போதாது. பல காலத்து வாசகர் கள் நம்மைப் பல திசைகளில் இழுக்கும். ஆதலால் நம் முடைய முயற்சிக்கு உறுதுணையாக இறைவனுடைய அடி யார்களின் கூட்டத்தில் நாம் சேரவேண்டும். சாது சங்கம் தான் ஒருவனை எளிதில் நல்ல வழியிலே நடப்பதற்குத் துணை செய்யும். மனிதன் சமுதாயத்துக்குள் வாழ்கிறவன். தன்னை யறியாமலே சுற்றுச் சூழ்நிலைக்கு ஏற்ப அவனுடைய பழக்க வழக்கங்கள் மாறிவிடும். ஓநாயால் வளர்க்கப்பட்ட பையன், மனித இனத்தில் சேர்ந்த பிறகும் ஓநாயைப் போலவே உணவுண்ணுதல் முதலியவற்றைச் செய்து வந்தான் என்ற செய்தியை முன்பு பத்திரிகையில் படித்திருக்கிறோம்.

ஆகையால் பெரியவர்கள், நாம் உய்ய வேண்டுமானால் சாது சங்கத்தில் சேர வேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். "சார்பிறைச் சார்பு கெடஒழுகின்" என்று வள்ளுவரும் சொல் கிறார். அன்பர்களோடு சேர்ந்து பழகினால் நாமும் அவர்களைப்

போல ஆகிவிடுவோம். அவர்கள் சேர்ந்துள்ள சூழலில் நம்மை அறியாமலே அவர்களுடைய பழக்க வழக்கங்களை நாமும் மேற்கொள்ளத் தொடங்குவோம்.

விடியற்காலையில் எழுந்து பழக்கம் இல்லாதவன் ஒருவன். அவன் நல்லோர் குழுவில் சேர்கிறான். அவர்கள் விடியற் காலையில் நான்கு மணிக்கே எழுந்து நீராடி இறைவனை வழி படத் தொடங்குகிறவர்கள். அவன் உறங்கினாலும் அவனிடம் உள்ள அன்பினால் அவர்கள் அவனை எழுப்புவதில்லை. என்றா லும் அவன் விழித்துக் கொள்கிறான். பழைய பழக்கத்தினால் படுக்கையில் கிடந்தாலும், எல்லோரும் எழுந்து விட்டபிறகு தான் படுக்கையில் இருப்பது முறையன்று என்று நினைக்கிறான். அவன் மனச்சாட்சி உறுத்துகிறது. மெல்ல எழுந்து உட்காரு கிறான்; மறுபடியும் படுத்துக் கொள்கிறான். இரண்டு நாள் இப்படிச் செய்த பிறகு மூன்றாவது நாள் எழுந்தவன் படுப் பதில்லை. எழுந்து நீராடப் போகிறான். அந்த நேரத்தில் அவன் நீராடிப் பழக்கம் இல்லை. என்றாலும் அவன் நீராடு கிறான். நாளடைவில் அவன் மற்றவர்களைப் போலவே செய் யத் தலைப்பட்டு அவர்களில் ஒருவன் ஆகிவிடுகிறான். அவனி டம் இருந்த மாறான பழக்கங்கள் மாறி நல்ல பழக்கங்கள் வந்து விடுகின்றன.

சார்பினுடைய பலத்தில் வெறும் ஜடப் பொருள்களே தம்முடைய போக்கிலிருந்து மாறுகின்றன. ரெயில் வண்டி வேகமாக ஓடும்போது, கீழே கிடக்கும் சருகிலைகள் அதனோடு சிறிது தூரம் பறந்து ஓடுகின்றன. தண்ணீரில் ஆழும் கல் மிதக்கும் கட்டையின் மேல் இருந்தால் ஆழ்வதில்லை. ஜடப் பொருள்களுக்கே சார்ந்த சார்பினால் இயல்பு மாறுமென்றால் அறிவுள்ள மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அதனால்தான் தாயுமானவர், "இறைவனே, நான் பேரின்பப் பெருவாழ்வைத் தேடிப் போய் அடையும் ஆற்றல் இல்லாத வன். என்னை அன்பர் கூட்டத்தில் சேர்ந்து அவர்களுக்குத்

தொண்டு செய்கின்ற நிலையில் என்னை வைத்தருள். அப்போது அந்தப் பேரின்பப் பெருவாழ்வு என்னைத் தேடிக் கொண்டு வரும்" என்று சொல்கிறார்.

" அன்பர் பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

என்பது அவரது திருவாக்கு.

சாது சங்கத்தில் சேர்ந்திருப்பது மட்டும் போதாது. அல்லாதவர்களுடைய சங்கத்தினின்றும் விலகி நிற்க வேண்டும். பயிருக்கு உரம் போடுவது மட்டும் போதாது; களையும் எடுக்க வேண்டும். நல்லவர்களோடும் அல்லாதவர்களோடும் அடுத்தடுத்துப் பழகினால் ஒரு பயனும் உண்டாகாது. நல்லோர் இணக்கத்தினால் உண்டாகும் நற்பயனை அல்லாதவர் இணக்கம் அழித்துவிடும்; தீய பயனை உண்டாக்கும்., பயிருக்கு வேலியிட்டு மாடு முதலியவை வராமல் பாதுகாப்பது போல நாம் நம்மைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

நல்லோர் இணக்கமும் அல்லாதவரோடு சேராமையும் நன்னெறியில் நாம் செல்வதற்கு இன்றியமையாதவை. சாது சங்கமும் சாதுக்களல்லாதரோடு இணங்காமையும் நம்மிடம் நற்பண்புகள் வளரவும் தீய பண்புகள் நெருங்காமல் இருக்கவும் வகை செய்யும்.

இந்த இரண்டையும் எண்ணுகிறார், காரைக்கால் அம்மையார். நல்லோரியக்கமும் அல்லாதவரோடு கூடாமையும் வேண்டும் என்பதை தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துவாரைப் போலச் சொல்கிறார்.

'ஏ, அறியாமை நிறைந்த நெஞ்சமே! நீ இறைவனை மீட்டும் மீட்டும் எண்ணி அவன் திருநாமத்தைச் சொல்ல வேண்டும்' என்று தொடங்குகிறார். மனத்தை உருவுடையதாகக் கருதி அதற்குக் கை கால் வாய் முதலியன இருப்பது

போலச் சொல்வது கவிமரபு. தமக்குத் தாமே சொல்ல வேண்டுவதை மனதைப் பார்த்துச் சொல்வது போலச் சொல்வார்கள். இங்கே மடநெஞ்சைப் பார்த்துப் பேசும் அம்மையார், "மடநெஞ்சே, மீட்டும் மீட்டும் நீ அவன் நாமத்தையும் புகழையும் வாயாலே சொல்லு; எண்ணு" என்கிறார்.

மறித்தும் மடநெஞ்சே! வாயாலும் சொல்லிக் குறித்து. நெஞ்சு நினைப்பதற்குரியது. நினைப்பது போதாது வாயாலும் சொல்ல வேண்டும்; மறுபடியும் தியானிக்க வேண்டும். குறித்தல்—தியானித்தல்.

இப்படி வாயினால் பலகால் சொல்லியும் மனத்தினால் நினைத்தும் இறைவனை வழிபட்டாலும், மனம் சில சமயங்களில் நெறி கெட்டுப் போய்விடும். அதற்கு ஒரு பாதுகாப்பு வேண்டும். அந்தப் பாதுகாப்புத்தான் அடியார் உறவு. அதைச் சொல்கிறார். 'நெஞ்சே, நீ வாயால் சொல்லித் தியானித்தால் மட்டும் போதாது. உன் நிலை உறுதிப்படாது. உறுதி பெற வேண்டுமானால் இறைவனைத் தொழுவதோடு நின்றால் பயனில்லை. உலக வாசனை உன்னை இழுத்துக் கொண்டு போய்விடும். ஆகையால் தொண்டர்களை நாடிச் சென்று அவர்களோடு கூடி அவர்களைப் பணிந்து தொழு; பணிவிடைகள் செய். அப்போது அவர்கள் நிலையாகப் பற்றிய வழிபாட்டுமுறை உன்னிடத்தில் வலிமை பெறும்' என்று விரித்து உணரும்படி அவர் சொல்கிறார்.

**மறித்தும் மடநெஞ்சே, வாயாலும் சொல்லிக்**
**குறித்துத் தொழுதொண்டர் பாதம்.**

இது இறைநெறியால் மேலும் மேலும் ஆக்கம் பெறுவதற்குரிய முறை. இப்படிச் செய்தாலும் போதாது அழிவு வராமல் பாதுகாக்க வேண்டும். நிரம்பிய செல்வத்தைப் பெற்று அதை ஒரு கோட்டைக்குள் சேமித்து வைத்தவர்கள்,

பகைவர் முற்றுகையிடாமல் அந்தக் கோட்டையைப் பாது காத்துக் கொள்ள வேண்டும். விளக்குத் திரியிட்டு எண்ணெ யிட்டு ஏற்றியாயிற்று. அதைப் பெருங்காற்று வீசி அணைக் காதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அந்தப் பாது காப்பை இனிச் சொல்ல வருகிறார்.

இறைவனை எண்ணாதவர்களோடு சேர்வதை விலக்க வேண்டும். அவர்களோடு சேர்வதால் மறுபடியும் மனம் அவர்கள் போகும் வழியைச் சார நினைக்கும். குடத்தில் எவ்வளவு தண்ணீர் ஊற்றினாலும் அது ஓட்டையுடையதாக இருந்தால் அதன் வழியே போய்விடும்; குடத்தை நிரப்ப இயலாது. ஆகவே, அஸாதுக்களுடைய சங்கத்தைச் சேரா மல் இருக்க வேண்டும். இறைவனை எண்ணாதவர்களுடைய கூட்டத்தினின்றும் விலகி நிற்க வேண்டும். நெஞ்சுக்கு இந்த உபதேசத்தை அம்மையார் சொல்கிறார்.

### உள்ளாதார் கூட்டம் ஒருவு

[உள்ளாதார் — எண்ணாதவர்கள்; யாரை எண்ணாதவர்கள்? இறைவனை எண்ணாதவர்கள். இங்கே இறைவனைப் பற்றிச் சொல்கிறார்.]

சிவபெருமான் தனக்கெனச் சிறப்பான சில அடையாளங் களை உடையவன். சந்திரன் தக்கனுடைய சாபத்தால் தேய்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு அருள் புரிந்து பிறையைத் தன் திருமுடியில் தரித்துத் தேயாமலும் வளராமலும் இருக்கச் செய்தான். இறைவனுடைய திருமுடியில் அந்தப் பிறை சிறிய கண்ணி போல விளங்குகிறது. வேறு யாரும் சந்திரனைக் காப்பாற்றவில்லை. அவன் இன்னலை எண்ணி யாரும் அவனை ஏற்கவில்லை. இறைவனே அவனை ஏற்றுக் கொண்டு குறுங்கண்ணி போலத் திருமுடி மேல் வைத்துக் கொண்டான்.

குறித்து ஒருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்.

என்று சிவபெருமானை இனம் காட்டுகிறார். அடைக்கலம் புகுந்தவரை ஆட்கொள்ளும் பெருமான் அவன். 'அவனிடத்தில் உள்ளம் வைத்து எண்ணாதவர் கூட்டத்தை நீங்குவாயாக' என்று நெஞ்சுக்கு உபதேசிக்கிறார். துஸ்ஸங்கத்தைச் சேராமல் இருக்கவேண்டும் என்பதைப் பிற அருளாளர்களும் வற்புறுத்துகிறார்கள்.

திருவே, வெருவிப்
பிறிந்தேன் நினது பெருமை எண்ணாத
கருமநெஞ்சால்
மறிந்தே விழும்நர குக்குற வாய
மனிதரையே.

ஆகவே, இறையருள் பெறும் நெறியில் போகப் புகுந்தவர்களுக்கு இன்றியமையாத வலிமை நல்லோர் இணக்கம்; தளர்ச்சியின்றி அந்த நெறியிற் செல்லப் பாதுகாப்பாக இருப்பது அல்லாதார் கூட்டத்தினின்றும் விலகியிருத்தல்.

மறித்தும் மடநெஞ்சே வாயாலும் சொல்லிக்
குறித்துத் தொழு தொண்டர் பாதம்;- குறித்து ஒருவர்
கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார் மாட்டு
உள்ளாதர் கூட்டம் ஒருவுர்.

[அறியாமையையுடைய நெஞ்சே, இவனைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணி யாரும் ஏற்றுக் கொள்ளாத சந்திரனைக் குறுங்கண்ணியாக திருமுடியிலே வைத்துக் கொண்டவரை மீட்டும் மீட்டும் வாயினாலும் புகழ் பாடித் தியானித்து, அவருடைய தொண்டர்களின் திருவடிகளைத் தொழுவாயாக; அவரை எண்ணாதவர்களின் கூட்டத்தினின்று நீ விலகி ஒழுகுவாயாக. மறித்தும்—மீட்டும்; வாயாலும் என்று சொன்னது நெஞ்சால் நினைப்பதற்கு மேலும்

என்னும் பொருளுடையது; எச்சஉம்மை. குறித்து— தியானித்து; "குறியைக் குறியது குறித்து" என்பது கந்தர் அநுபூதி. குறித்து—சந்திரனுடைய அவல நிலையை எண்ணி ஒருவரும் என்பதில் உள்ள உம்மை தொக்கது. திங்களாகிய குறிய கண்ணி; கண்ணி – தலையில் சூடும் மாலை. கொண்டார் மாட்டு—கொண்டாரை; உருபு மயக்கம். ஒருவு—நீங்கு.

தொண்டரை மீட்டும் மீட்டும் வாயால் புகழ் கூறி அவர் களை எண்ணி நாடிச் சென்று அவர்கள் பாதத்தைத் தொழு என்றும் பொருள் கொள்ளலாம்; குறித்து என்பதற்கு அவர் களை நாடி என்று பொருள் கொள்க.]

நல்லோரின் இணக்கமும் அல்லோரை நீங்குதலும் இறைவன் அருளைப் பெறும் உபாயங்கள் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 40-ஆவது பாட்டு.

# 42. நீ எங்கே?

சிவபெருமானுடைய திருக்கோலங்கள் பல. அவற்றில் 25 முக்கியமானவை அருவமாக இருக்கும் இறைவன், உயிர்க் கூட்டங்களில் தவம் செய்து பக்குவப்பட்டவர்களுக்கு உருவமாக எழுந்தருளிக் காட்சியளித்தான். வெவ்வேறு அன்பர்களுக்கு வெவ்வேறு கோலம் காட்டி அருள் புரிந்தான். முதலில் அருவுருவத திருமேனியாக, ஜோதிலிங்கமாகத் தோன்றினன். பிரமனும், திருமாலும் முடியையும் அடியையும் தேட இயலாமல் திகைக்க வைத்த கோலம் அது என்று புராணம் கூறும்.

பிரமன் கலைமகள் நாயகன்; படைப்பாற்றல் உடையவன். அவன் கற்றவர்களின் பிரதிநிதி. திருமால் திருமகளின் நாயகன்; பாதுகாக்கும் ஆற்றலுடைய ரக்ஷண கர்த்தா. அவர் செல்வர்க்ளின் பிரதிநிதி. கல்வியினலும், செல்வத்தினலும் மெய்ப்பொருளைக் காண இயலாது என்ற உண்மையையே அடிமுடி தேடிய கதை சொல்கிறது. பிரமன் இழிந்தவன், திருமால் குறைந்தவர் என்பதற்காக இந்தக் கதை எழவில்லை. யாராக இருந்தாலும் கல்வியாற்றலாலும் செல்வச் சிறப்பாலும் உண்மைப்பொருளைத் தெரிந்துகொள்ள முடியாது என்பதை, அவர்களும் சிவபெருமானும் சேர்ந்து ஒரு நாடகம் ஆடிக்காட்டினர்கள் என்று கொண்டால் சமரச உணர்வுக்கு ஏற்ற விளக்கமாக இருக்கும்.

சைவ புராணங்களில், இப்படி மற்றத் தேவர்களெல்லாம் அடிபணியச் சிவபெருமான் எல்லாருக்கும் மேலான பரம் பொருளாய் விளங்குகிருன் என்ற கருத்தைத் தெரிவிக்கும் கதைகள் வரும். விஷ்ணு புராணங்களில் சிவபெருமான்

திருமாலினுடைய அருளுக்காக ஏங்குவதும், அவர் அருளைப் பெற்று ஓங்குவதுமாகிய கதைகள் வரும். இருவகைப் புராணங்களையும் இயற்றினவர் ஒரே ஆசிரியர். வேதத்தை வகுத்தமைத்த வியாச முனிவரே பதினென் புராணங்களையும் இயற்றியிருக்கிறார். அவரவர் மனப்போக்கிற்கு ஏற்ப, எந்த மூர்த்தியிடத்தில், மனம் பதிகிறதோ அந்த மூர்த்தியே எல்லா மூர்த்திகளையும் விட உயர்ந்தவர் என்ற எண்ணத்தோடு உபாசிப்பது பக்தர்கள் இயல்பு. ஆனால் மற்ற மூர்த்திகளை வழிபடுகிறவர்களைத் தாழ்வாக எண்ணக்கூடாது. இராமபிரானுடைய மனைவி சீதை; இராவணனுடைய மனைவி மண்டோதரி. இராமனுக்கும் இராவணனுக்கும் உள்ள இயல்புகள் மாறுபட்டன. ஆனால் சீதையும் மண்டோதரியும் சிறந்த கற்பரசிகளாகப் போற்றப்படுகிறவர்கள். சிவனடியார்களும் திருமாலடியார்களும் வேறுவேறு மூர்த்திகளை வழிபடுகிறவர்களானாலும், அவர்கள் உண்மையான பக்தர்களானால் அவர்கள் போற்றற்குரியவர்களே.

சிவ விஷ்ணு பேததத்தை மாற்றும் வகையில் பெரியோர்கள் பாடியுள்ள பாடல்களும், கதைகளும் பல உண்டு. சிவபெருமானுடைய வடிவங்களுள் கேசவார்த்தர் என்பது ஒன்று. சங்கரநாராயணர் என்றும் அந்த மூர்த்தியைச் சொல்வர். அந்தக் கோலத்தில் ஒரு பாதி மாலும், ஒரு பாதி சிவபெருமானும் இணைந்த தோற்றம் இருக்கும். அது சைவ வைஷ்ணவ சமரசத்தைக் காட்டும் கோலம். சங்கரநயினார் கோயிலில் சங்கரநாராயணமூர்த்தியின் சந்நிதி இருக்கிறது. மற்ற ஆலயங்களில் அங்கங்கே சிற்ப வடிவங்களில் அந்த மூர்த்தியைக் காணலாம். ஹரிஹர பேதம் இல்லாமல் வழிபடுவதற்கு ஏற்ற கோலம் அது.

இப்படியே சக்திக்கும் சிவத்துக்கும் வேறுபாடு இல்லை என்று காட்டுவது அர்த்தநாரீசுவரத் திருக்கோலம். மாதிருக்கும் பாதியனாகச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் மூர்த்தம் அது. திருச்செங்கோட்டில் அந்த மூர்த்தி எழுச் தருளியிருக்கிறார். வேறு கோயில்களிலும் அந்த மூர்த்தியை

சில இடங்களில் காணலாம். திருமால் வேறு, சிவன் வேறு என்று வேறுபடுத்தாத சமரச உணர்ச்சியை வளர்க்கச் சங்கர நாராயணர் திருக்கோலமும், சிவன் வேறு, சக்தி வேறு என்று பேதபுத்தி பண்ணுமல் இருக்க உமையொரு பாதி வடிவமும் உள்ளன.

இந்த இரண்டு திருக்கோலங்களையும் எண்ணி, இறைவனிடம் உள்ள நெருக்கத்தினுல், கேட்கிருர் காரைக்கால் அம்மையார். இறைவனிடம் பக்தி முறுக முறுக அவனேடு சுதந்தரமாக உரையாடும் உரிமை உண்டாகிவிடுகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கில் அத்தகைய இடங்கள் பல உண்டு. மற்றவர்சள் பாடல்களில் ஒவ்வோரிடத்தில் இருக்கும். காரைக்காலம்மையார் திருப்பாடல்களில் அவ்வாறு வரும் பாடல்களை முன்பும் பார்த்தோம்; பின்பும் பார்க்கப் போகிறேம். இப்போது ஒரு பாட்டைப் பார்க்கலாம்.

இறைவனை நோக்கிச் சொல்கிருர், அம்மையார்; 'எம்பெருமானே, உன்னை என்னுல் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரு பாதி அதே நிறம் படைத்த உமா தேவியார் இருக்கிருர். இரண்டு பக்கத்திலும் உன்னுடைய உருவத்தைக் காண முடியவில்லை. நின் நிறம் பவளம் போன்ற செந்நிறம். நான் பாக்கிறதோ எல்லாம் நீல நிறம். உன்னுடைய திருவுருவத்துக்குரிய நிறத்தை என்னுல் காண முடியவில்லை. இந்தக் கோலத்தை அணுகிப் பார்த்தாலும் உன்னுடைய உருவமும் தெரியவில்லை; அம்பிகையின் முழு உருவமும் தெரியவில்லை. இந்த வடிவம் எத்தகையதென்று சொல்வது?'

உலகத்தை அளந்தவன் திருமால். அவன் உன் திருவுருவத்தில் ஒரு பாதியில் இருக்கிருன் என்கிருர்கள்.

ஒருபால் உலகு அளந்த மாலவனும்.

வேறு பலர், உன் ஒரு பாதியில் உமாதேவியார் எழுந்தருளியிருக்கிருர் என்கிருர்கள்.

ஒருபால் உமையவளாம்.

அப்படியானால் உன்னை எப்படி அடையாளம் கண்டு கொள்வது? மின்னலைப் போன்று காட்சி தரும் உமாதேவி யாரின் முழு வடிவத்தையும் எப்படித் தரிசிப்பது? உன்னைக் காணவேண்டும் என்று எண்ணி, உன்னை நேர்பட்டுத் தரிசித்துக் கொள்ளலாம் என்றால், இரண்டு பக்கத்திலும் நின்னுருவமாக எங்களுக்கு நிறம் தெரிவதில்லை. நின் உரு அடியோடு தெரிவதில்லை; மின்னனைய பெருமாட்டியின் உருவமும் முழுமையாகத் தெரிவதில்லை.

இருபாலும்
நின்உருவம் ஆக நிறம்தெரிய மாட்டோமால்,
நின்உருவோ, மின்னுருவோ நேர்ந்து.

இந்தத் தடுமாற்றத்தைத் தருகிறது அவர்கள் சொல்லும் கோல வருணனைகள்.

ஒருபால் உலகு அளந்த மாலவனும்; மற்றை
ஒருபால் உமையவளாம்; என்றால் — இருபாலும்
நின்உருவம் ஆக நிறம்தெரிய மாட்டோமால்
நின்உருவோ மின்உருவோ நேர்ந்து.

[இறைவனே, உன்னுடைய ஒரு பாகத்தில் இருப்பவன் உலகத்தைத் தன் திருவடியால் அளந்த திருமாலாம்; மற்ற ஒரு பாகத்தில் இருப்பவள் உமையவளாம்; இவ்வாறு சொன்னால் அடியேங்கள் இரண்டு பக்கத்திலும் நின் திருவுருவமாக இதுதான் நிறம் என்று தெரிந்து கொள்ளும் ஆற்றல் இல்லோம்; இன்னும் அணுகிப் பார்த்து நின் உருவமோ அல்லது மின்னலைப் போன்ற உமையவளின் உருவமோ என்றும் அறியமாட்டோம்.

[நிறம் தெரியமாட்டோமால் என்பதைப் பின்னும் கூட்டி, 'நேர்ந்து நின் உருவோ, மின் உருவோ, நிறம் தெரிய மாட்டோமால்' என்று பொருள் கொள்க. அன்றி, நின்

உருவோ, மின் உருவோ என்பதை நேர்பட்டுச் சொல்வாயாக என்று ஒரு சொல் வருவித்து முடிப்பதும் ஆம். நேர்ந்து—நேர் பட்டு.]

"ஒரு பாதி மால்கொள ஒருபாதியை உமையாள் கொள மற்றிரு பாதியிலும் இறந்தான் புராரி" என்று ஒரு பழைய பாட்டு உண்டு.

திருமாலும் உமையவளும் இடப் பாகத்தையே மேற் கொண்டிருப்பதாகக் கூறுவர். ஆனாலும், இங்கே வேடிக்கை யாகச் சொல்லப் புகுந்தவராதலின் இன்ன பாகம் என்று சொல்லாமல், 'அவர் ஒரு பாதி, இவள் ஒரு பாதியானால், நீ எங்கே இருக்கிறாய்?' என்று கேட்பது போலப் பாடினார்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 41-ஆவது பாடல்.

# 43. என்ன காரணம்?

தன்னுடைய பிள்ளையுடன் வேடிக்கையாகப் பேசும் உரிமை தாய்க்கு உண்டு. தகப்பனுரை விடத் தாயே நெருங்கிப் பேசும் உரிமையுடையவர். காரைக்கால் அம்மையார் சிவபெருமானிடம் அத்தகைய உறவோடு அன்பு செய்தவர். சிவபெருமானைத் தெய்வமாகவும் தகப்பனுகவும் பாராட்டிப் பாடும் பாடல்கள் பல. அவனிடம் நெருங்கி உரிமையோடு தாய் பேசுவது போலப் பேசும் இடங்களும் சில. "நீ இது செய்யாதே; இப்படிச் செய்தால் ஆபத்து" என்று சொல்வார். தாய் தன் மகனைப் பார்த்து "அப்பா, நீ அங்கெல்லாம் போகாதே" என்று சொல்வது போன்றது இது. "இதனுல்தான் இப்படி இருக்கிருயோ?" என்று கேட்பதுண்டு.

அவ்வாறு நெருங்கிப் பேசும் நிலையில் வருகிறது ஒரு பாட்டு.

சிவபெருமான் திருமுடியில் உள்ள பிறையைப் பார்க்கிருர் அம்மையார். அதை உற்றுக் கவனிக்கிருர். பூர்ணச் சந்திரனைத் திருமுடியில் வைத்திருக்கக் கூடாதோ? ஒருகால் பூர்ண சந்திரனை வைத்துக் கொண்டு, பிறகு அதற்கு இந்த நிலை வந்ததோ? வேறு என்ன காரணம்? தெரியாதவரைப் போல யோசிக்கிருர். இறைவன் தன் திருமுடிமேல் பிறைச் சந்திரனைச் சூடியிருக்கும் காரணம் அவருக்குத் தெரியாதா?

தட்சனுடைய மாப்பிள்ளை சந்திரன். அவன் இருபத்தேழு நட்சத்திரங்களையும் மனைவியாகக் கொடுத்து திருமணம் செய்வித்தான். சந்திரனுக்கு உடுபதி என்று பெயர்; நட்சத்திரங்களுக்கு நாயகன் என்பது பொருள். சந்திரன் ரோகிணி

யிடம் அதிக அன்பு வைத்து மற்றவர்களைப் புறக்கணித்தான். அதை அறிந்த மற்ற இருபத்தாறு நட்சத்திர மகளிரும் தட்சனிடம் முறையிட்டுக் கொண்டனர். தட்சனுக்குச் சந்திரன் மேல் கோபம் வந்து விட்டது. அவன் தன் மாப் பிள்ளை என்பதையும் மறந்து, "நீ தேய்ந்து ஒழிவாயாக" என்று சாபமிட்டான். அவன் தேய்ந்து வந்தான். அவன் சிவபெருமானிடம் வந்து பணிந்து இறைஞ்சினான். அப் பெருமான் அவனைத் தன் திருமுடியின்மேல் பிறையாகவே வைத்துக் கொண்டான். வானத்தில் அவன் தேயவும் மீண்டும் வளரவும் வரம் அருளினான்.

சிவ பெருமான் திருமுடியில் வைத்துள்ள பிறை தேய்வது இல்லை; வளர்வதும் இல்லை. இறைவனை அடைந்தவர்கள் குறைவதும் வளர்வதும் இன்றி ஒரே நிலையில் இருப்பார்கள் என்பதை இது காட்டுகிறது.

பிறைவடிவிலே இருக்கும் சந்திரனைக் கண்டு அது பற்றிச் சொல்ல வருகிறார் காரைக்கால் அம்மையார். 'இது இளைய குழந்தை போலப் பிறையாகவே இருக்கிறதே! இறைவனை சார்ந்த யாவும் வளம் பெற்று வளர்ச்சி அடையுமே! இந்தப் பிறை மாத்திரம் மறுபடியும் வளர்ந்து பெரிதாகி முழுமதி யாகாதோ? என்ன காரணம்?"— இப்படி அவருடைய யோசனை படர்கிறது.

**இளங்குழவித் திங்கள் இது........**
**வளரமாட்டாதோ?**

என்று தமக்குள்ளே வினாவை எழுப்பிக்கொள்கிறார். 'என்றும் குழவி போல இளமையை உடையதாய் உள்ள இதன் வளம் மறுபடியும் வளர்ச்சி பெறாதோ?' என்றும் யோசிக்கிறார்.

இறைவன் தன் சடைமுடியில் பாம்பை அணிந்திருக் கிறான். பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை. அது சந்திரனைக் கடித்து விழுங்கி விடும். சிவபெருமான் முழுமதியாகவே தன் தலையில் அணிந்து கொண்டு, பிறகு அவன் திருமுடியில்

இருக்கிற பாம்பு அதை உண்ண, அதனால் அது நைந்துபோய் சிறியதாகி விட்டதோ?

நேர்ந்து அரவம் கொள்ளச் சிறுகிற்ரோ?

'சே, சே! இறைவன் திருமுடிமேல் இருக்கும் சந்திரன் எவ்வளவு சிறந்த பதவியில் இருக்கிறான்! இறைவனைச் சார்ந்தவர்களுக்கும் பகைவர்களால் துன்பம் வருமா? காலனால் உண்டாகும் பயத்தையே போக்கும் பெருமான், இந்தப் பாம்பு பயத்தைப் போக்க மாட்டானா? அது மட்டும் அன்று, இறைவனோடு தொடர்புடையவர்கள் அந்தத் தொடர்பு உண்டாவதற்கு முன்பு எப்படி இருந்தாலும், அவன் தொடர்பு ஏற்பட்ட பிறகு நல்லவர்கள் ஆகிவிடு வார்களே! இரும்பு பொன்னாற் போலக் கொடிய மனம் உடையவர்களெல்லாம் மிகவும் மென்மையான உள்ளம் படைத்தவர்கள் ஆகிவிடுவார்களே! அப்படி இருக்க, இறைவன் திருமுடியில் உள்ள பாம்பு தன்னுடன் அங்கே வாழும் சந்திரனுக்குத் தீங்கு புரியுமா? நல்ல அரசர்கள் ஆட்சி புரிந்தால் இயற்கையாகப் பகைமை பாராட்டும் புலி யும் பசுவும் ஒரு துறையில் நீர் உண்ணும் என்பார்களே! சிவ பெருமானிடம் உள்ளவற்றினூடே பகைமை உணர்ச்சி இருக்க நியாயம் இல்லையே! ஆகையால் இது பிறையாக இருப் பதற்கு வேறு ஏதாவது காரணம் இருக்க வேண்டும்?— இவ்வாறு ஓடுகிறது அவர் சிந்தனை.

'தாம் அணிந்து கொள்ளும் அணிகலன்களைத் தாமே ஆய்ந்தெடுத்துப் புனைந்து கொள்வது யாவருக்கும் இயல்பு. இறைவன் சந்திரனைத் தன் திருமுடியில் அணிந்து கொள்ள விரும்பினான். முழுமதியாக அணிந்து கொண்டால், அது இடத்தை அடைத்துக் கொள்ளும். கங்கை, கொன்றை, எருக்கு, தும்பை, பாம்பு முதலியவற்றிற்கும் இடம் இருக்க வேண்டும். ஆகையால் அந்தச் சந்திரனைச் சிறிதளவு வெட்டி வளைவாக அழகுபட வைத்துக் கொள்ளலாம் என்று இறைவன் நினைத்திருக்கிறான். எந்த அளவில் வைத்துக்

'கொண்டால் பொருத்தமாக இருக்கும் என்று ஆராய்ந்து பதினாறு கலைகளையுடைய சந்திரனில் ஒரு கலையை மாத்திரம் அளவாக அறிந்து அதை வைத்துக் கொண்டானோ?' இப்படியும் ஓர் ஐயம் எழுகிறது.

இறைவனோடு நெருங்கி வேடிக்கையாக எழும் சிந்தனைகள் இவை. இப்போது இறைவனிடமே அம்மையார் தம் ஐயத்தை எழுப்பி வினவுகிறார்.

'இறைவனே, நானும் பார்க்கிறேன். இளம் பிள்ளையைப் போல இருக்கிற இந்தச் சந்திரன், அன்று கண்ட மேனிக்கு அழிவு இல்லாமல் வளராமலே இருக்கிறதே! இது வளராதோ? ஒருகால் பாம்பு விழுங்க அதனால் சிறுத்து விட்டதோ? அல்லது, நீயே அதை வேண்டும் அளவுக்கு அறிந்து தலையில் பொருத்திக் கொண்டாயோ!' என்று கேட்கிறார்.

**நேர்ந்து அரவம் கொள்ளச் சிறுகிற்றோ? நீ அதனை**
**ஈர்ந்து அளவே கொண்டு இசைய வைத்தாயோ?—**
**பேர்ந்து**
**வளம் குழவித் தாய்வளர மாட்டாதோ? என்றோ?**
**இளங்குழவித் திங்கள் இது.**

[எம்பெருமானே, இளம் குழவித் திங்கள் இது—இளைய குழந்தை போன்ற சந்திரனாகிய இது, அரவம் கொள்ள—நீ அணிந்திருக்கும் பாம்பு பற்றிக் கொள்ள. நேர்ந்து—நைந்து. சிறுகிற்றோ-சிறியதாயிற்றோ? அன்றி நீ அதனை ஈர்ந்து—நீயே அதை அறிந்து. அளவே கொண்டு-உனக்கு வேண்டும் அளவில் கொண்டு, இசைய வைத்தாயோ—உன் திருமுடியுல் பொருந்தும்படி வைத்தாயோ? குழவித்தாய் - இளமையை உடையதாய். வளம்-இதன் வளப்பம். பேர்ந்து-மறுபடியும் வளரமாட்டாதோ-வளராதோ? என்றோ-என்ன காரணம்?

நேர்ந்து-சேர்ந்து; சந்தித்து என்றும் பொருள் கொள்ளலாம். அளவே-அளவாக; ஏ அசை நிலை. பேர்ந்து வளரமாட்டாதோ, என்று கூட்டுக் என்றே; ஏ: அசைநிலை. இது சிறுகிற்றோ என்று கூட்டுக.]

இது காரைக்கால் அம்மையார் பாடிய அற்புதத் திருவந்தாதியில் வரும் 41-ஆம் பாட்டு,

# 44. நம்மால் முடியுமா?

மிகவும் அன்புடையவர்களிடத்தில் உள்ள பழக்கங்களை நாம் நன்கு அறிவோம். அந்தப் பழக்கங்கள் எல்லாம் நமக்குப் பிடித்தவை என்று சொல்லமுடியாது. நம்முடைய அன்புக்கு உரியவர் மிகப்பெரியவராக, மதிப்புக்கு உரியவராக இருந்தால், அவருடைய குணங்களையோ, பழக்க வழக்கங்களையோ நாம் குறை கண்டு பேசுவதில்லை; என்றாலும் ஏதேனும் ஒரு செயல் நம் மனதுக்குப் பொருத்தமாகத் தோன்றாமல் இருக்கும். அந்தச் செயலுக்கு உரிய காரணம் ஏதாவது இருக்கலாம். அது நமக்குத் தெரியாது. ஆயினும் அந்தக் காரியத்தை அந்தப் பெரியவர் செய்யாமல் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றுகிறது. அதை எப்படி அவர் செய்யாமல் தடுப்பது? அவரோ மதிப்புக்குரியவர். "நீங்கள் இதைச் செய்யக்கூடாது" என்று வெளிப்படையாகச் சொல்லித் தடுக்க இயலாது. ஆனாலும் எப்படியாவது நம் கருத்தைத் தெரிவித்துவிட வேண்டும் என்ற எண்ணம் உந்துகிறது. குறிப்பாகச் சொல்லிப் பார்க்கிறோம். அவ்வளவுதான் நம்மால் முடியும். அந்தக் குறிப்பை உணர்ந்துகொண்டு அந்தப் பெரியவர் அந்தச் செயலை நிறுத்தினால் நமக்கு மகிழ்ச்சி உண்டாகும்.

அந்தச் செயலை ஏன் தடுக்க வேண்டும்? அவ்வளவு பெரியவரைப் பற்றிச் சிலர் பழி கூறுகிறார்கள். அந்தச் செயலைச் செய்வதையே இழித்துக் கூறுகிறார்கள். அதைக் கேட்கும் போது நமக்கு வருத்தமாக இருக்கிறது. 'இந்த ஒரு செயலால் தானே இந்தப் பெரியவருக்குப் பழி உண்டாகிறது? இதைச் செய்யாமல் நிறுத்திவிட்டால் பழிகூறுவார் வாய் அடைத்து விடுமே!' என்று நாம் எண்ணுகிறோம்.

குறிப்பாகச் சொல்வதற்குமேல், வெளிப்படையாகச் சொல்லித் தடுப்பதற்கு நமக்குத் துணிவு இல்லை. அவருக்கு ஏதோ அறிவுரை சொல்வதுபோல் அல்லவா ஆகிவிடும்? அதற்குரிய தகுதி நமக்கு ஏது? அவரிடத்தில் அன்பு உடையோம் என்பது ஒன்றுதான் நம் தகுதி. வேறு எந்த வகையில் அவரை அணுகி அறிவுறுத்துவதற்குரிய தகுதி நம்மிடம் இருக்கிறது?

நாம் விலக்க முடியாது. ஆனால் அந்தப் பெருமானோடு எவ்வளவு பெரியவர்கள் பழகுகிறார்கள்? அவர்களெல்லாம் நம்மைவிட எவ்வளவோ வகையில் பெரியவர்கள்; அந்தப் பெருமானோடு பழகி அவரால் நலம் பெறுகிறவர்கள். அவர் களும் இதைக் கவனித்திருப்பார்கள். ஊரார் கூறும் பழி அவர்கள் காதிலும் விழுந்திருக்கும். அப்படி இருக்க, அவர்கள் ஏன் அவரிடம் கூறி அந்தச் செய்யாமல் தடுக்கவில்லை? அவர் களே விலக்காமல் சும்மா பார்த்துக்கொண்டிருக்கும்போது நம்மால் என்ன செய்யமுடியும்? அவனைத் தடுப்பதற்கு நமக்கு ஏது ஆற்றல்?

இத்தகைய நிலையில் இருந்து பேசுகிறார். காரைக்கால் அம்மையார். சிவபெருமானைப் பற்றித்தான் சொல்கிறார். சிவபெருமானிடம் அவருக்கு உள்ள அன்பைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

சிவபெருமான் என்ன செய்கிறான்? ஊரார் பழிக்கும்படி அவன் செய்கிற காரியம் என்ன?

அவன் பிச்சை வாங்குகிறான். இவ்வளவு பெரியவன், எல்லோருக்கும் எல்லாவற்றையும் ஈகிறவன், பிச்சை வாங்கலாமா? ஊரூராகத் திரிந்து பிச்சை வாங்குகிறான். அதையாவது ஒளிமறைவாகச் செய்கிறானா? இரவிலே வெளிச்சம் போட்டுக்கொண்டு போய்ப் பிச்சை எடுக்கிறான். தன் தலைமேலே சந்திரனைச் சூடிக்கொண்டு, அதன் ஒளியிலே எல்லோரும் அடையாளம் தெரிந்து கொள்ளும்படி வாங்கு

கிறன். இராத்திரியில் யாரும் இனம் கண்டுகொள்ளாதபடி வாங்குகிறன். இராத்திரியில் யாரும் இனம் கண்டுகொள்ளாதபடி போய் ஓரிரண்டு இடங்களிலே வாங்கிஞலும், அதிகம் பேர் அறிந்திருக்கமாட்டார்கள் என்று சொல்லலாம். இந்தப் பெருமான் மற்றவர்கள் எங்கே தன்னைத் தெரிந்துகொள்ளாமல் போகிருர்களோ என்று நினைப்பவனைப் போல, இந்தச் சந்திரனைத் தலைமேல் வைத்துக்கொண்டு, விளம்பரம் செய்கிறவர்கள் வெளிச்சம் போட்டுக்கொண்டு போகிறவர்களைப் போல, ஊர் ஊராகத் திரிந்து பிச்சை வாங்குகிறன். அதைக் கண்டு ஊரார் சிரிக்கிருர்கள்; பழிக்கிருர்கள்.

அந்தப் பெருமானிடம் நன்மை பெறுகிறவர்கள் தேவர்கள். தேவர்களுக்கெல்லாம் தலைவன் அவன்; அவன் மகா தேவன். தேசு படைத்த மேனியை உடைய தேவர்கள் நம்மை விட எவ்வளவோ பெரியவர்கள்; அறிவுடையவர்கள். அவர்களுக்கு இந்தப் பழி தெரியாதோ? அவனைப் பார்த்து, "இந்தச் சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டு சின்னப் பிச்சைக்காக ஊரூர்தோறும் திரிய வேண்டாம்', என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ளக் கூடாதோ? காலில் விழுந்து இரக்கக்கூடாதோ? அவர்கள் அப்படிச் செய்யத் தகுதி உடையவர்களாயிற்றே! நெருங்கிப் பழகுகிறவர்கள் அல்லவா? அவர்களே விலக்காமல் இருக்கும்போது நம்மால் என்ன செய்யமுடியும்?

**திங்கள் இதுசூடிச் சில்பலிக்குஎன்று ஊர்திரியேல்**
**எங்கள் பெருமானே' என்று இரந்து—பொங்கொளிய**
**வாஞேர் விலக்காரேல், யாம்விலக்க வல்லமே?**

நமக்குத் தெரிகிற அளவுக்கு அந்தத் தேவர்களுக்குத் தெரியாதா? அல்லது அவர்கள் விலக்குவதற்கு அஞ்சுகிருர்களா? நம்முடைய மனந்தான் இப்படி அடித்துக்கொள்கிறது. முப்பத்துமுக்கோடி வானவர்கள் இருக்கிருர்களே; அவர்களுக்குள் ஒருவருக்குக்கூடவா இந்த நினைப்பு வரவில்லை?

தடுக்கும் துணிவுடையவர் ஒருவர் கூடவா அந்தக் கூட்டத்தில் இல்லை? அவர்களை உள்ளொளியும் புறவொளியும் உடையவர்கள் என்று யாவரும் கொண்டாடுகிறார்களே! அப்படிப் பொங்கும் ஒளியையுடைய வானோர்களால் விலக்க முடியவில்லையா? அல்லது அதைப் பழியாகவே கருதவில்லையா?

அதெல்லாம் இருக்கட்டும். இது பழியை உண்டாக்கும் செயல் என்று நமக்குத் தெரிகிறது; ஆனால் விலக்கமுடியவில்லை. வானோருக்கும் இது தெரிந்திருக்கலாம்; அவர்களும் விலக்க அஞ்சுகிறார்கள் போலும்! எம்பெருமானே இதை உணர வேண்டாமோ? தன்னை ஊரார் பழிக்கிறார்களே என்ற உணர்வு அவனுக்கு இருக்க வேண்டாமோ? இவ்வளவு பெரியவன் இந்தச் சிறிய விஷயத்தை உணராமல் இருக்கலாமோ?

இப்படியெல்லாம் அம்மையாருடைய நெஞ்சில் எண்ணங்கள் ஓடுகின்றன. எப்படிச் சமாதானம் செய்து கொள்கிறது? வானோர்களின் ஆற்றல் இன்மையையும் தம்முடைய சிறுமையையும் எண்ணி அங்கலாய்த்தவர். எம்பெருமான் ஏன் இப்படிச் செய்கிறான் என்று எண்ணமிட்டார். இது பழியை உண்டாக்கும் செயல் என்பதை அவன் அறிய மாட்டானா? அவன் எல்லாம் அறிந்தவனாயிற்றே! எல்லாருடைய உள்ளத்திலும் நின்று அவர்களுடைய கருத்தை உணர்பவன் அல்லவா? அப்படி இருக்க, இந்தப் பழியை அவன் அறியாமலா இருந்திருப்பான்? இருந்தும் இன்றும் இப்படிச் சில் பலிக்கு என்று ஊர் திரிகிறானே!

அம்மையாருக்குச் சிறிதே தெளிவு பிறக்கிறது. அவன் எல்லாம் அறிந்தவன்; சர்வக்ஞன். யார் யாருக்கு எது வேண்டும் என்று அறிபவன். தனக்கு இன்னது வேண்டும் என்பது அவனுக்குத் தெரியாதா? அவனைப் பற்றி முழுதும் நமக்குத் தெரியாது. அவன் நம் புலன்களுக்கு எட்டாதவன். நாம் அறியும் எந்த அளவிலும் அகப்படாதவன். அவன் செயல்களும் அத்தகையனவே. உலகியலோடு அவன் செயல்

களை ஓட்டிப் பார்ப்பது முறையன்று. அவன் திருவுள்ளத்தை யார் அறிவார்கள்?

தன் குழந்தையாகிய ஆருயிர்களுக்கு என்ன வேண்டும் என்பதை அறிந்தவன் அவன். "வேண்டத்தக்க தறிவோய்நீ" என்பது திருவாசகம் தனக்கு இன்னது வேண்டும் என்று அவனுக்குத் தெரியாதா? தான் இன்னது செய்ய வேண்டும், இன்னது செய்யக்கூடாது என்று அறியாதவனா அவன்? அறிவாளிகள் செய்யும் சில காரியங்களுக்குரிய காரணம், நமக்குப் புலப்படுவதில்லை. புறத் தோற்றத்தைக் கொண்டு அறிவிலே குறைந்தவர்கள் அவர்கள் செயலுக்கு மாசு கற்பிக்கலாம். அது அவர்களுடைய அறியாமையால் விளைவது. அறிவாளிகளின் செயல்களுக்குத் தக்க காரணம் இருக்கும்.

முற்றறிவினனாகிய இறைவன் செய்யும் செயல்களுக்குத் தக்க காரணம் இருக்க வேண்டும். நமக்கு அந்தக் காரணம் தெரியாமையால் அவன் செய்வது தவறு என்று சொல்ல நமக்குத் தகுதி இல்லை. நமக்குக் காரண காரியங்கள் எல்லாம் தெரியுமா? நம்முடைய செயல்களுக்கே பல சமயங்களில் காரணம் புரிவதில்லையே! இறைவன் செயலின் காரணத்தை அறியும் அறிவு நமக்கு ஏது?

இப்படியெல்லாம் சிந்தனையை விரித்த அம்மையார் ஒரு முடிவிற்கு வருகிறார். அவனுக்குத் தெரியும், தனக்கு எது தக்க செயலென்று. காரணம் தெரியாமல் இருப்பது நம் குறையே அன்றி அவன் குறை அன்று. தனக்கு எது முறையென்பதைத் தானே அறிவான்.

**தானே அறிவான் தமக்கு.**

அவன் செயலைப் பற்றிக் குறை கூற நாம் யார்? அந்த வானவர்களுக்குத்தான் என்ன தகுதி இருக்கிறது? அவர்கள் எவ்வளவு ஒளியுடையவர்களாக இருந்தால்தான் என்ன? பேரொளிப் பிழம்பாகிய இறைவன் முன் அந்த ஒளி எம்மாத்திரம்?

**திங்கள் இதுசூடிச் சில்பலிக்கு என்று ஊர்திரியேல்**
**எங்கள் பெருமானே' என்று இரந்து —பொங்கொளிய**
**வானோர் விலக்காரேல் யாம்விலக்க வல்லமே?**
**தானே அறிவான் தனக்கு.**

"இந்தச் சந்திரனைத் தலையிலே அணிந்து கொண்டு சிறிது பிச்சைக்காக ஊர்தோறும் திரியாதே, எம்பெருமானே!" கெஞ்சிக் கேட்டுக் கொண்டு, மிக்க ஒளியை உடைய, தேவர்கள் சிவபெருமான் பிச்சை எடுப்பதை விலக்காமல் இருப்பாரானால், ஒன்றுக்கும் பற்றாத யாம் விலக்கும் வன்மையை உடையேமா? தனக்கு உரியதைத் தானே அறிவான் எம்பெருமான்.

[சூடி-தலையில் அணிந்து கொண்டு, சில் பலி-சிறிய பிச்சை; சில என்பது சிறுமையைக் குறித்தது; 'சின்னீர்' என்பது போல. ஊர் திரியேல்-ஊர்தோறும் திரியாதே' "ஊருரன் பலிக்குழல்வான்" என்பர். பொங்கு ஒளிய வானோர் - மிக்கொளிவரும் ஒளியையுடைய திருமேனி படைத்த தேவர்கள்; ஒளி, உள்ளொளியாகிய அறிவையும் புறவொளியாகிய தேசையும் குறிக்கும். தேவர்கள் இரண்டும் உடையவர்கள். அவர்கள் அறிவு நிரம்பியவர்களாதலின் புலவர் என்ற பெயரை உடையவர்கள். வல்லமே: ஏகாரம்; வினு; வன்மையை உடையேம் அல்லோம் என்ற பொருள்பட நின்றது. தனக்கு உரியதை என்று ஒரு சொல் வருவித்து முடிக்க. 'தானே சொல்லாமலே அறிபவனுக்கு விலக்க வல்லமே' என்று கூட்டிப் பொருள் கொள்வதும் பொருந்தும். தனக்கு என்பதை உருபு மயக்கமாகக் கொண்டு, 'தன்னை விலக்க வல்லமே' என்று பொருள் கொள்க.]

காரைக்கால் அம்மையார் இறைவனை நெருங்கிப் பாடியது இது. இது அற்புதத்திருவந்தாதியில் 43-ஆம் பாட்டு.

# 45. அருளுக்கு ஏங்குதல்

பொருள் மிகுதியாகப் படைத்தவர்கள் தம்மிடம் உள்ள வற்றைக் கொண்டு திருப்தி அடைவதில்லை; மேலும் மேலும் பொருளை ஈட்டவேண்டும் என்றே விரும்புவார்கள். அந்தத் துறையில் முயன்று கொண்டே இருப்பார்கள். தம்மைவிட மிகுதியான பொருளுடையவர்களைப் பார்த்து, "அந்த அளவுக்கு நாம் பொருளைப் பெறவில்லையே!" என்று அங்கலாய்ப்பார்கள்.

இறைவனுடைய திருவருளைப் பெற்றவர்களும் ஒரு வகை யில் இப்படித்தான் இருப்பார்கள். "இன்னும் இறைவ னுடைய அருள் தக்கவண்ணம் கிடைக்கவில்லையே!" என்று வியப்போம். அவர்களோ, "இறைவனே, இன்னும் உன் திருவருளை நான் பெறாமல் வாணுளை வீணுகக் கழிக்கிறேனே!" என்று நைந்து உருகுவார்கள். அம்பிகையின் திவ்ய தரிசனத்தைக் காணவேண்டும் என்ற தீவிரமான ஆவலைக் கொண்ட இராமகிருஷ்ண பரமஹம்ஸர், ஒவ்வொரு நாளும், "இன்றும் உன் தரிசனம் கிடைக்காமல் வீணுய்ப் போய் விட்டதே!" என்று புலம்பினார். இவ்வாறு ஏங்கும் ஏக்கந்தான் உண்மையான பக்தியின் இலக்கணம். அவ்வாறு ஏங்கி நிற்பவர்களுக்கு இறைவன் திருவருள் அநுபவம் கிடைக்கும்

"இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே"

என்று அப்பர் பாடுவார்.

நம்மைப் போன்றவர்கள், கோவிலுக்குப் போய் ஓர் அர்ச்சனை செய்வதோடு திருப்தி அடைகிறோம். வீட்டிலே பூஜை செய்வதில் திருப்தி அடைகிறோம். "இன்று சகஸ்ர நாம அர்ச்சனை பண்ணினேன்" என்று பெருமை பேசுகிறோம். பல

தலங்களுக்குப் போய் வந்ததைப் பெருமையாக எடுத்துச் சொல்கிறோம். "அந்த ஞானியைத் தரிசித்தேன்; இந்தச் சுவாமிகளைத் தரிசித்தேன். அங்கே உள்ள சாதுவைப் பார்த்து நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தேன். ஆசாரிய சுவாமிகள், சௌக்கியமாக இரு என்று சொன்னார்கள்: அந்த மகா பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது" என்று சொல்லிச் சொல்லி மகிழ்ச்சி அடைகிறோம்.

ஆயிரம் ஹோட்டல்களின் விலாசத்தைத் தெரிந்து வைத்துக் கொண்டால் வயிறு நிரம்புமா? சாப்பிட்டால் தானே பசி போகும்? பெரியவர்களுடைய தரிசனமும் சாதுக்களுடைய சங்கமும் முடிந்த முடிவு அல்ல. அவைகள் எல்லாம் நமக்கு இறைவன் அருளைப் பெறவேண்டும் என்ற பசி உண்டாகக் காரணமாகும். அதற்கு மேல் நாமே முயன்று சாதனம் செய்தாலன்றி இறைவனுடைய அருளனுபவம் உண்டாகாது. குருநாதர்கள் வழிகாட்டுவார்கள். அவர்கள் காட்டிய வழியைப் பின்பற்றிச் சாதனத்திலே ஈடுபட்டு மேலே மேலே போகவேண்டும். படிப்படியாக அநுபவத்திலே உயரவேண்டும்.

'பள்ளிக்கூடத்தில் படிப்பவர்கள் படிப்படியாகப் பல வகுப்புகளைத் தாண்டி மேற்படிப்புப் படிப்பது போல, இறைவன் திருவருளைப் பெறும் முயற்சிகளிலும் பல படிகள் உண்டு. அவற்றைத் தாண்டி மேலே போகவேண்டும். இடையிலே நின்று விடக்கூடாது. நாம் இதுவரையில் ஏறிவந்த படிகளைப் பார்த்துத் திருப்தி அடையக் கூடாது. இனிமேல் ஏற வேண்டிய படிகளைப் பார்த்து ஏங்க வேண்டும்; அவற்றைக் கடக்க முயல வேண்டும்.

பக்தர்களும் ஞானிகளும் முடிந்த முடிபாகிய சகஜ சமாதி வரும் வரையில் படியில் ஏறிக்கொண்டே இருப்பார்கள். "இன்னும் பல படிகள் கடக்க வேண்டுமே! இறைவா, அதற்கு வேண்டிய பலத்தைத் தா" என்று இறைஞ்சுவார்கள். இத்தனை தூரம் ஏறும்படி அருள் செய்வதற்காக நன்றி

பாராட்டினாலும், இன்னும் முற்றவும் ஏறி முடிக்கவில்லையே! என்ற ஏக்கத்தைப் பெரியவர்கள் புலப்படுத்துவார்கள். அருளாளர்களின் பாடல்களில் அத்தகைய ஏக்கத்தைப் பல இடங்களில் பார்க்கலாம்,

"களக்கம் அறப் பொதுநடநான்
கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக்
காய்த்ததுஒரு காய்தான்,
விளக்கமுறப் பழுத்திடுமோ!
வெம்பிஉதிர்ந் திடுமோ!
வெம்பாது பழுக்கினும்என்
கரத்தில்அகப் படுமோ?
கொளக்கருது மலமாயைக்
குரங்குகவர்ந் திடுமோ!
குரங்குவ ராதென்து
குறிப்பில்அகப் படினும்
துளக்கம்அற உண்ணுவனோ?
தொண்டைவிக்கிக் கொளுமோ?
சோதிரு வுளம்எதுவோ?
ஏதும்அறிந் திலனே!"

என்ற இராமலிங்க வள்ளலார் பாட்டில் இந்த ஏக்கத்தைத் தெளிவாகக் காணலாம். மாணிக்க வாசகர் முதலியோருடைய திருவாக்குகளிலும் இப்படி வேசறும் நிலையை காட்டும் பாடல்கள் பலப் பல.

காரைக்காலம்மையாரும் பல இடங்களில் தம்முடைய ஏக்கத்தை வெளிப்படுத்துகிறார்; "ஆண்டவனே, ஏன் இன்னும் எனக்கு அருளாமல் இருக்கிறாய்?" என்று மனம் கரைந்து கேட்கிறார். அப்படி உள்ள பாடல் ஒன்றை இப்போது பார்க்கலாம்.

ஆண்டவன் அனந்த கல்யாண குணங்களை உடையவன். அவனுடைய சிறப்புக்கள் பக்தர்கள் உள்ளத்தை உருக்குவன. அவனுடைய சீரை நினைப்பதனால் உள்ளம் இனிக்கிறது; பேசுவதனால் வாய் இனிக்கிறது. நினைக்க நினைக்க மனத்துக்கு இனியனவாக உள்ள சீர்கள் அவை.

### மனக்கு இனிய சீராளன்

அவனுடைய இனிக்கும் சீர்கள் எத்தனையோ? அவன் கருணைக்கு எத்தனையோ சான்றுகளைக் கூறலாம். பகீரதன் செய்த தவத்துக்குப் பயன் கிடைக்கவில்லை. இறைவன் மனம் இரங்கி, ஆரவாரித்து வந்த கங்கையைத் தன் சடையிலே தாங்கிப் பகீரதனுடைய வேண்டுகோளை நிறைவேற்றினான். அந்தக் கங்கையைத் தலையிலே தாங்கி நிற்கிறான். அகங்காரத்தால் கலக்கம் அடைந்து புனிதம் இழந்த கங்கை இறைவன் திருமுடியில் தேங்கித் தெளிந்து புனிதம் பெற்றது. கங்கைக்கு, இறைவன் மணவாளன் என்று உலகம் பேசுகிறது. உமா தேவிக்குச் சமானமான நிலையைக் கங்கை பெற்றது. உமா தேவியைக்கூட ஒரு பாகத்தில்தான் வைத்தான். கங்கையையோ தலையின்மேல் வைத்திருக்கிறான். அவன் ஈரமுடையவன்; ஈரம் அருளைக் காட்டுவது. கங்கை மணவாளன் என்பது அவன் பேரருளாளன் என்பதைக் காட்டும் அறிகுறி.

### கங்கை மணவாளன்

அவன் திருமேனி செம்மையானது. செம்மை என்பது நிறைவுக்கும், நேர்மைக்கும், மங்கலத்துக்கும், உயிருட்டத்துக்கும், அழகுக்கும் அடையாளமாக உள்ள வண்மை. இறைவன் இவற்றையெல்லாம் உடையவன்.

> "சிவனெனும் பெயர் தனக்கே உடைய செம்
> மேனியம்மன்"

என்று அப்பர் பாடுவார்.

கொடுக்கக் கொடுக்கக் குறையாத நிறைவை உடையவன் அவன். இத்தகைய நிலை வேறு யாருக்கும் இல்லை. மனிதர்களுக்கு வேண்டிய வரங்களைத் தருகிறவர்கள் தேவர்கள். அவர்களை வழிபட்டுப் பலபல நன்மைகளை அன்பர்கள் பெறுகிறார்கள், ஆனாலும் சிவபெருமான் வழங்கும் அளவுக்கு அவர்களால் அருள் செய்யமுடியாது. அதனால்தான் அவர்கள் தமக்கு இறைவனையே தலைவனாகப் போற்றி வழிபடுவார்கள். சிறிய ஆற்றலையுடைய மக்கள் தம்மை வழிபடும்போது அவர்களுடைய குறையைப் போக்கியருளும் பேராற்றல் அந்தத் தேவர்களுக்கு உண்டு. அதனால் அவர்கள் குறை இல்லாதவர்கள் என்று எண்ணக்கூடாது. அவர்களும் குறையை உடையவர்களே. தம்முடைய குறைகளை நீக்கிக் கொள்ள அவர்கள் சிவபெருமானை வாழ்த்துகிறார்கள்; வணங்குகிறார்கள் அப்படி வணங்கியதனால் பிறர் தம்மை வணங்கும் பதவியைப் பெற்றார்கள்.

> "வாழ்த்துவதும் வானவர்கள்
> தாம்வாழ்வான்; மனம்நின்பால்
> தாழ்த்துவதும் தாம்உயர்ந்து
> தம்மை எல்லாம் தொழவேண்டி"

என்ற திருவாசகம் இந்தக் கருத்தைப் புலப்படுத்துகிறது. சிவபெருமானுக்கு மகாதேவன், தேவதேவன் என்ற திருநாமங்கள் உண்டு. அவன் தேவர்களுக்கெல்லாம் வேண்டியதை உதவும் உபகாரி.

> செம்மேனிப்
> பேராளன், வானோர் பிரான்.

அத்தகைய இறைவனை அடைந்தால் தமக்கு வேறு எங்கும் கிடைக்காத அருள் கிடைக்கும் என்று அவனை அடைந்தவர் அம்மையார். வேறு யாரையும் அணுகாமல் சிவபெருமானுக்கே அடிமைப்பட்டவர். அவனையே அடைந்து வாழ்பவர். 'இந்த வாழ்வு இறைவனுக்கு ஆட்படுவதற்காகவே அமைந்தது' என்பதை உணர்ந்து அனன்ய பக்தி

செய்தவர். அவருடைய வாழ்வு, அவனை அடைந்த பிறகே உண்மையான வாழ்வாயிற்று. அடைய வேண்டிய இடத்தை அடைந்து விட்டோம் என்ற மன நிறைவு அவருக்கு ஏற்பட்டது.

இறைவன் பெருமைகளையெல்லாம் உணர்ந்தார். அவன் கல்யாண குணங்களையும், அவற்றுக்குள் சிறந்து நிற்கும் கருணையையும், அவன் குறைவிலா நிறைவுடையவன் என்பதையும், பதவிபெற்றூர் எல்லோரும் அவனுடைய அருளால் பிழைக்கிறூர்கள் என்பதையும் உணர்ந்தார். அவனையன்றிப் புகலிடம் வேறு இல்லை என்று தெளிந்தார். அவன் அடிக்கே ஆளானூர். அதன்பின் அவருடைய வாழ்வு வாழ்வாயிற்று. இப்போது அவர் வாழ்கிறூர்.

**தனக்கே அடியனாய்த்**
**தன் அடைந்து வாழும்**
**எனக்கே.**

இந்த வாழ்வு நிறைவு பெற்றதா? வாழாத வாழ்வு வாழாமல் உண்மையான வாழ்வு வாழத் தலைப்பட்டார் அம்மையார்.

இத்தனையும் இறைவன் திருவருளால் அமைத்தனவே. ஆனூல் இது போதுமா? அவன் அருளை முற்றப் பெற வேண்டாமோ? அவனுடைய பெருங் கருணையிலே முக்குளித்துத் தம்மை இழக்க வேண்டாமோ? எல்லாம் இழந்து நிற்கும் நிலையைப் பெற வேண்டாமோ?

'அத்தகைய நிலை பெறுவதற்குரிய அருளை வழங்கவில்லையே' என்று ஏங்கித் தம் ஏக்கத்தை இறைவனிடம் முறையிடுகிறூர், "எத்தனையோ பேருக்கு முழு அருளைத் தந்திருக்கிறூயே! உன்னையன்றிப் பிறர் யாரையும் அடையாமல் இருக்கும் எனக்கு மட்டும் இன்னும் அந்த அருளை வழங்காமல் இருக்கிறூயே! அவ்வாறு இருப்பதற்குக் காரணம் என்ன?

என்னுடைய குறையா? அல்லது உன்னுடைய புறக்கணிப்பா?'' என்று கேட்கிறார்.

**எனக்கே அருளாவாறு என்கொல்?**

இறைவன் அருளை முற்றும் பெற்றிலேன் என்ற ஏக்கத்தால் இப்படிக் கேட்கிறார். இந்த ஏக்கம் இருந்தால் தான் மேலும் மேலும் உயர்ந்து கொண்டே இருக்க முடியும்.

**தனக்கே அடியனாய்த் தன்அடைந்து வாழும்**
**எனக்கே அருளாவாறு என்கொல்?—மனக்குஇனிய**
**சீராளன், கங்கை மணவாளன், செம்மேனிப்**
**பேராளன், வானோர் பிரான்.**

[மனத்துக்கு இனியனவாக உள்ள கல்யாண குணங்களை உடையவனும், கங்கா தேவியின் மணவாளனும், செம்மையான திருமேனியையுடைய பெரியவனும், தேவர்களுக்கெல்லாம் உபகாரியுமாக இருக்கின்ற சிவபெருமான், வேறு யாரையும் அணுகாமல் தனக்கே அடிமைப் பட்டேனாய்த் தன்னை அடைந்து வாழும் அடியேனுக்கே அருளாமல் இருக்கும் இயல்பு ஏன்? அதற்கு என்ன காரணம்?

தனக்கே: ஏகாரம், பிரிநிலை. அடியன்-அடியேன்; தன்மை ஒருமை; ஆண்பாற் படர்க்கை அன்று. தன்-தன்னை. எனக்கே: ஏகாரம், பிரிநிலை; தேற்றமும் ஆம். அருளா ஆறு-அருளாத வண்ணம். மனக்கு-மனத்துக்கு; சாரியை தொக்கது. சீர்—பண்புகள். பிரான்-உபகாரி.]

அற்புதத் திருவந்தாதியில் 44-ஆம் பாடல் இது.

# 46. எங்கே இருக்கிறான்?

ஆண்டவன் எங்கே இருக்கிறான்? இப்படிக் கேட்பதை விட, 'அவன் எங்கே இல்லை?' என்று கேட்பது எளிது. அவன் இல்லாத இடமே இல்லை. அவன் சர்வ வியாபகன்; சர்வாந்தர்யாமி; அதாவது எல்லாவற்றுக்கும் உள்ளும் இருக்கிறான்; எல்லாவற்றினூடும் இருக்கிறான். அவனுக்குத் தமிழில் **கடவுள்** என்ற பெயர் அமைந்திருக்கிறது; அவன் எல்லாவற்றையும் கடந்து, எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டு, அவற்றுக்கு அப்பாலும் இருக்கிறான். இது அவனுடைய சர்வ வியாபக நிலை. எல்லாம் இல்லாத இடத்தில் தத்துவங்களுக்கெல்லாம் அதீதனாக இருக்கிறான். அதே சமயத்தில் அவன் அணுவுக்கு அணுவாய், நுண்ணிய பொருள்களினூடும் மிகநுண்ணிய பொருளாயும் இருக்கிறான்.

**"நுண்ணியான், மிகப்பெரியான்"**

என்று ஞானசம்பந்தர் பாடுவார். இந்தக் கடவுள் தத்துவத்தை **நற்றிணை** என்னும் சங்க நூலில் உள்ள கடவுள் வாழ்த்துச் சொல்லுகின்றது.

"இயன்ற எல்லாம் பயின்று, அகத்தடக்கிய வேத முதல்வன் என்ப."

என்பது இந்த உண்மையைப் புலப்படுத்தும் அடிகள். 'இயன்ற எல்லாம் பயின்று' என்பது அவனுடைய சர்வாந்தர்யாமித்துவத்தையும், 'அகத்து அடக்கிய' என்பது அவனுடைய சர்வ வியாபகத்தையும் குறிப்பிடுகின்றன. அவன் எங்கும் பரந்திருக்கிறான்.

ஔவைப் பாட்டி நெடுந்தூரம் நடந்து வந்த கால் வலியோடு ஒரு கோயிலுக்குள் புகுந்து, "அப்பாடி!" என்று உட்கார்ந்து காலை நீட்டிக்கொண்டாள். இறைவன் எழுந்தருளியிருக்கும் சந்நிதிக்கு எதிரே அந்த மூர்த்தியை நோக்கிக் காலை நீட்டிக்கொண்டிருந்தாள். அதை ஒரு பையன் பார்த்தான். "பாட்டி, பாட்டி, அங்கே சுவாமி இருக்கிறார்" என்று அவளிடம் படபடப்பாகக் கூறினான். பாட்டி சிரித்துக் கொண்டே, "அப்படியா? தெரியாமல் நீட்டி விட்டேன். காலைத் திடீரென்று மடக்க முடியாது. தயவுசெய்து சுவாமி இல்லாத இடமாகப் பார்த்து என் காலைத் திருப்பிவிடு, அப்பா!" என்றாள். அந்தப் பையன் அறிவுள்ளவன். "சுவாமி இல்லாத இடமா?" என்று அப்படியே யோசனையில் ஆழ்ந்து விட்டான். சுவாமி இல்லாத இடம் ஏது?

இந்த உண்மை அநேகமாக எல்லாருக்குந் தெரியும். ஆனால் எங்கும் இருக்கிற அந்தக் கடவுளை நம்மால் பார்க்க முடிகிறதா? காற்று எங்கும் இருக்கிறது. அதை நம் கண்ணால் காண முடிவதில்லை. ஆனாலும் அதன் ஸ்பரிசத்தினால் அதை நாம் உணர முடிகிறது. அப்படி ஏதாவது ஒரு வகையில் கடவுள் எங்கும் இருப்பதை உணர முடிகிறதா? இல்லையே!

எல்லாவற்றையும் உண்டாக்கிப் பாதுகாக்கும் பிரான் அவன். பிரான் என்ற சொல்லுக்கு உபகாரி என்று பொருள். அவனைவிடப் பெரிய உபகாரி யார் இருக்கிறார்கள்? வள்ளல்களுக்கெல்லாம் பெரிய வள்ளல் அவர். மாயூரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்கு வள்ளல் என்றே பெயர் உண்டு. அதை வடமொழியில் 'வதான்யேசுவரர்' என்பார்கள். அந்த வள்ளலை, பிரானை, நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? நமக்கு வேற்றூரிலிருந்து ஒருவர் நம்மிடம் உள்ள அன்பினால் நமக்கு வேண்டிய நெல்லை அனுப்பி வைக்கிறார்: சில சமயங்களில் பணங்கூட அனுப்புகிறார். அந்த உபகாரியினால் நலம் பெறும் நாம், அவரைக் காண

வேண்டும், கண்டு நன்றியுரை சொல்ல வேண்டுமென்று நினைப்போம்; எப்படியாவது அவரைக் கண்டு பணிய வேண்டும் என்று நம் உள்ளம் துடிக்கும்.

ஆனால் தனுகரணபுவன போகங்களை நமக்கு உதவி வரும் இறைவனைக் காண வேண்டும் என்ற எண்ணம் எழுவதில்லை. அவனைக் காண முடியாது என்று யாராவது சொன்னால், அதையே வியாஜமாக வைத்துக் கொண்டு சும்மா இருந்து விடுகிறோம். இது நியாயமா? முறையா?

எல்லோரும் அப்படி இருப்பதில்லை. சில பேராவது அந்தப் பரோபகாரியை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்று அவாவுகிறார்கள்; பேரார்வம் கொள் கிறார்கள். "அத்தா, காண ஆசைப்பட்டேன் கண்டாய். அம்மானே!" என்று கூறும் மணிவாசகரைப் போலத் துடிக் கிறார்கள். அவர்களைத்தான் பக்தர்கள் என்று சொல்கிறோம்.

உலகில் உள்ள பொருள்களுக்காக ஆசைப்பட்டு, அவற்றை அடைய முயன்று, அவற்றுக்காக அல்லற்பட்டு வாழ்நாளை வீணாக்குகிறவர்களே அதிகம். அவர்கள் செல்லும் மார்க்கம், அவர்கள் உழைத்து முன்னேறுவதாக எண்ணும் நெறி, சிறு நெறிச் சிறிய லாபத்தை, இன்றிருந்து நாளை அழியும் பொருளை அடைய நடைபோடும் நெறி. அந்தச் சிறு நெறியில் செல்லச் செல்ல மேலும் மேலும் ஆசை விரியுமே யன்றிச் சுருங்காது. அந்த ஆசையால் மயக்கம் ஏற்படும்; ஆதலால் அது மருள் நெறி. நாம் செல்ல வேண்டிய நெறி அன்று அது; அது நெறியல்லாத நெறி. அந்த நெறியைக் கடைப்பிடித்து ஒழுகிறவர்களுக்கு உய்வு இல்லை. பிறப்பு இறப்புகளில் புகுந்து புகுந்து தடுமாற வேண்டியதுதான். அப்படியின்றி இறைவனை உணர்ந்து அவன் அருளைச் சேர எண்ண வேண்டும். திருவாசகம் இதைச் சொல்கிறது

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்"

என்பது ஒரு பாசுரம். பெரும்பாலான மக்கள் செல்லும் நெறி, நெறியல்லா நெறி; சிறு நெறி; அதனுல் வரும் பயன் சிறு பயன். அன்பர்கள் சிறு நெறியில் செல்வதை வெறுப் பார்கள். பெரு நெறியையே பேணுவார்கள்.

“பெருநெறி பிடித்து ஒழுக வேண்டும்” என்பது இராமலிங்க வள்ளலார் வாக்கு. இறைவன் அடிபணிந்து வழிபடும் அப்பெரு நெறியையே வேண்டுவார்கள் பெய்யன் பர்கள்.

“நாயி னேன்உனை நினையவும் மாட்டேன்
நமச்சி வாய என்று உன்அடி பணியாப்
பேய ஞகிலும் பெருநெறி காட்டாய்”

என்று மாணிக்கவாசகர் வேண்டுகின்றுர்.

அன்பர்கள் இந்த ஜீவயாத்திரையில் இறைவனை அடை வதையே லட்சியமாகக் கொண்ட பெரு நெறியைப் பற்றி ஒழுகுவார்கள்; அந்த நெறியிற் செல்வதற்கு மாருக எதை யும் செய்ய மாட்டார்கள்; அந்தப் பெரு நெறிப் பயணத் தையே கண்ணும் கருத்துமாகப் பேணுவார்கள்.

அத்தகைய அன்பர்கள் சிலர் காரைக்கால் அம்மையாரை அணுகுகிறுர்கள். அவர்கள் பரோபகாரியாகிய எம்பிரானை நோக்கும் பேராவலால் உந்தப்பட்டு, அவன் அருளுக்காக ஏங்கும் பெரு நெறியைப் பேணுகிறவர்கள்.

பிரான் அவனை நோக்கும் பெருநெறியே பேணி.

சிறுநெறிகளைச் சேராமல், மேலும் மேலும் பெரு நெறி யில் முன்னேறிச் செல்வதுதான் பேணுதல்; தாம் கொண்ட கடைப்பிடியை விடாமல் பற்றித் தளர்வடையாமல் திண்மை யோடிருப்பதையே பேணுதல் என்று சொல்ல வேண்டும். அந்த அன்பர்கள் அத்தகையவர்கள்.

அவர்கள் இன்னும் அவனை அடையவில்லை. அவன் நெடுந்தூரத்தில் இருக்கிறான். இவன் என்று சுட்டிக்காட்ட முடியாத சேய்மையில் 'அவனா'கவே இருக்கிறான். எவ்வளவு சேய்மையிலிருந்தாலும் அவன் செய்யும் உபகாரம் நம்மை வந்து அடைகிறது. அவன் நாம் பெற்றுள்ளவற்றையெல்லாம் தந்த பிரான். ஆனால் தன்னைப் பெறும் பாக்கியத்தை அவன் அருளவில்லை. இன்னும் சேய்மையில் அவனாக இருக்கிறான். என்றாலும், 'அவனை அடையவேண்டும்' நோக்க வேண்டும்; என்ற ஆர்வம் தணியவில்லை; ஒருகாலைக்கு ஒருகால் வளர்ந்து கொண்டே வருகிறது. அதனால் அந்தப் பெருநெறியினின்று அகலாமல், அதுவே தம் குறிக்கோளை அடைவதத்குரிய உபாயமென்று அன்பர்கள் சென்று கொண்டே இருக்கிறார்கள்; 'பிரான் அவன் தன் பெரு நெறியையே பேணுகிறவர்களாக இருக்கிறார்கள்.

அன்பு என்பது தொடர்புடையவரிடம் செல்லும் உணர்வு. உலகத்தில் அன்புடையவர்கள் அதிகமாக இருப்பதில்லை; அருளுடையவரோ மிகச் சிலர். அவர்களுடைய உலக மக்களைச் சார்ந்தவர்களாதலின் அவர்களுடைய அருளுக்கும் எல்லை உண்டு. அவர்களுடைய செல்வம், கல்வி, ஆற்றல் ஆகியவற்றை அவர்கள் இன்னார் இனியார் என்று பாராமல் யாவருக்கும் வழங்குகிறார்கள். அது மிகமிகச் சிறந்த பண்பு. என்றாலும் அவர்கள் படைத்த செல்வம் முதலியன ஒரு வரையறைக்கு உட்பட்டது. அதனால் அவர்கள் அருளால் பயன் பெறும் பரப்பும் எல்லைக்குள் அகப்பட்டதாகவே இருக்கும்.

எல்லை யிறந்த ஆற்றலும் பண்புகளும் உடைய ஒருவன் செய்யும் அருள்தான் எல்லையில்லாத அருளாக, பேரருளாக, இருக்கும். பெரிய வள்ளலாகிய ஆண்டவன்தான் அத்தகைய நிலையில் உள்ளவன். ஆகவே அவன் கூட்டும் அருள்தான் பேரருள்; அவன் பேரருளாளன்.

"பிணிகெட நல்கும் பெருந்துறைஎம்
பேரருளாளன்."

என்று மாணிக்கவாசகப்பெருமான் பாடுவார்.

"நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவாறு
அன்றேஉன் பேரருளே."

என்று அவன் செய்யும் பேரருளை நினைந்து உருகுவார்.

பெரிய உபகாரியாகிய இலைவனை நோக்கிச் செல்லும் நெறி பெரு நெறி; அந்த நெறியைப் பேணி நடைபோடும் அன்பர்கள் சிறிய அருளையா வேண்டுவார்கள்? அவர்கள் அவனுடைய பேரருளையே வேண்டி நிற்பார்கள்.

பிரான் அவன்றன் பேரருளே வேண்டி.

பிரானை நோக்கும் பெரு நெறியில் படரும் வாழ்க்கையும் அவனுடைய பேரருளையே வேண்டி நிற்கும் ஆர்வமும் உடைய அன்பர்கள் இப்போது ஒருவகை ஏக்கத்தை அடைகிறார்கள் 'இந்தப் பெரு நெறி முடியாத நீள்நெறியாக இருக்கிறதே! அவன் பேரருளைப் பெற அவனை அடைய வேண்டுமே! அவன் இன்னும் எவ்வளவு தூரத்தில் இருக்கிறான்? அவனை எங்கே காணுவது? அவன் எங்கே இருக்கிறான்? எங்கும் இருந்தாலும் நாம் காணும் வகையில் எங்கே இருக்கிறான்?' என்ற ஏக்கம் வருகிறது. 'பிரான் அவன் எங்குற்றான், எங்குற்றான்?' என்ற கேள்வி அவர்கள் உள்ளத்தே அலைமோதுகிறது. 'எந்தத் தலத்தில் அவனைக் காணலாம்? எந்த மலை முகட்டில் நாமும் காணும் வகையில் அவன் எழுந்தருளியிருக்கிறான்? அவனைக் காணுவது எங்கே, எங்கே?' என்று அவர்கள் உள்ளத்தில் கேள்வி எழுந்து எதிரொலித்து ஒரே கேள்வி மயமாகப் பரவுகிறது.

'இந்தப் பெரு நெறியில் சென்று பிரான் அவனை உணர்ந்தவர்களை அணுகிக் கேட்கலாமா? இப்படியே போய்க்கொண்

டிருக்கும் பயணத்துக்கு முடிவு எங்கே? தக்கவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்' என்ற முடிவுக்கு அன்பர்கள் வருகிறார்கள். எப்போது அவர்களுக்குக் காரைக்காலம்மை யாருடைய நினைவு வருகிறது. அவரைக் காட்டிலும் சிறந்த வழிகாட்டி கிடைப்பதருமை என்று எண்ணி அவரை அணுகு கிறார்கள். "எம்பெருமான் எங்கே இருக்கிறான்? அவனைக் கண்டு அவன் பேரருளைப் பெறவேண்டும்" என்று பணிந்து வேண்டுகிறார்கள்.

காரைக்காலம்மையார் அவர்களை ஏறெடுத்து நோக்கு கிறார். அவர்களுடைய உண்மையான ஆர்வம் அவருக்குத் தெரிகிறது. அவர்கள், 'பிரான் அவனை நோக்கும் பெரு நெறியே பேணி, பிரான் அவன்றன் பேரருளையே வேண்டி' நிற்கிறவர்கள் என்பதைத் தெள்ளத் தெளிவாக அறிந்து கொள்கிறார். இப்போது 'பிரான் அவனை, 'எங்குற்றான்?' என்று அவர்கள் கேட்கிறார்கள்.

"நீங்கள் எங்கே தேடினீர்கள்?" என்று வினவுகிறார் அம்மையார்.

"எங்கெங்கோ தேடினோம். தேடின இடங்களுக்குக் கணக்கில்லை. எங்கும் அவன் இருந்தாலும் நாங்கள் நோக்கும் வகையில் அகப்படவில்லை. தாங்கள் அவனை நோக்கிப் பேரருளைப் பெற்றவர்களாயிற்றே! ஆதலால் தங்களை அணுகி வந்தோம். அவன் எங்கே இருக்கிறான்? சொல்லியருளுங்கள்."

அம்மையார் புன்னகை பூக்கிறார். அருளுடன் அவர்களைப் பார்க்கிறார்.

**"பிரான்அவனை நோக்கும் பெருநெறியே பேணிப்**
**பிரான்அவன்றன் பேரருளே வேண்டிப்—பிரான்**
**அவனை எங்குற்றான் என்பீர்கள்**

அல்லவா?" என்று மறுபடியும் கேட்கிறார். அவர்கள், "ஆம் ஆம்!" என்று தங்கள் பேரார்வம் தோன்றச் சொல்கிறார்கள்.

"அவன், அந்தப் பிரான், இங்கே இருக்கிறான்!"

அதைக் கேட்டு அன்பர்களுக்கு வியப்பாக இருக்கிறது. "இங்கேயா? இங்கே என்றால் மிகவும் அருகில் என்றல்லவா பொருள் கொள்ளும்படி இருக்கிறது? சமீபத்தில் இருப்பதாக அல்லவா சொல்கிறார்? அந்த, 'இங்கே' என்பது எந்த இடம்?' என்று அவர்கள் எண்ணம் ஓடுகிறது. அவர்களுடைய ஆவல் கரையை உடைத்துக் கொண்டு பாயும் வெள்ளத்தைப் போலப் பெருகுகிறது.

"இங்கேயா? எங்கே? இங்கே என்று எதைச் சுட்டுகிறீர்கள்?"

அம்மையார் புன்னகை பூத்துக் கொண்டே, "இங்கே தான்" என்று தம் இதயத்தின்மேல் கைவைத்துச் சுட்டிக் காட்டுகிறார். கேட்ட அன்பர்கள் ஒன்றும் தெரியாமல் விழிக்கிறார்கள்.

"ஆம், இங்கேதான் ஒன்றுக்கும் பற்றாத என் சிந்தையில் இருக்கிறான்; என்னைப் போன்றவர்கள் சிந்தையிலும் இருக்கிறான். வேறு எவ்வளவோ இடங்களிலும் இருக்கிறான். அதைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. அவன் இந்த இடத்திலேயே, இங்கேயே, என்னைப் போன்றவர்களின் சிந்தையிலும் இருக்கிறான். இங்கே அவனைக் காணலாம்; நோக்கலாம்; பேரருளைப் பெறலாம்."

என்போலவர் சிந்தையினும் இங்குற்றான்.

அம்மையாருடைய நல்லுரையைக் கேட்ட அவர்களுக்குத் தெளிவு பிறக்கிறது. 'வெளியிலே தேடப் புறப்பட்டால் போய்க் கொண்டேதான் இருக்க வேண்டும். உண்முகமாக உங்கள் நோக்கத்தைத் திருப்புங்கள். அங்கே காணலாம்' என்று அம்மையார் குறிப்பதைத் தெரிந்து கொள்கிறார்கள்.

"அப்படி உண்முக நோக்கம் எளிதிற் கிடைக்குமா?" என்ற சந்தேகம் அவர்களுக்கு உண்டாகிறது. அதை அம்மையார் ஊகித்துக் கொள்கிறார்.

"காண வேண்டும் என்ற ஏக்கமும் இடைவிடாத முயற்சியும் பேரன்பும் உடையவர்களாக இருப்பவர்கள் மற்ற இடங்களில் தேடவேண்டாம். உள்ளே தேடினால் எளிதாகக் காணலாம். அப்படிக் காண்பாருக்கு அவன் காட்சி எளிதாகக் கிடைக்கும்" என்று விளக்குகிறார் அம்மையார்.

**காண்பார்க்கு எளிது.**

உள்ளே நோக்கும் காட்சி முறுகிய அன்பர்களுக்கு எளிது என்கிறார். அப்பர் சுவாமிகளும், 'வெளியிலே தேடிய திருமாலுக்கும் நான்முகனுக்கும் அறிய ஒண்ணாத இறைவனை நான் உள்ளே தேடிக் கண்டு கொண்டேன்.' என்றல்லவா சொல்கிறார்?

"திருமாலொடு நான்முகனும் தேடியும் தேடொணாத் தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்."

ஆகவே, பெரு நெறியைப் பேணிப் பிரானுடைய பேரருளை வேண்டி நிற்பவர்கள், புறநோக்கை விட்டு அக நோக்கை மேற்கொண்டு, புறப்பயணத்தை விட்டு அகப் பயணத்தை மேற்கொண்டால், அவனைக் காணும் காட்சி எளிதாகும் என்று அம்மையார் உபதேசம் செய்கிறார். அது ஒரு பாட்டு வடிவாக மலர்கிறது.

**பிரான்அவனை நோக்கும் பெருநெறியே பேணிப்**
**பிரான்அவன்றன் பேரருளே வேண்டிப்— பிரான்அவனை**
**எங்குற்றான் என்பீர்கள்; என்போல்வார் சிந்தையினும்**
**இங்குற்றான்; காண்பார்க்கு எளிது.**

[பரம உபகாரியாகிய ஆண்டவனை நோக்கி ஒழுகும் பெரு நெறியைக் கடைப் பிடித்து, பிரானாகிய அவனுடைய பேரருளைப் பெறுவதை லட்சியமாக அதனை விரும்பி, அந்தப்

பிரானை.'எங்கே இருக்கிறான்?' என்று கேட்கிறீர்கள்; அவன் இங்கே, என் போல்வார் உள்ளத்திலும் இருக்கிறான். ஆர்வத்தோடு உள்ளே காணுபவர்களுக்கு அவனுடைய காட்சி எளிதாக அமையும்.

பிரான்-உபகாரி. அவன் என்றது இறைவனைக் குறித்தது, 'அவனன்றி ஓரணுவும் அசையாது,என்றபழமொழியில் அவன் என்பது சுட்டுச் சொல்லாக இருந்தாலும் இறைவன் என்ற பொருளையே உணர்த்தல் காண்க. பெரு நெறியே: ஏகாரம், பிரிநிலை; வேறு நெறியில் செல்லாமல் என்ற குறிப்பை உடையது. பேணி - தளர்ச்சியின்றிக் கடைப் பிடித்து. பேரருளே: ஏகாரம், பிரிநிலை; மற்றவர் அருளை விரும்பாமல் என்ற கருத்தை உடையது. அவனைப் பற்றி இவ்வாறு கேட்பீர்கள்.'பிரான் அவனை' என்பது அம்மையார் கூற்று;'எங்குற்றான்' என்பது அன்பர்கள் கேள்வியைக் கொண்டு கூறியது. இங்கு, 'என்போல்வார் சிந்தையினும்' என்று அந்வயித்துப் பொருள் கொள்க. சிந்தையினும் என்ற உம்மை, எச்ச உம்மை, எங்கும் இருப்பதையும் எண்ணச் செய்தது. காண்பார்க்குக் காட்சி எளிது என்று ஒரு சொல் வருவித்து முடிக்க வேண்டும், 'அவன் எளிது' என்றால் திணைவழுவாகிவிடும்.]

உண்முக நோக்கத்தால் இறைவனைக் காணலாம் என்பது கருத்து.

> ''வானத்தான் என்பாரும் என்க; மற்றும்பர்கோன்
> தானத்தான் என்பாரும் தாம்என்க: ஞானத்தான்,
> முன்நஞ்சத் தால்இருண்ட மொய் ஒளிசேர்
> கண்டத்தான்,
> என்நெஞ்சத் தான்என்பன் யான்'' (6)

என்று முன்பும் இக்கருத்தை வேறு வகையாக அம்மையார் சொல்லியிருக்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் 45-ஆவது பாடல் இது.

# 47. எளிய செயல்

இறைவனுடைய திருவருளைப் பெற வேண்டும் என்ற ஆசை பலருக்கு இருப்பது போலத் தோன்றுகிறது. ஆனல் உண்மையில் நெஞ்சார அதற்கு ஆசைப்படுகிறவர் மிகமிகக் குறைவு. அவர்களுக்குக் கண் முன்னல் உள்ள பிரபஞ்சப் பொருள்களின் மேல்தான் ஆசை அதிகமாக இருக்கிறது. இந்திரியங்களுக்குச் சுகம் தருகின்ற பொருள்களில்தான் அவர்களுடைய நாட்டம் செல்கிறது. 'அவன் விருந்து உண்ணுகிருன்; நாமும் உண்ண வேண்டும் அவன் பட்டுக் கட்டுகிருன்; நாமும் கட்ட வேண்டும். அவன் மனைவி மக்களுடன் வாழ்கிருன்; நாமும் வாழ வேண்டும்' என்பன போன்ற சிந்தனையே மக்களிடம் இருக்கிறது. அதிகமாகப் பொருளை ஈட்டி, அந்தப் பொருளால் அதிகமான பண்டங்களைச் சேமித்து, அதிகமான வசதிகளை அனுபவிக்க வேண்டும் என்றே யாவரும் முயல்கிருர்கள். அவர்கள் உள்ளத்தில் இந்த ஆசையே நிரம்ப இருக்கிறது.

இந்த உலகியல் இன்பத்தை நுகர்வதற்காக மனிதன் ஒவ்வொரு கணமும் உழைத்துக்கொண்டே இருக்கிருன். தன் கருவி கரணங்களையும், அறிவையும், பெற்ற பொருளையும் பலவகையில் ஈடுபடுத்தி இந்திரிய சுகத்தைத் தேடி அலைந்து கொண்டே இருக்கிருன்; பிறவி தோறும் அலைந்துகொண்டே இருக்கிருன்.

"உள்ளங்கால் வெள்எலும்பு தேய ஒருகோடி
வெள்ளங்கா லம்திரிந்து விட்டேனே"

என்று பட்டினத்தார் புலம்புகிருர்.

உலகியல் இன்பங்களைப் பெறுவதற்கு எத்தனை முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது? எத்தனை காலம் செலவிட வேண்டியிருக்கிறது? அப்படிச் செய்தாலாவது நினைத்தபடி இன்பம் கிடைக்கிறதா? இல்லையே! ஒரு கவளம் சோறு பெறுவதற்கு எவ்வளவு உழைப்பை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. வீட்டுக்கு ஒரு கலம் நெல் வரவேண்டுமானால், வயலில் விதைப்பது முதல் அறுவடை வரையில் பல பேர் சேர்ந்து பலபல வகையில் வேலை செய்யவேண்டும். இப்படியே உலகியல் இன்பத்துக்காக மனிதர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடிக்கொண்டு எத்தனையோ பாடுபடுகிறார்கள்.

நாம் உடை உடுத்துகிறோம், நாமே ஆடையை எடுத்து நம் கைகளால் அணிந்து கொள்கிறோம். இது மிகவும் எளிய செயலாகத் தோன்றுகிறது. ஆனால் அந்த ஆடை நமக்கு எப்படிக் கிடைத்தது? பருத்திச் செடியை வளர்ப்பது முதல் ஜவுளிக் கடையில் போய் அதை வாங்குகிற வரைக்கும் அந்த ஆடை எத்தனை பேரை வேலை வாங்கியிருக்கிறது! ஆடை நம்முடைய உடம்பிலிருந்து உண்டாவதில்லையே! கையை நீட்டினால் இது வந்து விழுந்துவிடாதே!

இறைவன் திருவருளைப் பெறுவதற்கு என்ன என்ன வேண்டும்? எத்தனை பேருடைய உதவி வேண்டும்? ஒன்றுமே வேண்டாம், யாருடைய உதவியும் வேண்டியதில்லை. வெளியிலிருந்து எந்தப் பண்டத்தையும் வாங்கி வர வேண்டாம். இறைவனை எப்போதும் நினைத்தபடியே வாழ்ந்தால் அவன் திருவருளைப் பெற்று விடலாம்.

இறைவனைச் சிந்தையில் நினைந்து வாழ்வதற்குப் புதியதாக மனத்தைச் சம்பாதிக்க வேண்டாம். நம்மிடமே அது இருக்கிறது. அதற்குப் புதியதாக ஆடை அணிகளை அணிய வேண்டாம். நினைப்பது என்ற காரியம் மிகமிக எளிது. உடம்பினால் ஏதேனும் வேலை செய்ய வேண்டுமானால் இடம் விட்டு இடம் போகவேண்டும்; எழ வேண்டும்; நடக்க வேண்டும்; நிமிர வேண்டும்; குனிய வேண்டும்; கை கால்களை அசைக்க

வேண்டும். ஆனால் மனத்தினால் ஒன்றை நினைப்பதற்கு இத்தகைய சிரமங்கள் தேவை இல்லை. இருந்தபடியே நினைக்கலாம்.

நினைக்க வேண்டிய பொருள் எது? இறைவனை நினைக்க வேண்டும். அவனை எங்காவது பிரபஞ்சத்தைச் சுற்றித் தேடிக் கண்டுபிடித்து நினைக்க வேண்டுமா? அவனை எங்கிருந்தாலும் எப்படி இருந்தாலும், எந்தக் காலத்திலும் நினைக்கலாம். அதற்காகத் தனியான முயற்சிகளைச் செய்ய வேண்டியதில்லை,

யாரேனும் ஒரு பெரிய மனிதரை நம் வீட்டுக்கு அழைக்க எண்ணுகிறோம். அவருக்கு வரவேற்பு அளித்துத் தக்க ஆசனத்தில் இருத்தி உபசாரம் செய்ய வேண்டும். அதற்காக? வீட்டைச் சுத்தப்படுத்திக் கோலம் போடுகிறோம். இரவலாகவாவது ஏதேனும் விரிப்பை வாங்கி வந்து விரிக்கிறோம். பலகை போடுகிறோம். ஊதுவத்தி கொளுத்தி வைக்கிறோம். சிற்றுண்டி வழங்க ஏற்பாடு செய்கிறோம்.

நம் மனத்தில் இறைவனை நினைக்க, அவனை நம் சிந்தையுள்ளே அழைத்து வர, இப்படியெல்லாம் முன் ஏற்பாடு ஏதும் செய்ய வேண்டாம். நம் சிந்தையை அலங்கரிக்க வேண்டாம் இறைவன், 'நம்மை யார் எப்போது அழைக்கிறார்?' என்று காத்துக் கிடக்கிறான். நம் மனமாகிய வீட்டுக்குள் நுழைய வேண்டுமென்று அதற்கு ஏற்றபடி கோலம் கொண்டிருக்கிறான். அவன் பரம சூட்சுமமான பரம் பொருளானாலும், நம் சிந்தையிலே குடிகொள்ள வேண்டிய வடிவங்களை எடுத்து வருகிறான். அவனுடைய திருமேனி பலவானாலும் நமக்கு எந்த வடிவம் மனம் கவருவதாக இருக்கிறதோ, அந்த வடிவத்தை நினைத்தால், அப்படியே வந்து சிந்தையுள் குடி புகுவான்.

இவ்வளவு எளிதாக அவன் வரும்போது, நாம் எளிதில் எந்த முயற்சியும் இன்றி வெறுமனே நினைத்தால் போதும் என்ற நிலை இருக்கும்போது, நாம் சும்மா இருக்கலாமா?

அவனை நினைந்து, சிந்தையில் எப்போதும் அவன் திருக் கோலத்தை வைத்து, வாழும் திறம் எளிது. அதை மக்கள் தெரிந்து கொள்ளாமல் வீணே வாழ்நாளைக் கழிக்கிறார்களே!

இவ்வாறு உலகத்தவரை எண்ணி இரங்குகிறார் காரைக் காலம்மையார். அவர்களைப் பார்த்தே சொல்லத் தொடங்கு கிறார்.

'இந்தக் காரியம் மிக எளியதாயிற்றே! இதை நீங்கள் செய்ய எந்தப் பெரு முயற்சியும் மேற்கொள்ளத் தேவை இல்லையே!' என்று தொடங்குகிறார்,

எடுத்த எடுப்பிலே, 'இது எளிய காரியம் அல்லவா?' என்று அவர் கேட்கும்போது நமக்கு அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் மூள்கிறது.

## எளியது இது அன்றே?

அடுத்தபடி நம்மைப் பார்த்து இரங்குகிறார் அம்மையார். "எந்தச் செல்வத்தைப் பெற வேண்டுமோ அதைப் பெறுமல் உலகியற் பொருள்களைப் பெற்றுக்கொண்டு, "நாம் இது பெற் ருேம் அது பெற்ருேம்" என்று பெருமைப்பட்டுக் கொள்கிறீர் களே! அந்தச் செல்வமெல்லாம் நிலைத்து நிற்குமா? இறை வனுடைய அருட் செல்வமல்லவா நிலையான செல்வம்? அதைப் பெருதவர்கள் எவ்வளவு உலகியற் செல்வங்களை உடையவர்களாக இருந்தாலும் ஏழைகளே அல்லவா? அந்த அருட் செல்வத்தைப் பெருமல் உள்ள ஏழைகளே!' என்கிருர்.

### ஏழைகாள்!

'உலகியற் பொருளைப் பற்றிக்கொண்டு அதை யாருக்கும் சிறிதளவும் கொடுக்காமல், இதுவே நமக்கு இன்பந்தருவது, என்று எண்ணியிருக்கிறீர்களே! பிறருக்கு அளிக்காமல் பற்றிக் கொண்டவர்களே!' என்று அடுத்தபடி சொல்கிருர்.

### யாதும் அளியீர்!

'மனிதன் அறிவிற் சிறந்தவன். பகுத்துப் பார்க்கும் ஆருவது அறிவு பெற்றவன். அந்த அறிவை விளக்கப்படுத்தி

மெய்ஞ்ஞானத்தைப் பெற வேண்டும். இறைவனை அறியும் அறிவே மெய்யறிவு அந்தத் துறையில் ஈடுபடுபவன்தான் மெய்யறிவு வாய்ந்தவன். உங்களிடம் அந்த அறிவு இல்லையே!

அறிவிலீர்!

'உங்களைப் பார்த்தால் எனக்கு இரக்கம் உண்டாகிறது. ஐயோ பாவம் என்று இருக்கிறது.'

ஆவா!

'நீங்கள் உண்மையான செல்வர்களாக, மெய்யறிவுடையவர்களாக வாழ வேண்டுமா? நான் வழி சொல்கிறேன். மிகவும் எளிய வழி, இறைவனைச் சிந்தையுள்ளே நினைந்து வாழுங்கள். அவனை நினைக்க முடியாதென்று எண்ணுகிறீர்கள். அவன் அழகிய திருக்கோலத்தோடு விளங்குகிறான். எங்கே போய்த் தங்கலாம் என்று உழன்றுகொண்டே இருக்கிறான்.'

'அவன் எப்படி இருப்பான்? அவன் கோலத்தை எவ்வாறு நினைப்பது?' என்று நாம் கேட்கிறோம்.

அம்மையார் சொல்கிறார்; 'அவன் திருக்கழுத்து நீலமணி போல ஒளிவிட்டிருக்கும். அவன் நமக்கெல்லாம் தகப்பன். அவனைச் சேர்ந்தவர்கள் எவ்வளவு கொடியவர்களானாலும் நல்லவர்கள் ஆகிவிடுவார்கள். அவன் அணிந்திருக்கும் பாம்பே இதைத் தெரிவிக்கும். ஒளிகொள் மிடற்றுடன் அராவைப் பூண்டு கொண்டு எந்தை உழன்றுகொண்டிருக்கிறான், தம்மை வரவேற்கச் சிந்தையென்னும் உள்வாயிலைத் திறந்துகொண்டு யார் இருக்கிறார் என்று தேடி அலைந்து கொண்டிருக்கிறான்.'

ஒளிகொள் மிடற்று
எந்தை. அராப்பூண்டு உழலும் எம்மானை.

அத்தகைய பெருமானை உள்ளத்தினுள்ளே அந்தரங்க சுத்தியோடு, அன்போடு வைத்து, அவனுடைய ஆதனமாகச் சிந்தையை ஆக்கி, அத்தகைய சிந்தையை உடையவராய் வாழும் திறமை மிக அரிது என்று எண்ணவேண்டாம். அது மிக எளிது. வெறும் நினைப்பளவிலே சித்திப்பது.'

உள் நினைந்த
சிந்தையராய் வாழும் திறம்,

விமானத்தில் ஏறுமல் டிக்கட் வாங்காமல் நினைத்த மாத்திரத்தில் அமெரிக்காவில் போய் நிற்க முடிகிறதே; எண்ணத்தில்தான். எவ்வளவு எளிது? அப்படி எண்ணினல் அமெரிக்காவை அடைந்த சுகம் வராது. எம்பெருமானை நினைப்பது அப்படி அன்று. அவனை நினைப்பதுவே செய்ய வேண்டிய காரியம். அதனுல் அருட் செல்வராகலாம்; மெய்ஞ்ஞானி ஆகலாம். வெறும் நினைப்பே இதைச் செய்யுமானல் அது மிக மிக எளிதுதானே? இதைத்தான் அம்மையார் சொல்கிருர்.

எளியது இதுஅன்றே? ஏழைகாள், யாதும்
அளியீர், அறிவிலீர். ஆவா! ஒளிகொள் மிடற்று
எந்தை, அரர்ப பூண்டு உழலும் எம்மானை உள்நினைந்த
சிந்தையராய் வாழும் திறம்

[அருட் செல்வம் பெருத வறியவர்களே, சிறிதும் பிறருக்குக் கொடுக்காதவர்களே, அறிவில்லாதவர்களே, அந்தோ! மணியின் ஒளியைக் கொண்ட திருக்கழுத்தை யுடைய எந்தையும், அராவை அணிகலனுகப் பூண்டு அன்பர் களைத் தேடித் திரியும் எம்மானுமாகிய பரமேசுவரனை அந்தரங்கத்திலே நினைக்கும் உள்ளம் உடையவர்களாக வாழும் திறமையாகிய இது எளிது அல்லவா?

'திறம் இது எளிது அன்றே' என்று கூட்டிப் பொருள் கொள்க. அன்றே—அல்லவா; ஏ:வினு. பின்னுலே அறிவிலீர்

என்று வருதலின், ஏழைகாள் என்பதற்கு அருட் செல்வத்தைப் பெறாத வறியவர்களே என்று பொருள் கொள்ளவேண்டும். யாதும்—சிறிதும். அளியீர் என்பதற்கு இரங்கத் தக்கவர்களே என்று பொருள்கொள்ளின், யாதும் என்பது எதனோடும் சேராது நிற்கும். ஆவா—அந்தோ; இரக்கக் குறிப்பு. ஒளி—நீலமணியின் நிறம்; ஆலகாலத்தைக் கொண்டதாதலின் நீல நிறமுடையதாயிற்று. அம்மையார் நீலகண்டத்தைப் பலகாலும் நினைப்பவர். உழலும்—திரியும்; சஞ்சாரம் செய்யும். அடியார் யாரேனும் உள்ளாரா என்று எப்போதும் தேடித் திரிவது இறைவன் கருணைச் செயல்.]

இறைவனை அந்தரங்க சுத்தியோடு தியானம் செய்து வாழ்ந்தால் அவன் திருவருளைப் பெறலாம் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் 46-ஆவது பாட்டு இது.

# 48. இறைவனை அடையும் திரு

இறைவனை மனத்தில் எண்ணுவது எளிய காரியம் என்று கூறிய அம்மையாரை நாம் ஒன்று கேட்கிறோம். "அவனை நினைந்து வாழ்வது எளிது என்றால் அந்த எளிய காரியத்தை எல்லாரும் செய்யலாமே! மனம் உடையார் யாவருமே அந்த நிலையை அடையலாமே! ஆனால் உலகத்தில் அந்த எளிய காரியத்தைச் செய்பவர்கள் மிகக் குறைவாகத்தானே இருக்கிறார்கள்? அதிலிருந்து அவனை நினைப்பது எளிதன்று என்று சொல்லத்தோன்றுகிறதே! இந்த முரண்பாட்டைத் தீர்த்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

"என்போல்வார் சிந்தையினும் இங்குற்றான்; காண்பார்க் கெளிது" என்று ஒரு பாட்டிலும், "எம்மானை உள்நினைந்த சிந்தையராய் வாழும் திறம், எளியதிதுவன்றே" என்று அடுத்த பாட்டிலும் சொன்னவர் காரைக்காலம்மையார். அப்படி வற்புறுத்திச் சொல்வதைக் கேட்டு நமக்கு ஐயம் எழுகிறது. "அத்தகைய சிந்தை, உலகில் பெரும்பாலோருக்கு இல்லாதது ஏன்?" என்று கேட்கத் தோன்றுகிறது

அம்மையார் அந்த முரண்பாட்டைத் தீர்க்க முற்படுகிறார். அவருடைய நெஞ்சே அவருக்கு இந்தக் கேள்வியைப் போடுகிறது. "நீங்கள் சொல்வது போல அவனை எளிதிலே பெற்றுவிட முடியுமா? நினைத்தால் வந்து விடுவானோ?" என்று கேட்கிறது.

அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துச் சொல்கிறார். அது நம்முடைய ஐயத்தைப் போக்கப் பயன்படுகிறது. நாம் உண்மையை உணராத மடமையை உடையவர்களாக, பேதையர்களாக இருக்கிறோம். அதனால் இந்த ஐயம்

# 48. இறைவனை அடையும் திரு

இறைவனை மனத்தில் எண்ணுவது எளிய காரியம் என்று கூறிய அம்மையாரை நாம் ஒன்று கேட்கிறோம். "அவனை நினைந்து வாழ்வது எளிது என்றால் அந்த எளிய காரியத்தை எல்லாரும் செய்யலாமே! மனம் உடையார் யாவருமே அந்த நிலையை அடையலாமே! ஆனால் உலகத்தில் அந்த எளிய காரியத்தைச் செய்பவர்கள் மிகக் குறைவாகத்தானே இருக்கிறார்கள்? அதிலிருந்து அவனை நினைப்பது எளிதன்று என்று சொல்லத்தோன்றுகிறதே! இந்த முரண்பாட்டைத் தீர்த்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறோம்.

"என்போல்வார் சிந்தையினும் இங்குற்றான்; காண்பார்க் கெளிது" என்று ஒரு பாட்டிலும், "எம்மானை உள்நினைந்த சிந்தையராய் வாழும் திறம். எளியதிதுவன்றே" என்று அடுத்த பாட்டிலும் சொன்னவர் காரைக்காலம்மையார். அப்படி வற்புறுத்திச் சொல்வதைக் கேட்டு நமக்கு ஐயம் எழுகிறது. "அத்தகைய சிந்தை, உலகில் பெரும்பாலோருக்கு இல்லாதது ஏன்?" என்று கேட்கத் தோன்றுகிறது

அம்மையார் அந்த முரண்பாட்டைத் தீர்க்க முற்படுகிறார். அவருடைய நெஞ்சே அவருக்கு இந்தக் கேள்வியைப் போடுகிறது. "நீங்கள் சொல்வது போல அவனை எளிதிலே பெற்றுவிட முடியுமா? நினைத்தால் வந்து விடுவானோ?" என்று கேட்கிறது.

அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துச் சொல்கிறார். அது நம்முடைய ஐயத்தைப் போக்கப் பயன்படுகிறது. நாம் உண்மையை உணராத மடமையை உடையவர்களாக, பேதையர்களாக இருக்கிறோம். அதனால் இந்த ஐயம்

எழுகிறது. நம்மைப் பார்த்து, "மடம் உடையவர்களே. பேதையர்களே!" என்று விளிக்கலாம். அது பண்பாடு ஆகாது. ஆகவே, தம்முடைய நெஞ்சைப் பார்த்தே, "மட நெஞ்சே!" என்றும் "பேதாய்!" என்றும் விளித்துச் சொல்கிறார்.

இறைவன் அருள் வடிவாக இருக்கிறவன், அவனுடைய அருளே அம்பிகை. உலகத்தில் உள்ள உயிர்கள் தன்னை வணங்கித் தியானித்து அருள் பெறவேண்டும் என்ற திருவுள்ளம் கொண்டு அருவாய் விளங்கும் அவன் உருவம் கொண்டு வருகிறான். முதலில் மாதிருக்கும் பாதியனாக எழுந்தருளுகிறான்; சக்தனும் சக்தியும் இணைந்த அர்த்த நாரீசுவரனாகத் தோன்றுகிறான். அவனுடைய திருவடியை அடையும் வாழ்வைவிடச் சிறந்த வாழ்வு வேறு இல்லை. அந்தச் செல்வத்துக்கு இணையான செல்வம் ஏதும் இல்லை. அந்தச் செல்வத்தை, வளவாழ்வை, நாம் அடையவேண்டும்.

அழகிய நிறம் பொருந்திய கண்ணையுடையவள் அம்பிகை. அந்தக் கண்களுக்கு மாவடுவின் பிளப்பை உவமை சொல்வது வழக்கம். அவளைத் தன் பாகத்திலே கொண்டிருக்கிறான் எம்பெருமான். பெண் பாதியும் ஆண் பாதியுமாக இருக்கும் அவனுக்கு இரண்டு திருவடிகள். அவற்றை வணங்கவேண்டும்; சிந்திக்கவேண்டும்; இடைவிடாமல் தியானிக்கவேண்டும்; அடையவேண்டும். அதுவே பெரிய திரு; ஐசுவரியம்.

நிறத்த
இருவடிக்கண் ஏழைக்கு ஒருபாகம் ஈந்தான்
திருவடிக்கண் சேரும் திரு

[நிறத்த - தமக்குரிய அழகிய நிறத்தை உடைய. இருவடிக்கண் - இரண்டு மாவடுவின் பிளவைப் போன்ற திருவிழிகளை உடைய. ஏழைக்கு - பெண்ணுக்கு.]

இத்தகைய செல்வம் நம்மைத் தேடிக்கொண்டு, நாம் இருக்கும் இடத்தை வந்து அடையும் என்று, அம்மையார்

பூண்பு இறைவனைச் சிந்திக்கும் பேறு தானே வந்து அடையும் என்றெண்ணி நாம் மனம் போன போக்கெல்லாம் போய்க் கொண்டிருந்தால் அந்தத் திரு கிடைக்காது.

உலகத்தில் செல்வத்தைத் தேடிப் போய்ப் பெறுகிறார்கள். "திரை கடல் ஓடியும் திரவியம் தேடு" என்று சொல்வார்கள். முயற்சி இல்லாதவர்களுக்குச் செல்வம் கிடைக்காது. "முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை இன்மை புகுத்தி விடும்" என்று திருக்குறள் சொல்கிறது. இந்தத் திருவை ஆக்குதற்கே முயற்சி வேண்டுமென்றால் இறைவனை அடையும் திரு எளிதில் கிடைக்குமா?

அந்தத் திரு எல்லாவற்றிலும் பெரிய திரு உலகிலுள்ள செல்வத்துக்குக் கேடு உண்டு; ஆக்கம் உண்டு; வரவுண்டு. செலவுண்டு! லாபம் உண்டு; நஷ்டமுண்டு. ஆனால் இறைவன் திருவடிக்கட் சேரும் திருவுக்கு இவை இல்லை.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்" என்று பெரிய புராணம் சொல்கிறது மோட்சமும் வேண்டாம் என்று செம்மாந்திருக்கும் திரு அது.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்;
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்;
கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

என்று அந்தத் திருவையுடையவர்களின் வீரத்தைப் பற்றிச் சேக்கிழார் பேசுவார்.

நாம் எதை எதையோ விரும்பி. எதை எதையோ செய்து கொண்டும். எதை எதையோ நாடி ஓடிக்கொண்டும் இருந்தால், அந்தத் திரு தானே வந்து நம்மை அடையாது. நம் நெஞ்சை எங்கெங்கோ போகவிட்டுக் கொண்டிருந்தால் அந்தத் திரு நமக்குக் கிடைக்காது.

அதைநாம் நாடிச் செல்ல வேண்டும். அதற்கென்று ஒரு தகுதி, திறம், உண்டு. அழுக்கு மூட்டையைச் சுமத்தின வண்டியிலே அழகு மலரை ஏற்ற முடியாது; உலகப்பற்றுக் களிலே உழலும் நெஞ்சில் இறைவன் திருவடி பதியாது.

ஊரவர்பால் பற்றும், உறவினர்பால் பாசமும், உடைமை களின்பால் பிணைப்பும் உடைய பெண் ஒருத்தி தன் இல்லத்தில் வளைய வருகிருள். அறுபது நாழிகையும் வீட்டில் உள்ளவர்களோடு பழகிப் பொழுது கழிக்கிருள். அவளுக்கு இன்னும் பருவம் வரவில்லை ஆதலால் மற்றப் பெண்களோடு விளையாடுகிருள்; விளையாட்டுப் பொம்மைகளைச் சேர்த்து வைக்கிருள்; பாதுகாக்கிருள்.

அவள் பருவம் அடைகிருள் மணப் பருவம் வந்து விட்டது. அவளுக்கு ஏற்ற மணாளன் அவளைத் தேடி வர வில்லை. அவள் இருக்கும் சூழ்நிலை அழுக்கு நிரம்பியது. அவள் ஒரு கட்டழகனைப் பற்றிக் கேள்வியுறுகிருள். மிகவும் அழகுடையவன், ஆற்றலுடையவன், சிறந்த தலைமையுடை யவன், கருணையுடையவன் என்று தெரிந்து கொள்கிருள். அவனை அடைய வேண்டும் என்ற ஆசை முகிழ்க்கிறது. அவன் இருக்கும் நிலை எங்கே? இவள் இருக்கும் நிலை எங்கே? மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை போல அவர் களிடையே வேற்றுமை இருக்கிறது.

அவள் தாய், தந்தையர் தங்கள் உறவுப் பையன் ஒருவனுக்கு மணம் முடிக்க எண்ணுகிருர்கள். வறுமையில் வாடி நலியும் அந்தச் சூழ்நிலையில் அந்தப் பையன் எப்படி இருப்பான்? அழுக்குடையும் அவலட்சணத் திருமேனியும் சோம்பேறித்தனமும் உள்ள அவனை மணக்க அவளுக்குத் தோன்றுமா? அந்தச் சூழ்நிலையில் அவனைப் போன்ற வர்களே கிடைப்பார்கள்.

அவள் யாரைக் காதலிக்கிருளோ அவன் அவளை நோக்கி வரமுடியாது. இந்த அழுக்கு நிலத்தில் அவன் எப்படி அடி எடுத்து வைப்பான்?

அவளுக்கோ காதல் முறுகுகிறது. எப்படியாவது அவனை அடைந்து விடுவது என்று துணிந்து விட்டாள். அதற்குமுன் துணிய வேண்டியது, ஒன்று உண்டு. தான் வளரும் சூழ் நிலையைத் துறக்க வேண்டும். தன் உறவினர்களைப் பிரிந்து ஓட வேண்டும். தன் தாய் தந்தையர்பால் உள்ள பாசத்தை அறுத்தெறிந்து அவர்களையும் உதறிவிட்டுச் செல்ல வேண்டும்.

அதற்குரிய துணிவு, திறம், தகுதி அவளுக்கு உண்டாக வேண்டும். இல்லையானால் எவ்வளவுதான் இருந்த இடத் திலிருந்தபடியே மறுகினாலும் அவள் ஏங்கி நிற்கிற வாழ்வு கிடைக்காது. தண்ணீருக்குள் இருந்து கொண்டு அங்கே தீயை மூட்ட முடியுமா? சாக்கடைக்குள் அழுந்தியபடியே அழுக்குப் படாத ஆடையை அணிய முடியுமா?

ஆகவே இந்த இடத்தைவிட்டு ஓடவேண்டும். அவன் வருவதற்கேற்ற சூழ்நிலை இங்கே இல்லை. அவன் உள்ள இடத்துக்குச் சென்று தான் அவனை அடையவேண்டும்.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்;
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்;
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்;
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்.
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்;
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை;
தன்னை மறந்தாள்; தன் நாமம் கெட்டாள்;
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!''

என்ற திருத்தாண்டகத்தில் இறைவனிடம் காதல் கொண்ட நங்கையைப் பாடுகிறார் அப்பர். பாட்டில் முற்பாதி அவளு டைய காதல் வளர்ச்சியைச் சொல்கிறது இறைவனுடைய நாமத்தையும் வண்ணத்தையும் கேட்கிறாள்; அவன் இருக் கும் இடம் ஆரூர் என்பதை உணர்கிறாள். அந்த ஊர் நெடுந்

தூரத்தில் இருக்கிறது என்பதை உணர்ந்ததும் அவனையடைய வேண்டும் என்ற பித்துப் பிடிக்கிறது. அப்படிப் பித்தியாகும் வரையில் ஒரு நிலை; அவன் உணர்ச்சி வளரும் நிலை, அந்த அளவில் நின்றால் தலைவன் தானே அடையும் இன்பம், அவன் திருவடிக்கண் சேரும் திரு, எய்துமா?

அதற்குமேல் அவள் செயல்படுகிறாள், தன்னைப் பற்றிக் கொண்டிருக்கும் பற்றுக்களினின்றும் நீங்கி இறைவனை நாடி வருகிறாள், அன்னையையும் அத்தனையும் நீத்து ஆரூரண்ணலை நாடி வருகிறாள், ஒரு பெண் ஆடவனைத் தேடி வலியச் செல்வது பிழையல்லவா? இது உலகியலுக்கு அடுக்குமா! அவள் இவற்றையெல்லாம பார்க்கவில்லை, உலகத்தார் ஆசாரத்தை உதறி எறிகிறாள்.

தன்னையே மறந்து தன் பெயர் கெட்டுப் போகத் தலைவன் தாளைத் தலைப்படுகிறாள்; அவன் திருவடிக்கண் சேர்ந்து விடுகிறாள்,

அவளைப் போல, எல்லாவற்றையும் உதறி எறிந்துவிட்டு வேறு எதையும் நினைக்காமல் 'ஏழைக்கு ஒருபாகம் ஈந்தா'னு டைய திருவடியையே எண்ணிச் சென்று அடைய வேண்டும். அப்போதுதான் அந்த இன்பத் திரு கிடைக்கும், இப்படி அடைய ஒரு திறம் வேண்டும்; ஒரு துணிவு வேண்டும். துணிவு பிறந்துவிட்டால் சென்று அடைவது எளிதாகும்,

அந்தத் திரு நம்மை வந்து அடையட்டும் என்று சும்மா இருந்தால் கிடைக்காது; நாமே சென்று அடைய வேண்டும், "தான் தேடாப் பொன்னுக்கு மாற்றும் இல்லை, உரையும் இல்லை' என்பார்கள், இவ்வாறு முயன்று சென்று அடைந் தால்தான் அந்தத் திருவை அடையலாம்; அதனால் இன்பம் பெறலாம்,

'ஏ மட நெஞ்சமே, பேதையே, நீ சென்று அடைவது அல்லாமல், அதுவாக உன்னைத் தேடி வரும் என்று எண் ணாதே; இருந்த இடத்திலே இருந்தபடியே பெற்றான்

உன்னால் முடியுமா? நீ பெறும் நிலையை உடையை ஆவாயோ?' என்று கேட்கிறார் அம்மையார்.

**திறத்தால் மடநெஞ்சே, சென்று அடைவதல்லால்**
**பெறத்தாலும் ஆதியோ? பேதாய்!**

நெஞ்சு சென்று அடைவதாவது, மற்ற எண்ணங்களை யெல்லாம் விட்டொழித்து, உயர்ந்த நிலைக்கு ஏறி, இறைவனையன்றி வேறு எதையும் பற்றாத யோக நிலையைப் பெற்று நிற்றல்.

நெஞ்சத்தால் நினைப்பது என்பது எளிதானாலும், அந்த நெஞ்சம் பல பிறவிகளில் ஏற்றிக் கொண்ட பற்றையும் வாசனையையும் விட்டொழிப்பது மிகவும் அரிது. அதை இடை விடாத பயிற்சியினால் பெற வேண்டும், ''இக்கரை கடந்திடில் அக்கரையே, இனிப்பது சிதம்பரைச் சர்க்கரையே!'' என்று இராமலிங்கசுவாமிகள் அழகாகப் பாடியிருக்கிறார். அக்கரை சென்றால் இனிக்கும் சர்க்கரையைப் பெறலாம். அது எளிது. இக்கரை கடப்பது அரிது. முன்பாட்டுக்களில் சிந்தைக்கு ஆண்டவன் வசமாவான் என்ற எளிமையைச் சொன்னார். இந்தப் பாட்டில் சிந்தை, நின்ற நிலையை நீத்துப் பற்றொழிந்து நிற்பதன் அருமையைச் சொன்னார். அந்த அரிய தகுதி அல்லது திறம் வந்து விட்டால் 'உள்நினைத்த சிந்தையராய் வாழ்வது' எளிதாகிவிடும்.

**திறத்தால் மடநெஞ்சே! சென்று அடைவது அல்லால்,**
**பெறத்தானும் ஆதியோ, பேதாய்?—நிறத்த**
**இருவடிக்கண் ஏழைக்கு ஒருபாகம் ஈந்தான்**
**திருவடிக்கண் சேரும் திரு.**

[இயல்பாகவே மடமையையுடைய நெஞ்சே, சொன்னாலும் புரிந்து கொள்ளாத பேதமையயுடைய மனமே, நல்ல வண்ணமுடைய இரண்டு மாவடுவின் பிளப்பைப்

போன்ற திருவிழிகளை உடைய பெண்ணாகிய அம்பிகைக்குத் தன் ஒரு பாகமாகிய இடப்பாகத்தை வழங்கினவனாகிய இறைவனுடைய திருவடியைச் சேர்ந்து இன்புறும் வள வாழ்வு, அதற்குரிய தகுதியோடு, அதனைப் பெறவேண்டும் என்ற ஏக்கத்தோடு, எல்லாவற்றையும் விடடொழித்து அதனையே நாடிச் சென்று அடைவதல்லாமல், இருந்த இடத்தில் இருந்தபடியே பெறுவதற்கு நீ தகுதியுடையை ஆவாயோ?

திறம்-வன்மை; தகுதி. மடவை இயல்பாக அமைந்த அறிவின்மையையும், பேதமை சொல்லியும்தெரிந்துகொள் ளாத, பேளதமையையும் சொல்லியும் தெரிந்து கொள் ளாத அறிவின்மையையும் குறித்தன. பெறவும்- இருந்த இடத்தில் இருந்தபடியே பெறுவதற்கும். தான்: அசை, ஆதியோ ஆவாயோ! அதற்குரிய இயல்புடையை ஆவாயோ? நிறம்-அழகிய வண்ணம்; இதை மாவடு வுக்கும் அடையாக்கலாம்; கண்ணுக்கும் அடையாக்கலாம். வடி-மவாடுவின் பிளப்பு. ஏழையென்பது வறியவள், அறிவிலி என்பவற்றைக் குறிக்காமல் பெண் என்பதைக் குறித்தது.

திரு. பெறவும் ஆதியோ என்று கூட்டுக.]

பலகால் முயன்று விட்டொழித்த மனம் இறைவனு டைய தரிசனத்தைப் பெறும் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 47-ஆவது பாட்டு.

# 49. மதியில்லா அரவு

காரைக்காலம்மையார் இறைவனிடம் மிகவும் உரிமையோடு பேசுபவர். தம்முடைய குழந்தையுடன் பேசுவது போல ஒரு சமயம் பேசுவார். தம்முடைய தந்தையுடன் பேசுவது போலப் பேசுவார். இறைவனுக்கு அறிவுரை சொல்வது போலச் சில சமயங்களில் பேசுவார், அவனுடைய நிலைக்கு இரங்குவது போலச் சில சமயம் பேசுவார். நகைச்சுவையோடு பேசுவதும் உண்டு. புதிய புதிய கற்பனைகளைச் செய்துகொண்டு பாடுவதையும் அவரிடம் காணலாம்.

இப்போது அவர் தமக்குள்ளே ஒரு கேள்வியைக் கேட்டுக் கொள்கிறார்.

இறைவன் திருமுடியின் மேலுள்ள பிறையைப் பார்க்கிறார். அவன் மார்பிலுள்ள பன்றிக் கொம்பைப் பார்க்கிறார். அவன் அணிகலனாக அணிந்த பாம்பைப் பார்க்கிறார். பிறையும் பன்றிக் கொம்பும் இருந்த இடத்திலே இருக்கின்றன. பாம்போ படமெடுக்கிறது; ஆடுகிறது; தலையை மேலும் கீழும் தூக்கித் தாழ்த்திப் பார்க்கிறது. சிறிது நேரம் அது சும்மா இருக்கிறதில்லை; தன் விருப்பம் போல அது அசைந்தும் ஆடியும் நிமிர்ந்தும் தாழ்ந்தும் இயங்கியபடியே இருக்கிறது.

'இந்தப் பாம்பு எதற்காக இப்படிக் கீழும் மேலும் அசைந்து ஆடிப் பார்க்கிறது? இறைவனிடம் வந்தபிறகும் இந்த ஆட்டம் எதற்கு? சும்மா இருந்த இடத்திலே ஆடாமல் அசையாமல் சுகமாக இருக்கலாமே!' என்ற எண்ணம் அம்மையாருக்குத் தோன்றுகிறது. அந்தப்

பாம்பு மேலும் கீழும் அசைந்து மாறி மாறிப் பார்க்கிறதை அவர் நன்ருகப் பார்க்கிருர்.

சந்திரனைப் பாம்பு கவ்வும், விழுங்கும் என்று சொல்வது ஒரு மரபு. சந்திர கிரகணத்துக்கு விஞ்ஞானம் ஒரு காரணம் சொல்லும். அதை யார் கவனிக்கிருர்கள்? சந்திரனை இராகு என்ற பாம்பு விழுங்குகிறது என்றுதான் பலகாலமாக ஒரு கற்பனையை வளர்த்து அனுபவித்து வருகிருேம். அதுமட்டுமல்ல. சந்திரனுக்கும் பாம்புக்கும் விரோதம் என்று மேலும் அந்தக் கற்பனையைப் படர விட்டுப் புலவர்கள் பல பல வருணனைகளைச் சொல்லியிருக்கிருர்கள். காரைக்காலம்மையாரும் கவிபாடும் புலமையை உடையவரே அல்லவா? அதனுல்தான் அவருக்குப் பல பல கற்பனைகள் எழுகின்றன.

'பாம்புக்கு மதி பகை ஆயிற்றே! பாம்பு சந்திரனை விழுங்கி விடுமே! இறைவன் கழுத்தில் உள்ள இந்தப் பாம்பு நினைத்தால் ஒருதாவு தாவி முடிமேல் உள்ள சந்திரனை லபக்கென்று விழுங்கி விடலாமே! ஏன் விழுங்கவில்லை?'

ஒரு காரணம் தோன்றுகிறது, இறைவனிடம் அடைக்கலம் புகுந்தவன் சந்திரன், அவனைப் பாதுகாப்பதாக இறைவன் உறுதி மொழி அளித்திருக்கிருன். தக்கனுக்குப் பயந்து இறைவனைச் சரணடைந்தான் சந்திரன். அதனுல் இறைவன் அவனைத் தலையின் மேல் தூக்கி வைத்துக் கொண்டிருக்கிருன். ஆகவே, சந்திரன். இப்போது இறைவனுக்குப் பிரியமானவன். அவனுக்கு வரும் ஆபத்தினின்றும் அவனைக் காத்தவன், இப்போது அவனை இந்தப் பாம்பு விழுங்க முற்பட்டால் அதைப் பார்த்துக் கொண்டிருப்பானு? தக்கனுடைய தண்டனைக்கு அஞ்சி வந்த சந்திரனைக் காப்பாற்றின இறைவன், அவனைப் பாம்புக்கு இரையாகும்படி விட்டு விடுவானு? கிளியை வளர்த்துப் பூனைக்கா இரையாக்குவது? இதை அறிந்து அஞ்சியே அந்தப் பாம்பு சந்திரனை விழுங்கவில்லையோ?

அப்படியானால் அது இருந்த இடத்திலே சும்மா இருக்கலாமே! அது எதற்காகச் சந்திரன் உள்ள முடியை ஏற இறங்கப் பார்க்கிறதே! எப்போது இறைவன் கவனிக்காமல் இருப்பானோ, அப்போது பார்த்து விழுங்கலாம் என்று காத்திருக்கிறதோ?

அப்படி இராது. இறைவனைச்சார்ந்த பிறகு எவ்வளவு பொல்லாதவர்களானாலும் நல்லவர்களாகி விடுவார்கள். அறத்தின் வழி ஆட்சி நடத்தும் அரசர்களுடைய நாட்டில், ஒரு துறையில் மானும் புலியும் பகை உணர்ச்சியை மறந்து தண்ணீர் குடிக்கும் என்று சொல்வார்கள். அறமே வடிவமாக இருக்கும் ஆண்டவனிடம் உள்ளவற்றிற்குப் பகை உணர்ச்சி இருக்குமா? ஆகவே ஆண்டவனுடைய ஆபரணமாக விளங்கும் பாம்பு இயல்பான பகை உணர்ச்சியை மறந்து, சந்திரன் தனக்கு உணவாவது என்பதையும் மறந்து சும்மா அசைந்தாடுகிறது.

இப்படிச் சொல்லலாம் போலத் தோன்றுகிறது. ஆனால் அந்தப் பாம்பு இறைவனுடைய மார்பையும் பார்க்கிறது; தலையையும் பார்க்கிறது. இறைவனை அடைந்த உயிர்கள் அமைதியான நிலையைப் பெறுவார்கள் என்று சாத்திரம் சொல்கிறது.

சிவபெருமான் சாந்தமே வடிவானவன். 'சாந்தம் சிவம் சுந்தரம்' என்று சுருதி பேசுகிறது. அவனைச் சார்ந்தவர்கள் யாவரும் கவலையற்றுச் சாந்தியான நிலையில் இருப்பார்கள். அப்படியிருக்க, இந்தப் பாம்பு மேலும் கீழும் தலையை எடுத்துப் பார்த்து ஆடுகிறதே! ஏன்?

இறைவன் திருமார்பை அம்மையார் கவனிக்கிறார். அங்கே வளைவாக வெள்ளை வெளேரென்று பன்றிக் கொம்பு தோன்றுகிறது. "முற்றல் ஆமை இளநாகமொடு ஏன முளைக் கொம்பு அவை பூண்டு" என்று திருஞான

சம்பந்தர் பாடியிருக்கிறார். அந்தக் கொம்பின் வளைந்த வடிவத்தைப் பார்த்துவிட்டு, மேலே இறைவன் திருமுடியின் மேல் உள்ள பிறைச் சந்திரனையும் பார்க்கிறார் அம்மையார். மீண்டும் மீண்டும் பார்க்கிறார், பிறைச் சந்திரனும் வளைந்த வெள்ளையான பன்றிக் கொம்பும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியான தோற்றத்தை அளிக்கின்றன. இடத்தினால்தான் வேறுபாடு. சந்திரன் தலையில் இருக்கிறான்; பன்றிக்கொம்பு திருமார்பில் இருக்கிறது. இரண்டும் வடிவத்திலும் வண்ணத்திலும் ஒப்புமையுடையனவாக இருக்கின்றன.

அந்தப் பாம்பு கீழும் மேலும் பார்க்கிறதே! இந்த இரண்டையுமே பார்க்கிறதே! அதற்கும் இந்த இரண்டும் ஒரே மாதிரியான தோற்றத்தை அளிக்கின்றனவோ?

ஆம்; அப்படித்தான் இருக்க வேண்டும். தலைமேல் ஒரு சந்திரன், மார்பிலே ஒரு சந்திரன். இப்போது காரணம் தெரிகிறது. பாம்புக்கு ஒரு சந்தேகம் வந்து விட்டது. தலையின் மேலே உள்ள பிறையைப் பார்க்கிறது. உடனே மார்பில் உள்ள பன்றிக் கொம்பைப் பார்க்கிறது. இரண்டும் பிறைச்சந்திரனாகவே தோன்றுகின்றன. எது உண்மையான பிறை என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. நாம் கண்டு கொள்ளலாம். அது அறிவில்லாத பாம்பு. பாம்பாட்டி கைவிரல்களை மடக்கி ஆட்டும் போது அதுவும் ஒரு பாம்பு என்று எண்ணிப் பாம்பு ஆடுகிறதே; அந்தப் புத்திதானே இதற்கும் இருக்கும்?

இந்தப் பாம்பு சந்திரனை விழுங்கியிருக்கும்; விழுங்காமல் இருப்பதற்கு வேறு ஒரு காரணமும் இல்லை. அதன் முட்டாள் தனந்தான்; மதியின்மைதான் காரணம். சந்திரனும் பன்றிக் கொம்பும் ஒரே மாதிரி இருக்கின்றமையால் எது சந்திரன் என்று அந்த மதியில்லாத அரவுக்குத் தெரியவில்லை. மதியில்லா அரவுக்கு மதி இது என்று தீர்மானமாக நிர்ணயம் செய்ய முடியவில்லை, அதனால் துணிந்து சந்திரனிடம் சென்று விழுங்கவில்லை

இன்னும் அதன் சந்தேகம் தீரவில்லை. மேலே உள்ளது சந்திரனா, அல்லது கீழே மார்பில் உள்ளதுதான் சந்திரனா என்று இன்னும் சந்தேகத்திலே அதன் மனம் ஊசலாடுகிறது. அதனால்தான் அந்த அரவு சந்திரனை விட்டு வைத்திருக்கிறது. இன்றளவும் மதியில்லாத அரவு, இது மதி என்று தேராததாகவே இருக்கிறது. தெரிந்திருந்தால் மதி தலையில் இராது.

இப்படியெல்லாம் எண்ணி ஒரு கற்பனையான காரணத்தைக் கண்டு பிடித்த அம்மையார் மதி ஒன்று இல்லாத அரவின் செயலைச் சொல்கிறார்.

**திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்**
**பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும்—ஒருநாள்**
**இதுமதி என்று ஒன்றாக இன்றளவும் தேரா**
**தது,மதிஒன்று இல்லா அரா.**

[மதி ஒன்று இல்லா அரா- ஆராய்ந்து பார்க்கும் அறிவு சிறிதும் இல்லாத (சிவபெருமான் அணிந்திருக்கும்) பாம்பு. பெருமான் திருமார்பில்-இறைவன் அழகிய மார்பில் உள்ள, ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்- (இது தான் சந்திரனோ என்று) பன்றியின் வள்மான கொம்பைப் பார்க்கும்; பெருமான் பிறைக் கொழுந்தைப் பார்க்கும்- இறைவன் (முடிமேல் அணிந்துள்ள) இளம் பிறையைப் பார்க்கும்; இன்றளவும்- இந்த நாள் வரைக்கு. ஒரு நாள்- ஏதேனும் ஒரு நாளில். இது மதி என்று- இதுதான் சந்திரன் என்று. ஒன்றாக-ஒரு முடிவாக, தேராதது- தெரியாதது.

அரா பார்க்கும், நோக்கும், இன்றளவும் தேராதது என்று கூட்டி முடிக்க. பெருமான் என்ற சொல்லைத் திருமார்பில் என்பதற்கும் கூட்டுக. நடுநிலைத்தீவகம். ஏனம்-பன்றி, பிறைக்கொழுந்து-கொழுந்தாகிய பிறை; மிக இளைய பிறை. இன்றளவும் ஒரு நாளேனும் தேராதது. ஒருநாளும், ஒன்றும் இல்லா என்ற இடங்களில் உம்மை தொக்கது. ஒன்றாக-ஒரு முடிவாக; ஒரு தலையாக. அரா, தேராதது ஒன்றும்-சிறிதும்.]

இது அற்புதத் திருவந்தாதியில் 48-ஆவது பாடல்.

# 50. பொன்னும் வெள்ளியும்

காரைக்காலம்மையார் இன்னும் கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார். மதி ஒன்று இல்லா அரவு இறைவன் திருமுடியில் உள்ள மதியையும் திருமார்பில் உள்ள பன்றிக் கொம்பையும் மாறி மாறிப் பார்ப்பதாக வும், அது இன்னும் இதுதான் சந்திரனென்று முடிவு கட்ட முடியாமல்; இருக்கிறதாகவும் ஒரு கற்பனையைக் கூறினார். மறுபடியும் அவருடைய கற்பனை விரிகிறது. இப்போது அவர் இறைவனுடைய திருமுடியைப் பார்க்கிறார்.

திருமுடியில் உள்ள சடை செந்நிறம் உடையதாக இருக்கிறது, அவனுக்குச் செஞ்சடையப்பல் என்பதே ஒரு பெயர் அல்லவா? அந்தச் சடைக்காட்டின் சந்திரன் இருக் கிறது. அதன் நிலாக்கதிர் சடையின் மேல் வீசுகிறது. ஒரே சிவப்பாக இருக்கும் சடாபாரத்தின் இடையிடையே நிலாக்கதிர்கள் தவழ்கிறன. சடையின் பொன்றனிறத் தோற்றத்தினிடையே நிலாவின் வெள்ளிக்கதிர் விராவி யிருக்கிறது.

இந்த இரண்டும் விராவியிருக்கும் தோற்றத்தை அம்மையார் உற்றுக் கவனிக்கிறார். சடை புரிபுரியாக இருக்கிறது, புரிசடை என்றே சொல்லார்கள், அந்தப் புரிகளின் இடையே நிலபக்கதிர்கள் வெள்ளை வெளே ரென்று தோற்றம் அளிக்கின்றன.

கற்பனை செய்யும் மனநிலையில் உள்ள அம்மையார் இந்த விராவும் தோற்றத்தைப் பற்றி எண்ணுகிறார். எந்த விதமாக இந்த விராவும் காட்சியைக் கற்பனை செய்வது? உவமையாக எதையாவது சொல்லலாமா?

இறைவனுடைய செம்மையான கேசத்தினிடையே நரைத்த கேசம் இருக்கிறதா? செம்மயிரும் நரைமயிரும் கலந்த காட்சி என்று சொல்லலாமா?

சே! இறைவன் சாவா மூவாப் பேராளன். மனிதர்களுக்குத்தான் நரை, திரை, மூப்பு, இறப்பு எல்லாம் வரும். ஆதியும் அந்தமும் இல்லாத அவனுக்கு இந்தத் தளர்ச்சிகள் இல்லை. ஆகவே நரை அவனிடம் உண்டாக நியாயம் இல்லை. அதைச் சொன்னால் இறைவனை இகழ்வதாக அல்லவோ ஆகிவிடும்? பின் எதை உவமை சொல்லலாம்? இறைவன் திருமுடியில் உள்ள சடை செம்பொன்னைப் போலத் தோற்றுகிறது. "ஞான்ற குழற்சடைகள் பொன்வரைபோல் மின்னுவன" (26) என்று அம்மையாரே முன்பு ஒரு பாட்டில் சொல்லியிருக்கிறார். ஆகவே, சடையின் புரிகளைப் பொன் புரிகளாக உவமை செய்வது பொருத்தமாக இருக்கும். சடையின் இடையிடையே விரவியிருக்கும நிலவுக்கதிர்களுக்கு எதை உவமை சொல்வது?

பொன்னோடு இணைந்த ஒன்றைச் சொன்னால் பொருத்தமாக இருக்கும், பொன்னும் வெள்ளியும் இனம் அல்லவா? ஆகவே இரண்டையும் உவமையாக்கலாம். சடை பொன்புரியானால் நிலாக்கதிர் வெள்ளிப்புரியாக இருக்கலாம். பொன்னும் வெள்ளியும் இணைந்த காட்சி என்று சொல்வதுதான் சரி என்று முடிவு கட்டினார்,

மறுபடியும் இறைவன் திருமுடியைப் பார்க்கிறார் சந்திரன் பிறையாக, அழகிய குழவித் திங்களாக கருக்கிறது; வளைந்து வில்லைப் போலஇருக்கிறது; வெள்ளித் தகட்டை அராவி வளைத்து வைத்தால் எப்படி இருக்குமோ அப்படித் தோற்றம் அளிக்கிறது.

**அராவி வளைத்தனைய அம்குழவித் திங்கள்.**

அதனுடைய கதிர்கள் எங்கும் பரந்து சடை முழுவதும் விராவிக் கலந்திருக்கின்றன; நீள நீளமாக ஓடிச் சடைப் புரிகளின் இடையிடையே விராவியிருக்கின்றன.

**விராவு கதிர்விரிய ஓடி—விராவுதலால்.**

இறைவனுக்கு ஒப்பாக யாரையும் சொல்ல முடியாது. அவன் தனக்கு உவமை இல்லாதவன். அப்படி ஏதாவது உவமையைச் சொல்லித்தான் ஆகவேண்டும் என்றால், அவனுக்கு அவனே உவமை என்றுதான் சொல்லி இருப்பவன் அவன். அவனுக்கு ஒப்பாக வேறு யாரையும் சொல்ல முடியாது என்பது உண்மைதான். ஆனால் நம் கண்ணுக்குத் தெரிகிற அவன் சடைக்கும் நிலவுக்கதிருக்கும் உவமை சொல்லலாமே!

சடை பொன்புரியைப் போல இருக்க, இடையிடையே விராவும் நிலவுக்கதிர் வெள்ளிப்புரியைப் போல இருக்கிறது. "அவ்வாறு தோன்றுகிறது அல்லவா?" என்று அம்மையார் கேட்கிறார்;

**பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தால் போலாதே**
**தன்னோடே ஒப்பான் சடை?**

"ஆம்" என்று நாமும் தலையாட்டி அந்த உவமையை ஒப்புக்கொள்ளலாம் அல்லவா?

"அவனுடைய அங்கத்துக்கு உவமை கூற வருகிறீர்களே! அங்கியாகிய அவனுக்கு ஏதாவது உவமையைச் சொல்லக்கூடாதா?" என்று யாராவது கேட்டுவிடப் போகிறார்களே என்று எண்ணினார் போலும் "அந்தப் பெருமானுக்கு ஒப்புக் கூற யாரால் முடியும்? அவனுக்கு அவனே ஒப்பு. ஏதோ கற்பனையில் அவன் சடைக்கும் நிலாக்கதிருக்கும் உவமை கூறலாம் என்று புகுந்தேன்" என்பாரைப் போல, "தன்னோடு ஒப்பான்" என்று சொல்கிறார்.

**அரவு வனைத்தனைய அம்குழவித் திங்கள்**
**விராவு கதிர்விரிய ஓடி—விராவுதலால்**

**பொன்னோடு வெள்ளிப் புரிபுரிந்தால் போலாவே,**
**தன்னோடே ஒப்பான் சடை?**

[அரதத்தால் வெள்ளித் தகட்டை அராவி வளைத்தாற் போன்ற தோற்றத்தையுடைய அழகிய இளம் பிறையி லிருந்து வெளியே தோன்றுகின்ற கதிர்கள் விரிவாக ஓடி இடையிடையே விராவுதலால், தனக்குத்தானே ஒப்பாகிய இறைவனுடைய சடைகள், பொன்னாலான புரிகளோடு வெள்ளிப்புரிகள் கலந்து அமைந்தாற் போலுள்ளன அல்லவா?

வளைத்தால் அனைய என்பது வளைத்தனைய என நின்றது; தொகுத்தல் விகாரம். இறைவன் திருமுடியில் ஒரு கலையை யுடைய சந்திரனை வைத்திருக்கிறான்; அதனால் குழவித் திங்கள் என்றார். கதிர்-நிலாக் கிரணங்கள். புரிந்தால்-புரியாக அமைந்தால்; ஏகாரம், வினா. சடை சடைகள்; பால்பகா அஃறிணைப் பெயர். சடை போலாவே என்று கூட்டுக.]

இறைவன் சடை பொன்னைப் போலவும், முடியிலுள்ள பிறையின் கதிர்கள் வெள்ளியைப் போலவும் தோன்று கின்றன என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 49-ஆம் பாடல்.

# 51. கொன்றையும் கனியும்

காரைக்காலம்மையார் இன்னும் இறைவனுடைய சடை முடியை விட்டுத் தம் கண்ணை அகற்றவில்லை. கொன்றை மலரை அணிந்த அந்தச் சடைமுடியை உற்று உற்றுப் பார்க்கிறார் அங்கே வலப் பக்கத்தில் அணிந்திருக்கும் அழகிய சந்திரனைப் பார்க்கிறார். தம்முடைய பார்வையைச் சற்றே இறக்கி பார்க்கிறார் எம்பெருமானுடைய வாம பாகத்தில் ஒட்டி உறைகின்றாள் உமாதேவி.

ஐயனுடைய சடையையும் அங்குள்ள கொன்றையையும் பார்த்த கண்ணோடு அம்மையினுடைய கூந்தலையும் பார்க்கிறார். இமாசலத்தில் தோன்றிய உயர்குலப் பாவை உமாதேவி. அவள் குழல் கருகருவென்றிக்கிறது. அப்பனுடைய சடை சிவப்பு. அம்மையுடைய குழல் கறுப்பு; இறைவன் தலைமேல் கோலமதியை வைத்திருக்கிறான். ஆகையால் அதன் ஒளியில் அவன் தலையிற் சூடிய கொன்றை நன்றாகத் தெரிகிறது.

பெண்களின் கூந்தலுக்குப் பலவகை உவமைகளைப் புலவர்கள் சொல்வார்கள். கருமணலைப் போல இருக்கிறதென்பார்கள்; மேகத்தை உவமை கூறுவார்கள்; பாசியை ஒத்திருக்கிறதென்பார்கள்; இருளைப் போல இருககிறது என்றும் சொல்வதுண்டு,

இப்போது காரைக்கால் அம்மையார் கவிதை உணர்வோடு தம் பார்வையை இறைவன்பால் செல்ல விட்டுக் கொண்டிருக்கிறார். அவனுடைய சடைக்கு எதை உவமை சொல்வது, அவன் முடியில் வைத்த நிலவின் கதிருக்கு எதை ஒப்பாக்குவது, இரண்டும் இணைந்ததற்குப்

பொருத்தமான உவமை எது என்றெல்லாம் அவர் தம் எண்ணங்களை ஓட விட்டார். பொன்னோடு வெள்ளிப் புரியை இணைத்து வைத்தது போல இருக்கிறது என்று பாடினார். இன்னும் உவமை தேடும் உள்ளநிலை அவருக்கு மாறவில்லை. அப்பனுக்கும் அம்மையினுடைய கூந்தலுக்கும் உவமையினால் முடிச்சுப் போடப் பார்க்கிறார்.

அம்பிகையின் கூந்தலைக் கவனிக்கிறார். இறைவன் பங்கில் ஒட்டி இணைந்த நிலையில் அவன் சடையும் அவள் கூந்தலும் அருகருகே இருக்கின்றன, அந்தச் சடையில் கொன்றை மலர் பளிச்சென்று தோன்றுகிறது. இந்த இணைப்புக்கு எதை உவமை சொல்வது?

மாதர் கூந்தலுக்குக் கொன்றைநெற்றை உவமை சொல்வதுண்டு, அது நீளமாகக் கறுப்பாக இருக்கும். காய் பசுமையாக இருக்கும். அது பழமாகி நெற்றானால் நல்ல கறுப்பாக மாறிவிடும். நீட்சியும் கருமையும் செறிவும் உடையதாக இருப்பதால் கொன்றைப் பழக்கொத்து அல்லது நெற்றுக்களின் கொத்தை மகளிர் கூந்தலுக்கு உவமையாக எடுத்துச் சொல்வார்கள் புலவர்கள்,

காரைக்கால் அம்மையாருக்கு இது நினைவுக்கு வருகிறது. இறைவன் சடைமேல் கொன்றை மலர்கள் இருக்கின்றன, அம்பிகையின் கருங்குழல் அருகே தோன்று கிறது. மலரும் அதனருகே அந்த மலர்களிலிருந்து தோன்றிய பழக்கொத்தும் இருப்பது போல அவர் கண்டார். உவமை கிடைத்துவிட்டது.

இறைவன் சடையின்மேல் கொன்றை பூத்திருக்கிறது முன்பு இருந்த மலர்கள் உதிர்ந்து காய்த்துப் பழமாகிக் கொத்தாக அருகே காட்சி தருகின்றன என்று சொல்ல லாம் என்ற முடிவுக்கு வந்தார்.

அம்பிகையின் கரிய குழற்கற்றைகள் இறைவன் சடையின் மேலுள்ள அந்தக் கொன்றை மலரில் விளைந்த கனிகள் பக்கத்தில் தாழ்ந்து தொங்குவன போல உள்ளன"

என்று பாடினர். கொன்றைப் பூவும் கொன்றைப் பழக் கொத்தும் இணைந்து இப்போது காட்சியளிக்கின்றன வாம்,

**சடைமேல்அக் கொன்றை**
**தருகனிகள் போந்து**
**புடைமேவித் தாழ்ந்தனவே**
**போலும்—முடிமேல்**
**வலப்பால்அக் கோல**
**மதியைத்தான் பங்கின்**
**குலப்பாவை நீலக் குழல்.**

[தன்னுடைய திருமுடியின் மேல் வலப் பக்கத்திலே அந்த அழகிய பிறையை வைத்த சிவபெருமானுடைய ஒரு பாதியில் எழுந்தருளியிருக்கும் உயர்குலப் பெண்ணாகிய உமாதேவியின் கருமையான கூந்தற் கற்றைகள், இறைவன் சடையின் மேல் சூடியிருக்கும் அந்தக் கொன்றை மலர்கள் முதிர்ந்து உண்டாக்கிய கனிகள் உருவாகி லந்து பக்கத்திலே சார்ந்து கீழே தொங்குவன போலத் தோன்றும்.

கனிகள் என்றது நெற்றுக் கொத்துக்களை. புடை - பக்கத்தில். தாழ்தல் - கீழே தொங்குதல். கோலம் - அழகு. பாவை - பாவை போன்ற உமாதேவி; ஆகுபெயர். குலம் -உயர்வும் ஆம். குழல் - கூந்தற் கற்றைகள். நீலம் - கறுப்பு; "நீலநிறக் காக்கைதனைப் பேசுவிக்கலாமோ" என்பது போலக் கருமையையும் நீலமாகச் சொல்லுதல் மரபு.

நீலக்குழல் தாழ்ந்தனவே போலும் என்று கூட்டுக.]

இது அற்புதத் திருவந்தாதியில் 50-ஆவது பாடல்.

## 52. அங்கே அழைத்துச் செல்லாதே!

அம்பிகையின் கருங்குழலுக்கு உவமை சொன்ன காரைக்காலம்மையார் இப்போது உமாதேவியை நன்றாகப் பார்க்கிறார். அந்தப் பெருமாட்டியின் கூந்தல் முதுகுப் பக்கத்தில் தொங்கிக்கொண்டிருக்கிறது. நீளமும் அடர்த்தியும் பரப்பும் உடையவ அக் கூந்தல் அன்னையின் முதுகு சிறிதாக, சிறுபுறமாகத் தோன்றுகிறது. அம்பிகை எவ்வளவு அழகாக இருக்கிறாள்! கூந்தலழகை அனுபவித்த அம்மையார் அன்னையின் திருக்கரத்தைப் பார்க்கிறார். கைநிறைய வளை அணிந்திருக்கிறாள் அம்பிகை; கோல் வளையாளாக விளங்குகிறாள். அவளைத் தன் பாகத்திலே இறைவன் வைத்திருக்கிறான். அம்பிகை அவன் பங்கில் அமர்ந்திருப்பதனால் அவனுடைய தோற்றத்தில் அழகு மிகுகிறது, அவனைப் பார்ப்பதைவிட அவளைப் பார்ப்பதற்கே கண் ஓடுகிறது. அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி அவள்;

இத்தகைய அழகிய பெண்ணைத் தன் பங்கில் இறைவன் வைத்திருக்கிறான். அடியவர்களுக்குக் காட்சியளிக்கும்போது அம்மையுடன் வருகிறான். அந்தக் காட்சியைக் காண இனிக்கிறது. திருக்கோயில்களில் அவன் அன்னையோடு வீற்றிருப்பதும் அழகான கோலந் தான்.

அன்னையை விட்டுப் பிரியாமல் எப்போதும் இருப்பவன் இறைவன். எங்கே போனாலும் அவளோடு போகிறான். அதெல்லாம் சரிதான். ஆடவர்கள் போகும் இடங்களுக்கெல்லாம் பெண்கள் போக முடியுமோ? ஆடவர்கள் துணிச்சல்காரர்கள், எங்கும் போவார்கள்.

போர்க்களத்துக்குப் போய்ச் சண்டை போடுவார்கள். அங்கே பெண்களை அழைத்துச் செல்லலாமோ?

சிவபெருமான் கோயிலிலும் வீதியிலும் தேவலோகத்திலும் கைலாசத்திலும் உலா வரும்போது உமா தேவியோடு போவது பொருத்தமான காரியம். அப்படிப் போவதனால் அன்பர்கள் அருள் பெறுகிறார்கள். ஆனால் அப்பெருமான் அந்த இடங்களுக்கு மட்டுமக போகிறான்? அவன் சுடுகாட்டுக்குக்கூடப் போகிறான். நல்ல இராத்திரி வேளையில் அங்கே போகிறான், தீக்கு நடுவில் ஆடுகிறான். அவனோடு அங்கே இருப்பவர்கள் யார்? பேய்கள். ஆடும் ஈமத்தில் தீயில் அவன் ஆடுகிறான்.

அவன் ஆடட்டும்; அதைப்பற்றிக் குறை கூற நாம் யார்? அங்கே பெண்கள் போகலாமோ? சுடுகாட்டில் நள்ளிரவில் பேய்க்கு நடுவே அழகான பெண்ணை அழைத்துக் கொண்டு போகலாமோ? அந்தப் பெண் அஞ்சமாட்டாளோ? அவன் அவளை அழைத்துக்கொண்டு போகிறான் என்பதைக் கேட்டாலே நமக்குக் குலை நடுங்குகிறதே!

பட்டப்பகலில் அழகான மண்டபத்தில் அரம்பையர்கள் கவரி வீச மாணிக்கச் சிங்காதனத்தில் தன்னுடன் வீற்றிருக்கச் செய்து, எல்லாரும் இந்தத் திவ்ய தரிசனத்தைக் கண்டு பூரித்து அருள் பெறும்படி செய்வதுதானே முறை? அதை விட்டுவிட்டுப் பயங்கரமான நள்ளிரவில், நினைத்தாலே அச்சத்தை உண்டாக்கும் சுடுகாட்டில், கண்டால் கதிகலங்கும் பேய்கள் ஆடுகின்ற சூழ்நிலையில், நெருப்புக்கு நடுவிலே இறைவன் தாண்டவம் ஆடும் போது அம்பிகையை அங்கே நிற்க வைக்கலாமோ? அந்த இடத்துக்கு அவன் அவளை அழைத்துச் செல்லலாமோ?

அவள் அஞ்சமாட்டாளா? அந்தப் பெருமாட்டியின் அழகைப் பார்த்து மகிழ அங்கே யார் இருக்கிறார்கள்

சுடுகாட்டில் எலும்பும் நிணமும் உள்ள சூழ்நிலையில் உள்ள பேய்களுக்கு அவள் அழகைப் பார்க்கும் கண் ஏது? பெண் என்றால் பிடித்து உலுக்க வேண்டும் என்றல்லவா பேய் விரும்பும்? அத்தகைய ஆபத்தான இடத்தில் பெண்ணை அழைத்துச் செல்லலாமா?

அவன்தான் அச்சம் இல்லாமல் காலில் அணிந்த கழல் ஜல் ஜல் என்று ஒலிக்கப் பேய்களுக்கு நடுவில் கூத்தாடுகிறான். உமாதேவிக்கு அந்த ஆட்டத்தைக் காட்ட வேண்டுமென்று அழைத்துச் செல்கிறானே? அம்பிகை அதைப் பார்த்து நடுங்கமாட்டாளா? இந்த இறைவனுக்கு இது உசிதம் அன்று என்று தெரியவில்லையே! 'இனிமேல் இந்தப் பைத்தியக்காரச் செயலைச் செய்ய வேண்டாம்' என்று சொல்லிப் பார்க்கலாமா?

தன் பிள்ளை அநுசிதமான காரியம் ஒன்றைச் செய்ய, அதைக் கண்ட தாய், "அப்படிச் செய்யாதே அப்பா" என்று சொல்வது போலக் காரைக்கால் அம்மையார் இறைவனிடம் நெருங்கிச் சொல்கிறார்,

"நள்ளிரவில் சுடுகாட்டில் போயாடும் தீயில் தாண்டவம் ஆடுகிறாயே; அந்த இடத்துக்கு, கூந்தல் தாழும் சிறு முதுகையும், திரட்சியானவளையையும் உடைய அம்பிகையை உன் பாகத்தில் அழகாக வைத்துக் கொண்டு போக வேண்டாம்" என்று கேட்டுக்கொள்கிறார். 'நீ தனியாகப் போய் எப்படியானாலும் கூத்தாடு; இவளை மட்டும் அழைத்துக்கொண்டு போகாதே' என்று குறிப்பிடுகிறார்.

**குழல்ஆர் சிறுபுறத்துக்**
**கோல்வளையைப் பாகத்து**
**எழிலாக வைத்துஏக**
**வேண்டா, — கழல்ஆர்ப்பப்**
**பேரிரவில் ஈமப்**
**பெருங்காட்டில் பேயோடும்**
**ஆர்அழல்வாய் நீஆடும் அங்கு.**

[காலில் அணிந்த வீரகண்டை ஒலிக்க, பெரிய நள்ளிரவில் ஈமமாகிய பெரிய சுடுகாட்டில்,பேய்களோடும் வெப்பம் தாங்குவதற்கு அரிய நெருப்பில் நீ தாண்டவம் ஆடும் அவ்விடத்துக்கு, கூந்தல் தாழ்ந்திருக்கும் சிறிய முதுகையுடையவரும் திரட்சியான வளைகளை அணிந்து வருபதகிய உமாதேவியை உன் வாமபாகத்தில் அழகாக வைத்துச் கொண்டு போக வேண்டாம்.

குழல்-கூந்தல். புறம்-முதுகு. கோல்- திரட்சி கோல் வளை-உமாதேவி: அன்மொழித் தொகை. சுழல்-காலில் வீரர்கள் அணியும் மணியோடு கூடிய அணிகலன். வீர கண்டை. பேரிரவு- நள்ளிரவு. ஈமமாகிய பெருங்காடு; ஈமம்-மயானம். ஆரழல்-அரிய நெருப்பு: தாங்குவதற் கரியது. நீ ஆடும் அங்குக் கோல்வளையை அழைத்து ஏக வேண்டா.]

இவ்வாறு இறைவனுக்கு அறிவுரை கூறுவனவாக உள்ள பாடல்களில் காரைக்காலம்மையாரின் தாய்த் தன்மை புலனாகிறது.

இது. அற்புதத் திருவந்தாதியில் 51— ஆம் பாட்டு

# 53. எங்கும் முழு மதியம்

சிவபெருமானுடைய தோற்றத்தில் மற்ற மூர்த்திகளிடம் காணாத பல விசித்திரமான பொருள்களைக் காணலாம். அவனுடைய திருமேனி உறுப்புக்கள், அவன் அணிந்த ஆடை, மலர், அணிகலன்கள் எல்லாமே வேறு ஒருவரிடம் காணாத வகையில் இருக்கும். அவனுக்கு நெற்றியிலே கண் உண்டு. அந்தக் கண்ணும் குறுக்கே இருக்கும். அதனால் விரூபாக்ஷன் என்ற திருநாமம் அவனுக்கு அமைந்தது. அவன் தலையில் செக்கச்செவேலென்ற சடை, அதுவும் அவனுக்கே உரிய இலக்கணம். அவன் கண்டம் கரியது; ஆலகால விடத்தை இண்டதனால் அமைந்த மாறுபாடு. இதுவும் அவனுக்கு உரிய அடையாளம்.

அவன் அரையில் உடுப்பது புலித் தோல்; மேலே போர்ப்பது யானைத் தோல், அவன் மாலையாக அணிவதோ எருக்கு. பூளை, தும்பை, கொன்றை இவற்றை வேறுயாரும் அணிவதில்லை.

அவனுடைய அணிகலன்களோ பாம்பு, என்பு, தலை மாலை. அவன் பூசும் சார்ந்தம் நீறு இவைகளும் சிவபெருமானுக்கே உரிய தனி அடையாளங்கள்.

மற்றத் தேவர்கள் பொன்னுடை புனையவும் சிறந்த மார் மாலை அணியவும் பல அணிகலன்களைப் பூட்டிக் கொண்டு கருணைபாலித்துத் தான் யாரும் பயன்படுத்தாதவற்றை ஏற்றுக் கொண்டிருக்கிறான். தன்னுடைய குழந்தைகளுக்கு எல்லா வகையான உணவுகளையும் பரிமாறி விட்டுத் தான் எஞ்சியிருக்கும் தீய்ந்த அடிச் சோற்றை உண்ணும் தாயைப் போன்ற தியாகி அவன்.

அவன் இந்தக் கோலத்தோடு இருப்பதே அவனுடைய உயர்வையும் கருணையையும் எடுத்துக்காட்டுவதாகப் பெரியோர்கள் கருதுவார்கள். உலகமெல்லாம் அழிந்தாலும் அழியாதவன் அவன். தேவர்கள் யாவரும் இறந்து பட்டாலும் சாவா மூவாப் பேராளன் அவன். எல்லாம் அழிந்த பிரளய காலத்தில் தேவர்களின் எலும்பை அணிந்து கொள்கிறான், பிரமனுடைய கபாலத்தை ஏந்துகிறான். மற்றத் தேவர்களுடைய கபால மாலைகளைத் தலையிலே தரித்திருக்கிறான். இவை அவனுடைய அழியாத் தன்மையை விளங்கும் அடையாளங்கள்; அவன் நித்தியன் என்பதைக் காட்டும் அறிகுறிகள்.

இறைவனுடைய வடிவம், அவன் திருவிளையாடல்கள் முதலிய யாவுமே குறியீடுகள் (Symbols.) அவற்றினூடே உண்மைக் கருத்துக்கள் மறைந்துள்ளன. அவற்றைத் தெரிந்து கொண்டாலன்றி அந்தக் கோலத்தின் பெருமையை நாம் உணர இயலாது. அறிவு நிலை உயர உயரக் குறியீடுகள் அதிகமாகும். அவை நுட்பமானவை. கணிதம். விஞ்ஞானம் ஆகியவற்றில் மேலே போகப் போகக் குறியீடுகளைக் காண்கிறோம். அவற்றைத் தெரிந்து கொள்ளாதவர்கள் அந்தத் துறைகளில் அறிவைப் பெற இயலாது.

மூன்றாவது வகுப்பில் பயிலும் பிள்ளைக்குக் கூட்டல் கழித்தல் கணக்குக் கற்றுக் கொடுக்கிறார்கள். கரும்பலகையில் 4—22— என்று எழுதியிருக்கிறார்கள். முதல் வகுப்பில் படிக்கிறவன் அதை எப்படிப் படிப்பான்? நாலு, ஒன்றைக் கோடு, இரண்டு, இரட்டைக் கோடு, இரண்டு என்றே படிப்பான். அப்படிப் படிக்கும் படிதான் அந்தக் கணக்கு இருக்கிறது. அவன் ஒற்றைக் கோடு, இரட்டைக் கோடு என்பதைக் குறியீடுகள் என்று உணராதவன். ஆகையால் அப்படிப் படிக்கிறான். அவற்றைத் தெரிந்து கொண்ட மூன்றாவது வகுப்புப் பிள்ளையோ நாலில் இரண்டு போனால் மிச்சம் இரண்டு என்று படிப்பான்.

அவனுக்கு ஒற்றைக் கோடு கழித்தலைக் குறிக்கும் குறி என்றும், இரட்டைக்கோடு மிச்சத்தைக் காட்டும் குறியீடு என்றும் தெரியும். அதனால் அதை எப்படிப் படிக்க வேண்டுமோ அப்படிப் படிக்கிறான். முதல் வகுப்புப் பையன் படித்ததும் சரிதான்; ஆனால் அவன் குறியீட்டைப் புரிந்துகொள்ளாமல், நோக்கத்தைப் புரிந்து கொள்ளாமல் படிக்கிறான்; கணக்கை எழுதினவர்களின் நோக்கத்தை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. மூன்றும் வகுப்புப் பிள்ளையோ ஒற்றைக் கோட்டை ஒற்றைக்கோடாகவும் இரட்டைக் கோட்டை இரட்டைக் கோடாகவும் பார்த்தாலும், அவற்றைக் குறியீடுகளாகக் கொண்ட கருத்தை, அந்தக் குறியீடுகள் காட்டும் குறிப்பை உணர்ந்து கொண்டு படிக்கிறான். அதனால் அவனுக்குக் கணக்குப் புரிகிறது.

இறைவனுடைய கோயில்கள், வடிவங்கள் ஆகியவை அடையாளங்கள். அந்த அடையாளங்கள் அழகாகவே இருக்கின்றன. என்றாலும் அவற்றால் உணர்த்தப்படும் தத்துவங்களைத் தெரிந்துகொண்டால்தான் அவற்றின் அருமை பெருமை புலனாகும். இல்லாவிட்டால் பல சமயங்களில் குழப்பம் ஏற்படும். இந்த நுட்பத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதை அப்பர் சுவாமிகள் வலியுறுத்துகிறார்.

> "குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
> நெறிக ளும்அவர் நின்றதோர் நீர்மையும்
> அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்
> பொறியி லீர், உமக்கு என்கொல் புகாதவே"

ஆகவே, இறைவனுடைய திருக்கோலத்தில் உள்ளவற்றின் உள்ளுறையைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

காரைக்கால் அம்மையார் இவற்றையெல்லாம் நன்கு உணர்ந்து இறைவனுடைய திருமேனியில் உள்ளவற்றைப் பார்த்துப் பார்த்து மகிழ்கிறார். அவர் உள்ளுறையாகிய தத்துவத்தை உணர்த்தவில்லை. அவர்

அதை உணர்ந்திருப்பதால் அவற்றைச் கண்டு கண்டு பலவகையில் பாராட்டுகிறுர், முரண்பாடு போலக் கேள்வி கேட்கிறுர். உவமைகளை எடுத்தாளுகிறுர். அவற்றின் உள்ளுறையை உணராமல் தோற்றத்தை மட்டும் கண்டால் அச்சம் அல்லவா தோன்றும்? இறைவன் தன் திருமுடியின் மேல் வெள்ளையான கபாலமாலையை அணிந் திருக்கிறுன். அந்தக் கண்டால், உண்மை தெரியாதவர் களுக்கு, பயந்தான் உண்டாகும்.

அம்மையார் அந்தத் தலைமாலையைக் கண்டு கண்டு மகிழ்கிறுர், அது பெருமானுடைய நித்தியத்துவத்தைக் காட்டுகிறது என்பதை அறிந்தவர் அவர். இப்போது அதை உற்றுக் கவனிக்கிறுர்.

சிவபெருமானுடைய திருக்கோலங்களில் ஒன்று சங்கரநாராயண மூர்த்தம்; இடப் பாதியில் திருமாலும் வலப் பாதியில்சிவபெருமானும் இணைந்துள்ள திருவுருவம் அது. இதை ஆழ்வாரும், ''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து'' என்று பாடியிருக்கிறுர். திருமாலும் சிவபெருமானும் வேறு வேறல்லர் என்பதைக் காட்டும் திருவுருவம் இது. சங்கர நயினுர் கோவிலில் இந்த மூர்த்தியின் சந்நிதி இருக்கிறது. மாலிருக்கும் பாதியனுக அங்கே இறைவன் எழுந்தருளியிருக்கிறுன். கேசவார்த்த மூர்த்தி என்றும் இந்தப் பெருமானைச் சொல்வார்கள். இந்தக் கோலம் அம்மையாரின் நினைவுக்கு வருகிறது.

**செங்கண் திருமாலைப் பங்குடையான்**

சிவபெருமான் திருமுடிச்சடை சிவப்பானது. செஞ்சடை. அதனுல் அவனுக்குச் செஞ்சடையப்பன் என்ற திருநாமம் வந்தமி. திருப்பழந்தாளில் எழுந்தருளி யிருக்கும் சிவபிரான் அந்த திருநாமத்தை உடையவன். அருண ஜடேசுவரன் என்று வடமொழியில் சொல் வார்கள்.

அவனுடைய செஞ்சடையில் கபால மாலை இருக்கிறது. அதை வெண்டலை மாலை, தலை மாலை, சிரமாலை என்றும் சொல்வார்கள். பல கபாலங்களைக் கோத்தமாலை அது. எத்தனையோ பிரமர்கள் அழிய அழிய அவர்கள் கபாலங்களை மாலையாக அணிந்திருக்கிறான். அந்த மாலை வெள்ளையாக இருக்கிறது. சிவப்பான சடையில் வெளுப்பான அந்த மாலை பளிச்சென்று தெரிகிறது.

அந்தச் சிரமாலையைக்கண்டு களிக்கிறார் அம்மையார் அது சிவபெருமானுடைய சிறப்பை எடுத்து விளக்குகிறது. அது காட்சியளிக்கும் சீரைச் சிந்திக்கிறார். அதன் உட்கருத்தைச் சிந்திக்கவில்லை. கவியுள்ளத்தோடு அதைப் பார்க்கிறார். இந்த மாலைக்கு எதை உவமையாகச் சொல்லலாம் என்று எண்ணிப் பார்க்கிறார்.

இறைவனுடைய சடை சிவப்பாக இருக்கிறது. சூரியன் மறைந்த பிறகு தோன்றும் செக்கர் வானம்போல அந்தச் சடைப்பரப்பு, காட்சி அளிக்கிறது,

**செஞ்சடை மேல்வைத்த**
**சிரமாலை தோன்றுவதோர் சீர்.**

எப்படி இருக்கிறது என்று உவமை கூற வந்த அம்மையாருக்கு அந்தச் செஞ்சடை' 'செக்கர் அகல் வானம்' என்று சொல்லத்தக்க பாங்கில் இருப்பதாகத் தோன்றுகிறது. இறைவன் சடையில் பிறையை வைத்திருக்கிறான். இந்தத் தலை மாலையிலுள்ள தலைகளோ உருண்டை உருண்டையாக இருக்கின்றன. இவற்றுக்கு எதை உவமை சொல்லலாம் என்று யோசிக்கிறார், ஒவ்வொரு தலையும் ஒவ்வொரு பூரண சந்திரனை முழு மதியமாகத் தோன்றுகிறது என்று சொல்லலாமா? மிகவும் பொருத்தம். செக்கர் வானத்தில்முழுமதியம் தோன்றுவது இயற்கைதான், ஆனால் அந்த வானத்தில் ஒரு சந்திரன் தான் தோன்றுவான்' இங்கே ஒன்றல்ல, இரண்டல்ல,

வரிசையாகப் பல முழுமதியங்கள் தோன்றுகின்றன. எங்கே பார்த்தாலும் முழுமதியங்கள்!

ஒரு பூரண சந்திரனைப் பார்த்தாலே எவ்வளவு அழகாக இருக்கிறது? காட்சிக்கு எவ்வளவு இனிமையாக இருக்கிறது? வானம் முழுவதும் பல சந்திரர்கள்; கண்கொள்ளாக் காட்சி; ஒரே அழகுக் கொள்ளை.

**அங்கண் முழுமதியம் செக்கர் அகல்வானத்து**
**எங்கம் இனிது எழுந்தால் ஒவ்வாதே?**

நாம் எல்லாம் எலும்பையும் எலும்புத் தலையையும் கண்டு பயப்படுவோம். மரணத்தை நினைப்போம். இறைவனிடம் ஈடுபட்ட அம்மையார், இறைவனுடைய அணிகலனாகஅவற்றைக்காண்கிறார்அவற்றின்உள்ளுறையை உணர்ந்தவர் அவர். ஆகையால் அந்தக் காட்சியைக் கண்டு கண்டு கண் குளிர்கிறது. அவர் தலை மாலையையா பார்க்கிறார்? எங்கும் பூரண சந்திரன்கள் பல தோன்று வதை, அல்லவா பார்க்கிறார்? அவர் கண் ஏன் குளிராது?

அவர் உள்ளத்தில் உள்ள அன்பு நமக்கு இருந்தால், நாமும் அப்படிப் பார்க்கலாம். இறைவனுடைய நினைப்போடு இனிதாகக் காணலாம்.

இனி முழுப் பாட்டையும் பார்க்கலாம்.

**அங்கண் முழுமதியம் செக்கர் அகல்வானத்து**
**எங்கும் இனிதுஎழுந்தால் ஒவ்வாதே?—செங்கண்**
**திருமாலைப் பங்குடையான் செஞ்சடைமேல் வைத்த**
**சிரமாலை தோன்றுவதோர் சீர்.**

[செம்மையான கண்ணையுடைய திருமாலைத் தன் பங்கில் உடையவனாகிய சிவபிரானுடைய செம்மையான சடாபாரத்தின்மேல் அணிகலனாக வைத்த தலைமாலை

தோற்றமளிக்கிற ஒப்பற்ற அழகு அழகிய இடத்தையுடைய பூரண சந்திரன்கள் செம்மை நிறமுடைய அகன்ற வானத்தில் எங்கும் இனிதாக உதயமானாற் போல, உள்ளதல்லவா?

அம் கண்-அழகிய இடம்; செக்கர்-செம்மை; செக்கர் வானம், அகல்வானம் என்று கூட்டுக. ஒவ்வாதே-ஒவ்வாதோ; ஏ:வினா. செந்தாமரை போன்ற கண்ணுடையவனாதலின், செங்கண், திருமால், என்றார்; ''செங்கணவன்பால் திசைமுகன்பால்'' என்பது திருவாசகம். தோன்றுவதாகிய ஓர் சீர்-ஒருவகையான அழகு என்றும் சொல்லலாம். சீர் ஒவ்வாதே என்று கூட்டி முடிக்க.]

அற்புதத் திருவாந்தாதியில் 52-ஆம் பாடல் இது.

# 54. காரின் வடிவம்

காரைக்கால் அம்மையார் இறைவனுடைய சடா பாரத்தினின்றுப் தம்முடைய திருவிழியை எடுக்கவில்லை. அதையே பார்த்துக் கொண்டிருக்கிறார். இறைவனுடைய திருமுடியில் கொன்றை மலர் இருக்கிறது. அது பொன்னிற முடையது; தளதளவென்று விரிந்து மலர்ந்திருக்கிறது.

கொன்றை மலரைப் பிரணவ புஷ்பம் என்று சொல் வார்கள். கேசரங்களோடு கூடிய அந்த மலர் ஓங்காரத் தைப் போலத் தோன்றுகிறதாம். ஆகையால் அதற்கு அந்தப் பெயர் வந்தது, அந்த மலரினுடைய தோற்றம் பிரணவத்தை நினைப்பூட்டுமானால் அது பெரிய சிறப்பு அல்லவா?

இறைவனுடைய சடாமுடியில் இத்தகைய சிறப்பு வாய்ந்த கொன்றை மலர் தழைத்து விளங்குகிறது. அது இயற்கையாகவே பொன்னிறமும் ஓங்கார மலர் என்ற பெயரும் அமைந்த சிறப்பைப் பெற்றிருக்கிறது. இப் போது இறைவனுடைய திருமுடிமேல் இருப்பதனால் அந்தச் சிறப்புப் பின்னும் மிகுதியாகிவிட்டது. சிறப்புப் பல நிரம்பப்பெறறு, ஆர்ந்து, கொன்றை மலர் தழைப் புற்று விளங்குகிறது.

**சீர்ஆர்ந்த கொன்றை மலர்தழைப்ப.**

இறைவன் திருமுடியில் கங்கை இருக்கிறது. அது எப்படி அங்கே வந்தது? வானுலகில் படர்ந்து ஓடிய ஆறு அது. அது தன் முன்னோர்களின் எலும்பு மேற் பாய்ந்தால் அவர்கள் நற்கதியடைவார்கள் என்று எண்ணி, பகீரதன்

கங்கையை நோக்கித் தவஞ் செய்தான். கங்கை, தோன்றி "என்னைத் தாங்குவார் யார்?" என்று செருக்கோடு கூறினாள். பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தான். இறைவன் தோன்றி அவனுக்கு அருள் செய்தான். கங்கை ஆரவாரத்துடன் வந்தபோது அதைத் தன் சடையில் தாங்கிக் கொண்டான். வானுலகத்தில் உலாவி வெள்ளமாக நீர் நிரம்பிய அந்த ஆறு இறைவனுடையசடாபாரத்தில் அடங்கிவிட்டது; கங்கை வெள்ளம் சடைக்குள் அடங்கி நிற்கிறது. பிறகு அதைப் பூமிக்குச் சிறிது விட்டான் இறைவன்.

சிவபெருமான் திருமுடியில் கங்கை இருக்கிறது. அது சேணில் உள்ள வானுலகத்தில் உலவி நீர் நிரம்பிய ஆறு. இப்போது அந்த வெள்ளம் இங்கே தேங்கி நிற்கிறது.

**'சேண் உலவி**
**நீர்ஆர்ந்த பேரியாறு நீத்தமாய்.''**

சிவபெருமான் சடைக் கற்றையையும் அதில் அவன் புனைந்திருக்கும் கொன்றை மலரையும் அங்குள்ள கங்கா நதியையும் அம்மையார் பார்க்கிறார். அவருக்குக் காட்டில் உள்ள கொன்றை நினைவுக்கு வருகிறது. அந்தக் கொன்றை கார்காலத்தில்தான் மலரும்.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" என்று சங்கநூல் கூறுகிறது. கார் காலத்தில் மழை பெய்யும். வெள்ளம் ஓடும். கொன்றையும் நீர்வெள்ளமும் கார்காலத்துக்குரிய அடையாளங்கள்.

இறைவனுடைய சடை பொன்னிறமுடையது. அந்தச் சடையைப் பாம்பைக் கயிறாகக் கொண்டு கட்டியிருக்கிறான். யாரையேனும் கண்டால் சீறும் பாம்பை வசப்படுத்திச் சடையைக் கட்டும் கயிறு போலச் செய்திருக்கிறான். கட்டு 'சடைக்குள் கொன்றை மலரும் நீர்

வெள்ளமும் காட்சிஅளிக்கின்றன; கார்காலத்தை நினைப் பூட்டுகின்றன.

இறைவன் சடாபாரமே கார்காலத்தை நினைப்பூட்டி விடுகிறது. அங்கேதானே கொன்றையையும் வெள்ளத்தையும் பார்க்கிறோம்? ஆகவே அந்தச் சடைமுடியையே கார்ப் பருவத்தின் வடிவம் என்று சொல்லிவிட்டால் என்ன? உற்றுக் கவனித்தால் இந்த உண்மை புலப்படும் 'ஆம்! நிச்சயமாக இது செவ்வையாகக் கார்ப் பருவத்தின், தோற்றந்தான். அதனால்தான் அந்தப் பருவத்துக்கு உரிய அடையாளங்கள் இருக்கின்றன என்று எண்ணமிடுகிறார் தம் கருத்தைச் சொல்லில் வடித்து விடுகிறார்.

> ''போர்ஆர்ந்த
> நாண்பாம்பு கொண்டுஅசைத்த
> எம்ஈசன் பொன்முடிதான்
> காண்பார்க்குச் செவ்வேஓர் கார்''

என்று தம் கருத்தைச் சொல்லில் வடித்து விடுகிறார்.

தம் உள்ளத்தில் இறைவன் திருவுருவத்தைத் தியானித்துத் தியானித்து அதில் ஆழ்ந்து ஈடுபடுகிறவராதலின் அந்தத் திருமேனியில் உள்ள அங்கங்களையெல்லாம் கண்டு கண்டு களிக்கிறார்; வர்ணிக்கிறார்; கற்பனையால் உவமை கூறுகிறார்; உருவகமாக்குகிறார். அவருக்கு இறைவனிடம் முறுகிய பக்தி இருப்பதால் அவருடைய அகக்கண்ணில் எப்போது வேண்டுமானாலும் இறைவனுடைய திருவுருவம் தோன்றுகிறது, சில சமயங்களில் ஏதேனும் ஓர் அங்கத்தில் மனத்தை நிறுத்தி அதிலேயே நின்று ஈடுபடுகிறார். திருவடியில் மனத்தை ஒடுக்கி இன்புறுவார். சிலகால் நீல கண்டத்தில் மனத்தைச் சலனமின்றி நிறுத்தி அதன் பெருமையிலே ஆழ்பது இன்புறுவார். திருமுடியிலே அகப் பார்வையைச் செலுத்துவார். இவை பக்தியால் விளைபவை. இவற்றோடு நிற்கிறாரா?

அவருக்குத் தமிழ்க் கவிதை கைவந்த கலை. தம் அனுபவத்தையும் உணர்ச்சியையும் சொல்லிலே வடித்துத் தரும் ஆற்றல் அவருக்கு உண்டு. ஆதலால் தம் கற்பனைத் திறத்தைத் தூண்டிவிட்டு, அழகிய கவிதையில் தாம் காணும் காட்சிகளை ஓவியமாகக் காட்டுகிறார். இப்போது சடாபாரத்தைக் கார்காலத்தின் வடிவம் என்று கற்பனை செய்து பாடுகிறார்.

**சீர்ஆர்ந்த கொன்றை**
**மலர்தழைப்பச் சேண்உலவி**
**நீர்ஆர்ந்த பேரியாறு**
**நீத்தமாய்ப்—போர்ஆர்ந்த**
**நாண்பாம்பு கொண்டுஅசைத்த**
**நம்ஈசன் பொன்முடிதான்**
**காண்பார்க்குச் செவ்வேஓர் கார்.**

[சிறப்பு நிரம்பிய கொன்றைப் பூவானது தளதள வென்று மலர்ந்து விளங்க, வானுலகத்தில் ஓடி நீர் நிரம்பிய பெரிய ஆலகிய கங்கையானது வெள்ளமாக இங்கே தங்கியிருக்க, போர் செய்யும் இயல்பு நிறைந்த, கயிற்றைப் போன்ற பாம்பைக் கொண்டு கட்டிய நம் ஈசனாகிய சிவபெருமானுடைய பொன் நிறம் பெற்ற திருமுடிதான், காண்பவர்களுக்கு, நன்றாக ஒரு கார்காலப் பருவத்தின் வடிவே ஆகும்.

ஆர்ந்த—நிரம்பிய. தழைப்ப—அடர்ந்து மலர. சேண்—வானுலகம். கங்கைக்கு வான்யாறு என்பது ஒரு பெயர். பேர்யாறு என்பது சந்தியில் பேரியாறு என்று வந்தது. நீத்தமாய்—ஓடிய நதி இங்கே தங்கியிருக்கும் வெள்ளமாகி; நீத்தமாக என்று திரித்துப் பொருள் கொள்ள வேண்டும். போர்—போர் செய்யும் பண்பு;

# 55. எங்கு ஒளித்தாய்?

இந்த நாட்டில் பலவேறு மூர்த்திகளை வழிபடுகிறவர்கள் இருக்கிறார்கள். அவ்வாறு வழிபடும் பல சமயத்தர்களையும் ஆறு வகையாக்கி ஷண்மத ஸ்தாபனம் செய்தார் ஆதி சங்கரர். விநாயகரைத் தலைமைத் தெய்வமாக வைத்து வழிபடும் காணாபத்தியம், முருகனை முதல்வனாக வைத்துத் தொழும் கௌமாரம், சிவபெருமானைப் பரம்பொருளாக வணங்கும் சைவம், சக்தியைப் பரதேவதையாகக் கொண்டு உபாசிக்கும் சாக்தம், விஷ்ணுவை யாவருக்கும் மேலாக வைத்து வணங்கும் வைணவம்; சூரியனை வழி படும் சௌரம் என்று ஆறு சமயங்களை வகுத்து வழி முறைகளை அமைத்தார் அந்தப் பெருமான்.

இவ்வாறு ஆறு மூர்த்திகளை வழிபடுவர்கள் இருந் தாலும் பெரும்பாலும் சைவம், வைஷ்ணவம் என்ற இரண்டுமே எங்கும் பரவியிருக்கின்றன. சிவன், திருமால் இருவருக்கும் தனித்தனியே உள்ள ஆலயங்களே இந்த நாட்டில் மிகுதி. வடநாட்டில் வைஷ்ணவம் மிகுதி; தென்னாட்டில் சைவம் மிகுதி.

தமிழ்நாட்டில் ஒவ்வோர் ஊரிலும் உள்ள மக்களை, "நீங்கள் என்ன மதம்?" என்று கேட்டால். ஒன்று "சைவம்" என்று சொல்வார்கள்; அல்லது 'வைஷ்ணவம்' என்று சொல்வார்கள், பத்திரங்களை எழுதும் போதும் சிவமதம், விஷ்ணுமதம் என்று எழுதும் பழக்கம் இங்கே நெடுநாளாக இருந்து வருகிறது. ஒவ்வோர் ஊரிலும் சிவ விஷ்ணு ஆலயங்கள் இருக்கின்றன. இன்ன இடத்தில்சிவா லயமும் இன்ன இடத்தில் திருமால் கோயிலும் இருக்கம்

வேண்டும் என்ற வரையறை நகர நிர்மாணத்தில் இருக்கிறது.

பல ஊர்களில் இரண்டு கோயில்களையும் ஒரு குழுவே பரிபாலித்து வரும். சைவர்கள், வைஷ்ணவர்கள் என்று சம்பிரதாயத்தில் பிரிவு இருந்தாலும் இரு சாரார்களிடத்தும் ஒற்றுமை நிலவும். தங்கள் தங்கள் வழிபடு தெய்வத்திடம் பக்தி இருக்க வேண்டுமென்றும், அதற்காக மற்றத் தெய்வங்களை இழிவு செய்யக்கூடாதென்றும் பெரியோர்கள் வற்புறுத்துவார்கள். ''தெய்வம் இகழேல்'' என்று ஔவையார் பாடியிருக்கிறார்.

சைவ வைஷ்ணவ சமரச உணர்ச்சி பரவுவதற்காக எத்தனையோ வழி வகைகளையும் அமைப்புக்களையும் இந்த நாட்டில் அமைத்திருக்கிறார்கள். ''அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயில் மண்ணு'' என்று ஒரு பழமொழியே இருக்கிறது.

பல ஊர்களில் ஒரே ஆலயத்துக்குள் சிவ பெருமான் சந்நிதியும் திருமால் சந்நிதியும் இருக்கும். சிதம்பரத்தில் நடராஜர் சந்நிதியும் கோவிந்தராஜர் சந்நிதியும் ஒரே கோயிலுக்குள் இருக்கின்றன. அப்படி உள்ள ஆலயங்கள் பல.

இதையன்றிச் சிவபெருமானும் திருமாலும் இணைந்து ஒன்றிய மூர்த்தியைச் சங்கர நாராயணர் என்று வணங்குகிறார்கள். சங்கர நயினார் கோயிலில் இந்த மூர்த்திக்குச் சந்நிதி இருக்கிறது. மாகேசுவர மூர்த்தங்கள் இருபத்தைந்தில் இந்த மூர்த்தியும் ஒருவர். கேசவார்த்த மூர்த்தி என்பது திருநாமம். ஆழ்வார்களும் சிவபிரானைத் திருமால் வலப் பாகத்தில் கொண்டிருக்கிறார் என்று பாடியிருக்கிறார்கள்.

''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் உந்தியிலே தோற்று வித்துக்

''கறைதங்கு வேல் தடங்கண் திருவை மார்பில்
கலந்தவன்தாள் அணைகிற்பீர்! கழுநீர் கூடித்
துறைதங்கு கமலத்துத் துயின்று கைதைத்
தோடாரும் பொதிசோற்றுச் சுண்ணம் நண்ணிச்
சிறைவண்டு களிபாடும் வயல்சூழ் காழிச்
சீராம விண்ணகரே சேர்மின் நீரே''

என்று திருமங்கையாழ்வார் அவளிச் செய்தார்.

''தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால்;—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்
கிரண்டுருவும் ஒன்ருய் இசைந்து''

என்பது பேயாழ்வார் திருவாக்கு.

சிவபெருமாறும் திருமாலும் ஒருவரே என்று கூறும் பாடல்கள் சைவத் திருமுறைகளிலும் உண்டு; திவ்யப் பிரபந்தத்திலும் உண்டு. ''முனியே நான்முகனே முக்கண் அப்பா'' என்பது திவ்யப் பிரபந்தம்.

''நாரணன்காண் நான்முகன்காண் நால்வேதன்காண்''

ன்பது தேவாரம்.

இவ்வாறு ஒருவராயும், பாதிப்பாதி இணைந்த ஒருவராயும் இரண்டு மூர்த்திகளையும் வைத்துப் பாடுவதோடு, இருவரையும் வேறு வேருக வைத்துப் பாடுவதே பெரும்பான்மை. சைவர்கள் சிவனைத் திருமால் அடியான்என்றும் வைணவர்கள் திருமால் சிவனுக்கு அடியார் என்றும் சொல்லிப் பெருமைப்படுவது உண்டு.

சிவபுராணங்களைப் பார்த்தால் சிவனே பரம்பொருள் என்றும், திருமால் அவனைப் பூசித்து வழிபட்டார் என்றும் கூறும். வைஷ்ணவ புராணங்களைப் பார்த்தால் விஷ்ணுவே பரப்பொருள் என்றும், சிவபெருமான்

அவருக்கு அடியவன் என்றும் சொல்லும். சிவபுராணத்தைப்பழுத்த சைவர் பாடினுர்,என்று இருந்தால் அப்படிப் பாடியது இயல்பே என்று சொல்லலாம். ஆனுல் இருவகைப் புராணங்களையும் இயற்றியவர் ஒருவரே வியாசபகவானே பதினென் புராணங்களையும் இயற்றியுள்ளார். முதலில் சிவபுராணங்களைப் பாடிவிட்டுப் பிறகு தெளிவு பிறந்து வைஷ்ணவ புராணங்களைப் பாடினுர் என்று சொல்வதற்கில்லை. இரண்டையிம் ஒருவரே பாடிய போது இப்படி வேறுபாடு இருக்கலாமா என்று தோன்றுகிறது.

இரண்டு புராணங்களையும் படித்தவர்கள் இரண்டு பேருமே முதல்வர்கள் என்று முடிவுக்கு வருவார்கள், பர தெய்வம் ஒன்ருகத்தானே இருக்க முடியும்? அப்படியாஞல் இரண்டு தெய்வங்கள் என்பது தவறு அல்லவா? ஒருவரே இருவேறு உருவங்களில் நின்று முதன்மை பெறுகிருர்கள் என்று கொண்டால் இந்த முரண்பாட்டுக்கு இடமே இராது. "ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி" என்ற சுருதி வாக்கியமும் இதைத்தானே சொல்லுகிறது?

இன்னும் ஒரு வகையில் இந்தப் புராணச் செய்திகளுக்குரிய சமாதானத்தைச் சொல்லலாம்,

இரண்டு சகோதரர்கள் நாடகத்தில் நடிக்கிருர்கள். திங்கள், புதன், வெள்ளிக்கிழமைகளில் தமையனுர் அரசனுகவும், தம்பி வேலைக்காரனுகவும் நடிப்பார்கள் ஞாயிறு, செவ்வாய், வியாழன், சனிக் கிழமைகளில் தம்பி அரசனுகவும், தமையனுர் வேலைக்காரனுகவும் நடிப்பார்கள். ஓர் ஊரில் உள்ள ஒருவர் திங்கட்கிழமையன்றுதான் ஓய்வுள்ளவர். அவர் அன்று நாடகம் பார்ப்பார். தமையனுரே அரசனென்றும், தம்பி வேலைக்காரனுகவே நடிப்பாரென்றும் எண்ணிக் கொண்டிருந்தார். வேறு ஒருவர் ஞாயிற்றுக்கிழமை நாடகம் பார்க்கிறவர், அவர்

தம்பிதான் அரசவேஷம போடுகிறவரென்றும் மூத்தவர் வேலைக்கார வேஷமே போடுகிறவரென்றும் நினைத்தார்.

இவர்களுக்குப் பண்டிகை நாட்களில் ஓய்வு இருந்த தால் வழக்கமாகப் போகாத மற்ற நாட்களில் ஒன்றில் நாடகம் பார்க்கப் போனார்கள். அப்போது தெரிந்தது உண்மை. 'இரண்டு சகோதரர்களும் எப்படி வேண்டு மாறும் வேஷம் போடுவார்கள். அவர்கள் சமமானவர்கள் இரண்டு வேஷங்களுமே போடுவார்கள்' என்ற உண்மை யைத் தெரிந்து கொண்டார்கள்.

சிவபெருமானும் திருமாலும் இப்படித்தான் நாடகம் ஆடுவார்கள். அதைக் கண்டு ஏமாந்து போகக் கூடாது,

திருமாலும் சிவபெருமானும் ஒருவரே என்றும், சிவ பெருமான் இடப்பாகத்தில் திருமால் இருக்கிறாரென்றும், சிவபெருமானைக் காணாமல் திருமால் தேடினாரென்றும் சிவ பக்தர்கள் பாடிக்கிறார்கள், இந்த மூன்றும் உண்மையாக வேண்டுமானால் அவர்கள் வேறாக நின்று திருவிளையாடல் புரிவது நாடகம் என்றே கொள்ள வேண்டும்.

காரைக்காலம்மையார் இந்த மூன்று நிலைகளில் பப்பாதியாய் நின்ற தன்மையையும் திருமாலுக்கு ஒளித்து நின்றதையும் எண்ணிப் பாடுகிறார்.

இறைவனுடைய நீலகண்டத்தை அடிக்கடி நினைத்து உருகுவது அம்மையார் இயல்பு என்பதைப் பல முறை பார்த்திருக்கிறோம். அந்தக் கண்டம் நஞ்சுண்டு கறுத் திருக்கிறது. அந்தக் கருமை அவனுடைய கருணைக்கு அடையாளமாக இருக்கிறது. அது தேவர்கள் உயிரைக் காப்பாற்றியது. அதை நினைக்கும்போது பயிரைக் காப் பாற்றும் கருமேகந்தான் உவமையாகத் தோன்றுகிறது. மழை முகிலனைய திருமேனியையுடைய திருமாலைப் பற்றிச் சொல்ல வருகிறவருக்கு முகிலை இறைவன் திருக்கழுத்துக்கு உவமையாக்கும் எண்ணம் உடனே தோன்றுகிறது

அதோடு அந்தப் பெருமானுடைய நெற்றிக் கண்ணும் நினைவுக்கு வருகிறது. அது சிவபெருமானின் தனி அடையாளம். ஆகவே இந்த இரண்டையும் இணைத்துச் சிவ பெருமானை விளிக்கிறார்.

**கார் உருவக் கண்டத்து எம் கண்ணுதலே!**

எம்பெருமானை ஒரு கேள்வி கேட்கத் தொடங்குகிறார். திருமாலும் சிவபெருமானும் இரண்டு பாதி சேர்ந்த ஒருவராக எங்கும் உலாவுகிறவர்கள். சிவனை எங்கே காண்போமோ அங்கே திருமாலும் இருப்பார். அவரை விட்டுச் சிவன் இல்லை; சிவனை விட்டு அவர் இல்லை.

**ஓர் உருவாய் நின்னோடு உழிதருவான்**

அவர் சிவபெருமானோடு ஒன்றி இருந்தாலும் அவர் உள்ள பாதி இது என்று நன்றாகத் தெரியும். வேறுபாடு தெரியாமல் இருந்தால் சிவபெருமான்தான் இருக்கிறான் என்று சொல்லத் தோன்றும். ஆனால், இருவர் வடிவிலும் வண்ணத்திலும் வேறுபாடு தெளிவாக இருக்கிறது. சிவன் செம்மேனியான். திருமால் கருமேனியுடையவர். நீரைக் கருப்பமாகக் கொண்டு, பெய்யும் நிலையில் இருக்கும் கருமுதுகில் வண்ணம் திருமாலின் வண்ணம். செம்மைக்கு அருகில் கருநிறம் இருந்தால் நன்றாக எடுத்துக் காட்டும் ஆகையால் சிவபெருமான் எங்கே வந்தாலும் அவனுடைய ஒரு பாதியில் ஒட்டியிணைந்து தம் நீலவண்ணத்தைக்காட்டிக்கொண்டுதிருமாலும் வருவார்.

**நீர்உருவ, மேகத்தால் செய்தனைய**
**மேனியான் நின்னுடைய பாகத்தான்.**

இப்படி ஒட்டி இணைந்து இனம் கண்டுகொள்ளும் படி இருக்கும் திருமால் சிவபெருமானைத் தேடிக் காணவில்லையாம்! அவர் எப்போதும் உடம்பில் ஒரு

## நின்னுடைய பாகத்தான் காணுமே பண்டு எங்கு ஒளித்தாய்?

பாதியாய ஒட்டிக் கிடக்கும்போது அவர் காணமல் எப்படி ஒளிக்த முடியும்? எங்கே ஒளிக்க முடியும்?

திருமால் வராக உருவெடுத்துச் சிவபிரானைத் தேடினார் என்று புராணம் சொல்கிறதே! அப்படித் தேடும் படி இறைவன் எங்கே ஒளித்தான்? இது மாய விளையாட்டுப் போலத் தோன்றுகிறதே! அம்மையார் இறைவனிடமே கேட்கிறார்.

இரட்டைப் பிள்ளைகளாக இருக்கும் இருவர் எப்போதும் இணைபிரியாமல் இருக்கிறார்கள். யார் கண்டாலும் இரண்டு பேரையும் காணுகிறார்கள், என்றாலும் ஒருவர் நோய்வாய்ப்பட்டு வீட்டில் படுத் திருந்தால் மற்றொருவரே வெளியிலே வர முடியும். அப்போது • ஒருவரையே காணுவார்சள். உடம்பு வெவ்வேருக இருப்பதனால் இது சாத்தியமாகிறது.

ஆனால் இரண்டு பாதியாக ஒட்டிய ஒரே திருமேனியில் ஒரு பாதி எப்படித் தனியாக ஓடி ஒளிக்கும்? திருமால் ஒரு பாதியென்று சொல்கிறவர்கள் அவர் காணமல் சிவபிரான் ஒளித்தான் என்றால் முரண்பாடு அல்லவா? "உன்னோடு பாதியாக ஒட்டி நிற்பவன் பார்க்க முடியாமல் நீ எங்கே ஒளித்தாய்?" என்று அம்மையார் கேட்கிறார்.

> கார் உருவக் கண்டத்துஎம்
> கண்ணுதலே, எங்கு ஒளித்தாய்?
> ஓர் உருவாய் நின்னோடு
> உழிதருவான்,—நீர் உருவ
> மேகத்தால் செய்தனைய
> மேனியான், நின்னுடைய
> பாகத்தான் காணுமே பண்டு?

[மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய திருக் கழுத்தையும் நெற்றியிலே கண்ணையும் உடைய எம்பெருமானே, ஒரே வடிவமாக நின்னோடு எங்கும் உலவுகிறவனும், நீரையுடைய அழகிய மேகத்தினால் செய்தமைத்தால் போன்ற திருமேனியை உடையவனும், நின்னுடைய இடப்பாதியில் இணைந்திருப்பவனுமாகிய திருமால் பழங் காலத்தில் நின்னைக் காண முடியாமல் நீ எங்கே மறைந்தாய்?

கார் உருவம்—மேகத்தின் நிறம். எம்—எமக்கு உரிமையுள்ள. உழிதருவான்—திரிபவன். உருவ மேகம்—அழகையுள்ள மேகம்; உருவம்—அழகு. செய்தாயலனை என்றது செய்தனைய என நின்றது. பாகம் என்றது இடப் பாகத்தை. பண்டு—இறைவன் சுடருருவனாக நின்ற பழங்காலத்தில்.]

ஒட்டி இணைந்த உருவமுடையவனாக இருந்தவன் காணாதபடி ஒளித்தது பொருத்தமற்றது போலத் தோன்றும். இறைவன் பல வகை வடிவங்களை எடுத்தாலும்வடிவம்இல்லாமல்இருந்தாலும் அவை அவனுடையதிருவிளையாடல்களின் வகை.அவை ஒன்றுக்கு ஒன்று முரண்பாடாகத் தோன்றினாலும், அப்படி வெவ்வேறு வகையில் தோன்றுவது உயிர்க் கூட்டங்களுக்குக் கருணை வழங்குவதற்காகச் செய்யும் அருள் திருவிளையாடல் என்று கொள்ள வேண்டும். அந்த அந்தச் சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி அவன் உருவெடுக்கிறான். அதற்கு எல்லை இல்லை.

—இது அற்புதத் திருவந்தாதியில் 54—ஆவது பாடல்.

# 56. வேறு ஒன்றும் உண்டு

குழந்தை தெருவில் கீழே விழுந்துவிட்டது. முழங்காலில் காயம். தாய் பதறிப்போய் விட்டாள். நல்ல வேளையாக அந்தக் காயம் சீக்கிரம் ஆறிவிட்டது. பொருக்குத் தட்டியது. பிறகு அதுவும் உதிர்ந்துவிட்டது. அங்கே சிறிது மங்கலான வடு மாத்திரம் இருக்கிறது. அதைக் காணும்போதெல்லாம் அன்னைக்குக் குழந்தை கீழே விழுந்து காயம் பட்டது நினைவுக்கு வரும்.

ஒரு நாள் குழந்தைக்கு அவள் நீராட்டினாள். முதுகிலே ஒரு சிறிய தேமல். அதைக் கண்டபோது அவளுக்குத் துணுக்கென்றது. "ஓ! இதைக் கவனிக்காமல் இருந்துவிட்டேனே! குழந்தை விழுந்தபோது இங்கேயும் காயம் பட்டிருக்கிறது. அதனால்தான் இந்த வடு இருக்கிறது" என்று புலம்பினாள்.

கீழே விழுந்த குழந்தை குப்புற விழுந்தபோது முழங்காலிலே காயம்படுவது இயற்கை. முதுகிலே எப்படிக் காயம் உண்டாகும்? இதைப்பற்றித் தாய் யோசிக்கவில்லை. குழந்தையின்பால் உள்ள அன்பு எதுவானாலும் அதற்கு வந்த தீங்கு என்று அச்சம் அடையச் செய்கிறது. காரண காரியங்களை ஆராய்ந்து முடிவு கட்டும் அறிவு அப்போது அவளுக்கு உதவுவதில்லை. அன்பின் இயல்பே அதுதான். எடுத்ததற்கெல்லாம் ஐயமும் துன்பமும் உண்டாவதற்கு அந்த அன்பே காரணம். குழந்தை உள்ளே படுத்து உறங்கும் வீதியிலே யாருடைய குழந்தை விழுந்துவிட்டது. என்று கேள்விப் பட்டால், 'நம் குழந்தைதானோ?' என்று ஓடிப் போய்ப்

பார்த்து விட்டுப் பிறகு உள்ளே சென்று உறங்கும் குழந்தையைப் பார்த்து ஆறுதல் பெறுவது போன்ற விசித்திர நிகழ்ச்சிகள் அன்பின் விளைவாக உண்டாகும்,

காரைக்காலம்மையார் சிவபெருமானுக்குத் தாய் நிலையில் இருப்பவர். இறைவனுடைய எழிலையும் வீரத்தையும் பாராட்டும் தாயாக இருப்பார். 'ஐயையோ! இப்படி ஆகிவிட்டதே! என்று அங்கலாய்க்கும் அன்னை யாகவும் இருப்பார். "இப்படியெல்லாம் செய்யப்படாது" என்று அறிவுரை கூறும் மாதாவாகவும் இருப்பார். பக்தியுணர்ச்சி இன்னவாறுதான் செயற்படும் என்ற வரையறை இல்லை. இறைவனைப் பரதெய்வமாகவும் பரோபகாரியாகவும் போற்றும் நிலையும் காரைக் காலம்மையாரிடம் உண்டு. அப்போதெல்லாம் மற்ற அருளாளர்கள் எப்படிப் பேசுகிறார்களோ அப்படிப் பேசுவார்.

மனத்தில் மூண்டெழும் உணர்ச்சிகள் பலப்பல. மூலமாகிய குணம் எதுவோ அதன் விளைவாகப் பல்வேறு நிலைகளில் மனம் எண்ணமிடும். காதலியிடம் காதல் கொண்ட ஆடவன் அந்தக் காதல் காரணமாக எத்தனையோ மனநிலைகளைப் (Moods) பெறுகிறான். சினம் கொண்டவன் உள்ளமும் அப்படியே வெவ்வேறு நிலைகளை அடைகிறது. கடலில் அலைகள் பல வகையாகக் கொந்தளித்து எழுந்தும் விழுந்தும் கரையை மோதியும் செயற்படுவது போல மனத்திலும் பல பல நிலைகளும் அந்த அந்த நிலைகளுக்கேற்ற எண்ண அலைகளும் தோன்றும்.

காரைக்காலம்மையாரின் திருவுள்ளத்திலும் இத் தகைய நிலைகளும் அலைகளும் எழும்புகின்றன. நாம் இதுவரையில் பார்த்த பாடல்களில் அப்படி உள்ள பல்வேறு நிலைகளைப் பார்த்து வருகிறோம். இப்போது தாயின் நிலையிலிருந்து பாடுகிறார். முதுகிலே உள்ள சிறிய

தேமலைக் கீழே விழுந்த காயத்தின் வடுவென்று எண்ணி அங்கலாய்க்கும் தாயைப் போல இப்போது ஒன்றைச் சொல்கிறார்.

அம்மையார் அடிக்கடி இறைவனுடைய நீல கண்டத்தை நினைத்து உருகுவதை முன்பும் பார்த்தோம்; இனியும் பார்க்கப் போகிறோம். இப்போது அந்த நீலகண்டத்தை எண்ணிப் பாடுகிற ஒன்றைப் பார்க்கலாம்.

இறைவனுடைய கண்டம் எப்படிக் கறுத்தது அது பழைய கதை. அதை இப்போது அம்மையார் நினைவு கூர்கிறார். அமரர்கள் எல்லாம் பாற்கடலைக் கடைந்தார்கள். அமுதை எடுத்து உண்டு சாவா மூவாப் பெரு வாழ்வு பெற வேண்டும் என்பது அவர்களுடைய ஆசை. பாற்கடலை முப்பத்து முக்கோடி தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து கடைந்தார்கள். ஒரு பெரிய காரியம் செய்வதற்கு தம்முடைய தலைவனிடம் சொல்லி உத்தரவு பெற்றுச் செய்தால், அது நன்றாக நிறைவேறும். அமரர்களோ எல்லாத் தேவர்களையும் மூர்த்திகளையும் அழைத்துச் சென்றார்களேயன்றிச் சிவபெருமானிடம் ஒன்றும் தெரிக்கவில்லை.

பாற்கடலைக் கடைந்தபொழுது உடனே அமுதம் உண்டாகவில்லை. ஐராவதம், உச்சைசிரவம் என்று பல பொருள்கள் எழுந்தன. அவற்றை அவரவர்கள் எடுத்துக் கொண்டார்கள் அப்பால் ஆலகால விஷம் எழுந்தது. அது தோன்றியபோதே அதன் காற்றுப்பட்டு யாவரும் மயங்கி விழுந்தனர். மயக்கம் தெளிந்து எழுந்தவுடன் அவர்களுக்குச் சிவபெருமான் நினைவு வந்தது, ஓடிச் சென்று அவன் காலில் விழுந்து அலகால நஞ்சிலிருந்து தங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று முறை யிட்டார்கள், சிவபெருமான் உடனே அந்த நஞ்சை வாங்கி உண்டான். அதுஅவன் கழுத்திலே நின்று

விட்டது. இறைவன் திருக்கழுத்து நீலகண்டமாயிற்று இறைவனுக்கு நீலகண்டன் என்ற திருநாமம் அமைந்தது.

பழைய காலத்தில் அமரர்கள் எதைக் கண்டு அஞ்சினர்களோ, அந்த நஞ்சை, பாற்கடலில் எழுந்த விஷத்தை, உண்டு அதனால் அிறைவன் கண்டம் கறுத்தது. இது அம்மையார் அடிக்கடி நினைப்பூட்டிக் கொள்ளும் செய்தி.

**பண்டுஅமரர் அஞ்சப் படுகடலின் நஞ்சுண்டு**
**கண்டம் கறுத்தது,**

'அந்தக் கறுப்பு வடுமாத்திரமா? இதோ இன்னும் ஒரு வடு இருக்கிறது போல் இருக்கிறதே! கழுத்தளவில் நின்றுவிட்ட நஞ்சு என்றல்லவா நினைத்தோம்? அந்த நஞ்சு தலைக்கும் ஏறி அதற்கு மேலும் போய் விட்டது போல் இருக்கிறதே?' என்ற எண்ணம் இப்போது அம்மையாருக்கு எழுகிறது, ஏன்?

இப்போது நிதானமாக இறைவனுடைய திருமுடியைப் பார்த்தார். சிவந்த சடையே அவனுக்கு முடியாக இருக்கிறது. அது நீண்ட சடை; வார்சடை; சிவந்த சடை; செஞ்சடை. அந்த வார்செஞ்சடைமேல் பாம்பை அணிந்துகொண்டிருக்கிறான் இறைவன். காட்டில் மனம் போனபடி விளையாடுவது போல அந்தப் பாம்புகள் அங்கே உலாவுகின்றன. அதே சடையில் சிவபெருமான் மதியைச் சூடியிருக்கிறான். அது வெள்ளைவெளேரென்று பால் போல் ஒளிவிடுகிறது; பால்மதியாக விளங்குகிறது.

அந்த மதியை உற்றுக் கவனிக்கிறார். இறைவன் சடையில் பிறைச் சந்திரன் இருக்கிறது. அம்மையாருக்கு அது முழுமதியமாகத் தோன்றுகிறது. இறைவன் ஆடும் போது அந்த ஆட்டச் சுழற்சியிலே அது வட்ட வடிவமாகத் தோன்றுவதும் உண்டு. இப்போது அம்மையார்

கண்ணுக்கு முழுமதியமாகவே தோன்றுகிறது. பிறையாக இருந்தால் சந்திரனுக்கு வடு—அதாவது முயற்கறை— இருப்பதில்லை. முழுமதியில்தான் இருக்கும்.

அம்மையார் கண்ணுக்குப் பால் போன்ற முழுமதி தோன்றுகிறது. அதனூடே வடுவும் கறுப்பாகத் தோன்றுகிறது. நீலமணி போன்ற அந்த மறு கண்ணிலே பட்டவுடனே ஒரு புதிய எண்ணம் உதிக்கிறது, 'இது மதியின் மறு அன்று; இறைவன் உண்ட நஞ்சினால் உண்டான வடு இது. அடடா! திருக்கழுத்தில் மட்டுந் தான் கறை உண்டு என்று எண்ணியிருந்தேனே! விஷம் தலைக்கு ஏறித் தலைக்கு மேல் தலையிலணிந்த மதிக்கும் ஏறி அந்த மதியில் மறுப் போல இருக்கிறது. இதுவரைக்கும் திருக்கழுத்திலுள்ளது மட்டுந்தான் கறை என்று எண்ணியது தவறு. இதோ மற்றொரு வடுவும் உண்டு. மதியிலே மறுவைப் போல் அந்த விடந்தான் இங்கும் தோன்றுகிறது' என்று தாயின் நிலையில் இருந்த அம்மையாரின் உள்ளத்தில் ஒரு புதிய அலை ஓடுகிறது. கவித்திறமை உள்ளவர்களின் எண்ண அலைகள் கவி வடிவத்தில் வெளிப்படும் அல்லவா? இறைவனிடம் தாயன்பும் உணர்ச்சி விஞ்சிக் கவிபாடும் திறமும் உள்ள அம்மையார் இப்போது தம் எண்ணத்தைப் பாட்டாக வடிக்கிறார்.

**பண்டமரர் அஞ்சப் படுகடலின் நஞ்சுண்டு**
**கண்டம் கறுத்ததும் அன்றியே—உண்டு**
**பணியுறுவார் செஞ்சடைமேல் பால்மதியின் உள்ளே**
**மணிமறுவாய்த் தோன்றும் வடு.**

[பழங்காலத்தில் தேவர்கள் அமுதம் வேண்டுமென்று கடைந்தபோது அவர்கள் அஞ்சும்படி பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சத்தை உண்டு, இறைவனுடைய கண்டம் கறுப்பு நிறத்தை அடைந்ததும் அல்லாமல், பாம்புகள் இருக்கும் நீண்ட செம்மையான சடையின்மேல்

பாலைப் போல வெளுப்பான சந்திரனுக்குள்ளே நீலமணியின் நிறத்தைப் பெற்ற மறுவென்ற வடிவில் தோன்றும் வடுவும் உண்டு.

அஞ்சப்படு நஞ்சு கடல் நஞ்சு. அஞ்சப்படு— அஞ்சு தற்குக் காரணமான. படுகடலில்— ஆழமான கடலின் என்றும் பொருள் கொள்ளலாம். கண்டம்— சிவபெருமா னுடைய கழுத்து. பணி—பாம்பு. வார்— நீண்ட. மணி மறு—நீலமணியின் நிறத்தைப் பெற்ற கறை. வடு— அடை யாளம்; கறுப்பான வடு. வடு உண்டு; வடுவும் என்பதில் உள்ள இறந்தது தழீஇய எச்சவும்மை தொக்கது.]

பாம்பு விஷமுடையதாதலால் அதை நஞ்சு ஒன்றும் செய்யாது, சந்திரனைத்தான் அது மாற்றியது. வெளுப் பான சந்திரனில் கறுப்பானவடு நன்றாகத் தோன்றுகிறது.

காரைக்காலம்மையார் தாயன்போடு பாடிய இந்தப் பாட்டு அற்புதத் திருவந்தாதியில் 55- ஆம் பாடலாக அமைந்திருக்கிறது.

# 57. நிலாச் சூடும் காரணம்

சிவபெருமானுடைய திருக்கோலமும் அவன் அணிந்துள்ள பொருள்களும் அவன் செயல்களும் விசித்திர மானவை. மற்ற மூர்த்திகளின் போக்கு வேறு, அவனுடைய போக்கு வேறு. எல்லாரும் பட்டும் பீதாம்பரமும் உடுத்திருப்ப அவன் புலித் தோலையும் யானைத் தோலையும் புனைந்திருக்கிறான். எல்லோரும் மணமும் அழகும் உள்ள மலர்களை அணிந்திருக்க அவன் எருக்கும் தும்பையும் கொன்றையும் அணிகிறான். பிறர் மணியாலும் பொன்னாலும் அமைந்த அணிகளை அணிய அவன் எலும்பையும் பாம்பையும் ஆபரணங்களாகக் கொண்டுள்ளான் யாவரும் சந்தனம் பூச அவன் சுடுநீறு பூசியுள்ளான். எல்லோருடைய கண்களும் உரிய இடங்களில் இருக்க அவனுக்கு மூன்றாவது கண் ஒன்று நெற்றியிலே குறுக்காக இருக்கிறது. "கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை" என்று மாணிக்க வாசகர் பாடுகிறார்.

அவன் ஊரூராகச் சென்று பிச்சை எடுத்து உண்ணுகிறான். பிச்சைப் பாத்திரமாவது நன்றாக இருக்கிறதா? வெண்தலை என்று சொல்லும் கபாலத்தில் பிச்சை வாங்கி உண்கிறான். இப்படி இருக்கிறவனை மற்றவர்கள் கண்டால் இழிவாகப் பேச மாட்டார்களா? ஒருகால் அவனுக்குப் பயந்து கொண்டு அவன் முகத்துக்கு எதிரே இழிவாகப் பேசாவிட்டாலும், அவன் போன பிறகு இழித்து எள்ளி நகையாடுவார்கள்; புறம் பேசுவார்கள்.

எம்பெருமான் ஏன் இப்படிச் செய்கிறான்? இப்படிப் புலால் நாற்றம் வீசும் கபாலத்தில் பிச்சை வாங்கி உண்பது அவனுக்குப் பெரிய வடுவல்லவா? பிச்சை

எடுப்பதே முதலில் அவமானம். அதுவும் கபாலத்தைப் பிட்சாபாத்திரமாகக் கொண்டது அதை விட அவமானம். அந்தக் கபாலமாவது சுத்தமாக இருக்கிறதா? இன்னும் புலால் நாற்றம் வீசுகிறது. அதில் பிச்சையெடுப்பது மிக மிக வடுவான செயல். சைவ உணவு என்ருலே ஊன் இல்லாத உணவைக் குறிக்கும். அப்படியிருக்கச் சிவபெருமானே ஊன் நாற்றம் வீசும் பாத்திரத்தில் பிச்சை வாங்குவது எவ்வளவு இழிவு? கலம் தூய்மையாக இல்லா விட்டால் அதில் இடும் உணவும் தூய்மையில்லாமல் போகுமே!

சிவபெருமான் கபாலியாகத் திரிந்து பிச்சையெடுத்து உண்பதைப் பலரும் பழிப்பது அவனுக்குத் தெரியாதா? அவன் அவ்வாறு செய்வதை வடு என்று கருதவில்லையா?

இப்படியெல்லாம் காரைக்காலம்மையார் யோசித்துப் பார்க்கிருர். அவரே யோசிக்கும்போது நமக்கு அந்த யோசனை ஏழாதா? இறைவன் பிரமனுடைய கபாலத்தில் பிச்சை ஏற்கிருன். பிரமனுக்கு முன்பு ஐந்து தலைகள் இருந்தன. சிவபெருமானுக்கும் ஐந்து சிரங்கள். பிரமன், 'எனக்கும் ஐந்து தலை; சிவனுக்கும் ஐந்து தலை; இருவரும் சமானம்' என்று தருக்குக் கொண்டான். பெரிய உத்தி யோகம் வகிக்கிறவர்கள் நல்ல பண்போடு இருந்தால் தான் அவர்கள் வேலை நன்ருக நடக்கும். தமக்கு மேலதிகாரிகள் இருக்கிருர்கள் என்ற எண்ணம் இன்றித் தான் ருேன்றித் தம்பிரான்களாக இருந்தால் அவர்களால் மற்றவர்களுக்குத் தீங்கு உண்டாவது மாத்திரம் அன்று; அவர்களுக்கே தண்டனை கிடைக்கும்.

படைப்புத் தொழில் என்பது மிகவும் கௌரவமான செயல்; பொறுப்பு மிக்க தொழில். அதைப் புரிபவர்கள் ஒழுங்காகச் செய்ய வேண்டும். தமக்கு மேல் தலைவர்கள் இருக்கிருர்கள் என்பதை உணர்ந்து, பணிவாக வேலையைச் செய்து வர வேண்டும். அப்படியின்றிக் கர்வம் உண்டாகி விட்டால் முறைபிறழ்ந்து நடக்கும்படி ஆகிவிடும்.

பிரமன் கர்வம் கொண்டான். மேலதிகாரியை மதிக்காத தருக்கு அவனிடம் உண்டாயிற்று. அப்போது இறைவன் அவனுக்குத் தண்டனை கொடுத்தான். ஐந்தாவது தலையைக் கிள்ளிய தலையின் கபாலத்தையே பிட்சா பாத்திரமாக ஆக்கிக் கொண்டான். ஊனெல்லாம் கரைந்து வெள்ளை வெளேரென்று இருக்கும் மண்டையோடு அது. துறவிகள் பிட்சை வாங்க மண் ஓடு வைத்திருப்பார்கள். அதுபோலச் சிவபெருமான் மண்டையோடு வைத்திருக்கிறான். அதைத்தான் கபாலம் என்றும் வெண்டலை என்றும் சொல்வார்கள்.

சிவபிரான் பிரமனிடமிருந்து பட்டுப் போன தலையில் பிச்சை எடுக்கிறான்; "படுவெண் தலையினுள் ஊண்" ஏற்கிறான், அப்படிச் செய்வது எதற்காக?

ஆணவத்தின் பகுதிதான் கர்வம். அதை உடையவர்கள் துன்பம் அடைவார்கள் என்பதைக் காட்டவே அதைக் கையில் வைத்திருக்கிறான். கர்வம் அடைந்தவர்கள் எவ்வளவு பெரியவர்களானாலும் அவர்களுக்கு நிச்சயமாகத் தண்டனை உண்டு.

அது மட்டும் அல்ல. அவன் கபாலத்தை ஏந்திக் கொண்டு ஊர்தோறும் பிச்சைக்குப் போகிறான். உலகம் முழுவதும் திரிகிறான். "நீ உலகம் எல்லாம் இரப்பினும்" என்று அடுத்தபடி சொல்லப் போகிறார் அம்மையார்.

அவ்வாறு அவன் கபாலத்தை ஏந்திக்கொண்டு போகும்போது அவன் பெருமையை உணராதவர்கள் பழி கூறுவார்கள். அதைப்பற்றி அவன் கவலைப்படுவதில்லை. அன்பர்களோ உண்மையை உணர்ந்து உருகுவார்கள். அவன் பிச்சை வாங்குவதாகப் பேர் பண்ணிக் கொண்டு அன்பர்களுக்கு அருட்பிச்சை அளிக்கப் போகிறான். 'என்னை நம்பினவர்களுக்குப் பிறப்பு இல்லை' என்பதை அந்தக் கபாலத்தால் உணர்த்துகிறான். பிரமன் எல்லோருடைய மண்டையோட்டிலும் எழுதுகிறான்

என்று சொல்வது ஒரு வழக்கு. அதனால் விதியைத் தலையெழுத்து என்று சொல்லும் வழக்கம் உண்டாயிற்று. கபாலத்தைத் தலைகீழாக்கி ஏந்துகிறான் இறைவன். 'உங்கள் தலையில் எழுதுகிறவன் கபாலமே என் கையில் இருக்கிறது. அதையே நான் நிமிர்த்தி வைத்திருக்கிறேன். என்னை வழிபட்டவர்களுக்குப் பிரமனால் தீங்கு வராது. அவன் அவர்களைப் பிறக்கச் செய்ய மாட்டான், அவர்கள் தலையில் எழுத வேண்டிய நிலை அவனுக்கு இராது' என்பதையே கபாலியாக இருந்து காட்டுகிறான் இறைவன்.

அவனுக்குத் தாருகாவனத்து மகளிர் பிச்சை யிட்டார்கள். அந்தக் கபாலத்தினுள்ளே ஊனை வாங்கினான். ஆனால் அந்த ஊனை அவன் உண்கிறானா? அப்படி உண்டதாக யாரும் சொல்லவில்லை. தேவர்கள் அமுதை உண்ணும்படி அநுக்கிரகம் செய்த அவன் அதில் ஒரு துளியை உண்ணவில்லை. அவர்கள் பிழைப்பதற்காக ஆலால விடத்தை உண்டான்; அதையும் உண்டான் என்று சொல்ல முடியாது. அது வயிற்றுக்குள் போக வில்லை. அதைத் தன் கழுத்திலே நிறுத்திக்கொண்டான்.

ஆகவே, அவன் நஞ்சையே உண்ணவில்லை; இந்தப் பிச்சைச் சோற்றை உண்ணுவானா?

பிச்சை வாங்கி உண்டால்தான் குற்றம்; வடு; பழி. பிச்சை வாங்கும் கோலத்தில் அவன் அன்பர் களுக்கு அநுக்கிரகம் செய்யப் போகிறான்.

ஆனாலும் புறங்கூறுகிறவர்களை எப்படி அடக்குவது? காரைக்காலம்மையார் யோசனையில் ஒரு கருத்துத் தோன்றுகிறது.

பகல் வேளையில் பிச்சையெடுப்பதை எல்லோரும் காண்பார்கள். அப்படி ஒருவரும் கண்டார் இல்லை. பகலில் வாங்கின பிச்சையை இரவிலே உண்ணு கிறானோ? இப்படி யாராவது எண்ணிப் புறம்பேசி, வடு

வாகக் கூறினுல் அவர்களுக்கு இரவிலும் அதை உண்ணு வதில்லை என்பதைக் காட்ட அவன் வெளிச்சம் போட்டுக் காட்டுகிருனே? நிலாவைத் தலையிலே சூடியிருக்கிருனே! அது அதற்காகத்தானே? 'இந்த நிலவொளியில் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்' என்று அவன் சொல்லாமல் சொல்கிருனே?

இந்தக் கேள்வியைக் காரைக்காலம்மையார் இறை வனையே கேட்கிருர்.

இறைவன் திருமேனி முழுவதும் வெள்ளைப் பொடி யாகிய திருநீற்றைப் பூசியிருக்கிருன். அப்பழுக்கில்லாத சுத்த வெள்ளை நிறமாகத் தோன்றுகிருன். அத்தகைய வனுக்கு இந்தப் பழியா? "வெள்ளையான நிறத்தைஉடைய எம்பெருமானே! எனக்கு ஓர் உண்மையைச் சொல்ல வேண்டும்" என்று தொடங்கிருர்.

சுடுவெண் பொடிநிறத்தாய் சொல்லாய்.

'இவ்வாறு கபாலத்தில் பிச்சையாக உணவை ஏற்பது வடுவென்று பிறர் சொல்லவும் அது வடுவென்று நீ நினைக்கிருயா? அப்படியானுல் இந்த நிலாவை ஏன் தலையில் சூடியிருக்கிருய்? மற்றவர்கள் நீ இவ்வாறு செய்வதை இழிவாகக் கருதிப் புறங்கூறுவதைக் கேட்டுத் தானே அப்படிச் சூடியிருக்கிருய்?"

வடு அன்று எனக்கருதி நீ மதித்தி ஆயின்.

'நீ இது வடு அன்று என மதிக்கலாம். ஆனுல் உலகம் கூறும் பழிச் சொல்லைக் கேட்டு அதை மாற்ற எண்ணினுயோ?'

படுவெண் புலால் தலையினுள் ஊண்புறம் பேசக்கேட்டே நிலாத் தலையில் சூடுவாய் நீ?

கையில் கபாலமும் தலையில் நிலாத்துண்டமும் உள்ளதை எண்ணி, இரண்டுக்கும் முடிச்சுப் போட்டு இப்படி ஒரு கற்பனையை அமைத்து அதையே கேள்வியாகக் கேட்கிறார் அம்மையார்.

**வடுஅன்று எனக்கருதி நீமதித்தி ஆயின்**
**சுடுவெண் பொடிநிறத்தாய், சொல்லாய்;—படுவெண்**
**புலாலதலையி னுள்ஊண் புறம்பேசக் கேட்டோ**
**நிலாத்தலையில் சூடுவாய நீ?**

[சுட்ட வெண்மையான திருநீற்றின் நிறத்தை உடைய திருமேனிப் பெருமானே! உயிரின்றிப் பட்டுப் போன புலால் நாற்றம் கமழும் கபாலத்தினுள் பிச்சையுணவைப் பெறுவதைப் பழியன்று என எண்ணி நீ அதைச் சிறப்பாக எண்ணினையாயினும், மற்றவர்கள் புறத்தே பழிகூறுவதைக் கேட்டோ நிலாவையுடைய சந்திரனை நீ தலையில் சூடிக்கொண்டிருக்கிறாய்? நீ அதன் காரணத்தைச் சொல்.

வடு-பழி. மதித்தி-உயர்வாக எண்ணினாய். ஆயின்-ஆயினும்; உம்மை தொக்கது. சுடுபொடி, வெண்பொடி, எனக் கூட்டுக. திருநீற்றால் இறைவனுடைய திருமேனி வெள்ளையாகத் தோன்றுகிறது. நிறம்-மார்பு என்று கொண்டு வெண்ணீற்றையணியும் மார்பையுடையவனே என்றும் பொருள் கொள்ளலாம். படு-உயிரின்றி விழுந்த; படுத்த என்றும் கொள்ளலாம்; வீழ்த்திய என்று பொருள். ஊண் உணவுப் பொருள். புறம் பேச- புறத்தே இழிவாகப் பேச.]

நீ அதை வடுவாக மதிக்காவிட்டாலும் மற்றவர் கூறும் பழியைக் கேட்டு அதை மாற்ற, அவர்கள் உண்மையறிந்துகொள்ளும்படி நிலாவைச் சூடினாயோ என்று கேட்கிறார்.

இது அற்புதத்திருவந்தாதியில் 56-ஆம் பாட்டு.

# 58. பலியிடார்

இறைவன் பிட்சாடனஞகச் செல்லும் செயலைக் காரைக்காலம்மையார் பின்னும் நினைத்துப் பார்க்கிருர். பிச்சைக்காரன் ஆனாலும், துறவியானாலும் அவர்களுக்கு வேண்டியதை இடுபவர்கள் பெண் மணிகளே. இதனால் தான் பிச்சைக்காரன், "அம்மா! பிச்சை" என்று கேட்கிருனேயன்றி, "ஐயா! பிச்சை" என்று கேட்பதில்லை. வீட்டுக்கு வெளியே வரும் பிச்சைக்காரர்களுக்கு ஐயமும் வீட்டுக்குள்ளே வரும் விருந்தினர்களுக்கு விருந்தும் இடும் கடமையை உடையவர்கள் மகளிர். "ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி" என்று பெண்கள் பாடுவதாகத் தானே திருப்பாவையில் வருகிறது?

சிவபெருமான் பிட்சை வாங்கச் செல்கிருன். அவனுக்குப் பிட்சையிடப் பெண்களே வரவேண்டும். தாருகாவனத்து முனிவர்களின் பத்தினிகள் பிட்சையிட்டதாகப் புராணம் சொல்கிறது.

காரைக்காலம்மையார் இறைவனுக்கு மடவார் பிச்சையிடுவார்கள் என்பதை இப்போது நினைத்துப் பார்க்கிருர்.

பிச்சை வாங்குகிறவர்கள் சாந்தமாகப் போய்ப் பிச்சை கேட்டால் பெண்கள் மகிழ்ந்து பிச்சை இடுவார் கள், சிவபெருமான் எப்படிப் போகிருன்? என்பு மாலையும் புன்சடையும் கொண்டு பிச்சை கேட்கப் போகிருன். கையில் கபாலத்தை ஏந்தியிருக்கிருன். பெண்கள் பயந்த சுபாவம் உடையவர்கள் மெல்லியலார். அவர்கள் இந்தத் தோற்றங்களைக் கண்டால் அஞ்சுவார்கள். கபாலமும்

எலும்பு மாலையும் அவர்களை ஒன்றும் செய்வதில்லை, அவற்றின் தோற்றம் மரணத்தையும் சுடுகாட்டையும் நினைப்பூட்டிப் பயத்தை உண்டாக்கும்.

அவற்றைக் கண்டும் அஞ்சாமல், ''பாவம்! யாரோ பெரியவர் பிச்சை கேட்கிறார்'' என்று மனம் இரங்கி பிச்சையிட்டாலும் இடலாம். ஆனால் மற்றொன்று இருக்கிறதே, அதைக் கண்டால் அஞ்சாமல் இருக்க முடியுமா? 'பாம்பென்றால் படையும் நடுங்கும்' என்பார்கள். படையில் பலசாலிகளாகிய வீரர்கள் இருப்பார்கள். அவர்களே பாம்பைக் கண்டு அஞ்சுவார்களானால் அபலைகளாகிய பெண்கள் பயந்து நடு நடுங்கி விடுவார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? நஞ்சு மிக்க நாகப்பாம்பை ஆண்டவன் அணிந்திருக்கிறான். அது படம் எடுத்துச் சீறி ஆடுகிறது. அதைக் கண்டால் பெண்கள் நடுங்கி ஓடி ஒளிந்து கொள்வார்களே! அப்புறம் இறைவனுக்குப் பிட்சை எங்கே கிடைக்கும்?

இவற்றை எண்ணிக் காரைக்காலம்மையார் இறைவனுக்கு ஓர் அறிவுரை கூறுகிறார். தாயின் நிலையில் இருந்து கொண்டு அதைக் கூறுகிறார். அழுக்கான உடைகளை அணிந்து கொண்டு வேலைதேடிப்போகும் மகனை பார்த்து, ''இப்படிப் போகாதே அப்பா! இந்த அழுக்கு உடைகளைக் களைந்து விட்டு நல்ல ஆடையாக அணிந்து செல்'' என்று தாய் கூறுவதைப் போல அமைந்திருக்கிறது. அம்மையார் கூற்று.

இறைவனைப் பார்த்து அவர் கூறத் தொடங்குகிறார்: 'எம்பெருமானே, நீ பிச்சை எடுப்பது தவறுதான். அதைப்பற்றிச் சொல்லிப் பயன் இல்லை. கண்ட கண்ட இடத்திற்குப் போகாமல் இன்ன இடத்துக்கு மட்டும் போ என்று வரையறை சொல்ல வரவில்லை. உன் விருப்பப் படியே இந்த உலகம் எல்லாம் சென்று இரந்து வா. ஆனால் ஒன்று சொல்கிறேன்; அப்படிச் செய். அப்போது

தான் உனக்குப் பிச்சை கிடைக்கும். என்ன செய்ய வேண்டும் தெரியும்? நீ மிகவும் கொடிய, கெட்ட பாம்பை அணிந்திருக்கிறாய். அதைக்கழற்றி வைத்துவிட்டு எங்கு வேண்டுமானாலும் போ.

**நீ உலகம் எல்லாம் இரப்பினும்- நின்னுடைய**
**தீய அரவுஒழியச் செல்கண்டாய்.**

'ஏன் தெரியுமா? உனக்குப் பிச்சையிட வருகிறவர்கள் பெண்கள். அவர்கள் மிகவும் தூயவர்கள். நீ பாம்பை அணிந்துகொண்டு போனால் அது சும்மா அமைதியாக இராது. உன் மேலே தவழ்ந்து மிகுதியாக ஆடும். அதைக் கண்டால் அவர்கள் பயப்படுவார்கள். உன்னுடைய குரலைக் கேட்டுக் கையில் பிட்சையை எடுத்துக்கொண்டு வருவார்கள். சிறிது தூரம் வந்தவுடன் புஸ் என்று சீறி ஆடும் பாம்பைக் கண்டவுடன் அப்படியே உள்ளே ஓடிவிடுவார்கள். உன்னிடத்தில் வந்த பிறகு தானே பிச்சை போடவேண்டும்? அருகிலே வரமாட்டார்களே! கொண்டு வந்த பிச்சையையும் போடமுடியாது. நீ எதற்காகப் போகிறாயோ அந்தக் காரியம் பலிக்காது. அவர்கள் பிச்சையிட வேண்டும் என்ற நல்ல எண்ணம் உடையவர்கள்; தூய மனம் உடையவர்கள். பிச்சைப் பொருளைக் கையில் எடுத்து வந்தும் போடாமற் போனதற்கு அவர்கள் இயல்பு காரணம் அன்று. உன்னுடைய செயலே காரணம். உன்னுடைய அருமையான ஆபரணந்தான் காரணமாக இருக்கும். ஆகவே நான் சொல்கிறபடி செய்.

தூய

**மட வரலார் வந்து பலிஇடார், அஞ்சி,**
**விட அரவம் மேல்ஆட மிக்கு.**

'அவர்கள் பிச்சையிட வேண்டும்' என்ற எண்ணத்தோடு இருந்தும் அந்தப் பாம்பைக் கண்டு

அஞ்சிப் பிச்சையிடாமல் போய்விடுவார்கள். அந்த அச்சத்துக்கு உரிய காரணம் எதுவோ அதை மாற்ற வேண்டும். நாகப்பாம்பைக் கழற்றி விட்டுச் செல்ல வேண்டும். என்கிறூர் அம்மையார்.

**நீ உலகம் எல்லாம் இரப்பினும், நின்னுடைய**
**தீய அரவுஒழியச் செய்கண்டாய்;—தூய**
**மடவரலார் வந்து பலிஇடார், அஞ்சி,**
**விடஅரவம் மேல்ஆட மிக்கு.**

[இறைவனே, நீ உலகம் எல்லாம் தெரிந்து பிச்சை யெடுத்தாலும் குற்றம் இல்லை; நீ ஆபரணமாகப் பூண்டிருக்கும் நின்னுடைய தீங்கைப் பயக்கும் கெட்ட பாம்பு ஒழிந்து நிற்கப் போவாயாக; ஏனென்றால், உனக்குப் பிச்சையிடும் தூய மனம் உள்ள பெண்கள் விடம் பொருந்திய பாம்பு உன்மேலே மிகவும் ஆட, அதைக் கண்டு அஞ்சி உன் அருகில் வந்து பிச்சை போட மாட்டார்கள்.

இரப்பினும் என்பதில் உள்ள உம்மை இழிவு சிறப்பும்மை; இரப்பது கூடாது என்ற குறிப்பை உடையது. தீய அரவு—மரணத்தை உண்டாக்கும் பாம்பு. ஒழிய—விட்டு நிற்க; அது இல்லாமல் என்றபடி. தூய—உள்ளம் தூய. மடவரலார்—மடப்பத்தையுடைய பெண் கள். பலி—பிச்சை. விட அரவம் மிக்கு மேல் ஆட மடவர லார் அஞ்சி, வந்து பலியிடார் என்று கூட்டிப் பொருள் செய்க.]

இறைவனிடம் நெருங்கி உரிமையோடு பாடுகிறூர் அம்மையார்.

இது அற்புதத் திருவந்தாதியில் 57-ஆவது பாட்டு.

# 59. சடையும் குழலும்

சிவபெருமான் தனக்குள் அம்பிகையை அடக்கித் தான் ஒருவனுகவே காட்சி கொடுக்கும் கோலமும் உண்டு; அன்னையை இடப் பாதியில் அமைத்து இரண்டுருவம் ஒன்ருக இணைந்து அர்த்த நாரீசத் திருக்கோலத்தில் விளங்குவதும் உண்டு; தனியே அம்பிகையை அமரவைத்து இடபத்தின் மேல் ஊர்ந்து வரும் இடபாரூடர் என்ற திருக்கோலமும் அவனிடம் உண்டு; இவற்றிற்குமேல் இடையிலே கந்தவேளை இருத்திக்கொண்டு இருபுறமும் அம்மையப்பனுக எழுந்தருளும் கோலம் ஒன்று உண்டு; அந்தத் திருக்கோலத்தில் இறைவனைச் சோமாஸ்கந்தர் என்று சொல்வார்கள். ஒன்றை அடக்கிய இருப்பதாகிய ஒன்று, தனிவேறு இரண்டு, மூன்று என்று வடிவங்களைக் காட்டும் மூர்த்திபேதங்கள் இவை.

> **"பெண்உரு ஒருதிறன் ஆகின்று: அவ்வுருத்**
> **தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"**

என்று புறநானூற்றில் வருகிறது. அர்த்தநாரீசத்திருவுருவத்தையும் இறைவியை உள்ளடக்கிய தனிக் கோலத்தையும் அந்த அடிகள் குறிக்கின்றன.

இவற்றில் அர்த்தநாரீசக் கோலத்தை மாதிருக்கும் பாதியன் என்று மணிவாசகர் பாடுவார். திருச்செங்கோட்டில் அந்த மூர்த்தி எழுந்தருளியிருக்கிருர்.

> **"நீல மேனி வாலிழை பாகத்து ஒருவன்"**

என்று சங்க நூலாகிய **ஐங்குறுநூறு** இத் திருவுருவத்தைச் சுட்டிச் சொல்கிறது.

சிவபெருமானிடம் அவனருளே சக்தி வடிவமாக இருக்கிறது.

**"அருளது சக்தி யாகும் அரன் றனக்கு"**

என்று சாஸ்திரம் கூறுகிறது. சிவபெருமான் திருவுருவத்தில் நூற்றுக்கு நூறு பங்கு அருள் நிரம்பியிருக்கிறது. சக்தனுகிய அவன் வடிவத்துக்குச் சமானமான அளவில் சக்தி இடம்பெற்றிருக்கிருள் என்பது இந்தக் கருத்தையே காட்டுகிறது.

திருஞானசம்பந்தர் சமணர்களுடன் வாதிடச்செல்லும்போது சிவபெருமானுடைய கருணையைவேண்டுகிருர். அவரை மாதிருக்கும் பாதியனுக எண்ணி வணங்குகிருர்.

**"வேத வேள்வியை நிந்தனை செய்துழல்**
**ஆதம் இல்லி அமணொடு தேரரை**
**வாது செய்தழிக் கத்திரு வுள்ளமே,**
**பாதி மாதுடன் ஆய பரமனே"**

இவ்வளவு சிறப்புடைய பாதிமாதுடனுகிய பரமனை இப்போது நினைத்துப் பார்க்கிருர், காரைக்கால் அம்மையார்.

சிவபெருமான் அந்திவானத்தில் தோன்றும் செந்நிறம் போன்ற திருமேனியை உடையவன். "சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனியம்மான்" என்று திருநாவுக்கரசர் பாடுவார். அம்மையார்.

**செக்கர்போல் ஆகத்தான்.**

என்கிருர். செக்கர்-அந்திச் செவ்வானம், அவனுடைய சடாபாரமும் சிவப்புத்தான். நெருப்புக் கொழுந்து போல அது தோன்றும். மிகுதியாக நெருப்பு எரியும்போது சடசட என்ற ஒலி எழும்பும். அப்போது அதன் ஜ்வாலை மேலே துள்ளி எழும்; தீச்கொழுந்து என அதைச் சொல்வார்கள். சிவபெருமானுடைய திருமேனியைக் கண்டு அவன் சடைமுடியைப் பார்த்தால் எரி மிக்கு

முழங்கி எரியும் போது தோன்றும் சுடர்க் கொழுந்து போல இருக்கும்.

இறைவன் திருச்சடை நெருப்புக் கொழுந்து போலத் தோன்றுவதைக் கண்ட அம்மையார் இடப்பாகத்தைப் பார்க்கிறார். அர்த்தநாரீசக் கோலத்தில் அல்லவா இப்போது அவர் அகசுகண் பதிந்திருக்கிறது. அதில் வலப்பாகத்து முடியைப் பார்க்கையில் அங்கே எரியும் கொழுந்து போலச் சடை தெரிகிறது, உடனே வாமபாகத்தைப் பார்க்கிறார் அங்கே ஒரு பாதியாக அம்பிகை இணைந்திருக்கிறாள்.

அந்த இடப்பக்கத்துத் திருமுடியைப் பார்க்கிறார். அம்பிகையின் கூந்தல் கன்னங்கரியது. இருளெல்லாம் செறிந்து த்தும்பி நின்றது போல அந்தக் கூந்தல தோற்றம் அளிக்கிறது. இறைவியின் கூந்தலுக்கு மேகத்தை உவமை சொல்லலாம்; பாசியை உவமிக்கலாம்? மயில்தோகையை உவமையாக்கலாம்; மையைச் சொல்ல லாம். ஆனால் அம்மையாருக்கு அந்த உவமைகள் நினைவில் வரவில்லை; செக்கச் செவேல் என்ற சடையும் கன்னங் கரேல் என்ற குழலும் ஒன்றுக்கு ஒன்று நேர்மாறான வண்ணம் உடையவை. நெருப்புக் கொழுந்தைச் சொன் னவர் அதனோடு தொடர்ந்து நினைவுக்கு வரும் இருட்டை உவமை யாக்குகிறார்; நள்ளிருளில் ஈமத்தில் அழல் கொழுந்து விட்டு எரியும் போது கூத்தாடும் ஐயனை வணங்குகிற அவருக்கு எரியும் இருளும் அடுத்தடுத்தே நினைவுக்கு வருகின்றன. அவரே நள்ளிருளில் இறைவனோடு கூத்தாடும் பேய்க்கணத்தில் ஒருவராக ஆனவர் அல்லவா?

அம்பிகையில் குழலினிடையே பூவை அணிந்திருக் கிறாள். அது பூங்குழல். இருட்டிலே நட்சத்திரம் ஒளிர் வதைப் போல அது ஒளிர்கிறது.

இறைவனுடைய திருச்சடையும் அவன் பாகத்தில் இணைந்திருக்கும் அம்மையின் பூங்குழலும் ஒரு சேரப் பார்த்தால் எப்படி இருக்கின்றன? 'தீக்கொழுந்தும்

அடர்ந்த இருளும் போல இருக்கின்றன அல்லவா?' என்று கேட்கிறார், காரைக்கால் அம்மையார்.

**மிக்க முழங்கெரியும் வீங்கிய பொங்கிருளும்**
**ஒக்க உடன் இருந்தால் ஒவ்வாதே? -- செக்கர்போல்**
**ஆகத்தான் செஞ்சடையும் ஆங்கு அவன்றன் பொன் உருவில்**

பாகத்தான் பூங்குழலும் பண்பு.

அந்திச் செவ்வானத்தைப் போலுள்ள திரு மேனியை உடைய சிவபெருமானுடைய செந்நிறமான சடையும், அங்கே அவனுடைய பொலிவு பெற்ற திருவுருத்தில் இடப் பாகத்திலுள்ள அம்பிகையின் பூவை அணிந்த கருங் குழலும் தோற்றுவிக்கும் இயல்பு, மிகவும் அதிகமாகப் பொங்கி முழங்கும் நெருப்புக் கொழுந்தும், மிகுதியாக அடர்ந்துள்ள இருளும் ஒருங்கே உடன் இருந்தால் எப்படியோ அப்படி ஒத்திராதோ?

மிக்க எரி, முழங்கு எரி என்று தனித்தனியே கூட்டுக. வீங்கிய-மிகுதியான. பொங்கு- செறிந்து ததும்பும். ஒவ்வாதே- ஒவ்வாதோ; வினா. செக்கர்- அந்திச் செவ் வானம். ஆகம்-திருமேனி. பொன் உரு- பொலிவு பெற்ற வடிவம்; செம்பொன்னைப் போன் வடிவம் என்றும் சொல்லலாம்.

பண்பு ஒவ்வாதோ என்று முடிக்க வேண்டும்.]

அற்புதத் திருவந்தாதியில் 58-ஆம் பாடல் இது.

# 60. நீறு அணியும் உருவம்

காரைக்காலம்மையாருக்கு இப்போது ஒரு சந்தேகம் வந்துவிட்டது. இறைவனிடம் அன்பு கொண்டு, தாயாகவும், பக்தராகவும் நெருங்கிப் பேசும் உரிமையைப் பெற்றவர் அவர். அப்படி நெருங்கிப் பார்க்கும்போது இறைவனுடைய திருமேனியைக் கூர்ந்து கவனிக்கிறார். அவன் அணிந்திருக்கும் பொருள்களையெல்லாம் உற்றுப் பார்க்கிறார். அவருடைய கற்பனை ஊறுகிறது. என்ன என்னவோ உவமைகள் தோன்றுகின்றன. முரண்பாடுகள் பல காட்சியளிக்கின்றன. இறைவனைப் பற்றித் திருப்பித் திருப்பி எவற்றைச் சொல்வது? அவனுடைய கருணை யையும் பெருமையையும் சொல்லிக் கொண்டே யிருக் கலாம். என்றாலும் இடையே சிறிது மாறுதல் வேண்டாமா? அப்போது தானே சலிப்புத் தட்டாமல் இருக்கும்?

ஆண்டவனை அவ்வப்போது கேள்வியைக் கேட்கிறார். ''இப்படியெல்லாம் செய்யப்படாது'' என்று அறிவுறுத்து கிறார். ''இவ்வாறு செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொள்கிறார். அவருக்குத் தோன்றும் ஐயங்களும், எழும்பும் வினாக்களும், ஏதோ கருத்துக்களைத் தெரிந்து கொள்வதற்காக அமைந்தவை அல்ல. இறைவனைப் பற்றியே பேசிப் பொழுது போக்க இவை உதவுகின்றன; வீண் பொழுது போக்காமல் இறைவனை எண்ணுவதற்கு உரிய வாய்ப்பை அளிக்கின்றன; சுவையாகவும் இருக் கின்றன.

உணவிலே ஒரே கறியைப் பல வகையாகச் சமைத்து உண்பதில் தானேசுவை அதிகமாக உண்டாகிறது?

அப்படி ஆண்டவன் தோற்றத்தையும் இயல்புகளையும் தொடர்பு படுத்திப் பல பல வகையில் பாடுகிறார், காரைக்காலம்மையார்.

இறைவனுடைய நெற்றியைப் பார்க்கிறார், அவனுடைய தனிச் சிறப்பைக் காட்டும் அடையாளத்தை அங்கே பார்க்கிறார். வேறு யாருக்கும், அதாவது அந்தக் குடும்பத்தினர் அல்லாத வேறு யாருக்கும், அந்த அடையாளம் இல்லை. அதுதான் ஞானக் கண்ணாகிய நெற்றிக்கண், 'இமையாத முக்கண் மூவரிற் பெற்றவன்' அவன். அக்கினியே நெற்றிக் கண்ணாக இருக்கிறது. அக்கினிக்கு ஒளி விடும் தன்மையும் எரிக்கும் இயல்பும் உள்ளன. இறைவனுடைய நெற்றிக் கண்ணுக்கு ஞான ஒளி வீசும் இறப்பும், அஞ்ஞானத்தையும் ஆசையையும் அழிக்கும் திறமையும் உண்டு. ஞான ஒளி வீசும் தன்மை இருப்பதால், ஞானமே வடிவமாகிய குமாரன் அந்தக் கண்ணிலிருந்து தோன்றினான். தீயவற்றை அழிக்கும் ஆற்றலால் மாரனை அது எரித்தது. குமார ஜனனமும் மாரவதமும் அந்தக் கண்ணின் இரண்டு வகை ஆற்றலினாலும் விளைந்த விளைவுகள்,

இறைவனிடம் உள்ள மற்றொரு சிறப்பான அடையாளம் அவனுடைய நீலகண்டம். அதை நினைப்பதில் அம்மையாருக்கு ஆர்வம் மிகுதி. அந்தக் கண்டம், இறைவன் எதனாலும் அழியாத நித்தியன் என்பதையும் விளக்கிக் கொண்டிருக்கிறது. ''விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும், உண்ணாத நஞ்சுஉண்டு இருந்து அருள் செய்குவாய்'' என்று இளங்கோவடிகள் பாடுகிறார். 'நம்மை அழித்து விடுமே' என்று அஞ்சித் தேவர் யாரும் அதன் பக்கத்திலே போவதில்லை, இறைவன் அதை அநாயாசமாக உண்டு, அதனால் அழிவோ மயக்கமோ இல்லாமல், நிச்சலனாக இருக்கிறான். இது அவனுடைய நித்தியத்துவத்தைக் காட்டுகிறது. அந்த நஞ்சை உண்டதனால் அப்போதைக்குத் தேர்வகள்

இறந்து படாமல் இருந்தனர்; தாம் விரும்பிய அமுதத்தை நுகரும் பேறு அவர்களுக்கு ஏற்பட்டது. இது சிவபெருமானுடைய கருணையைக் காட்டுகிறது.

இவ்வாறு அமைந்த இரண்டு அடையாளங்களையும் எண்ணி, ஆண்டவனை விளிக்கிறார், அம்மையார்.

''கண் புணரும் நெற்றிக் கறைக் கண்டா; உன்னைப் பற்றி முழுவதும் தெரிந்து கொள்ளுவன் நான்.''

'யாரால்தான் தெரிந்து கொள்ள முடியும்? மற்றவர்கள் உன் இயல்புகளைப் பற்றிய ஐயப்பாடு எழுந்தால் அதைப் போக்கும் வழி தெரியாமல் திண்டாடுகிறார்கள். வேறு யாரிடமாவது கேட்டுத்தெளிய லாம் என்றால், அவர்களும் தம் ஐயங்களுக்கு விடை கிடைக்காமல் தடுமாறுகிறவர்கள். இரண்டு நாள் பட்டினிக்காரன் மூன்று நாள் பட்டினிக்காரனிடம் போய்ப் பசியைத் திர்த்துக் கொள்ள முடியுமா?'

அம்மையாருக்கு அந்தச் சங்கடம் இல்லை. யாரைப் பற்றி அவருக்கு ஐயம் எழுகிறதோ, அவனை அணுகும் பக்குவமும், கேட்கும் உரிமையும் உடையவர். சாட்சிக் காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலில் விழுவது மேல் அல்லவா?

ஆகவே இறைவனிடமே கேட்கப் புகுகிறார்.

'நான் எத்தனை ஆராய்ந்து பார்த்தாலும் என் அறிவுக்கு இந்த விஷயம் புலப்படவில்லை. உன் பண்பு முற்றும் உணரும் ஆற்றல் இல்லாதவள் நான். ஆகை யால் உன்னையே கேட்கிறேன், எனக்கு வேண்டிய தெளிவை நீயே பணித்தருள வேண்டும்' என்று தொடங்கு கிறார்.

**பண்பு உணர மாட்டாதேன் நீயே**
**பணித்துக்காண்.**

இறைவன் தருமமாகிய இடபத்தின்மேல் ஊர்ந்து வருகிறவன்; தன் அடியார்கள் உள்ள இடங்களுக்கு தானே வலியச் சென்று அருள் பாலிப்பவன். விடையில் எழுந்தருள்வதன் நோக்கமே அதுதான். அவன் ஆன் ஏற்றை, காளையை, உணரும் எண்ணம் இடையிலே வருகிறது. தருமத்தை அவன் தாங்குகிருன்; பாதுகாக்கிருன் அவனைத் தருமமே இடபமாக வந்து தாங்குகிறது.

ஆன் ஏற்ருய்!

என்று மீண்டும் விளித்துச் சொல்கிருர்.

இறைவன் இறைவியைத் தன் இடப்பாதியில் கொண்டிருக்கும் கோலம் ஒன்று உண்டு மாதிருக்கும் பாதியன் அவன்; அர்த்தநாரீசன். அப்படியே இரண்டு பாதி இணைந்த வேறு ஒரு கோலமும் உண்டு. அதே இடப்பாகத்தில் திருமாலை வைத்திருக்கும் மூர்த்தம் ஒன்று உண்டு. சங்கரநாராயண மூர்த்தி, கேசவார்த்த மூர்த்தி என்றும் அந்த மூர்த்தியை வழங்குவார்கள். அர்த்த நாரீசுவரத் திருக்கோலத்தைத் திருச்செங் கோட்டில் காணலாம். கேசவார்த்த மூர்த்தியைச் சங்கரநயினுர் கோயிலில் தரிசிக்கலாம்.

இறைவன் தனியே இருக்கும் போது அவனுடைய திருமேனி முழுவதும் சண்ணித்த வெண்ணீறு ஒளிரும். நெற்றியில் நீறு, மார்பில் நீறு, உடம்பெங்கும் திருநீறு தான். அவனுடைய அடியார்களில் முழு நீறு பூசிய முனிவரென்று ஒரு கூட்டத்தினர் உண்டு.

தனியாகக் கோலங்கொண்டு திருநீறே நிறையப் பூசும் இறைவன் அம்பிகையோடு இணைந்து மாதிருக்கும் பாதியனுக இருக்கும் போது அந்தக் கோலம் முழுதும் திரு

நீறு இருக்குமா? மாலிருக்கும் பாதியனாக இருந்தால் அப் பொழுதும் உடம்பு முழுதும் திரு நீறு விளங்குமா?— இப்படி ஓர் ஐயப்பாடு அம்மையாருக்குத் தோன்றுகிறது.

'உன்னுடைய திருவுருவங்களுக்குள் பெண் புணரும் அந்த உருவம் நீறு அணியுமா? மாலோடு இணைந்திருக்கும் போது மாலிருக்கும் பகுதியும் நீறு அணியுமா?' என்ற ஐயம் எழுகிறது. 'எனக்கு உன் இயல்பை, பண்பை உணர முடியாது; நீதான் எனக்கு விளக்க வேண்டும்; பணித்தருள வேண்டும்' என்கிறார். உமாதேவியும் திரு மாலும் திருமேணி முழுதும் நீறு அணிவதில்லை. அது தெரிந்தும் அறியாதவரைப் போலக் கேட்கிறார். அம்பிகை நுதலில், நீறணிவாள் திருமாலும் நெற்றியில் நேரே நீற்றை அணிவதுண்டு: ''கரிய மேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும்'' என்று திவ்யப்பிரபந்தத்தில் வருகிறது. இப்படிச் சிறிதளவு திருநீற்றை அணிந்தாலும், மேனி முழுவதும் அணிவதில்லை என்றாலும், ஐயம் கொண்ட வரைப் போல, ''அம்பிகையின் பகுதியிலா, திருமாலின் பகுதியிலா எங்கே நீறு இருக்கும்? நீறு அணிவது எவ்வுருவோ?'' என்று கேட்கிறார் அம்மையார்.

பண்புணர மாட்டாதேன்; நீயே பணித்துக்காண்;
கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா,—பெண்புணரும்
அவ்வுருவோ, மாலுருவோ, ஆன்ஏற்றாய் நீறுஅணிவது
எவ்வுருவோ நின்உருவ மேல்.

[கண் சேர்ந்த நெற்றியையும் நஞ்சுக் கறுப்பை யுடைய கண்டத்தையும் கொண்ட எம்பெருமானே, இடபவாகனத்தை உடையானே, உன்னுடைய இயல்பு முழுவதையும் உணரும் ஆற்றல் இல்லாதவன் யான்; ஆதலால், நீயே என் ஐயம் நீங்கப் பணித்தருள வேண்டும். நின்னுடைய பலவகைத் திருக் கோலங்களுக்குள் உமா தேவியாகிய பெண்ணின் நல்லாள் சேர்ந்த அந்தத் திரு

வுருவமோ, திருமாலோடு இணைந்த போது அந்தத் திரு மாலின் பகுதியோ எவ்வுருவம் திருநீற்றை அணிவது?

மாட்டாதேன்—யான் ஆற்றல் பெறுதவன் பணித்துக் காண்: காண் என்பது அசை; அதற்குப் பொருள் இல்லை; பணிப்பாயாக என்பதே பொருள். நின் உருவமேல்—நீ கொண்டருளும் பல வகை உருவங்களுக்குள்; மேலென்பது இல் என்னும் ஏழாம் வேற்றுமை உருபாக நின்றது; கீழ் என்பதற்கு மாறுன மேலிடம் என்று கொள்ளக்கூடாது. அவ்வுருவோ, மாலுருவோ என்பவற்றிலுள்ள ஓகாரம் வினா. எவ்வுருமோ என்பதில் எகரமே வினாப் பொருளைத் தருவதால், ஓகாரம் அசை.

'கண்புணரும் நெற்றிக் கறைக்கண்டா, ஆன் ஏற்றாய் நின் உருவமேல், பெண் புணரும் அவ்வுருவோ, மால் உருவோ? பண்பு உணர மாட்டாதேன்; நீயே பணித்துக் காண்' என்று அந்வயம் செய்து பொருள் கொள்ள வேண்டும்.]

இது அற்புதத் திருவந்தாதியில் 59-ஆவது பாடல்,

# 61. பொன்மலை

சிவபெருமான் வீரர்களுக்குள் பெருவீரன்; அடியவர் களுடைய ஆணவத்தைப் போக்கக் கங்கணம் கட்டிக் கொண்டவன். அஞ்ஞான இருளை நீக்கும் ஞானசூரியன், காலபயத்தை நீக்கி மரணமில்லாப் பெருவாழ்வை அருளும் காலகாலன். அவனுடைய பராக்கிரமச் செயல் களைப் புராணங்கள் பலபடியாக விரித்துக் கூறுகின்றன.

பராக்கிரமச் செயல்கள் என்றும், கருணைச் செயல்கள் என்றும் அவனுடைய திருவிளையாடல்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். தீய சக்திகளை ஒடுக்கும் செயல்கள் வீர விளையாடல்கள்; அவை அவனுடைய வீரத்தைக் காட்டுபவை. அடியார்களுக்கு அருள்புரியும் திருவிளையாடல்கள் பல. அவை அவனுடைய கருணையைக் காட்டுபவை. வீரமும் ஈரமும் ஒருங்கே அமைந்த அப்பெருமானிடம் அம்பிகை இணைந்திருக்கிறாள். வீரம் அவன் திருவுருவம் ஆனால், ஈரம் அவள் திருவுருவம்.

வீரம் தோன்ற அவன் செய்த வீர விளையாடல் பல ஆனாலும் அவற்றுள் எட்டைச் சிறப்பாக எடுத்துச் சொல்வார்கள். அந்த எட்டுச் செயல்களையும் நினைப் பூட்டும் தலங்கள் எட்டு, தமிழ்நாட்டில் உள்ளன. அவை அவனது வீரத்தைக் காட்டும் தலங்கள்; வீரஸ்தானங்கள். மூலஸ்தானம் என்பது மூலட்டானம் என்று வரும். அவ்வாறே வீரஸ்தானம் என்பது வீரட்டானம் என்று தமிழில் வழங்கும். எட்டு வீரட்டானங்கள் உண்டு. அவற்றை அட்ட வீரட்டம் என்றும் சொல்வது வழக்கம்.

கஜாசுரனைச் சங்காரம் செய்தது ஒரு வீரச்செயல். யானைவடிவில் வந்த அசுரனால் உலகத்துக்குப் பெருந்தீமை விளைந்தது. அதைப் போக்க அவனை அழித்து அவன் தோலைப் போர்த்துக்கொண்டான். இறைவன். அகங்காரத்தை யானையாக உருவகம் செய்வர். அகங்காரத்தைப் போக்குபவன் என்ற கருத்தை அந்த வீரச்செயல் புலப்படுத்துகிறது. யானைத்தோலைப் போர்த்தவன் என்று அன்பர்கள் அடிக்கடி பாடுவார்கள். அதனால் கிருத்திவாஸன், என்ற திருநாமம் சிவபெருமானுக்கு அமைந்தது. இந்தப் பராக்கிரமச் செயலை நினைப்பூட்டுவது மாயூரத்தின் அருகில் உள்ள வழுவூர் என்ற தலம். வழுவை என்பது யானைக்கு ஒரு பெயர். அதை உரித்துப் போர்த்ததை நினைவு கூரச் செய்யும் அந்தத் தலத்தின் பெயர் வழுவையூர்; அதுவே மாறி வழுவூர் ஆயிற்று.

யானை உரி போர்த்து விளங்கும் சிவபெருமான் திருக்கோலத்தை இப்போது நினைத்துப் பார்க்கிறார் காரைக்காலம்மையார். அந்தக் கோலத்துக்கு உவமை சொல்லப் புகுகிறார்.

அவனுடைய திருவுருவம் செம்பொன்னைப் போல ஒளிர்கிறது. அவனுடைய பெரிய வடிவம் செம்பொன்னாலான மலையைப் போலத்தோன்றுகிறது.

**"பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்**
**மேனி பொலிந்திலங்கும்"**

என்று சேரமான் நாயனாரும்,

**"பொன்னார் மேனியனே"**

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பாடுவார்கள்.

அந்தப் பொன்மலை செவ்வண்ணக் கதிர்களை வீசிக்கொண்டு நிற்கிறது. தேவர்கள் எல்லோரும் ஒளிபடைத்த

மேனியை உடையவர்கள் இறைவனே தேவர்களுக்கெல் லாம் பெரிய தேவனாகிய மகாதேவன். அவனுடைய திரு மேனி கோடி சூரியப் பிரகாசம் உடையது. சோதி வடிவினன் அல்லவா?

பொன்மேனியின் ஒளி கண்ணைக் கூசச் செய்கிறது சூரியனைப் பார்க்கும்போது கண் கூசும். அதற்காகப் புகைபடிந்த கண்ணாடியை வைத்துக் கொண்டு அவனைப் பார்ப்பார்கள். சூரியகிரகணம் உண்டாகும் இப்போது வாறு பார்ப்பது வழக்கம்.

சுடர் வீசும் இறைவனுடைய பொன்மேனியைக் காண வேண்டுமானால் அடியார்கள் புகைபிடித்த கண்ணாடி யைக் கொண்டு பர்ர்க்கவேண்டும். அவ்வாறு ஒரு கண்ணாடி யைத் 'தேடி அலையாமல் இறைவனே ஒரு காரியத்தைச் செய்கிறானும். மேலே கரிய போர்வை ஒன்றைப் போர்த்துக்கொண்டு நிற்கிறான். அந்தப் போர்வை அவன் திருமேனி ஒளியை மட்டுப்படுத்துகிறது.

உலகத்தோருக்குத் தீங்கு புரிந்த கஜாசுரன் அஞ்ஞானம் உடையவன்; மதிமயக்கம் உடையவன்; மதம்பிடித்த யானையாக வந்தான்; தன் துதிக்கையை வீசிக்கொண்டு கண்டவர் யாவரும் அஞ்சும்படி வந்தான். யானைக்குத் துதிக்கையில் பலம். அதனால் அதைக் கையயுடைய விலங்கு என்று அடையாளம் காட்டுவார்கள்; 'கைம்மா' என்பார்கள். கஜாசுரன் மதம் பிடித்த ஆண்யானை.

அதைக் கொன்று அதன் கரிய தோலை இறைவன் போர்த்துக்கொண்டான். அகங்காரத்தை அழிப்பவன் தான் என்பதை யாவரும் உணர்ந்து, அதைப் போக்கிக் கொள்ள விரும்பும் அடியார்கள் தன்னை வணங்கி அருள் பெறட்டும் என்ற திருவுள்ளத்தோடு அவன் அந்தக் கோலத்தில் நிற்கிறான்.

அவ்வாறு யானையின் தோலைப் போர்த்துக்கொண்டு மிகப் பழங்காலத்தில் நின்றான்.

**மாலையாய**

**கைம்மா மதகளிற்றுக்**
**கார்உரிவை போர்த்தபோது**
**அம்மான் திருமேனி அன்று.**

அந்தக் கோலம் எப்படி இருக்கிறது? அதற்கு உவமை சொல்ல வருகிறார்.

ஒரு பொன்மலை. அது கண்ணைக் கூசும் ஒளியைப் பரப்பிக்கொண்டு நிற்கிறது. அதன் உயரத்தையும் பரப்பையும் ஒரே கண் கொண்டு பார்க்க முடிவதில்லை. அதன் மேலே படர்ந்து மிதந்து வந்த கரிய மேகங்கள் அந்த மலை முழுவதையும் மறைத்துக் கொண்டு நிற்கின்றன. இப்போது பார்த்தால் மேகங்கள் முதலில் தெரிகின்றன. சற்றுக் கூர்ந்து பார்த்தால் அந்த மேகங்களினூடே பொன்மலை தெரிகிறது. இப்போது கண் கூசுவதில்லை. அதை நன்றாகப் பார்க்கலாம்.

அத்தகைய நிலையில் உள்ள பொன்மலையைப் போல இறைவன் தோன்றுகிறான்.

**மேலாய மேகங்கள்**
**கூடிஓர் பொன்விலங்கல்**
**போலாம் ஒளிபுதைத்தால்**
**ஒவ்வாதே?**

'இறைவன் திருக்கோலக் காட்சிக்கு இது உவமையாகாதா! என்று கேட்கிறார் அம்மையார்.

இதற்குள் ஒரு கருத்துப் புதைந்து நிற்கிறது. நான் என்னும் அகந்தை ஒழிந்தால்தான் இறைவனுடைய

காட்சி நமக்குக் கிடைக்கும். அந்த அகந்தையை நாமே நீக்கிக் கொள்ளலாம். என்று முயன்றால், நம்மால் முடியாத காரியம். அவன் திருவுள்ளம் கொண்டு அதை அழித்து அருள் புரிய வேண்டும், அப்போது அவனைக் காண முடியும். முதலில் அவனைக் காண முடியாமல் தடுக்கும் தடையை அவனே நீக்கிப் பிறகு தன்னைக் காட்டிக் கொள்கிறான். இந்தக் கருத்தை இந்தக் காட்சி காட்டுகிறது. தன் முழு ஒளியையும் காணக் கூசுபவர்கள், எளிதில் கண்டு நலம் பெறட்டும் என்று போர்வையைப் போர்த்துக் கொண்டு நிற்கிறான். அடியார்களுக்குத் தன்னைக் காட்டி நலம் செய்ய வேண்டும் என்ற பெருங்கருணையால் இப்படிச் செய்கிறான்.

**மேலாய மேகங்கள்**
**கூடிஓர் பொன்விலங்கல்**
**போலாம் ஒளிபுதைத்தால்**
**ஒவ்வாதே?—மால்ஆய**
**கைம்மா மதகளிற்றுக்**
**கார்உரிவை போர்த்தபோது**
**அம்மான் திருமேனி அன்று.**

[மயக்கமே தன் உருவாக வந்த துதிக்கையை யுடைய விலங்காக, மதம்மிகுத்த யானையாக வந்த கஜாசுரனைச் சங்காரம் செய்து, அந்த யானையின் கரிய தோலை அந்தப் பழங்காலத்தில் இறைவன் போர்த்துக் கொண்ட போது, அவன் திருமேனி, மேலே படர்ந்த கரிய மேகங்கள் ஒன்றாகக் கூடி ஒரு பொன்மலையில் வீசிய மிக்க ஒளியை மறைத்தால் அமையும் காட்சியை ஒத்திருக்காதோ?

மேல் ஆய-மேலே படர்ந்த. பொன்விலங்கல்-பொன்மலை. பயணம் வசய்பபவர்களுக்குக் குறுக்கே தடுத்து நிற்பது போல இருப்பதலால் மலைக்கு விலங்கல் என்ற பெயர்வோடு வந்தது; விலங்கள்-தடுத்தல். அந்தத்

தொழிற்பெயர் ஆகுபெயராய் நின்று மலைக்கு ஆயிற்று. போல்; அசை; அதற்குப் பொருள் இல்லை. பொன் விலங்கல் ஆம் ஒளி என்று கூட்ட வேண்டும். புதைத்தல்- மூடி மறைத்தல். மால்-மயக்கம். கைம்மா-யானை. கார்—கருமை உரிவை—தோல். அம்மான்—இறைவன். அன்று—அந்தப் பழைய காலத்தில்; பண்டறி சுட்டு.

திருமேனி புதைத்த காட்சியை ஒவ்வாதோ என்றபடி.]

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 60-ஆவது திருப்பாடல்.

# 62. எந்த உருவம்?

இறைவன் அருவமாய் இருப்பவன்; இயல்பாகவே குறியும் குணமும் இல்லாதவன்; மனத்துக்கும் வாக்குக்கும் பொறிகளுக்கும் எட்டாதவன்; அணுக்குள் அணுவாக இருப்பவன்; நுட்பத்திலும் நுட்பமாக இருப்பவன். ஆனாலும் மணம் உடைய மக்களுக்கு அருள்புரிவதற்காக வடிவங்களை எடுத்து வருகிறான்.

(காற்று வடிவில் இருக்கும் நிலையில் தண்ணீர் கண்ணுக்குத் தெரியாது, பிராணவாயு ஒரு பங்கும் ஜலவாயு இரண்டு பங்கும் சேர்ந்தால் நீர் ஆகும். அந்த வாயுக்கள் கண்ணுக்குத் தெரிவதில்லை. அவை இரண்டும் கலந்தால் மேகமாகி பிறகு தண்ணீர் ஆகின்றன. நீர் மழையாகப் பெய்கிறது; அருவியாக விழுகிறது; பிறகு நிலத்தில் ஆறாக ஓடுகிறது. அதைக் காணலாம்; அதில் ஆடலாம்; குடிக்கலாம்.)

தண்ணீருக்கு உருவம் (form) உண்டு; ஆனால் வடிவம் இல்லை. கண்ணிலே காண்பதனால் உருவம் உண்டு. உருண்டை, தட்டை என்பது போன்ற பரிமாணம் இல்லாமையால் வடிவம் (shape) இல்லை. ஆனால் தண்ணீரைக் குடத்தில் எடுத்து வைத்தால் குடத்தின் வடிவத்தைப் பெறுகிறது; செம்பில் எடுத்து வைத்தால் செம்பின் வடிவத்தை உடையதாகிறது. பாத்திரத்திற்கு ஏற்ற வடிவத்தைப் பெறுகிறது.

இறைவனும் சர்வசூட்சுமமாக இருக்கிறான். கருணையினால் கண்ணால் காணும் ஜோதியாக வருகிறான். பிறகு திருமேனியும் உறுப்புககளும் படைத்த மூர்த்திகளாக எழுந்தருளுகிறான்; அன்பர்களின் உள்ளத்தில் அத்தகைய வடிவங்களுடன் காட்சி அளிக்கிறான். அவர்கள் அருட் கண்ணால் அந்த வடிவங்களைப் பார்க்கிறார்கள்.

**"அவன்அருளே கண்ணாகக் காணின் அல்லால்**
**இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்**
**இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொ ணாதே"**

என்றும்,

**"அருட்கண்ணால் நோக்காதார் அல்லா தாரே"**

என்றும் அப்பர் சுவாமிகள் பாடுவார்.

அவ்வாறு இறைவனுடைய திவ்ய தரிசனத்தை அருட் கண்ணால் தரிசித்த பெரியவர்கள் புறக்கண்ணிலும் காணுகிறார்கள்.

**"திருக்கண்டேன்; பொன்மேனி கண்டேன்; திகழும்**
**அருக்கன் அணிநிறமும் கண்டேன்"**

என்று பெருமிதம் கொள்கிறார்கள்.

எல்லாரும் அப்படிப் பார்க்க முடியுமா? அதற்குரிய பக்குவம் யாருக்கும் இருப்பதில்லையே! இதை உணர்ந்த அருளாளர்கள் தாம் கண்டதைச் சொல்கிறார்கள். சொல்லால் வடித்த அந்த வடிவத்தைக் கல்லாலும் செம்பாலும் வடித்துத் தரிசிக்கும்படி செய்கிறார்கள், நேரே பார்க்க முடியாமல் நெடுந்தூரத்தில் உள்ள ஒருவருடைய வடிவத்தைப் படத்திலும் போட்டோவிலும் கண்டுகளிப்பவர்களைப் போல எல்லா மக்களும் இறைவனைப் பல்வேறு வடிவங்களில் கண்டு அன்பு செய்ய முடிகிறது.

அவ்வாறு இறைவனுடைய திருக்கோலங்களைக் கோயிலில் கண்டவர்கள், அன்பு மீதூர்ந்து உள்ளத்தில் தியானிக்கிறார்கள். அவர்களுடைய பக்குவத்திற்கு ஏற்றபடி பயன் உண்டாகிறது. உள்ளக் காட்சியில் ஒளி உண்டாகிறது, இறைவன் தன் வடிவத்தோடு நிற்கிறான். அருட்கண் உண்டாகிறது; அப்போது அருளாளர்கள் கண்ட காட்சியை அவர்களும் காணுகிறார்கள். பிறகு சோதிவடிவாம்த் தரிசிக்கிறார்கள். வடிவம் மறைந்து உருவாகி, பிறகு அதனோடு கரைந்து தம்மை மறக்கிறார்கள்.

ஏணியில் இறங்கி வந்து கீழே இருப்பவனை மேலே ஏறச் சொன்னது போன்றது இது. இறைவன் அருவிலிருந்து உருவாகவும் வடிவாகவும் இறங்கி வருகிறான்; விக்கிரகமாகக் காட்சி அளிக்கிறான். விக்கிரகத்தைக் கண்டு அன்பு செய்தவர்கள் மெல்ல மெல்லப் படிகளில் ஏறி உரிய இடத்தை அடைவதைப் போல இறைவனை அடைகிறார்கள் படிகளைச் சோபானம் என்பார்கள். கீழிருந்து மேலே ஏறும்போது பல படிகள் இருந்தாலும் நான்கு நிலைகளாகப் பிரித்துச் சொல்வது வழக்கம். அவற்றைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பர். சரியையும் கிரியையும் புறத்தில் நிகழும் செயல்கள். கோயிலை வலம் வருவது இறைவன் திருக்கோலத்தை வணங்கி வழிபடுவது முதலியவை சரியை, பிறர் பூசை பண்ணுவதைப் பார்த்து வணங்குவது இது. தாமே பூசை செய்வது கிரியை புறத்தே செய்வதை உண்முகமாகச் செய்வது யோகம் மனம் அலையாமல் ஒருமைப்பட நிற்க உள்ளே இறைவனைத் தரிசிக்கும் நிலை இது. இதற்கு மேல் எல்லையிறந்த அநுபவத்தை, அகண்டாகார விருத்தியில் தெளிவுற்று அமைவது ஞானம்.

சரியையிலும் கிரியையிலும் ஆண்டவனுடைய செயற்கை வடிவங்களைப் பார்க்கிறோம். அந்த வடிவங்கள் இறைவனே எடுத்த மூர்த்திகளின் சின்னங்கள்; போட்டோக்களைப் போன்றவை. யோகத்தில் அவனுடைய

வடிவங்களையே காணலாம். அப்போது அவன் உள்ளே வந்து கோலம் காட்டி இயங்குவான்; பேசுவான். ஞான நிலையிலோ இந்தக் கோலம் மறைந்து அகண்ட சோதியாகி காண்பான், காணபபடும் பொருள், காட்சி ஒன்று இல்லாத அநுபவம் உண்டாகும்.

திருக்கோயில்களில் உள்ள மூர்த்திகளைப் பக்தன் இறைவனாகவே பாக்கிறான்; களிக்கிறான்; கண்ணீர் விடுகிறான். பிரிந்து சென்றிருக்கும் கசதலனுடைய படத்தை வைத்துக் கொண்டு காதலி பார்த்து பார்த்து மகிழுகிறாள் அந்தப் படத்துக்கே முத்தமிடுகிறாள், உணர்ச்சி மிகுதியினால் உண்டாகும் விளைவுகள் இவை.

பக்தனுக்கு இறைவனாகத் தோற்றும் வடிவம், அல்லாதவனுக்குக் கல்லாகத் தோற்றுகிறது. பக்தன் உணர்ச்சியோடு பார்க்கிறான். மற்றவனோ அறிவோடு பார்க்கிறான். சுவாமியின் மேல் கரப்பான் பூச்சி ஊர்வதைப் பார்த்த அவன், ''இந்தக் கரப்பான் பூச்சியிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளாத சாமி நம்மைக் காப்பாற்றுமா?'' என்கிறான், பாவம்! அவன் மூளை வேலைசெய்கிறதேயன்றி இதயம் ஈடுபடுவதில்லை. இதய உணர்ச்சியுடன் ஈடுபடும் பக்தனோ படிப்படியாக மேல் ஏறுகிறான்.

இறைவனுடைய வடிவத்தை விக்கிரகமாகப் பார்க்கும் நிலையில் இறைவனுடைய இயல்பான உருவம்தெரிவதில்லை படிசளெல்லாம் கடந்து மேலே போறெவனுக்கும்எல்லாம் மறந்த நிலை வருகிறது. அங்கும் உருவம் தெரிவதில்லை. உருவத்தை காணும் கண்ணே இல்லாத திரிபுடி அற்றது அல்லவா அது?

இவ்வாறுகீழ்ப்படியில்உள்ளஅநுபவத்தையும்மேற்படியில் உள்ள அநுபவத்தையும் எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். பழிபடப் புகுந்தபோது திருக்

கோயிலில் உள்ள உருத்தைக் கண்டு வழிபட்டார்; இறைவனைக் கண்டார்- அப்போது அவனுடைய இயல்பான திருவுருவத்தைக் காணும் நிலை உண்டாகவில்லை ஆனால் பக்தி உணர்ச்சி குறையவில்லை-

**அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்**

என்று அந்த நிலையைச் சொல்கிறார்.

இப்போது படிகளையெல்லாம் கடந்து மேலே வந்துவிட்டார். திரிபுடி அற்ற நிலை இது. காண்பான், காணப்படும் பொருள், காட்சி எல்லாம் கடந்த அநுபவத்தில் திளைக்கும் நிலை இது. இப்போதும் திருவுருவம் தோன்றவில்லை; அதிலே கரைந்துவிட்ட பிறகு அதைத் தனியே பார்க்க முடியுமா?

**இன்றும் திருவுருவம் காண்கிலேன்!**

இருட்டிலே போவோருக்கும் கண் தெரியாது ஜகஜ்ஜோதியான சூரியனைப் பார்க்கும்போதும் கண் தெரியாது இரண்டு நிலைகளிலும் கண் பார்க்கும் ஆற்றலை இழந்தாலும் இரண்டு நிலைகளும் ஒன்று அல்ல; ஒன்று தாழ்ந்த நிலை; மற்றொன்று உயர்ந்த நிலை. கீழே இருப்பவனுக்கும் ஏணி வேண்டாம்; மாடிக்குப் போனவனுக்கும் ஏணி வேண்டாம் இதைப் போன்ற நிலைகளையே ம்அமையார் சொல்கிறார். முதல்நிலை, வடிவமாகக் கண்டு இயற்கை உருவத்தைக் காணும் ஆற்றல் பெறாத நிலை. இந்த நிலையோ உருவத்தைக் காணும் ஆற்றலை, கண்களை இழந்த நிலை.

**அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்;**
**இன்றும் திருவுருவம் காண்கிலேன்.**

இந்த முரண்பாடான நிலைகள் எல்லோருக்கும் விளங்குவதில்லை. அவர்கள் விக்கிரகதத்தை வணங்குவதனால் என்ன பயன் என்று நினைக்கிறார்கள். அவர்கள்.

உலகத்திலுள்ள பிற வடிவங்களைப் பார்த்துப் பழக்கப் பட்டவர்கள். ஒரு மனிதன் என்றால், அவனுக்கு உரிய அங்க அடையாளங்களைத் திட்டமாகத் தெரிந்து கொண்டவர்கள். அவர்கள் அம்மையாரைக் கேட்கிறார் களாம். ,,உங்கள் பெருமானுக்கு நிலையான உருவம உண்டோ? என்றைக்கும் உள்ள உருவம் எது? சிவபிரான் எந்தத் திட்டமான வடிவத்தை உடையவர்?'' என்று கேட்கிறார்கள். ''இதுதான் அவன் உருவம்'' என்று திருக்கோயில் விக்கிரத்தை அவர்களிடம் காட்டலாமா? ''இது சிற்பி வடித்தது என்பார். நடராசன் என்கிறீர்கள். காலைத் தூக்கியபடி நிற்கிறானேயன்றி ஆடவில்லையே? அசையவில்லையே. இது வெறும் பொய்ம்மையல்லவா?' என்று கேட்கிறார்கள்.

அவர்களுக்கு மேல்நிலையைச் சுட்டிக் காட்டலாம் என்றால் அதைச் சுட்டிக் காட்ட முடியுமா? தம்மையே மறந்த நிலை அது. அதை எப்படிச் சொல்வது? எப்படிக் காட்டுவது?

'இப்படி எல்லாம் கேட்பவர்களுக்கு நான் என்ன விடை சொல்வேன்? அந்தக் கேள்விகளை உன்னிடமே சமர்ப்பிக்கிறேன். நீயே விடை சொல்' என்று எண்ணிய வரைப் போல இறைவனையே நோக்கி வினவுகிறார்.

''எம்பெருமானே, 'என்றைக்கும் நும்பிரான் எந்த உருவத்தை உடையவன்?' என்பவர்களுக்கு அடியேன் என்ன விடைபகருவேன்? எந்த உருவத்தைச் சொல்வது? நின் உருவம் எது?'' என்று கேட்கிறார். அதுவே பாடல் உருவை எடுக்கிறது.

**அன்றும் திருஉருவம் காணாதே ஆட்பட்டேன்;**
**இன்றும் திருஉருவம் காண்கிலேன்;**

**—'என்றுந்தான்**

**எவ்வுரு வோன் நும்பிரான்?' என்பார்கட்கு**

**ஏதுஉரைப்பேன்?**

**எவ்வுருவோ நின்உருவம் ஏது?**

(எம்பெருமானே, உன்னை வழிபடத் தொடங்கிய அந்தக் காலத்திலும் உன்னுடைய இயல்பான திருவுருவத்தைக் காணுமலே உனக்கு அடிமையானேன்; உன்னுடைய திருவருளால் உன் அருளநுபவத்தைப் பெற்று நிற்கும் இப்போதும் உன் திருவுருவத்தை நான் காணவில்லை. 'உம்முடைய கடவுள் என்றைக்கும் எந்த உருவத்தை உடையவன்?'' என்று கேட்கிறவர்களுக்கு நான் எந்த விடையைச் சொல்வேன்? எந்த உருவத்தைச் சொல்வது? நின் உருவம் எது?

அன்றும் என்பது நெஞ்சறி சுட்டு; சரியைக் காலத்தை சுட்டியபடி. ஆட்படல்-அவனுக்கு அடியாராக அமைதல். இன்று என்றது அனுபவம் முற்றிய நிலையைப் பெற்ற காலத்தைக் குறிப்பது. என்றுந்தான்; தான், அசை, எவவுருவோ அவர்களுக்கு உரைப்பது எந்த உருவத்தை, உருவங்களுக்குச் சொல்லுவது? நின் உருவம் எது-உனக்கு உருவம் எது? இயல்பாக இல்லை என்றும் பொருள் கொள்ளலாம்.

அற்புதத் திருவந்தாதியில் 61-ஆம் பாடல் இது.

# 63. வேட வடிவம்

ஒரு சமயம் அஜ்ஜுருசுனன் தவம் செய்து கொண்டிருந்தான். அப்போது ஓர் அசுரன் பன்றிவேடம் பூண்டு அவன் தவத்தைக் கலைக்க முயன்றான். சிவபெருமானும் இறைவியும் வேடுவன் வேடுவச்சி போலக் கோலம் பூண்டு அங்கே வந்தார்கள், அருச்சுனன் அந்தப் பன்றியை அம்பினால் எய்தான். அதே சமயத்தில் சிவபெருமானும் அதை எய்தான். ஒரே விலங்கின் மேல் இருவரும் எய்த போது அந்த இருவர்களுக்குள்ளும் பூசல் ஏற்பட்டது. "நான் எய்த ஒரு விலங்கை நீர் எப்படி எய்யலாம்?" என்று அருச்சுனன் கேட்டான். "நான்தான் முதலில் எயதேன்" என்று சிவபெருமானாகிய வேடன் சொன்னான். இதனால்தான் இருவருக்கிடையிலும் சண்டை மூண்டது. இருவரும் போரிட்டார்கள். அப்பொழுது அருச்சுனன் தன் வில்லால் இறைவனை அடித்தான். இறைவன் வேட உருவம் மாறித் தன் இயற்கையான கோலத்தைக் காட்டி அருச்சுனனுக்கு அருள் செய்தான்.

இந்தக் கதை பாரதத்தில் வருகின்றது; வடமொழியில் இறைவன் செய்த இந்தத் திருவிளையாடலைப் பற்றி, 'கிராதார்ஜ்ஜுனீயம்' என்று ஒரு காவியமே இருக்கின்றது. காரைக்கால் அம்மையார் இந்தத் திருவிளையாடலை எண்ணிப் பார்க்கின்றார். வேடனாகக் கோலம் பூண்ட சிவபெருமான் எப்படிக் காட்சியளித்திருப்பான்? அந்த வடிவத்திற்கு எதை உவமை கூறுவது? அந்தக் காலத்தில் உடன் இருந்து பார்த்தவர்கள் யாரும் இப்பொழுது இல்லையே. இறைவனுடைய உண்மையான வடிவு

இத்தகையது என்று சொல்ல முடியாதது போல இந்த வேட்டுவக் கோலத்தையும் எவ்வாறு இருக்கும் என்று சொல்ல முடியாது. காரணம், அது பண்டைப் 'பழங் காலத்தில் நிகழ்ந்ததமையே. இதைப்பற்றிக் காரைக்கால் அம்மையார் சிந்திக்கின்றார்,

அந்தப் பழங்காலத்தில் வில்லை ஏந்திய வேடத்தை உடையவனாகி இறைவன் விஜயனுடன் போரிட்டான். அந்த வடிவம் அவனாக வலிந்து மேற்கொண்ட வடிவம். அருச்சுனன் அவ்வாறு வரவேண்டும் என்று பிரார்த்திக்க வில்லை. வேறு யாரும் அவ்வாறு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவில்லை, இறைவனே விஜயனிடம் உள்ள கருணையினால் அந்தத் திருவிளையாடலை நிகழ்த்தினான். தன்னுடைய குழந்தையுடன் சண்டை போடுவது போலத் தந்தை விளையாடி, அந்தக் குழந்தையின் கையால் அடி படுகின்றான். அதனால் தந்தைக்குக் கோபம் வருமா? அவன் வேண்டுமென்றே அப்படி விளையாடி அடிபட்டான். அதனால் தந்தைக்கு இன்பம் உண்டாகுமேயொழியக் கோபம் உண்டாகாது. அதுபோல இறைவனுக்கு இந்தத் திருவிளையாடலால் இன்பமே உண்டாயிற்று. அதனால் இறைவன் அருச்சுனனுக்கு அருள்புரிந்தான்.

'பண்டைக் காலத்தில் வில்லையுடைய வேடனாகி விஜய னுடன் போரிட்டான் இறைவன். அப்பொழுது அந்த வேடத்தை மேற்கொண்ட இறைவன் எத்தகைய வடிவுடன் இருந்தான்?' இப்படி அம்மையார் சிந்திக்கின்றார். அந்தக் கோலத்துக்கு வேறு யாரை உவமை சொல்ல முடியும்? எண்ணி எண்ணிப் பார்க்கின்றார்; கற்பனையை விரித்துப் பார்க்கின்றார்; ஊகித்துப் பார்க்கின்றார்.

—பூதப்பால்

**வில் வேடன் ஆகி விசயனோடு ஏற்ற நாள்**
**வல்வேடன் ஆன வடிவு.**

### ஏது ஒக்கும்? ஏது ஒவ்வாது?

அந்த வடிவுக்கு எதை உவமை சொல்வது? எந்த வடிவம் அதனை ஒக்கும்? எந்த வடிவம் அதற்கு ஒவ்வாது? ஒவ்வொன்ருக அம்மையார் நினைத்துப் பார்க்கின்ருர். எதுவும் சரிப்பட்டு வரவில்லை.

### ஏது ஆகும்? ஏது ஆகாது?

மறுபடியும் சிந்தித்துப் பார்க்கின்ருர். எந்த வடிவத்தைச் சொல்லலாகும் என்று யோசிக்கின்ருர். சிலவற்றை எண்ணும்போது அவற்றைச் சொல்லலாகாது என்று தோன்றுகின்றது. இப்படி எண்ணி எண்ணித் தடுமாறுகின்ருர்.

இறைவன் தனக்கு உவமை இல்லாதவன். மிகவும் நுட்பமாக உள்ள அவனைச் சுட்டிக் காட்ட முடியாது எந்த அளவையாலும் அளந்துவிட முடியாது. ஆதலால் அவனுக்கு, 'அப்பிரமேயன்' என்று பெயர் வந்தது. உபமானம் சொல்ல முடியாமையால், 'அநுபமன்' என்ற திருநாமமும் வந்தது. ஆனால் வடிவு கொண்டபொழுது அதையாவது இப்படி இருக்கும் என்று உவமை சொல்லிப் பார்க்கலாம் என்ருலோ, அதுவும் இயலாத காரியம் என்று தோன்றுகிறது. கண்ணிலே கண்ட உருவத்துக்கு ஒருவாறு உவமை சொல்லிவிடலாம். ஆனால் வேடனுகக் கோலம் பூண்ட போது எடுத்த வடிவத்திற்கு உவமை சொல்ல வேண்டுமானால் அதை பார்த்தவரால்தான் சொல்ல முடியும். அந்தத் திருவிளையாடல் நிகழ்ந்த காலம் மிகமிகப் பழமையானது. அதை, இப்பொழுது எண்ணிப் பார்த்தால் இப்படி இருக்கலாம் என்று ஊகித்துச் சொல்ல முடியாத திண்டாட்டம் ஏற்படுகின்றது. உலகில் உள்ள பொருள்களை உவமானம்

சொல்லலாகாது. மிக உயர்ந்த பரம்பொருளாகிய அவனுக்கு உவமானம் சொல்வது என்பது முடிகிற காரியமா, ஆகவே தான், அம்மையாரின் உள்ளம் திட்டவட்டமாக இதுதான் ஒப்பு, இதுதான் சொல்லலாகும் என்று தெரியாமல் குழம்பு கின்றது.

ஏதுஒக்கும்? ஏதுஒவ்வாது? ஏதுஆகும்? ஏதுஆகாது?

என்று திருப்பித் திருப்பிச் சொல்கின்றார். கடைசியில் உவமை கூறுவதோ, இப்படிச் சொல்லலாம் என்று தீர்மானம் செய்வதோ யாராலும் முடியாது என்ற முடிவிற்கு வருகின்றார்.

ஏதுஒக்கும் என்பதனை யார்அறிவார்?

இவ்வாறு தடுமாறிய தடுமாற்றத்தை அம்மையார் ஒரு பாட்டில் பாடுகின்றார்.

ஏதுஒக்கும்? ஏதுஒவ்வாது? ஏதுஆகும்? ஏது ஆகாது?
ஏதுஒக்கும் என்பதனை யார்அறிவார்? பூதப்பால்
வில்லவ்வேடன் ஆகி விசயனோடு ஏற்றநாள்
வல்வேடன் ஆன வடிவு.

'பழங்காலத்தில் வில்லைக் கையில் ஏந்திய வேடனாக வந்து விசயனோடு எதிர்த்துப் போரிட்ட காலத்தில், வலிமையை உடைய வேடத்தை உடையவனான அந்த இறைவன் வடிவத் திற்கு எது ஒப்பாகும்? எது ஒவ்வாது? எது சொல்லத்தகும்? எது சொல்லத் தகாது? எது உவமானம் ஆகும்' என்பதனை யார் அறிவார்கள்.

பூதம்-இறந்த காலம்; பண்டைக் காலம். வில் வேடன்—வில்லை உடைய வேட்டுவன். விசயன்—அருச்சுனன். ஏற்ற—எதிரிட்டுப் போர் செய்த. வல் வேடன்—வலிமை உள்ள வேடம் பூண்டவன்; வேடன்—வேடத்தை உடையவன்.

'வடிவு ஏது ஒக்கும் என்பதனை யார் அறிவார்?'

அற்புதத் திருவந்தாதியில் 62-ஆவது பாடல் இது.

# 64. திங்கள் நிலா

இறைவனைச் சார்ந்த எல்லாப் பொருள்களும் இயல்பாக மெலிவுடையவையாக இருந்தாலும் சார்ந்த இடத்தின் சிறப்பினால் வலிமையைப் பெறும். பாம்புக்குக் கருடன் பகை. கருடனைக் கண்டால் பாம்புகள் அஞ்சும். ஆனால் சிவபெருமான் அணிந்துள்ள பாம்புகள் கருடனைக் கண்டு அஞ்சுவதில்லை. "ஏன் கருடா சுகமா?" என்று அந்தப் பாம்புகள் கேட்டனவாம். "இருக்கிற இடத்தில் இருந்தால் சுகந்தான்" என்று கருடன் சொல்லியதாம். இதிலிருந்து சார்பின் பலத்தினால் மிக்க வலிமையும் துணிச்சலும் உண்டாகும் என்பது தெரியவரும்.

சந்திரன் சூரியனைவிட ஒளி குறைந்தது. சூரியனிடத்திலிருந்தே சந்திரன் ஒளியைப் பெறுகிறதென்று விஞ்ஞானம் சொல்கிறது. புராணமும் அப்படித்தான் சொல்கிறது. இரவில் ஒளி தருவது சந்திரன். அது நாளுக்கு நாள் தேய்ந்து வருவது; மறுபடியும் வளர்வது. சூரியனுக்கு அந்தக் குறைபாடு இல்லை. சூரியனுடைய ஒளி பகலில் நன்றாகப் பரவும். அதன் முன் சந்திரன் ஒளியிழந்து நிற்கும்.

இறைவன் திருமுடியில் இருக்கும் சந்திரன் தேய்வதில்லை; வளர்வதில்லை; இறைவனைச் சார்ந்ததனால் உண்டான வலிமை அது. இறைவன் முடிமேல் இருப்பதால் மக்கள் அதை வணங்குகிறார்கள்.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். இறைவன் சடையில் உள்ள நிலா எப்படி ஒளி வீசும்? சூரியனுடைய ஒளி மிகப் பிரகாசமாக இருக்குமே. வானில் உள்ள சந்திரனுடைய ஒளி அவ்வளவு பிரகாசமாக

இருப்பதில்லை. ஆனால் சிவபெருமானுடைய திருமுடித் திங்கள் அவனுடைய சார்பு பெற்றதனால் தனித்தன்மை உடையதாக இருக்கிறது அதன் ஒளி எப்படி இருக்கும்?

ஒருகால் அதன் ஒளி கதிரவனுடைய ஒளியை விட மிகுதியாக இருக்குமோ? பகலில் அந்தச் சந்திரன் ஒளி வீசினால் சூரியனுக்கு நிகராக வீசுமோ? இப்படியெல்லாம் அம்மையார் எண்ணிப் பார்க்கிறார்.

இறைவன் சோதிகளுக்கெல்லாம் பெரிய சோதி அவனை, "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். அந்தச் சோதியின் முடிமேல் சந்திரன் வீற்றிருக்கிறான். அவனுக்கு அந்தப் பரஞ்சோதியின் சார்பினால் அதிகமான ஒளி கிடைத்திருக்கும் வான சூரியனை விட இறைவனாகிய ஞான சூரியன் எத்தனையோ மடங்கு மிகுதியாக ஒளிவிடும் பரஞ்சுடர். வானத்தில் உலாவும் சந்திரன் வான சூரியனிடம் ஒளி பெற்று விளங்குகிறது. ஆனால் இந்தச் சந்திரனோ அரும்பெருஞ் சோதியாகிய இறைவனுடைய பலத்தைப் பெற்றிருக்கிறது. ஆகையால் நிச்சயமாக இந்தச் சந்திரனுக்குச் சூரியனைவிட எத்தனையோ மடங்கு மிகுதியான ஒளி இருக்கத்தான் வேண்டும்.

ஒருகால் இப்போது வானத்தில் உலவும் கதிரவன் ஏதோ காரணத்தால் ஒருநாள் வரமுடியவில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்போது இறைவன் முடியில் உள்ள திங்கள் சூரியன் இல்லாத குறையைப் போக்கித் தானே கதிரவனைப் போல ஒளி விடுமோ?

இப்படியெல்லாம் எண்ணம் இட்டார் காரைக்கால் அம்மையார். சும்மா இருக்கும் சமயங்களில் நம்முடைய மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் தோன்றுகின்றன. எல்லாம் உலகியலோடு சம்பந்தம் உள்ளனவாகவே இருக்கும். சில சமயங்களில் பலவிதமான பைத்தியக்கார எண்ணங்கள் தோன்றும்.

ஆனால் இறைவனிடம் ஈடுபட்ட உள்ளங்களில் இறைவனோடு தொடர்புடைய எண்ணங்களே தோன்றிக் கொண்டிருக்கும். இரவிலே துயிலும்போது காணும் கனக்களில் இறைவனோடு தொடர்புடைய காட்சிகளே தோன்றும். பகலில் உண்டாகும் சிந்தனைகளிலும் கற்பனைகளிலும் இறைவனுடன் தொடர்புடைய காட்சிகளே வரும்.

காரைக்கால் அம்மையாருடைய சிந்தனைகளும், கற்பனைகளும் அத்தகையனவே. இதுவரையில் நாம் பார்த்த பாடல்களில் அப்படி அமைந்த கற்பனைகளையும், அவற்றிலிருந்து எழுந்த விசித்திரமான கேள்விகளையும் பார்த்தோம்.

இறைவன் திருமுடிமேல் அணிந்த சந்திரனைப் பற்றி எண்ணும்போது அம்மையாருக்கு முன்னே சொன்ன எண்ணங்கள் தோன்றுகின்றன.

இறைவனையே நோக்கி ஒரு வினவை எழுப்புகிறார்.

"தேவரீருடைய திருமுடிமேல் இருக்கும் சந்திரன் சூரியனுக்குச் சமானமாகப் பிரகாசிக்குமோ?" என்று கேட்கிறார்.

'பார்ப்பதற்கு அழகான வடிவை உடையது சூரியன். அதுவும் காலை நேரத்தில் கதிரவன் உதயமாகும் போது பார்த்தால் கண் கொள்ளாத காட்சியாக இருக்கும். அந்தச் செங்கதிருக்கு மாறாகச் சந்திரன் தன் ஒளியை வீசுமோ? பகல் நேரத்தில் வானத்தில் நெடிது உலவி அந்தச் சந்திரனுடைய கதிர்கள் எறிக்குமோ?'—இவ்வாறு கேட்கிறார்.

> வடிவுடைய செங்கதிர்க்கு
> மாறாய்ப் பகலே
> நெடிதுஉலவி நின்று எறிக்கும்
> கொல்லோ?

பகலில் ஒளி தருவதும் நீண்ட நேரத்தில் வானத்தில் உலாவுவதும் வானத்தில் நாம் பார்க்கும் சந்திரனுக்கு இல்லை.

ஆனால் இறைவன் திருமுடிச் சந்திரனுக்கு அத்தகைய சிறப்பு இருக்கலாம். ஆதலினால் இப்படிக் கேட்கிறார்.

இறைவனை விளித்தே கேட்கிறார். இறைவனை எப்படி அழைக்கிறார்?

இறைவன் வேறு எங்கும் காணக் கிடைக்காத புதுமையை உடைய சோதி. அவனுடைய திருமேனிச் சோதி ஒளி மய மானது. ஆகவே,

**கடி உலவு....சோதியாய்!**

என்கிறார்.

இறைவன் புகழைச் சொல்லப் புகுந்தால் அதற்கு முடிவே இல்லை. "பாதாளம் ஏழினுங்கீழ்ச் சொற்கழிவு பாத மலர்" என்பது திருவாசகம். எவ்வளவு புகழ்ந்தாலும் புகழும் சொல் சோர்வடையுமேயன்றி அவன் புகழுக்கு எல்லை காண முடியாது.

**சொல்முடிவு ஒன்று இல்லாத**
**சோதியாய்!**

என்று இறைவனைக் கூறுகிறார். அவனையே, "நான் கேட்கும் வினவுக்கு விடை சொல்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

**சொல்லாயால்.**

'நின் திருமுடிமேல் திங்களை அணிந்திருக்கிறாய். சொல் முடிவு ஒன்று இல்லாத சோதியைச் சார்ந்தமையால் அதற்கும் எல்லை இறந்த ஒளி கிடைத்திருக்கும். ஆகவே கேட்கிறேன்' என்பவரைப் போலப் பேசுகிறார்.

**சொல்முடிவு ஒன்று இல்லாத**
**சோதியாய், சொல்லாயால்**
**நின்முடிமேல் திங்கள்நிலா.**

'நின் திருமுடிமேல் உள்ள திங்களின் நிலா, சூரியனைப் போல, பகலிலும் பிரகாசிக்குமா?' என்று அம்மையார் கேட்கிறார்.

வடிவுடைய செங்கதிர்க்கு
மாறாய்ப் பகலே
நெடிதுலவி நின்றெறிக்கும்
கொல்லோ?—கடிஉலவு
சொல்முடிவுஒன்று இல்லாத
சோதியாய்! சொல்வாயால்
நின்முடிமேல் திங்கள் நிலா.

[புதுமை சேர்ந்த, சொல்லுக்கு முடிவு ஒன்றும் இல்லாத சோதியாக நிற்கும் எம்பெருமானே! நின்னுடைய திருமுடியின் மேல் உள்ள திங்களின் ஒளியானது, வடிவழகுடைய செந்நிறமுள்ள சூரியனுக்கு எதிராகப் பகலில் நீண்டு உலவி நின்று ஒளிவீசுமா? இதைச் சொல்வாயாக.

வடிவு—அழகுருவம். செங்கதிர்—கதிரவன். மாறாய்—எதிராக; ஒப்பாக என்பதும் ஆம். எறிக்கும்—ஒளி வீசும். கடி—புதுமை; கடியுலவு சோதியாய், சொல்முடிவு ஒன்று இல்லாத சோதியாய் என்று கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். நிலா எறிக்கும் கொல்லோ?]

அம்மையார் கெஞ்சினாலும், கொஞ்சினாலும், தத்துவத்தைச் சொன்னாலும், வருணித்தாலும், விசித்திரமாக எண்ணமிட்டாலும், ஆழ்ந்து சிந்தித்தாலும் யாவும் சிவபெருமானைப் பற்றியனவாகவே இருக்கும் இந்தப் பாட்டு விசித்திரமான எண்ணங்களில் ஒன்று.

இது அற்புதத் திருவந்தாதியில் 63-ஆம் பாட்டு.

# 64. திங்கள் நிலா

இறைவனைச் சார்ந்த எல்லாப் பொருள்களும் இயல்பாக மெலிவுடையவையாக இருந்தாலும் சார்ந்த இடத்தின் சிறப்பினால் வலிமையைப் பெறும். பாம்புக்குக் கருடன் பகை. கருடனைக் கண்டால் பாம்புகள் அஞ்சும். ஆனால் சிவ பெருமான் அணிந்துள்ள பாம்புகள் கருடனைக் கண்டு அஞ்சுவதில்லை. "ஏன் கருடா சுகமா?" என்று அந்தப் பாம்புகள் கேட்டனவாம். "இருக்கிற இடத்தில் இருந்தால் சுகந்தான்" என்று கருடன் சொல்லியதாம் இதிலிருந்து சார்பின் பலத்தினால் மிக்க வலிமையும் துணிச்சலும் உண்டாகும் என்பது தெரியவரும்.

சந்திரன் சூரியனைவிட ஒளி குறைந்தது. சூரியனிடத்திலிருந்தே சந்திரன் ஒளியைப் பெறுகிறதென்று விஞ்ஞானம் சொல்கிறது. புராணமும் அப்படித்தான் சொல்கிறது. இரவில் ஒளி தருவது சந்திரன். அது நாளுக்கு நாள் தேய்ந்து வருவது: மறுபடியும் வளர்வது. சூரியனுக்கு அந்தக் குறைபாடு இல்லை சூரியனுடைய ஒளி பகலில் நன்றாகப் பரவும். அதன் முன் சந்திரன் ஒளியிழந்து நிற்கும்.

இறைவன் திருமுடியில் இருக்கும் சந்திரன் தேய்வதில்லை; வளர்வதில்லை; இறைவனைச் சார்ந்ததனால் உண்டான வலிமை அது. இறைவன் முடிமேல் இருப்பதால் மக்கள் அதை வணங்குகிறார்கள்.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். இறைவன் சடையில் உள்ள நிலா எப்படி ஒளி வீசும்? சூரியனுடைய ஒளி மிகப் பிரகாசமாக இருக்குமே. வானில் உள்ள சந்திரனுடைய ஒளி அவ்வளவு பிரகாசமாக

இருப்பதில்லை. ஆனால் சிவபெருமானுடைய திருமுடித் திங்கள் அவனுடைய சார்பு பெற்றதனால் தனித்தன்மை உடையதாக இருக்கிறது அதன் ஒளி எப்படி இருக்கும்?

ஒருகால் அதன் ஒளி கதிரவனுடைய ஒளியை விட மிகுதி யாக இருக்குமோ? பகலில் அந்தச் சந்திரன் ஒளி வீசினால் சூரியனுக்கு நிகராக வீசுமோ? இப்படியெல்லாம் அம்மையார் எண்ணிப் பார்க்கிறார்.

இறைவன் சோதிகளுக்கெல்லாம் பெரிய சோதி அவனை, "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். அந்தச் சோதியின் முடிமேல் சந்திரன் வீற்றிருக்கிறான். அவனுக்கு அந்தப் பரஞ்சோதியின் சார்பினால் அதிகமான ஒளி கிடைத்திருக்கும் வான சூரியனை விட இறைவனாகிய ஞான சூரியன் எத்தனையோ மடங்கு மிகுதியாக ஒளிவிடும் பரஞ்சுடர். வானத்தில் உலாவும் சந்திரன் வான சூரியனிடம் ஒளி பெற்று விளங்குகிறது. ஆனால் இந்தச் சந்திரனோ அரும்பெருஞ் சோதியாகிய இறைவனுடைய பலத்தைப் பெற்றிருக்கிறது. ஆகையால் நிச்சயமாக இந்தச் சந்திரனுக்குச் சூரியனைவிட எத்தனையோ மடங்கு மிகுதியான ஒளி இருக்கத்தான் வேண்டும்.

ஒருகால் இப்போது வானத்தில் உலவும் கதிரவன் ஏதோ காரணத்தால் ஒருநாள் வரமுடியவில்லை என்று வைத்துக் கொள்வோம். அப்போது இறைவன் முடியில் உள்ள திங்கள் சூரியன் இல்லாத குறையைப் போக்கித் தானே கதிரவனைப் போல ஒளி விடுமோ?

இப்படியெல்லாம் எண்ணம் இட்டார் காரைக்கால் அம்மையார். சும்மா இருக்கும் சமயங்களில் நம்முடைய மனத்தில் எத்தனையோ எண்ணங்கள் தோன்றுகின்றன. எல்லாம் உலகியலோடு சம்பந்தம் உள்ளனவாகவே இருக்கும். சில சமயங்களில் பலவிதமான பைத்தியக்கார எண்ணங்கள் தோன்றும்.

ஆனால் இறைவனிடம் ஈடுபட்ட உள்ளங்களில் இறைவனோடு தொடர்புடைய எண்ணங்களே தோன்றிக் கொண்டிருக்கும். இரவிலே துயிலும்போது காணும் கனவுகளில் இறைவனோடு தொடர்புடைய காட்சிகளே தோன்றும். பகலில் உண்டாகும் சிந்தனைகளிலும் கற்பனைகளிலும் இறைவனுடன் தொடர்புடைய காட்சிகளே வரும்.

காரைக்கால் அம்மையாருடைய சிந்தனைகளும், கற்பனைகளும் அத்தகையனவே. இதுவரையில் நாம் பார்த்த பாடல்களில் அப்படி அமைந்த கற்பனைகளையும், அவற்றிலிருந்து எழுந்த விசித்திரமான கேள்விகளையும் பார்த்தோம்.

இறைவன் திருமுடிமேல் அணிந்த சந்திரனைப் பற்றி எண்ணும்போது அம்மையாருக்கு முன்னே சொன்ன எண்ணங்கள் தோன்றுகின்றன.

இறைவனையே நோக்கி ஒரு வினாவை எழுப்புகிறார்.

"தேவரீருடைய திருமுடிமேல் இருக்கும் சந்திரன் சூரியனுக்குச் சமானமாகப் பிரகாசிக்குமோ?" என்று கேட்கிறார்.

'பார்ப்பதற்கு அழகான வடிவை உடையது சூரியன். அதுவும் காலை நேரத்தில் கதிரவன் உதயமாகும் போது பார்த்தால் கண் கொள்ளாத காட்சியாக இருக்கும். அந்தச் செங்கதிருக்கு மாறாகச் சந்திரன் தன் ஒளியை வீசுமோ? பகல் நேரத்தில் வானத்தில் நெடிது உலவி அந்தச் சந்திரனுடைய கதிர்கள் எறிக்குமோ?'—இவ்வாறு கேட்கிறார்.

> வடிவுடைய செங்கதிர்க்கு
> மாறாய்ப் பகலே
> நெடிதுஉலவி நின்று எறிக்கும்
> கொல்லோ?

பகலில் ஒளி தருவதும் நீண்ட நேரத்தில் வானத்தில் உலாவுவதும் வானத்தில் நாம் பார்க்கும் சந்திரனுக்கு இல்லை.

ஆனால் இறைவன் திருமுடிச் சந்திரனுக்கு அத்தகைய சிறப்பு இருக்கலாம். ஆதலினால் இப்படிக் கேட்கிறார்.

இறைவனை விளித்தே கேட்கிறார். இறைவனை எப்படி அழைக்கிறார்?

இறைவன் வேறு எங்கும் காணக் கிடைக்காத புதுமையை உடைய சோதி. அவனுடைய திருமேனிச் சோதி ஒளி மய மானது. ஆகவே,

கடிஉலவு....சோதியாய்!

என்கிறார்.

இறைவன் புகழைச் சொல்லப் புகுந்தால் அதற்கு முடிவே இல்லை. "பாதாளம் ஏழினுங்கீழ்ச் சொற்கழிவு பாத மலர்" என்பது திருவாசகம் எவ்வளவு புகழ்ந்தாலும் புகழும் சொல் சோர்வடையுமேயன்றி அவன் புகழுக்கு எல்லை காண முடியாது.

சொல்முடிவு ஒன்று இல்லாத
சோதியாய்!

என்று இறைவனைக் கூறுகிறார். அவனையே, "நான் கேட்கும் வினவுக்கு விடை சொல்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

சொல்லாயால்.

'நின் திருமுடிமேல் திங்களை அணிந்திருக்கிறாய். சொல் முடிவு ஒன்று இல்லாத சோதியைச் சார்ந்தமையால் அதற்கும் எல்லை இறந்த ஒளி கிடைத்திருக்கும். ஆகவே கேட்கிறேன்' என்பவரைப் போலப் பேசுகிறார்.

சொல்முடிவு ஒன்று இல்லாத
சோதியாய், சொல்லாயால்
நின்முடிமேல் திங்கள்நிலா.

# 65. திரியும் பாம்பு

காரைக்கால் அம்மையார் இறைவனிடம் வினவுவது போல் பல பாடல்களைப் பாடியுள்ளார். சென்ற பாட்டில், "நின் முடிமேல் உள்ள சந்திரன் பகலிலும் கதிரவனைப் போல ஒளிவிடுமோ?" என்று கேட்டவர், அந்தத் திங்களைப்பற்றிய எண்ணத்தைத் தொடர்ந்து மேலும் சிலவற்றை எண்ணு கிறார். இறைவனுடைய திருமுடியில் சந்திரனோடு பாம்பும் இருக்கிறது. அந்தத் திருமுடி செஞ்சடை செறிந்தது. அந்தச் சிவப்பையும் சந்திரனையும் சேர்ந்து பார்த்தால் அந்தியிலே தோன்றும் செவ்வானமும் அதில் தோன்றும் திங்களும் போலக் காட்சி அளிக்கின்றன. சடையும் திங்களும் சேர்ந்த சேர்க்கை இப்படிப் பொருத்தமாக உவமை கூறும்படி இருக் கிறது. ஆனால் அங்கே பாம்பும் இருக்கிறது. சிவபெருமான் திருமார்பிலும் திருமுடியிலும் பாம்புகளையே அணிகலன் களாக அணிந்திருக்கிறான். செக்கர் வானத்தில் பாம்புக்கு என்ன வேலை? உவமையை விரித்துப் பார்க்க வழி உண்டா?

ஓ! பாம்புக்கு ஒரு தொடர்பு உண்டு. சந்திரனை விழுங்கு வது ராகு கேதுக்களாகிய பாம்புகளே அல்லவா? எனவே பாம்பு மெல்ல மெல்ல இறைவன் சடாபாரத்திலே ஊர்ந்து வருவதற்கு ஒரு காரணத்தைக் கற்பனை செய்ய முடியும் என்று தெரிகிறது.

பாம்பு சட்டென்று சந்திரனைப் பற்றிக்கொள்ளவில்லை. அது அங்கும் இங்கும் திரிந்து நாக்கை நீட்டுகிறது. சந்திரன் இருக்குமிடம் தெரியாமல் தேடுகிறதோ? சடைக்காட்டில் அது நுழைந்து நுழைந்து வரும்போது அப்படித்தான் தோன்றுகிறது.

சந்திரனைத் தேடிச் செல்லும் பாம்புக்கு அது தட்டுப் படாதா? இரவிலே சந்திரன் ஒளியை அது நன்றாகக் காணலாம். பகலிலே சூரியனுக்கு முன் ஒளியிழந்து தோன்றும். செவ்வானம் தோன்றும்போது எதிரே நிலாவின் ஒளி நன்றாகத் தோன்றாது. பகல்நேரத்திலும் அது பளிச்சென்று தெரியாது. இந்தப் பாம்பு காலைநேரத்தில் சந்திரனைத் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியாமல் தவிப்பதுபோலத் தவிக்கிறதோ?

இப்படியெல்லாம் அம்மையாரின் மனம் கற்பனைக் குதிரையின்மேல் ஏறி வையாளி நடைபோடுகிறது.

இறைவன் திருமுடி அந்திச் செவ்வானமே போல் செந்நிறமாகத்தோன்றுகிறது. அவன் செஞ்சடையப்பன் அல்லவா? அந்தத் திருமுடியில் நிலா இருக்கிறது.

நிலா இருந்த
செக்கர்அவ் வானமே ஒக்கும்
திருமுடிக்கே.

அந்தத் திருமுடிக்குள் பாம்பு புகுந்து புகுந்து வெளிப்படுகிறது. எதையோ தேடுவது போல அது திரிந்துகொண்டிருக்கிறது. அந்த அரவம் திருமுடிக்குள்ளே புகுந்து உலாவி உழிதருகிறது.

திருவடிக்கே புக்கு ...உலாவி உழிதரும்.

'காட்டுக்குள் புகுந்து தேடுவது போலத் தேடுகின்றதே! எதைத் தேடுகின்றது? நிலாவோடு விளங்கும் வெண்மதியைத் தேடி அதைத் தனக்கு உணவாகக் கொள்ளும்பொருட்டு அது உலவுகிறதோ? இருட்டிலே சந்திரனைத் தேட வேண்டிய அவசியமே இல்லை அதன் ஒளி எங்கும் பரவியிருக்கும். ஆனல் பகலில் அவ்வளவு தெளிவாகச் சந்திரன் தெரியாது காலையின் சந்திரனைத் தேடுவதுபோல அல்லவா இந்தப்பாம்பு உலாவித் திரிகிறது.

'விரிவான வானத்தில் பகல்நேரத்தில் எங்கேயோ மங்கித் தோன்றும் சந்திரனைத் தேடிப் பிடிக்க உலாவித் திரிவதுபோல இந்தப் பாம்பு திரிகிறதா? 'இப்படிக் கேட்கிறார் காரைக்கால் அம்மையார்.

நிலா இலங்கு வெண்மதியை
நேடிக்கொள் வான்போல்
உலாவி உழிதருமா
கொல்லோ?—நிலா இருந்த
செக்கர் அவ் வானமே
ஒக்கும் திருமுடிக்கே
புக்குஅரவம் காலையே போன்று.

[பாம்பானது நிலா இருந்த அந்தச் சிவப்பான அந்தி வானத்தை ஒத்து விளங்கும் சிவபெருமானுடைய அழகிய முடியிலே புகுந்து, நிலா விளங்குகின்ற வெண்ணிறமுள்ள சந்திரனைக் காலை நேரத்தில் தேடுவதைப் போன்று, அதைத் தேடிப் பற்றிக் கொள்வதைப் போல உலவித் திரியும் வண்ணமோ?

நேடி — தேடி. கொள்வான்போல் — கொள்வதுபோல, கொள்வான்—கொள்ளுதல்; தொழிற்பெயர். உழிதருமா கொல்லோ—உழிதருமாறோ? உழிதருதல்—திரிதல் இந்தக் காட்சி என்ற எழுவாயை இசையெச்சத்தால் வருவித்து முடிக்கவேண்டும். செக்கர் -செந்நிறம்; செக்கரை உடைய அந்திவானம். திருமுடிக்கே — திருமுடியில்; உருபு மயக்கம். அரவம்: எழுவாய். காலையே போன்றும் உழிதருமா கொல்லோ?]

பாம்பு சடாமுடியின் மேலும் கீழும் புகுந்து வெளிப் பட்டுத் திரிவதற்கு ஒரு காரணம் கற்பிப்பவரைப் போல இந்தப் பாடலைப் பாடியுள்ளார் அம்மையார்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 64-ஆம் பாடல்.

# 66. காலை முதல் இரவு வரை

இறைவனிடம் ஈடுபட்டவர்களுக்கு எதைப் பார்த்தாலும் அவனுடைய நினைவு எழும். வேப்பம் பழத்தைக் கண்டு சிவலிங்கத்தையும், தவளையின் ஒலியைக் கேட்டு ஹரஹர என்ற முழக்கத்தையும் நினைத்து உருகினன் வரகுண பாண்டியன். உவர் மண்ணால் வெளுத்த மேனியை உடைய வண்ணானைக் கண்டு முழுநீறு பூசிய முனிவனாக வணங்கினார், சேரமான் பெருமாள் நாயனார்

காதல் மிகுந்தவர்கள் எப்போதும் தம் காதலரை எண்ணிக் கொண்டிருப்பார்கள். எதைப் பார்த்தாலும் அவருடைய நினைவே எழும். இப்படி உள்ள மனநிலையை, 'நோக்குவ எல்லாம் அவையே போறல்' என்ற மெய்ப் பாடாகச் சொல்வர் புலவர். காதலும் பக்தியும் பல திறங் களில் பொதுவான அநுபவங்களை உடையன. அதனால்தான் பக்தர்கள் ஆண்டவனைக் காதலனாக வைத்துத் தம்மை காதலியாக்கிக் கொண்டு தெய்விகக் காதற் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

காரைக்காலம்மையார் இறைவனிடம் முறுகிய பக்தி பூண்டு எப்போதும் அவனுடைய திருவுருவத்தையும் அருட் குணங்களையும் எண்ணி இன்புறுபவர். கவிபாடும் புலமை யுடையவராதலின் இறைவனைப் பற்றி எண்ணும் எண்ணங் களெல்லாம் கவிவடிவில் அமைகின்றன. இறைவனோடு நெருங்கிப் பேசும் உரிமை அவருக்கு உண்டு. 'ஏன், சுவாமி, இப்படியெல்லாம் செய்கிறீர்?' என்று உரிமையோடு கேட் பார். அவனுடைய அருளை எண்ணி எண்ணி உருகுவார்.

இப்போது அம்மையார் காலத்தைப் பற்றிய சிந்தனையில் ஈடுபடுகிறார். எல்லையில்லாத காலத்தைத் துண்டு துண்டாக வெட்டி அளவு காட்டிப் பெயர் வைத்திருக்கிறார்கள். மன்வந்தரம், சதுர்யுகம், யுகம், வருஷம், மாதம், வாரம், நாள், நாழிகை, விநாடி என்றெல்லாம் காலத்தின் பெரிய சிறிய கூறுபாடுகளை நாம் அறிவோம் ஒவ்வொரு நாளும் நமக்குத் தெளிவாகத் தெரியும் காலப்பகுதி. விடிந்து, பகலாகி மாலையாகி இருள் வந்து நாள் முடிவு பெறுகிறது ஒரு நாளில் தெளிவாகக் காலைநேரம் தெரிகிறது. கடும்பகலாகிய நடுப்பகலும் தெரிகிறது. பிறகு மாலை வருகிறது. தொடர்ந்து இரவு வருகிறது. இதனோடு அந்த நாள் முடிகிறது.

சோமவாரம் சிவபெருமானுக்கு உரியது. ஆகையால் திங்களன்று அவன் நினைவு எழ நியாயம் உண்டு. திருவாதிரை நட்சத்திரம் இறைவன் திருநடனம் புரிந்த நாள். அப்போதும் அவன் நினைவு உண்டாகலாம் சிவராத்திரி வந்தால் சொல்லவே வேண்டாம்; அந்தப் பெயரே சிவபெருமானை நினைப்பூட்டிக் கொண்டிருக்கிறது.

ஆனால் எந்த விதமான சிறப்பும் இல்லாத சாமானிய நாளில் சிவபெருமானை நினைக்க வழி உண்டா? எல்லா நாட்களுக்கும் சிவபெருமானோடு தொடர்புடைய புராணக் கதைகள் உண்டா? அப்படி இல்லை. ஆனாலும் எந்த நாளானாலும் சிவபெருமானை எண்ணுவதற்கு வகை உண்டு; மனம் இருந்தால் வழி உண்டு.

காரைக்கால் அம்மையார் நமக்கு வழி சொல்லித் தருகிறார்.

இருள் போய் விடிந்துவிட்டது. சூரியோதயம் ஆகிவிட்டது. இந்த நாள் தொடங்கி விட்டது கீழ்வானத்தில் இன்னும் சூரியன் முழுமையாக வெளி வரவில்லை ஆனாலும் அவன் ஆழ்கடலிலிருந்து எட்டிப் பார்ப்பது போலப் பாதி வடிவுடன் தோன்றுகிறான். அப்போது கீழ்வானம் முழுவதும்

செம்மை ஒளி. கீழ்த்திசையாகிய உமையென்னும் கன்னி இலேசான செம்பொடியை முகம் முழுதும் பூசிக்கொண்டு நடுவே பளிச்சென்று சிவப்புக் குங்குமத்தை இட்டுக் கொண்டிருக்கிறாளோ?

காலைச் சிவப்பிலே ஒளியும் ஊக்கமும் மலர்ச்சியும் நம்பிக்கையும் தோன்றுகின்றன. அந்த உதயச் சிவப்பிலே இறைவனைக் காண்கிறார் அம்மையார். இறைவன் செம்மேனி அம்மான் அல்லவா? அவன் திருமேனி காலையில் சூரியோதயத்தில் வானில் செந்நிறம் படர்ந்திருக்கும் காட்சியைப் போலத் தோன்றுகிறதாம்.

**காலையே போன்றிலங்கும் மேனி.**

விடிந்த பிறகு எழுந்து கீழ்வானத்தைப் பார்த்துக் கும்பிடலாம் போல் இருக்கிறது. அங்கே எம்பெருமானுடைய திருமேனியைக் காணும் கண்ணும் கருத்தும் இருந்தால் உடனே கும்பிடத்தானே தோன்றும்?

காலைநேரம் போய்ப் பகல் வருகிறது. கதிரவன் மெல்ல மெல்ல வானத்தில் ஏறுகிறான். அவன் மேலே ஏற ஏறச் செவ்வண்ண ஒளி போய் எங்கும் ஒரே வெள்ளொளி பரவுகிறது. கடும்பகலாகிய நண்பகல் வேளையில் எங்கே பார்த்தாலும் கதிரவனுடைய கதிர்கள் வெண்ணிறமாக ஒளி வீசுகின்றன.

அந்தக் கடும்பகலில், சிவபெருமானைக் காண்கிறார் அம்மையார். இறைவன் செம்மேனியனாக இருந்தும், திருமேனி முழுதும் திருநீற்றைப் பூசியிருக்கிறான். அதனால் பால்வண்ண மேனிப் பிரானாகக் காட்சி தருகிறான். ஒரே வெள்ளை முழு நீறு பூசிய முதல்வன் இப்போது வெண்ணிற மேனிப் பிரானாகத் தோன்றுகிறான். காலையில் தோன்றிய செம்மேனி மேல் திருநீறு பூசி வெண்ணிறம் கப்பிக் கொண்டது போல இந்த நண்பகல் வெயில் எங்கும் வெண்ணிறத்தைப் பூசியிருக்கிறது. ஆகவே கடும் பகல் வெண்ணீற்றை நினைக்கச் செய்கிறது.

கடும்பகலின் வேலையே போன்று இலங்கும் வெண்ணீறு,

என்று பாடுகிறார் அம்மையார்.

இதோ அந்தி மாலை வந்துவிட்டது. இப்போது மேல் வானம் ஒரே குங்குமச் சிவப்பாகச் சிவந்திருக்கிறது. அந்தி மாலைக்கு அடையாளம் செக்கர்வானம். அந்த நேரத்தில் இறைவனுடைய செஞ்சடை நினைவுக்கு வருகிறது அம்மையாருக்கு.

மாலையில் தாங்குஉருவே போலும் சடைக்கற்றை.

அந்திமாலை கடந்து, இருள் வந்துவிட்டது. எங்கும் இருள் படர்ந்து கவிகிறது. கருமை அடர்ந்த இருள் இரவிலே உலகத்தைப் போர்த்து மூடியிருக்கிறது. காலைச் செம்மையில் இறைவன் திருமேனியின் வண்ணத்தையும், நண்பகல் வெண்மையில் இறைவன் திருமேனியில் பூசிய வெண்ணீற்றின் வெண்மையையும், அந்திச் செவ்வானத்தில் இறைவன் சடைக்கற்றையையும் நினைத்த அம்மையார், இரவிருளைக் காணும்போது எதை நினைக்கிறார்.

இறைவனுடைய திருக்கழுத்தில் ஆலகால நஞ்சு இருக்கிறது. அது ஒரே கறுப்பு. இந்த இரவின் இருள அந்தத் திருக்கழுத்தை நினைப்பூட்டுகிறது.

மற்றுஅவற்கு
வீங்குஇருளே போலும் மிடறு.

காலை, கடும்பகல், மாலை, இரவு என்ற நான்கு வேளைகளிலும் இறைவனை நினைக்கும் வழியைக் காரைக்காலம்மையார் நமக்குச் சொல்லிக் கொடுத்து விட்டார். காலையில் செவ்வண்ணமேனிச் சிவபெருமானே என்றும், நண்பகலில் வெண்மையயடைய நீறுபூசும் நின்மலனே என்றும், அந்திச் செவ்வானச் சடையுடைய அப்பனே என்றும், இரவிருளைய நீலகண்டப் பெருமானே என்றும் நான்கு வேளைகளிலும் முறையே இறைவனைப் போற்றி வழிபடலாம்.

காரைக்கால் அம்மையார் பாடல் இந்த உபாயத்தை நமக்குக் கற்பிக்கிறது.

காலையே போன்றிலங்கும் மேனி, கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு, மாலையின்
தாங்குருவம் போலும் சடைக்கற்றை மற்று அவற்கு
வீங்கிருளே போலும் மிடறு.

[சிவபெருமானாகிய அவனுக்கு உதய வேளையாகிய காலை நேரத்தைப் போலச் சிவப்பாகத் திருமேனி விளங்கும்; கடும் பகலாகிய நண்பகல் வேளையைப் போல அவன் திருமேனியில் அணிந்த வெண்மையான திருநீறு விளங்கும்; மாலை நேரத்தில் வானம் தாங்கும் சிறப்புஉருவம் போல அவன் சடையின் தொகுதி தோன்றும்; மிக்க இருளைப் போல அவனுடைய நீலகண்டம் தோன்றும்.

அவற்கு என்பதை ஒவ்வொரு வாக்கியத்திலும் கூட்டிப் பொருள் செய்ய வேண்டும். அவன் என்பது சிவபெருமானைச் சுட்டியது: உலகறி சுட்டு கடும் பகல்-நடுப்பகல் வேலை-வேளை கடும பகலின் வேலை-கடும்பகலாகிய வேளை; இன் வேண்டா வழிச் சாரியை. மாலையின் உரு, தாங்கு உருமு, மற்று; அசை. வீங்கு-மிக்க.]

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 65-ஆவது பாடல்.

# 67. கழுத்தில் உள்ள நஞ்சு

சிவபெருமானுடைய திருமேனி செக்கச் செவேலென்றிருக்கும். "சிவன்எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்" என்று திருநாவுக்கரசர் பாடுகிறார் அப்பெருமான் அணிந்திருக்கும் பொருள்கள் வேறு வேறு நிறமாக இருக்கும். சிவந்த மேனியாகிய நிலைக்களத்தில் அவை எடுப்பாகத் தெரியும். அவருடைய திருமார்பில் நாகப்பாம்மை அணிந்திருக்கிறார் அது தலைப்பக்கம் கரிய நிறமுடையதாகத் தோன்றுகிறது. சிவப்பான திருமேனியிலே அது புரளுவதை எளிதில் இனம் கண்டுகொள்ளலாம். அது படம் எடுத்து ஆடும். ஆகவே அதைக் காரைக்காலம்மையார், "வைத்து ஆடும்....பாம்பு" என்று சொல்கிறார்.

இறைவனுடைய திருக்கழுத்தில் கருநிறம் இருக்கிறது. அது நீலகண்டம் அல்லவா? காரைக்கால் அம்மையார் அடிக்கடி அந்த நீலகண்டத்தைப் பற்றிச் சொல்லுவார். அந்தக் கண்டம் கறுக்காவிட்டால் ஆலகால நஞ்சினால் தேவர்கள் இறந்து போயிருப்பார்கள். அவர் மனைவிமார் கழுத்தில் மங்கல அணி இல்லாமல் போயிருக்கும்.

சிவபெருமானுக்கு நஞ்சைக் கண்டாலும் அச்சம் இல்லை; நஞ்சை உடைய பாம்பைக் கண்டாலும் அச்சம் இல்லை அவர் அமிர்தமயமானவர் "கண்ணார மூதக் கடலே போற்றி" என்று மணிவாசகர் பாடுவார். மரணத்தை உண்டாக்கும் காலனே சிவபெருமானால் மரணம் அடைந்தான் என்றால் இந்த விஷமெல்லாம் அவருக்கு எந்த மூலை?

விஷம் அவருடைய திருக்கழுத்தில் நீலமணியைக் கட்டியது போல ஒளிர்க்கிறது திருமார்பிலே உள்ள பாம்பும்

நீல நிறமுள்ள கழுத்தை உடையதாக இருக்கிறது. உடம்பெல்லாம் வெளிர் நீலம்; கழுத்துப் பக்கம் கருநீலம். நாம் அஞ்சும் பகையாகத் தோன்றும் பாம்பு, பெருமானுக்கு நகையாக இருக்கிறது.

காரைக்கால் அம்மையார் இறைவர் திருமேனியைப் பார்க்கிறார் 'அவருடைய நீலகண்டத்தைஉற்றுப் பார்க்கிறார். அதன் கரிய நிறத்தைக் கூர்ந்து பார்க்கிறார். பிறகு எம்பெருமான் திருமார்பில் படம் எடுத்துப் படரும் பாம்பைப் பார்க்கிறார். அதன் கழுத்தும் கரியதாக இருக்கிறது. பெருமான் கழுத்திலும் கறுப்பு; பாம்பின் கழுத்திலும் கறுப்பு. இரண்டும் இப்படி இருப்பதற்கு என்ன காரணம்? ஒருகால் எம்பெருமானிடம் வருவதற்கு முன் சுத்தக் கழுத்தை உடையதாக இருந்து அவரிடம் சார்ந்தபிறகு அந்த நிறம் வந்ததோ?

காரைக்கால் அம்மையார் யோசனை பண்ணுகிறார். சிவ பெருமானையே ஒரு கேள்வி கேட்கிறார். விசித்திரமான கேள்விதான் குழந்தை தன் தகப்பனாரை நோக்கிப் பலபல கேள்விகளைக் கேட்கும் அவ்வாறு காரைக்கால் அம்மையார் பெருமானை நோக்கி இந்தக் கேள்வியைக் கேட்கிறார்.' இப்படி யெல்லாம் கேட்பதில் என்ன நன்மை இருக்கிறது? சிவ பெருமான் விடை சொல்லப் போகிறாரா?' என்று நமக்குத் தோன்றும். எப்படியாவது இறைவனோடு உரையாட வேண்டும் அவன் விடை சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அம்மையார் கேட்டே விடுவார். அப்படி எத்தனையோ கேள்விகளை அவர் கேட்டிருக்கிறார். இனியும் கேட்பார்.

தனித் துண்டுகளாக வண்ணம் பூசிய கட்டைகள் அவற்றைக் குழந்தைகள் விளையாடுவதற்காகச் செய்து பெட்டியில் வைத்து விற்கிறார்கள். அந்தக் கட்டைகளை வெவ்வேறு வகையில் அடுக்கி வீடு மாதிரியும், கோபுரம் போலவும் வேறு வடிவங்கள் போலவும் உருவாக்கலாம். குழந்தைகள் உற்சாகமாக வைத்து விளையாடும் பண்டங்கள்

அவை. அந்தக் கட்டைகளை அடுக்கி அடுக்கிப் பார்த்துக் குழந்தைகள் ஆனந்தத்தை அடைவார்கள்.

இறைவரிடம் பக்தி கொண்டவர்கள் அவருடைய நாமத்தையும் புகழையும் பல வகையில் எண்ணுவார்கள்; பேசுவார்கள். தம்முடைய மனநிலைக்கு ஏற்ப இறைவரைப் பற்றிய எண்ணங்களிலும் கற்பனைகளிலும் ஈடுபடுவார்கள். கட்டைகளைப் பலவேறு வகையில் அடுக்கி அழகு பார்த்து இன்புறும் குழந்தைகளைப் போல, அன்பர்கள் இறைவரைப் பலபடியாக அலங்கரித்துப் பார்த்து இன்புறுவார்கள்.

"உன்னைச்சிங் காரித்து உட் அழகைப் பாராமல்
என்னைச்சிங் காரித் திருந்தேன் பராபரமே!"

என்ற தாயுமானவர் பாட்டில் இந்தக் கருத்தைக் காண்கிறோம். அன்பர்கள் இறைவரை மலர், ஆடை, அணி முதலியவற்றால் புனைந்து தரிசிப்பார்கள். தமிழ்ப் புலமையுடைய பக்தர்களோ பெருமான் புகழைப் பல வடிவத்தில் கவியாகப் பாடுவார்கள். தம்முடைய அறிவையும் கற்பனையையும் பயன்படுத்திப் பல பல பாமாலைகளைச் சூட்டுவார்கள்.

காரைக்காலம்மையார் சிவபெருமானையும் அவர் அணிந்திருக்கும் பொருள்களையும் அவர் செய்தருளிய செயல்களையும் நினைவு கூர்ந்து பல பல வகையான கற்பனையில் ஈடுபடுவார். இறைவருடைய செயல்களைப் பற்றி வினவுவார். அவருடைய கோலத்தைப் பற்றிய விளுக்களை விடுப்பார். தம்முடைய புலமையையும் கற்பனையையும் இறைவரைப் பற்றிய செய்திகளில் இணைத்துப் பாடுவார். சிவபெருமானைப் பற்றிய எண்ணங்களிலே மூழ்கிக் காலத்தைப் போக்கும் இயல்புடையவராதலின் அவருடைய எண்ணங்கள் யாவும் அப்பெருமானைச் சார்ந்தே படர்கின்றன.

காரைக்கால் அம்மையார் சிவபெருமானை வினவும் வினவாக உள்ள பாடல்களில் ஒன்றை இப்போது பார்க்கலாம்.

பெருமானுடைய திருக்கழுத்திலும் பாம்பின் கழுத்திலும் கரிய நிறத்தைக் கண்ட அம்மையார், "இரண்டிடங்களிலும் எப்படி இந்தக் கறுப்பு வந்தது?!" என்று எண்ணமிடுகிறார். சிவபிரான் திருக்கழுத்தில் கறுப்பு அமைந்ததற்குரிய காரணம் அவர் அறிந்ததே ஆனால் இந்தப் பாம்புக்கும் எப்படிக் கழுத்தில் கருநிறம் வந்தது?

சிவபெருமானை நோக்கி வினவத் தொடங்குகிறார். "திருக்கழுத்தில் ஆலகால நஞ்சை அடக்கி வைத்துக்கொண்ட பெருமானே?" என்று அவரை விளிக்கிறார்.

மிடற்றில் விடம் உடையீர்.

'உம்முடைய மார்பில் படம் விரித்து ஆடுகிறதே, அந்தப் பாம்பின் கழுத்தும் கரியதாக இருக்கிறதே! கருமை பரந்த இருளைப் போல அந்தப் பாம்பின் கழுத்தில் உள்ள வண்ணம் மிகக் கரியதாக இருக்கிறதே!'

மிடற்றகத்து
மைத்தாம் இருள்போலும்
வண்ணம் கரிதாலோ,
பைத்தாடும் நும்மார்பிற் பாம்பு.

'இதற்கு என்ன காரணம்? அந்தப் பாம்பு உம்முடைய கழுத்தைச் சுற்றிக் கொண்டிருக்கிறதே! அந்தக் கண்டத்தை நக்கி நக்கி அங்குள்ள விடத்தின் கறுப்பு அதன் கழுத்தில் ஏறி விட்டதோ? அதுவும் அந்த விடத்தைத் தன் கழுத்தில் கொண்டுவிட்டதோ?'

உம்மிடற்றை நக்கி
மிடற்றில் விடம்கொண்ட வாறோ?

தந்தையைக் குழந்தை சில கேள்விகளைக் கேட்கும்போது அயலாருக்கு அந்தக் கேள்வி பைத்தியக்காரத்தனமுடையதாகத் தோன்றும் ஆனல் தந்தைக்கோ தன் குழந்தை தன்னை அன்போடு கேட்கிறதே என்ற மகிழ்ச்சியே உண்டாகும். அம்மையாரும் குழந்தை போன்ற மன நிலையில் இருந்து தம்மை ஆண்டருளிய தந்தையைக் கேட்கிறார்

**மிடற்றில் விடம்உடையீர், உம்மிடற்றை நக்கி**
**மிடற்றில் விடம்கொண்ட வாறே? மிடற்றகத்து**
**மைத்தாம் இருள்போலும் வண்ணம் கரிதாலோ?**
**பைத்தாடும் நுமமார்பில் பாமபு.**

[திருக்கழுத்தில் ஆலகால நஞ்சை உடைய எம்பெருமானே, உம்முடைய திருமார்பில் படம் எடுத்தாடும் பாம்பு, தன் கழுத்தில் கருமை பரவிய இருள் போல நிறம் கரியதாக இருக்கிறது; அது உம்முடைய திருக்கழுத்தை நக்கி அங்குள்ள விடத்தைத் தன் கழுத்திலும் கொண்ட வண்ணமோ இது?

விடம்—ஆல கால நஞ்சு. பாம்பு கழுத்தைச் சுற்றிக் கொண்டிருப்பதனுல் இறைவர் திருக்கழுத்தை நக்கும் வாய்ப்பைப் பெற்றது. கொண்டவாறே — கொண்ட விதமோ? 'வண்ணம்', 'பாம்பு கொண்டவாறே' என்று முடிக்க வேண்டும். மைத்தாம் —கருமை பரவிய; மைத்து ஆம்-கரியதாகிய என்றும் பொருள் கொள்ளலாம. வண்ணம் இருள் போலும் கரிது. ஆல், ஓ: அசைகள். பைத்து—படம் எடுத்து. பாம்பு கரிது, கொண்டவாறே என்று முடிக்க.]

அற்புதத் திருவந்தாதியில் 66-ஆம் பாடல் இது.

# 68. இறைவன் என்னும் மலை

மிகப் பெரிய சான்றோர்களை மலை என்று சொல்வார்கள். "மலை போல நீ இருக்கும்போது எனக்கு என்ன குறை?" என்று உலக வழக்கில் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். சிறந்த ஆசிரியர்களுக்கு மலையை உவமை கூறுவர்.

''அளக்கல் ஆகா அளவும் பெருமையும்
துளக்கல் ஆகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளம்தரும் வண்மையும் மலைக்கே''

என்பது மலையின் சிறப்பைச் சொல்லும் சூத்திரம். இந்த இலக்கணங்கள் யாவும் சான்றோர்களிடம் பொருந்தியிருக்கும்.

இறைவனிடம் மிகச் சிறப்பாக அந்த இயல்புகள் அமையும். அவன் அளக்கல் ஆகா அளவுடையவன். எந்த அளவைகளாலும் அளந்து வரையறை செய்ய முடியாதவன் அவன். ஆதலால் அவனை அப்பிரமேயன் என்று கூறுவர். துளக்கலாகா நிலை என்றது, சலனமற்ற இயல்பைக் கூறுவது. இறைவன் அசஞ்சலன். தோற்றம் சிறந்து நிற்பவன் இறைவன். வறப்பினும் வளந்தரும் வண்மையும் உடையவன் அவன்; அதாவது எங்கே கருணை வற்றிப் போனாலும் அவனுடைய கருணை வற்றாது. வற்றாத பெருங் கருணையை உடையவன் அவன். "நீ மறந்தாய் எனினும், அகிலமெலாம் அளித்திடும் நின் அருள் மறவாதென்றே, இன்னம்மிகக் களித்திங்கே இருக்கின்றேன்" என்று அந்த அருளைச் சிறப்பித்துப் பாடுவார் அருட்பிரகாச வள்ளலார்.

இத்தகைய இயல்புகளை உடைமையால் இறைவனை, "மலைய்ய" என்று போற்றுவது அன்பர்கள் வழக்கம். "வேடர்

குலப்பிடிதோய் மலையே" என்று முருகப்பெருமானைச் சொல்வார் அருணகிரிநாதர். "மாலமுதப் பெருங்கடலே, மலையே நின்னைத் தந்தனை" என்பது மாணிக்கவாசகர் திருவாக்கு. இப்படி எந்த அடையும் இன்றி, 'மலையே' என்று அழைத்து விண்ணப்பித்துக் கொள்ளும் இடங்கள் அருளாளர் வாக்கில் பல பல.

காரைக்கால் அம்மையாரும் இறைவனை வேறு வகையில் மலை என்று சொல்கிறார். மலையின் தோற்றத்தையும் இறைவனின் திருக்கோலக் காட்சியையும் ஒப்பிட்டுச் சொல்லுகிறார். அவன் மலையைப் போன்ற தோற்றம் அளிக்கிறானும். அவனிடத்தில் உள்ள பொருள்கள் மலையை நினைப்பூட்டுபவையாக இருக்கின்றனவாம். ஆகையால், "இறைவன் திருவடிவத்தில் ஒரு மலையைப் போலக் காட்சி அளிக்கிறான்" என்று சொல்ல வருகிறார்.

மலையில் மரங்களும் விலங்குகளும் பாம்பு முதலிய ஊர்வனவும் இருக்கும். உயர்ந்து ஓங்கிய மலைமுகட்டில் இரவில் சந்திரன் தோன்றுவான். ஒரு புறம் பாம்பு ஓடும்; ஒரு புறம் மென்மையான மான் தாவும்; பின்னும் ஒரு புறம் வன்மையான புலி பாயும். ஒரு பக்கத்தில் அருவி வீழும். இத்தகையவற்றை இறைவனிடமும் காணலாம்.

அவன் திருவாபரணமாகப் பாம்பை அணிந்திருக்கிறான். தலையில் சந்திரனைச் சூடியுள்ளான். தாருகாவனத்து முனிவர் அவனைப் பொருவதற்கு அனுப்பிய மானை ஏந்தியிருக்கிறான். அவர்கள் அனுப்பிய புலியை உரித்து அதன் தோலை உடுத்திருக்கிறான் அதை மட்டும் பார்த்தால் புலியோ என்று ஐயுறும்படி இருக்கும். அவனுடைய திருமுடியிலிருந்து கங்கை அருவி போல வீழ்கிறது. பகீரதனுக்காக அவ்வாறு விழச் செய்தான். இவை எல்லாம் இருப்பதனால் அவன் மலையைப் போலத் திகழ்கிறானும்.

**பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்**
**தாம்பயின்று தாழருவி தூங்குதலால்.**

இவ்வாறு மலைக்கும் இறைவனுக்கும் உள்ள ஒப்புமையைச் சொன்னார்.

இறைவன் திருமேனி செம்பொன் வண்ணம் உடையது; "பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந்திலங்கும்" என்பது பொன்வண்ணத்தந்தாதி அந்தப் பொன்னிறம் ஒளி ஓங்கிச் சுடர்விடுகிறது அவன் நெற்றியிலே கண்ணை உடையவன். அது அவனுக்கென்றே அமைந்த சிறப்பான அடையாளம்.

**ஆம்பொன்**
**உருவடிவில் ஓங்கொளிசேர் கண்ணுதலான்.**

அவனுடைய அழகுடைய தெய்வத் திருவடிவம் மேலே சொன்ன பொருள்களை உடைமையால், அவனை மலை என்றே சொல்லிவிடலாம். யாவரும் விரும்பும் மலை அவன். பாம்பும் புலியும் இருந்தாலும் அவனை அன்பர்கள் விரும்புவார்கள்.

**கோலத்**
**திருவடிவில் மேய சிலம்பு.**

மற்ற மலைகளில் பாம்பும் புலியும் இருந்தால் அந்த இடங்களுக்கு யாரும் விரும்பிச் செல்லமாட்டார்கள். இறைவனோ தன்னிடம் உள்ளவற்றையெல்லாம் கொடுமை இல்லாதவையாகச் செய்து விடுபவன் ஆகையால் அவனை அணுகுவதற்கு அன்பர்கள் விரும்புவார்களேயன்றி, அஞ்சி நடுங்கமாட்டார்கள்

இவற்றையெல்லாம் சேர்த்து அம்மையார் பாடுகிறார்.

**பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்**
**தாம்பயின்று தாழ்அருவி தூங்குதலால்—ஆம்பொன்**
**உருவடிவில் ஓங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்**
**திருவடிவின் மேய சிலம்பு.**

[அணிகளாகிய பாம்பும், சந்திரனும், மென்மையான மானும், பாய்கின்ற புலியும் தாம் அவனிடத்தில் பல காலம் இருந்து பயின்று, கீழே விழுகிற கங்கையாகிய அருவி ஒழுகு வதால், பொன்னான நிறத்தையுடைய திருவுருவத்தில் சிறந்து நிற்கின்ற ஒளியைச் சேர்ந்தவனும், நெற்றியிலே கண்ணை உடையவனுமாகிய சிவபெருமான் தன்னுடைய அழகிய தெய்வத் திருவடிவினால், அன்பர்கள் விரும்பிய மலையாக உள்ளான்.

பாம்பு, சிவபிரான் அணிகலனாக அணிந்தது. மதி அவன் திருமுடியில் சூடியது பாய்புலி அவன் உரித்து ஆடையாக அணிந்தது; "புலித்தோலை அரைக்கு அசைத்து" என்பது தேவாரம். தாழ்அருவி—கீழே விழும் அருவி; கங்கை தாள் அருவி என்பது ஒரு பாடம். தூங்குதலால்-கீழே தொங்குவது போல இடையறாது பாய்வதால். ஆம்பொன் உரு வடிவில்—ஆகிய பொன் நிறத்தைப் பெற்ற வடிவத்தில், வடிவில் ஒளி சேர் கண்ணுதலான். கண்ணுதலான்—நெற்றியில் கண்ணை யுடையவன். கோலம் — அழகு. திரு — தெய்வத்தன்மை. மேய—மேவிய; அன்பர்கள் விரும்பிய. சிலம்பு—மலை ]

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 67-ஆம் பாடல்.

# 69. திருமுடியின் கோலம்

அகப் பொருளில் களவு, கற்பு என்ற இருவகை நிலை உண்டு. திருமணம் செய்வதற்கு முன் காதலனும் காதலியும் உள்ளம் ஒன்றுபட்டு வாழும் வாழ்க்கையைக் களவென்றும் திருமணம் செய்து கொண்டு கணவன் மனைவியராக வாழும் நிலையைக் கற்பென்றும் சொல்வர். கற்பு வாழ்க்கையில் ஊடலும் கூடலும் நிகழும்.

உலகத்திலுள்ள மக்கள் இன்னவாறு வாழவேண்டு மென்று இறைவன் தன் செயலால் காட்டுகிறான். மனைவி மக்களோடு அறம் செய்து வாழும் வாழ்வு சிறந்தது என்பதை அவனும் உமாதேவியாரோடும் கணபதியோடும் முருகனோடும் வாழ்ந்து காட்டுகிறான். கணவன் மனைவியிடையே ஊடல் நிகழ்வது இயல்பு. அந்த ஊடல் இறைவனுடைய திருவிளையாடலிலும் உண்டு. அம்பிகை ஊடுவதும் அதைப் போக்க இறைவன் முயலுவதுமாக உற்சவம் நடப்பதுண்டு. திருவண்ணாமலையில் திருவூடல் தெரு என்றே ஒரு தெரு இருக்கிறது.

உமாதேவி ஊடுவதாகவும் அந்த ஊடலை நீக்க இறைவன் பல வகையில் முயல்வதாகவும் கற்பனை செய்து புலவர்கள் பாடியிருக்கிறார்கள். அவ்வாறு இறைவன் முயலும்போது இறைவியை வணங்குவதாகச் சொல்வதும் மரபு. அருள்மயமான பிராட்டி உளம் குளிர்ந்தால்தான் உலகுக்கு இன்பம் விளையும். ஆதலின் அந்தப் பிராட்டியின் ஊடலைத் தணிக்க இறைவன் பணிவது தவறு ஆகாது.

இப்படி, அம்பிகையின் ஊடலை நீக்க இறைவன் பணியும் செயலை நினைத்துக் காரைக்காலம்மையார் ஒரு பாடல் பாடு பாடுகிறார்.

இறைவி தன் திருவடிகளில் சிலம்பை அணிந்திருக்கிறாள் - "சிலம்பணி கொண்ட செஞ்சீறடி பங்கன்" என்று திருக்கோவையாரில் மாணிக்கவாசகர் பாடுகிறார். அம்பிகை ஊடல் கொண்டபோது அந்தச் சிலம்பு கல்கல் என்று ஒலிக்கக் கடுகநடை நடந்து இறைவனிடத்தினின்றும் அகன்று செல்கிறாள்.

அப்போது அந்தப் பிராட்டியின் ஊடலைப் போக்க இறைவன் எண்ணுகிறான்.

**சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டி**

வேறு யாரையாவது அனுப்பிச் சமாதானமான வார்த்தைகளைச் சொல்லி அந்த ஊடலைத் தவிர்க்க அவன் விரும்பவில்லை. அப்படித் தூது அனுப்பி ஊடலைப் போக்குவதும் உண்டு. பரவையார் கொண்ட ஊடலைத் தவிர்க்கச் சுந்தரமூர்த்தி நாயனுருக்காக இறைவன் தூது சென்ற வரலாறு பெரியபுராணத்தில் வருகிறது

இங்கே அப்படிச் செய்யாமல் தானே முயன்று பிராட்டியின் ஊடலைத் தவிர்க்கஎண்ணுகிறான் இறைவன் அவளுடைய சிலம்பை அணிந்த அடியில் வீழ்ந்து வணங்குகிறான் அம்பிகையின் திருவடிகளில் செம்பஞ்சுக் குழம்பைப் பூசியிருக்கிறாள். இறைவன் வணங்கும்போது அந்தக் குழம்பு அவன் திருமுடியில் படுகிறது.

இறைவனுடைய சடைமுடி இயல்பாகவே சிவப்பாக உள்ளது. இப்போது அம்பிகையின் திருவடியில் பூசிய செம்பஞ்சுக் குழம்பு பட்டுப் பின்னும் சிவப்பாகத் தோன்றுகிறது. அது பார்ப்பதற்கு அழகாக, நலம் பெற்று விளங்குகிறது. அந்தச் சிவப்பு, அந்தரங்கத்தில் நிகழ்ந்த செயலை விளம்பரப் படுத்திவிடுகிறது!

இவ்வாறு வணங்கியதனால் அவனுடைய சடைமுடி செக்கச்செவேலென்று நிறம் பெற்று விளங்குகிறது. அந்தத்

திருமுடியில் அவன் நிறைவுபெறாத இளம்பிறையைச் சூடியிருக்கிறான். அதன் நிலவொளியில் இந்தச் சிவப்புப் பளிச்சென்று விளங்குகிறது ஊடலைத் தீர்க்கும்பொருட்டு வணங்கித் தன் முடிக்குச் செவ்வண்ணக் கோலத்தை உண்டாக்கியிருக்கிறான். வானத்தில் தோன்றும் செக்கர் வானத்தைக் காட்டிலும் இப்போது சிவப்பாக இருக்கிறது அந்த முடி. முன்பு எல்லாம செஞ்சடை செக்கர்வானத்தை ஒத்து விளங்கும் இப்போது அதைவிட அதிகச் சிவப்பாகக் கோலம் காட்டுகிறது.

அந்தக் கோலத்தை வருணிக்கிறார் அம்மையார்.

**சிலம்படியாள் ஊடலைத் தான்தவிர்ப்பான் வேண்டிச்**
**சிலமபடிமேல் செவ்வரத்தம் சேர்த்தி – நலம்பெற்று**
**எதிரய செககரினும் இக்கோலம் செய்தான்**
**முதிரா மதியான் முடி.**

[முதிராத இளம்பிறையை அணிந்த இறைவன் சிலம்பை அணிந்த திருவடியை உடைய அம்பிகையின் ஊடலைத் தானே போக்குவதற்கு விரும்பி, அப் பெருமாட்டியின் சிலம்படியின் மேல் உள்ள செம்பஞ்சுக் குழம்பைப் படச்செய்து, அழகு பெற்று, முன்பு ஒபபாக உள்ள செவ்வானத்தை விடச் சிவப்பாக உள்ள இக் கோலத்தைத் திருமுடிக்குச் செய்தான்.

மதியான், வேண்டி, சேர்த்தி, முடி, இக்கோலம் செய்தான் என்று கூட்டிப் பொருள் செய்க.

ஊடலால் பிரிந்து சென்றபோது சிலம்பின் ஒலி கேட்டதால், அதைக் கொண்டு சிலம்படியாள் என்றார் பின்பு இறைவன் பணியும்போதும் அச்சிலம்பு ஒலித்தமையால் மீண்டும் சிலம்படியாள் என்றார். முதலிற் சிலம்பு ஒலித்தது

ஊடலால் பின்பு சிலம்பு ஒலித்தது, ஊடல் தீர்ந்தமையால். செவ்வரத்தம்—செம்பஞ்சுக் குழம்பை. நலம்—அழகு. எதிர் ஆய இதற்கு முன் ஒப்பாக இருந்த. செக்கரினும்—செவ் வானத்தைவிட. இக் கோலம் என்ற சுட்டு நெஞ்சறி சுட்டு; அம்மையார் தம் உள்ளத்தில் கற்பனை செய்து கண்ட கோலம் அது. முதிராமதி—பிறை].

இது அற்புதத் திருவந்தாதியில் 68-ஆவது பாடல்.

# 70. அவலம் உண்டோ?

சிவபெருமான் காலனை உதைத்த கால காலன். அவனை நம்பிப் பக்தி செய்வாருக்கு யமபயம் இல்லை. "நமனார்க்கு இங் கேதுகவை நாம்இருக் கும் இடத்தே" என்று கூறும் மிடுக்கு அவர்களுக்கு உண்டு. "நாமார்க் கும் குடி அல்லோம்; நமனை அஞ்சோம்" என்று பாடுவார் அப்பர் சுவாமிகள்.

இத்தகைய உறுதிப்பாட்டைக் காரைக்காலம்மையாரும் பெற்றிருந்தார். அதை ஒரு பாட்டில் சொல்கிறார்

சிவபெருமான் தன்னுடைய திருமுடியின்மேல் வளைந்த பிறையை அணிந்திருக்கிறான். அந்தச் சந்திரன் வளர்வதோ தளர்வதோ இன்றி, மாயாமல் என்றும் இறைவன் திருமுடி மேல் இருக்கிறான். வானத்தில் தோன்றும் மதிக்குத் தேய்வதும் வளர்வதும் உண்டு. இறைவனைச் சேர்ந்த திங்களுக்கோ அவை இல்லை. இறைவனைச் சேர்ந்தவர்கள் தளராமலும் மாயாமலும் இருப்பார்கள் என்பதை அந்தத் திங்களே காட்டுகிறது.

இறைவன் மூன்று கண்ணை உடையவன். இந்த அடையாளம் அவன் ஒருவனுக்குத்தான் உண்டு.

**முடிமேல் கொடுமதியான், முக்கணான்.**

அவனுடைய அடி நல்ல அடி; நன்மையைத் தரும் அடி. நன்மையாவது பிறப்பாலும் இறப்பாலும் துன்பம் அடையாத நலம்.

> **"கற்றதனால் ஆய பயனென்கொல், வாலறிவன்**
> **நற்றாள் தொழாஅர் எனின்"**

என்ற குறளின் உரையில், 'பிறவிப் பிணிக்கு மருந்தாதலின் நற்றாள் என்றார்' என்று விளக்கியுள்ளார் பரிமேழலகர். பிறவிப் பிணிவும் இறப்பும் இரட்டையாக வரும பிறவிப் பிணி உண்டானால் இறப்பும் உண்டு. பிறவி இல்லையானால் இறத்தலும் இல்லை. ஆகவே பிறப்பிறப்பை நீக்கும் திருவடியை இங்கே அம்மையார், 'நல்ல அடி' என்கிறார்.

முக்கணான் நல்ல அடி.

'அந்த அடியை வணங்கி எம்முடைய தலைமேற் கொண்டோம். ஆதலால் இனி எமக்கு வாதனை இல்லை. எனவே, கூற்றுவனை நாம் மதிக்க மாட்டோம்' என்கிறார்.

நல்ல
அடிமேற் கொடுமதியோம் கூற்றை,

சிவபக்தர்கள் இறந்து விட்டால் கால தூதுவர்கள் வந்து அவர்களைக் கொண்டு செல்ல மாட்டார்கள்; சிவகணங்கள் அழைத்துச் சென்று சிவலோகத்திற் சேர்ப்பார்கள் மற்ற வர்கள் மரணம் அடைவதற்கும் சிவபக்தர்கள் உயிர்பிரிவதற் கும் இதுதான் வேறுபாடு. மற்றவர்கள் உயிர் விட்டால் வேறு ஓர் உடம்பில் புகுவார்கள். ஒரு சிறையிலுள்ள குற்றவாளி வேறு ஓர் சிறைக்கு மாற்றப்படுவது போன்றது இது. பக்தர்கள் உயிர் விட்டால், சிறைத்தண்டனை நீங்கி னவன் விடுதலை பெற்று அடைவதைப் போல,சிவலோகத்தை அடைவார்கள். அவர்களிடத்தில் காலனுக்கும் வேலை இல்லை; பிரமனுக்கும் வேலை இல்லை.

"சந்ததமும் வேதமொழி யாதொன்று
பற்றினது தான்வந்து முற்றும் எனலால்
சகமீ திருந்தாலும் மரணம்உண்
டென்பதைச் சதா நிஷ்டர் நினைவதில்லை"

என்பது தாயுமானவர் பாடல்.

'இறைவனுடைய திருவடியைத் தலைமேற் கொண்டமையால் கூற்றுவனை ஒரு பொருளாக மதித்து அஞ்ச மாட்டோம்' என்று அம்மையார் சொல்கிறார்.

இனிமேல் கூற்றுவனால் உண்டாகும் துன்பம் இல்லை என்ற உணர்வோடு, இங்கே வாழும் போதும் பெருமிதத்தோடு வாழும் நிலை அன்பர்களுக்கு உண்டாகிறது. "இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை" என்று அப்பர் சொல்வதுபோல இந்த உலகிலேயே துன்பமின்றி இன்பத்துடன் நல்ல வண்ணம் வாழும் வாழ்க்கை உண்டாகிறது இந்த உலகில் யாருக்கும் தலை தாழ்ந்து குனியவேண்டிய நிலை அவர்களுக்கு இராது.

### படிமேல் குனியவலம்

இறைவனுக்கு அடியார் என்பதிலே உண்டாகும் எக்களிப்பு வேறு எதனாலும் வராது. அவனுக்கு அடிமையான பண்பை யாவரும் கொண்டாடுவார்கள் 'பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளே சொல்லும்போது மற்றவர்கள் பாராட்டுவது என்ன அதிசயம்? 'எங்களிடத்தில் ஆதம் இந்த அடிமைத் தன்மையைப் பெரியவர்கள் கொண்டாடும் பேறு பெற்றோம்' என்று பெருமிதத்தோடு சொல்கிறார் அம்மையார்.

### ஆம்அடிமை கொண்டாடப் பெற்றோம்

வருங்காலத்தில் யமன் வருவானே என்று மிகப் பெரியவர்களும் அஞ்சும் அச்சம் இல்லை நிகழ்காலத்திலோ எல்லோருக்கும் மேலவனாகிய சிவபெருமானுக்கு அடியார்களான தன்மையால் யாருக்கும் தலை தாழ்ந்து குனியவேண்டிய நிலையில் இல்லை அரசர்க்கோ செல்வர்க்கோ அடிமைத் தன்மை கொண்டிருந்தால் அதைச் சான்றோர் பழிப்பர். ஆனால் சிவபெருமானுக்கு அடியார்களாகிய தன்மையைப் பெரியவர்கள் கொண்டாடுகிறார்கள். எனவே,

வருங்காலத்தில் துன்பம் இல்லை; நிகழ்காலத்தில் அல்லல் இல்லை: என்றும் இன்பம் பெருகும் இயல்பே அமைந்திருக்கும் போது, இப்போது துன்பம் ஏது? அழுகை ஏது? அவலம் ஏது?

இனிஅவலம் உண்டோ எமக்கு?

இறைவனுக்கு மீளா அடிமையாகி விட்ட பெருமிதத்தாலே எந்த அச்சமும் துன்பமும் இல்லாத நிலை அன்பர்களுக்கு வாய்க்கிறது.

முடிமேற் கொடுமதியான்; முக்கணான் நல்ல
அடிமேற் கொடுமதியோம் கூற்றை; படிமேல்
குனியவலம்; ஆம் அடிமை கொண்டாடப் பெற்றோம்;
இனிஅவலம் உண்டோ எமக்கு?

[தன்னுடைய திருமுடியின் மேல் வளைந்த பிறையை அணிந்தவனும் மூன்று கண்ணை உடையவனும் ஆகிய சிவ பெருமானுடைய, பிறப்பிறபபை நீக்கும் நல்ல அடியை வணங்கித் தலையின் மேற் கொண்டு அந்தப் பலத்தால் யமனை ஒரு பொருளாக மதிக்கமாட்டோம; இந்த உலகத்தில் ஒருவரை வணங்குவதற்காக உள்ளோம அல்லோம்; எங்களுக்கு ஆகிய அடியாரான தன்மையைப் பெரியோர்கள் கொண்டாடுப பேறு பெற்றோம்; இப்போது எமக்கு ஏதேனும் துயரம் உண்டோ?

கொடுமதி-வளைந்த சந்திரன்; என்றது பிறையை. நல்ல-பிறப்பிறப்பை நீக்கும் நன்மையை உடைய மேற்கொடு-வணங்கித் தலையின்மேற் சூடி மதியோம்-ஒரு பொருளாகக் கருத மாட்டோம். கூற்றை-யமனை படி-உலகம். குனிய அவலம்-குனிவதற்காக இருப்போம் அல்லோம; தலைவணங்க மாட்டோம் என்றபடி, ஆம் அடிமை - எங்களிடத்தில் அமைந்த அடியாரென்னும் தன்மையை, கொண்டாட-பெரியோர் பாராட்ட அடிமை கொண்டு ஆட-அடியாராம் தன்மையை மேற்கொண்டு களிக்கூத்தாட என்னும் பொருள்

கொள்ளலாம். இனி - இப்போது; இனிமேல் என்பதும் பொருந்தும். அலலம்-துயரம்.

மூக்கணுன் அடியை மேற்கொண்டு கூற்றை மதியோம்; படிமேல் குனிய அல்லம்; கொண்டாடப் பெற்ருேம்; அவலம் உண்டோ என்று கூட்டிப் பொருள் செய்க.]

இறைவனுக்கு அடியார்களானவர்களுக்கு இம்மையிலும் துன்பம் இல்லை; மறுமையிலும் துன்பம் இல்லை என்பது கருத்து,

அற்புதத் திருவந்தாதியில் 69-ஆவது பாடலாக உள்ளது இது.

# 71. எரியில் ஆடும் இடம்

இறைவன் தேசுமிக்க திருவுருவத்தை யுடையவன், அக்கினி மலையாக நின்றவன். மிக்க வெப்பமுடைய பொருளின் முன் சிறிது வெப்பமுடைய பொருள் தண்ணிய தாகத் தோன்றும். பேரொளியின் முன் விளக்கின் சிறு சுடரொளி மங்கித் தோற்றம் அளிப்பதுபோல அமையும். துன்பங்களிலும் அப்படி ஒரு நிலை உண்டு. பெரிய துயரம் வந்து விட்டால் சிறிய துயரங்களின் கடுமை தோன்றுது. 'வாளேறுபடத் தேளேறு மாய்ந்தாற் போல' என்ற பழமொழி ஒன்று உண்டு. தேள் கொட்டிய கை வெட்டுப் பட்டால் தேளின் விடம் தெரியாது.

இறைவன் ஆடும் நடனங்களில் ஒன்று அக்கினி நடனம். அவன் தீயில் நின்று நடனமாடுவான். அவனுக்கு அது குளிர்ந்த நீராக இருக்கும் அவனை அனலன் என்று தகக யாகப்பரணியில் ஒட்டக்கூத்தர் கூறுவார். எரியாய்ந்து ஆடும் எம்பெருமானைக் காரைக்கால் அம்மையார் நினைக் கிறுர்.

"எம்பெருமானே, நீ நள்ளிரவில் தீயில் ஆடுகிறுயே; அது எந்த இடம்? அதை எனக்குக் காட்டுவாயா?" என்று கேட் கிறுர். குழந்தை ஆவலுடன் தன் தந்தையைக் கேட்பது போலக் கேட்கிறுர். 'எந்தாய்!' என்றே விளித்து அந்தக் கேள்வியை விடுக்கிறுர்.

'என் தந்தையே, எனக்கு ஒரு பெரிய ஆசை இருக்கிறது. என்று தொடங்குகிறுர். அன்பர்கள் ஆசையை அறுத்த வர்கள். உலகியற் பொருளை நுகர வேண்டுமென்றும், அவற் றைத் தெரிந்து தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் அவர்

களுக்கு ஆசை எழாது. இறைவனைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும், அவனுடைய திருவருளைப் பெற வேண்டும் என்றும் அவர்கள் ஆசைப்படுவார்கள். அது ஆசையன்று; பக்தி நிலைகளில் ஒன்று. 'எம்பெருமானே, எனக்கு ஒரு பேராசை இருக்கிறது. அதுஎன்றும் நீங்காமல் என்னிடம் இருக்கிறது' என்று தொடங்குகிறார் அம்மையார்.

**எமக்கு இதுவோ பேராசை; என்றும் தவிராது.**

என்ன ஆசை அது? "ஒரு நாள் அந்தத் திருநடனக் கோலத்தைக் காண வேண்டும் என்ற ஆசை ஒரு காலைக்கு ஒரு கால் மீதூர்ந்து வருகிறது. 'நீ குழந்தை; உன்னால் அதைக் காண முடியாது' என்று சொல்லாதே. ஒருநாள் நீ என் ஆசையை நிறைவேற்றத்தான் வேண்டும். இந்த ஆசையைத் தீர்ப்பார் உலகில் வேறு எவரும் இல்லை. என் விருப்பத்தையெல்லாம் நீதானே நிறைவேற்றி வைக்கிறாய்? ஆதலால் உன்னிடத்திலே விண்ணப்பித்துக் கொள்கிறேன். அந்தத் திருக்கோலத்தை நீ எனக்கு ஒருநாள் காட்டுவாயா?"

**எமக்கு ஒருநாள் காட்டுதியோ, எந்தாய்!**

"உன்னுடைய திருமேனியே தீயைப் போல விளங்குகிறது. உன்னுடைய திரு முடியிலுள்ள சடாபாரம் அந்தத் தீயின் கொழுந்து போலச் செக்கச் செவேலென்று காட்சி அளிக்கிறது. தீயின் ஒளியை அடக்குவதற்காக நீ அதில் பாய்ந்து ஆடுகிறாயோ? அந்தச் சடாபார'த்தின் ஒளி அக்கினியின் ஒளியையும் அடக்கி விடுகிறது. நெருப்புப் பரவினாற் போலப் புரிபுரியாகத் தோன்றுகிறது அந்தச் சடை."

**அமைக்கவே**
**போந்து எரிபாய்ந் தன்ன புரிசடையாய்!**

"இருள் பொங்கித் ததும்பி உலகெங்கும் மூடிக் கொள்வது போல நள்ளிரவு தோன்றுகிறது. அந்தப் பொங்கு இரவில் நீ ஆடுகிறாய். இருள் அடர்ந்து செறிந்திருக்கும்

போது, நீ ஆடும் கனலும் உன் திருமேனியும் சடையும் யும் நடனமும் தெளிவாகத் தெரியும். அந்தக் காட்சியை நான் காண விரும்புகிறேன். எந்த இடத்தில் நீ அப்படி நடனம் ஆடுகிருய்? அந்த இடத்தைக் காட்டுவாயா?" என் கிருர்.

**பொங்குஇரவில்**
**போந்துஎரி ஆடும் இடம்,**

"இருள் பொங்கித் ததும்பி நின்ருலும் உன் அருள் பொங்கும் நடனத்தைக் காண அதுவே ஏற்ற நிலைக்களமாக இருக்கிறது. இருள் செறிந்த இரவில் மின்னல் கீற்றுத் தோன்றினுல் பளிச்சென்று காட்சி தருவது போல அந்த நடனக் காட்சி விளக்கமாகத் தெரியும். ஆதலால் அந்த நடனம் நிகழும் இடத்தைக் காட்டுவாயா?"

**பொங்குஇரவில்**
**போந்து எரிபாய்ந் தாடும் இடம்**
**...எமக்கு ஒருகால் காட்டுதியோ?**

உலகம் எங்கும் அவித்தை என்னும் அஞ்ஞானம் கப்பி மூடியிருக்கிறது. 'இருள் தருமா ஞாலம்' என்று இதனைக் கூறுவார்கள். எந்தச் சுடரும் தோன்ருவிட்டால் உலகம் இருளில் மூழ்கிக் கிடக்கும். அதற்கு அதுதான் இயல்பு. புறவிருள் மாத்திரம் அன்று. உலக இன்பத்தில் ஆழ்ந்து உண்மையென்னும் ஒளியைக் காணுமல் தடுமாறுகிறவர்கள், இருட்டில் வழி தெரியாமல் தடுமாறும் குருட்டுப் பசுக்களைப் போல இருப்பார்கள். உலகத்தைப் பார்க்கும்போது எங்கும் இருள், எல்லாம் இருளாக இருக்கும். இருள் நிரம்பிய இடத்தில் பொருள்களின் உண்மை வடிவம் தெரியாது. அவித்தையிருளில் மூழ்கிக் கிடக்கும் மக்களுக்கு மெய்ப்பொருள் இன்னதென்று தெரிவதில்லை. ஏதேனும் ஒளி கிடைத்தால் அதனுல் ஒருவாறு உண்மை புலனுகும். அந்த ஒளியினுல் பொருள்களின் உண்மை இயல்பு தெரியும்.

இறைவன் நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன். இருளில் மூழ்கிக் கிடப்பவர்கள் அவன் ஆடும் எரியின் ஒளியிலே உண்மையை உணரத் தலைப்படுவார்கள். பிறகு அந்த ஒளி எங்கிருந்து வருகிறது என்று ஆராயப் புகுந்தால் இறைவன் ஆடும் இடம் தெரியும். நெருப்பினிடையே அவன் ஆடும் நடனக் கோலத்தைக் காணலாம். அந்த இடம் தெரியாமல் இருட்பரப்பில் துழாவிக் கொண்டிருந்தால் நாம் கண் படைத்திருந்தாலும் பயன் இல்லை. இருட்டறையில் கண்ணுடையவனும் குருடனும் ஒரே நிலையில்தான் கையால் துழாவிக் கொண்டிருப்பார்கள். ஒளி வந்தால் கண் உடையவன் தன்முன் உள்ள பொருள்களைக் காணுவான்; கண் படைத்த பயன் பெறுவான். கண் இருந்தும் இருள் பரவிய இடத்தையே நம் இடமாக எண்ணி அதில் உழன்றால் நம் வாழ்நாள் வீணாகிவிடும். இறைவன் அளித்த கண்ணினால் பெறும் பயனைப் பெற மாட்டோம். ஆகவே ஒளி பரவும் இடத்தை நோக்கிச் சென்று காணவேண்டும். உடம்பினால் செய்யும் பயணம் அன்று அது. மனத்தினால் செய்யும் யாத்திரை அது. "ஒளி எங்கே? அதைத் தரும் நெருப்பு எங்கே? அந்த நெருப்பில் ஆடும் இறைவன் எங்கே?" என்ற ஏக்கம் முறுக முறுக நம்மை ஆண்டவன் அந்த இடத்துக்கு அழைத்துச் செல்வான்.

ஆகையால், "அப்பனே, நீ எரியில் பாய்ந்து ஆடும் இடம் எது? அதனைக் காட்டு. நான் அங்கே சென்று அந்த எரியைக் காண்பேன். அந்த எரியின் ஒளியால் பொருள்களின் உண்மை உருவைக் காண்பேன். அதை காட்டுவாயா?" என்று கேட்கிறார் அம்மையார்.

**காட்டுதியோ எந்தாய்?**
**ஏந்து எரிபாய்ந்து ஆடும் இடம்.**

இருட்டில் இருப்பவன் கண்ணை மூடிக்கொண்டு துழாவுகிறான். அவன் கண்ணைத் திறந்தாலும் அந்த இருளே தெரியும். இருட்டில் உழலும் குருடனுக்குக் கண்ணே கிடைத்

தாலும், அவன் அப்பொழுதும் குருடனுகவே இருப்பான். ஒளி இருந்தாலன்றி கண் எதையும் காண இயலாது. நாம் கண் படைத்திருக்கிருேம். ஆனுல் பொருளைக் காணுவதற்கு ஒளி கிடைக்கவில்லை. 'அந்த ஒளி கிடைக்கும் இடத்தை எனக்குக் காட்ட வேண்டும்' என்பவரைப் போல இறைவனிடம் விண்ணப்பித்துக் கொள்கிருர் காரைக்கால் அம்மையார்.

> எமக்கு இதுவோ பேராசை; என்றும் தவிராது;
> எமக்கு ஒருநாள் காட்டுதியோ எந்தாய்? —அமைக்கவே
> போந்துஎரி பாய்ந்தன்ன புரிசடையாய், பொங்கு இரவில்
> ஏந்து எரிபாய்ந்து ஆடும் இடம்.

[எம் தந்தையே, மற்ற ஒளிகளை அடக்கும் பொருட்டு நெருப்பானது வந்து பரந்தது போலத் தோன்றும் புரிசடையுடைய சடாபாரத்தை உடையவனே, எமக்கு இது ஒரு பேராசை; அது எப்போதும் நீங்காமல் இருக்கிறது. இருள் விம்மித் ததும்பும் இரவிலே கொழுந்துகளைத் தாங்கும் நெருப்பிலே திருநடனம் ஆடும் இடத்தை எமக்கு ஒருநாள் காட்டுவாயோ?]

எமக்கு என்ற பன்மை இறைவனேடு உறவு கொண்டு நெருங்கிய நெருக்கத்தால் வந்த பெருமிதத்தைக் காட்டுகிறது. இதுவோ: ஓ-அசைநிலை. இது பேராசை, இது என்றும் தவிராது என்று, இதுஎன்னும் எழுவாயைப் பின்னும் கூட்டுக; முதல் நிலைத்தீவகம். அமைக்க-மற்ற ஒளியை அடக்க. பாய்ந்தாலன்ன என்பது பாய்ந்தன்ன என்று விகாரமாயிற்று. புரிசடையாய்-தனித்தனியே பிரிந்து விளங்கும் சடையை உடையவனே. பொங்கு - இருள் பொங்கும், ஏந்துஎரி-கொழுந்துகளை ஏந்தும் எரி; நீ கையில் ஏந்துகின்ற நெருப்பு எனலும் ஆம். 'நெருப்பைக் கையிலே ஏந்திய நீ அதைக் காலின் கீழும் கிடத்தி அதன் வெம்மை அடராமல் குளிர்ந்திருக்க, அதன் மேல் ஆடுகின்ருய்' என்ற நயமும் தொனித்தது.

'இடம் காட்டுதியோ' என்று முடியும்.

இறைவன் ஞான ஒளி படரும் இடத்தில் மாசு போக்கிக் கொழுந்து விடும் ஞானக்கினியிடையே ஆனந்த நடனம் ஆடுகிறான். எந்த உள்ளம் மாசு மருவற்று ஞானக் கனல் கொழுந்துவிடும் இடமாக இருக்கிறதோ அங்கே அவன் தன் அருளைச் செலுத்தி ஆனந்த நடனம் ஆடுவான். இந்தக் கருத்துக்களெல்லாம் குறிப்பாகப் புலப்படும்படி இந்தப் பாடல் அமைந்திருக்கிறது.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 70-ஆவது பாடல்.

# 72. வேறுபாடு தெரியாது

காரைக்கால் அம்மையாராகிய குழந்தை இறைவனுடன் விளையாடுகிறது. அது தன் தந்தையின் கழுத்தில் உள்ள மாலையை எடுத்துத் தலையில் வைக்கிறது. அங்கவஸ்திரத்தை எடுத்துத் தலையில் போடுகிறது. தலைப்பாகையை எடுத்துத் தோளில் வைக்கிறது. அது விளையாடுவதைக் கண்டு தந்தையின் மனம் பூரிக்கிறது. அம்மையார் மனத்தால் இப்படி ஒரு விளையாட்டுச் செய்கிறார்.

"அதோ வானத்தில் எழுகிறதே அந்த மதியை எடுத்து அம்பிகையின் திருமுடியில் நீ வைத்தால் இரண்டு சந்திரர்கள் திருமுடியில் தோன்றும். வலப்பாகத்தில் பிறை இருந்தால் அந்தப் பாகம் இறைவன் பாகம் என்று இனம் கண்டுகொள்ளலாம். இரண்டிடங்களிலும் சந்திரன் இருந்தால் நெடுந் தூரத்திலிருந்து பார்க்கும்போது எது இறைவன் திருமுடி, எது அன்னையின் திருமுடி என்று தெரியாமல் பிரமை ஏற்படும்."

இப்படி ஒரு கற்பனைக் காட்சியை எண்ணிப் பார்க்கிறார் அம்மையார்.

> இடப்பால வானத்து எழுமதியை நீஓர்
> மடப்பாவை தன்அருகே வைத்தால்.

எல்லா இடங்களையும் தன்னுள் அடக்கி வைத்திருப்பது வானம். அதனால் அதனை, "அகலிரு வானம்" என்று சொல்வார்கள். 'பல இடப்பகுதிகளைத் தன்னிடத்தே கொண்ட வானத்தில் எழுந்து தோன்றும் மதியை நீ அம்பிகை உள்ள இடப்பக்கத்தில் வைத்தால் என்ன ஆகும்?' என்று சிந்திக்கிறார் அம்மையார். அம்மை இளமை மாறாதவள்; என்றும்

கன்னியாக இருப்பவள். பெண்களுக்குரிய அணிகலனுகிய மடம் என்பதை, 'கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை' என்பார்கள். அதாவது, 'பிறர் அறிவுறுத்துவதைப் பொறுமையோடு கேட்டுக்கொண்டு, தன் கருத்தை எளிதில் வெளிவிடாத அடக்கம்.' அம்பிகை இந்த மடமென்னும் குணத்தையும் சித்திரத்தில் வரைந்த பாவையைப் போல வாடாத அழகையும் பெற்றிருக்கிருள். அதனுல், "மடப் பாவை" என்று சொல்கிருர். மடம் என்பது இளமையையும் குறிக்கும்.

"வானத்தில் எழும் மதியை வலப்பாகத் திருமுடியில் வைத்த மதியோடு இணங்க இடப்பாகத்திலும் வைத்தால், மாதிருக்கும் பாதியனுகிய அந்த வடிவத்தில் இரண்டு மதிகள் தோன்றும். அப்போது எது மலைமகளாகிய பார்வதியின் பாகம் என்று கண்டுகொள்ள முடியாது என்கிருர்.

இடப்பால வானத்து
எழும்மதியை நீஓர்
மடப் பாவை தன்அருகே வைத்தால்
—இடப்பாகம்
கொண்டாள் மலைப்பாவை
கூறுஒன்றும் கண்டிலம்.

அம்மையும் அப்பனும் இணைந்திருக்கும் கோலத்தில் அவர்களை இனம் கண்டுகொள்ளும் அடையாளம் இப்போது இரண்டிடத்திலும் இருந்தால் மலைப்பாவை இருக்கும் கூறு இதுதான் என்று தெரிந்துகொள்ள முடியாதே; இருவரையும் ஒருங்கே கும்பிடலாம். ஆனுல் தனித்தனியே அம்மைக்கும் அப்பனுக்கும் கும்பிடு போட வேண்டுமானுல் அடையாளம் தெரியாமல் திகைக்க வேண்டியிருக்குமே'.

"இந்த விஷயம் உனக்குத் தெரியுமா? மற்றவர்கள் எவ்வாறு வேற்றுமை காண்பார்கள் என்பதை நீ அறிந்தாயா? மூன்று கண்ணை உடைய எம்பெருமானே, நாங்கள் இரண்டு

கண்களால் பார்க்கிறோம். இரண்டு கண்களும் ஒன்றையே நோக்குபவை. எங்களுக்கும் மூன்று கண் இருந்தால் நடு நிலையில் நின்று பார்க்கமுடியும். அப்படி எங்களுக்கு இல்லையே! ஒன்றைப் பார்த்தால் மற்றொன்றை அதே சமயத்தில் பார்க்க முடியாதபடி எங்கள் பார்வை இருக்கிறது. இதை நீ எண்ணிப் பார்த்தாயா? இல்லையானால் இப்போதாவது எண்ணிப்பார்" என்று சொல்கிறார் அம்மையார்.

**இடப்பால வானத்து எழுமதியை நீஓர்**
**மடப்பாவை தன்அருகே வைத்தால்—இடப்பாகம்**
**கொண்டாள் மலைப்பாவை கூறுஒன்றும் கண்டிலம்; காண்**
**கண்டாயே, மூக்கண்ணாய், கண்.**

இதன் பொருள்: மூன்று கண்ணையுடைய எம்பெருமானே இடப் பகுதிகளைத் தன்னிடத்தே கொண்ட வானத்தில் தோன்றும் பிறையை நீ ஒப்பற்ற இளமையையுடைய சித்திரப்பாவை போன்ற உமாதேவியின் வாம பாகத்தில் வைத்துக்கொண்டால், அப்போது உன் இடப்பாகத்தைத் தனக்கு உரியதாக ஆக்கிக்கொண்ட மலைமடந்தையாகிய பார்வதிதேவியின் கூற்றைச் சிறிதும் யாம் கண்டிலோம், இதை நீ அறிந்தாயோ? இல்லையெனின் இப்போதாவது எண்ணிப் பார்.

இடப்பால—இடங்களின் பகுதிகளைத் தன்னிடத்தே கொண்ட; இது வானத்துக்கு அடை. மதியென்பது பெரும் பாலும் முழுத் திங்களைக் குறித்தாலும் இங்கே பிறையைச் சுட்டியது. ஓர்—ஒப்பற்ற. மலைப்பாவை—பார்வதி. அருகே என்றது, பக்கத்தில் என்ற பொருளுடையது; இங்கே திரு முடியைக் குறித்தது. கூறு—பகுதி. ஒன்றும்—சிறிதும். காண்; அசை. கண்டாயே—ஏகாரம், வினா. மூக்கண்ணாய் என்றது இருகண் இருந்தும் நடுநிலையில் நின்று பார்க்கும் பார்வை இல்லாதவர்கள் யாம் என்பதைக் குறிப்பித்தது. கண்—நினைப்பாயாக.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 71-ஆவது பாடல்.

# 73. என் கருத்து

இறைவனை இறைஞ்சி அவனுக்கு ஆட்பட்டுத் தொண்டு செய்யும் இன்பத்தைவிடச் சிறந்த இன்பம் வேறு இல்லை. உடம்போடு பிறந்த நமக்கு உடம்பின் உறுப்புக்கள் எல்லாம் செயல்பட்டால்தான் உடல் நலம் செவ்வையாக இருக்கும். சில உறுப்புக்களுக்கு மட்டும் வேலை கொடுத்தால் மற்ற உறுப்புக்கள் செயல் செய்யாமையால் வலிமையை இழந்து விடும். ஆகவே, எப்போதும் சுறுசுறுப்போடு இருப்பவர்களுக்கு உடல்நலம் சரியானபடி அமையும்.

உழைப்பாளி ஒருவன் பிறருக்காக வேலை செய்து ஊதியம் பெறுகிறான். அவன் உழைப்பது பிறருக்காக; ஆனால் அந்த உழைப்புக்கு உரிய பயனாகக் கூலியைப் பெறுகிறான். உழைப்புக்குத் தக்க கூலி கிடைக்காவிட்டால் வருந்துகிறான். பிறருடைய தோட்டத்தில் வேலை செய்கிறவனுக்கு அந்தத் தோட்டம் வளம் பெறுவதில் உள்ள கருத்தைவிடக் கூலி பெறுவதில்தான் கவனம் மிகுதியாக இருக்கும். நிர்ப்பந்தத்தினால் கூலி குறைவாகக் கிடைக்கும் இடத்தில் வேலை செய்தாலும், கூலியே இன்றிப் பணி புரிந்தாலும் அவனுக்கு உண்டாகும் மனக்குறை அதிகமாக இருக்கும்.

தனக்காகவே ஒருவன் உழைத்தால் அப்போது அவனுக்கு இன்பம் மிகுதியாகும். தன் தோட்டத்தில் மண்ணைக் கிளறிச் செடியை நட்டுத் தண்ணீர் விட்டு வேலை செய்கிறான். அவனுடைய உழைப்புக்குத் தனியே யாரும் கூலி கொடுப்பதில்லை. ஆனால் தோட்டம் நன்றாக வளரும்போது அவனுக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையே இராது; அந்தத் தோட்டத்தில் விளையும் பொருள்களால் ஊதியமும் கிடைக்கிறது. தன் நலனுக்காகத் தானே உழைப்பதில் உண்டாகும் நன்மை இது.

இறைவனுடைய திருத்தொண்டில் ஈடுபடுகிறவர்கள் இத்தகைய நிலையில் இருப்பவர்கள். தன் தோட்டத்தில் வேலை செய்கிறவனுக்கு உழைப்பால் சிரமம் உண்டானாலும் அதை அவன் பொருட்படுத்துவதில்லை. அந்த உழைப்பிலே அவன் இன்பம் காணுவான். எசமானியின் குழந்தைகளுக்கு நீராட்டி ஆடை உடுத்தி அலங்கரிக்கும் வேலைக்காரிக்கு, அந்த வேலைகள் கூலிக்காகச் செய்பவை. அவளுடைய நாட்டம் அந்தக் குழந்தைகளின் நலத்தில் இராது; கூலியிலேதான் இருக்கும். ஆனால் தன் குழந்தையைக் குளிப்பாட்டி ஆடையணிந்து அலங்காரம் செய்யும் தாய்க்கோ மிக்க இன்பம் உண்டாகிறது. இறைவனுடைய திருத்தொண்டைச் செய்கிறவர்கள் அத்தகைய இன்பத்தையே பெறுகிறார்கள். 'இப்போது இறைவனைக் கும்பிடுவதிலே இன்பம் இருக்கிறது. வீட்டின்பம் என்பது எப்படி இருக்குமோ? இப்போது இன்பம் இல்லாமல் இருந்தால்தானே வேறு ஒன்றை நாடவேண்டும்? கும்பிட்டுத் தொண்டாற்றும் இன்பம் நிறைவாகக் கிடைக்கிறது. அப்படி இருக்க வேறு ஓர் இன்பம் எதற்கு? அது வேண்டாம்' என்று அன்பர்கள் நினைப்பார்களாம்.

> ''கூடும் அன்பினில் கும்பிட லேஅன்றி
> வீடும் வேண்டா விறலின் விளங்கினார்''

என்று அத்தகை அன்பர்களின் இயல்பைச் சேக்கிழார் சொல்கிறார்.

''முக்தியா? அப்படி ஒன்று தனியே இருக்கிறதா என்ன? நாங்கள் இப்போது அதைத்தானே அனுபவித்துக்கொண்டிருக்கிறோம்? பக்தி வழிபாடு என்னும் இதுதான் முக்தியின்பம். இதைப் போன்ற முக்தி வேறு ஏது?'' என்று அவர்கள் கேட்பார்களாம். இப்படி அருணகிரிநாதர் சொல்கிறார்.

> ''ஆனபய பக்திவழி பாடுபெறு முத்தியது
> வாகநிகழ் பக்தஜன வாரக்காரனும்''

என்பது திருவகுப்பு.

"இந்தத் திருத்தொண்டு வேண்டாம். இதில் என்ன சுகம் இருக்கிறது? அண்டங்களையெல்லாம் ஆட்சி புரியும் பெரிய பதவியைத் தருகிறேன். எத்தனையோ வகையான இன்பங்களை யெல்லாம் பெறலாம்" என்று சொன்னால், "அந்த அண்டங் கள் எமக்கு எளிதிலே கிடைத்தாலும் வேண்டாம். இந்த இன்பத்தை விட அந்த ஆட்சியில் ஏது சுகம்?" என்று சொல் வார்கள் உண்மை அன்பர்கள். காரைக்கால் அம்மையார் அப்படித்தான் சொல்கிறார்.

அண்டம் பெறினும் அதுவேண்டேன்.

இறைவனுடைய திருத்தொண்டில் ஈடுபட்டுக் கணந் தோறும் அந்த இன்பத்தில் ஆழ்வதைக் காட்டிலும் பெரிய இன்பம் அவர்களுக்கு வேறு இல்லை. இறைவனைக் கண்ணாரத் தரிசிப்பதிலே உண்டாகும் இன்பமும், அவனுடைய திருத் தொண்டிலே ஈடுபட்டு அங்கங்களையெல்லாம் அந்தத் தொண்டிலே செயற்படுத்தி வாழும் வாழ்வே இன்பமய மானது. அதை விட்டுவிட்டு வேறு எந்தச் செயல் செய் தாலும் அதில் இன்பம் இராது. ஆகவே அந்தக் கைப்பணியே இன்பம். அதைச் செய்யாமல் இருப்பது பெருந்துன்பம். 'இதை விட்டுவிட்டுச் சும்மா இருக்க வேண்டாம். அண்டங் களை உரிமையாக்கிக்கொண்டு வாழலாம்' என்று போக்குக் காட்டினாலும், "அந்தப் பொறுப்பு வேண்டாம். இந்தக் கைப்பணியே எமக்கு இன்பம் தருவது" என்று நினைப்பது தொண்டர் இயல்பு. அதைச் சொல்கிறார் அம்மையார்.

கண்டுஎந்தை என்று இறைஞ்சும்
கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன்.

இறைவனே, "இந்த அண்டத்தை ஆளும் உரிமையைத் தருகிறேன்; பெற்றுக் கொண்டு சுகமாக இரு" என்று சொன்னாலும் அதை வேண்டாம் என்று சொல்லும் உறுதி அன்பர்களிடம் இருக்கிறது. கொடுப்பவன் பெரியவனு

ஞலும், அவன் தருவது பெரிதென்று மற்றவர்கள் எண்ணிஞ லும், அன்பர்களுக்கு அத்தகைய பதவி மிகவும் சிறியதாகத் தோன்றும். அவனுக்குத் தொண்டாற்றும் இன்பமே எல்லா வற்றிலும் பெரிதாகத் தம் அனுபவத்தில் கண்டு பெருமிதத் தோடு இருப்பவர்கள் அன்பவர்கள். ஆகவே,

அண்டம் பெறினும், அதுவேண்டேன்

என்கிறுர் அம்மையார்.

இறைவன் எதை வேண்டுமாஞலும் அருள் செய்பவன். எல்லாவற்றிலும் சிறந்த பொருளை வழங்குகிறவன்; பெரு வள்ளல். இறைவன் அத்தகைய வள்ளலாக இருக்கிறுன். அவன் அவ்வாறு வழங்கும் வள்ளன்மை பெரிதுதான். ஆஞல் அதை வேண்டாம் என்று சொல்பவரின் பெருமிதம் அதைவிடப் பெரியது.

"கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதன் எதிர்
கொள்ளேன் என்றால்
அதனினும் உயர்ந்தன்று'

என்பது புறநானூறு. இறைவன் வழங்கும் வீட்டின்பம் மிகப் பெரியதுதான். பெரியது ஒன்றை வழங்கும் அவன் மாபெரும் வள்ளல். ஆஞல் அதை மறுக்கும் பெருமிதம் அன்பர்களிடம் இருக்கிறது. அது இறைவனுடைய வள்ளன்மையை விடச் சிறந்தது, ஆகவே

அண்டம் பெறினும் அதுவேண்டேம்

என்ற உறுதிப்பாடுடைய அம்மையார் மிகப் பெரியவர்.

தம்முடைய கருத்து இது என்று இறைவனிடமே அம்மையார் விண்ணப்பித்துக் கொள்கிறுர்.

ஈதுஎன் கருத்து.

இறைவனை அடையாளம் கண்டு கொண்டவர் அம்மையார். அந்த அடையாளங்களைச் சொல்லி எம்பெருமானை விளிக்கிறார்.

அவன் தன் திருமுடியில் பிறையை அணிந்திருக்கிறான். பிறைக்கு மறு இல்லை. இறைவன் திருமுடியில் இருப்பதால் மறு இல்லாத அந்தச் சந்திரன் வளர்வதுமில்லை; தேய்வதும் இல்லை. இறைவனைச் சார்ந்தவர்கள் எந்த மறுவும் இன்றி, கிளர்ச்சி, தளர்ச்சிகள் இல்லாமல் என்றும் சலனமில்லாத நிலையில் இருப்பார்கள் என்பதை அந்தச் சந்திரன் புலப்படுத்துகிறான். இறைவன் குழந்தையைத் தலையில் தூக்கி வைத்துக் கொள்வது போலச் சந்திரனைத் திருமுடியின்மேல் வைத்திருக்கிறான். அதன் அருகே பாம்பை அணிந்திருக்கிறான். பாம்புக்கு அஞ்சும் திங்கள் இப்போது அதன் அருகே ஒளிவிட்டு விளங்குகிறது. நீதிமுறை வழுவாமல் கோல் செலுத்தும் மன்னன் நாட்டில் புலியும் மானும் ஒரு துறையில் நீர் அருந்தும் என்று சொல்வார்கள். புலிக்கு மானை அடிக்க வேண்டும் என்ற எண்ணமே இன்றி அஹிம்சையியல்போடு இருக்கும். மானும் அச்சம் நீங்கி நீரைப் பருகும். அவ்வண்ணமே இறைவன் திருமுடியில் பாம்பும் மதியும் கூடிக் குலாவுகின்றன. அந்தத் திங்களைப் பார்க்கும்போது, இறைவனுடைய தொடர்பினால் எத்தகைய அற்புதங்கள் நிகழும் என்பதை உணர்ந்து கொள்ளலாம். விண்ணிலே உலவும் திங்கள் இப்போது இறைவன் திருமுடியில் அமர்ந்ததனால் இந்த நிலை கிடைத்திருக்கிறது.

**துண்டம்சேர், விண்ஆளும் திங்களாய்!**

இறைவன் உலகம் எல்லாவற்றுக்கும் கண்ணாகத் திகழ்கிறான். உடம்பில் கண் எவ்வாறு தலைமை பெற்று விளங்குகிறதோ அவ்வாறு இறைவன் இருக்கிறான். அவனே எல்லா உயிர்களுக்கும் கண்ணாக நின்று உலகத்தைக் காட்டுகிறான். அவன் காட்டுவிக்க நாம் காணுகிறோம். உலகம் ஏழும் உயிர்கள் வாழும் இடம். அவ்வுயிர்களுக்கு அவன் கண்-

பெரிய உடம்பில் பல உறுப்புக்கள் இருந்தாலும், கண் இல்லா விட்டால் சரிவர இயங்க இயலாது. இறைவன் கண்ணாக இருந்து உலகை இயக்குகிறான். ஏழுலகங்களுக்கும் மேலாக நின்று, கண்ணாக இருந்து, இயக்குகிறான். அந்தக் கண்ணானை னைப் பார்த்து, "ஈது என் கருத்து" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார் அம்மையார்.

**கண்டுஎந்தை என்று இறைஞ்சிக்**
**கைப்பணியான் செய்யேனேல்**
**அண்டம் பெறினும்**
**அதுவேண்டேன், துண்டம்சேர்**
**விண் ஆளும் திங்களாய்,**
**மிக்குஉலகம் ஏழினுக்கும்**
**கண்ணாளா, ஈதுஎன் கருத்து.**

[துண்டமாகச் சேர்ந்ததும், வானிலே ஆட்சி புரிந்தது மாகிய பிறையைத் திருமுடியில் புனைந்துள்ள பெருமானே, ஏழு உலகங்களுக்கும் மேலாக நிற்கும் கண்ணாக உள்ளவனே, உன்னைத் தரிசித்து, 'எம் தந்தையே' என்று உன்னை வணங்கி, உன்னுடைய திருத்தொண்டை அடியேன் செய்யாமல் இருப்பேனாயின், அண்டத்தைப் பெற்றாலும் அந்தப் பதவியை அடியேன் வேண்டேன். இதுவே அடியேனுடைய கருத்து.

எந்தை-எம் தந்தையே. கைலையை அணுகிய அம்மையார், "அப்பா!" என்று சொல்லிப் புகுந்தார் என்பது வரலாறு. கைப்பணி-கையால் செய்யும் தொண்டு; கை என்று கூறினும் உடம்பு முழுவதும் உள்ள உறுப்புக்களைக் கொள்ளவேண்டும்; உபலட்சணம். அண்டம் பெறினும்-அண்டங்களை உரிமை யாகப் பெற்று ஆட்சி புரியும் பேறு பெற்றாலும். அது-அந்தப் பதவியை. துண்டம் சேர் திங்கள், விண்ணாளுந் திங்கள் என்று தனித் தனியே கூட்டுக. துண்டம் என்றது பிறையை. விண்ணாளும் திங்கள் என்றது, அதன் பழைய நிலையைச் சுட்டியது. மிக்கு—மேலாக நின்று. கண்ணாளா—கண்ணைப் போல உள்ளவனே. ஈது—அண்டத்தையும் வேண்டாமை.]

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 72-ஆம் பாடல் இது.

# 74. நினைத்ததைப் பெறும் வழி

நம்முடைய மனத்தில் எத்தனையோ ஆசைகள் எழு கின்றன. செல்வம் வேண்டும்; வளமான பொருள்கள் வேண் டும்; அவற்றை அனுபவிக்கும் இன்பம் வேண்டும் என்றெல் லாம் ஆசைகள் தோன்றுகின்றன. அந்த ஆசைகளுக்கு அள வுண்டா ? "ஆசைக்கு ஓர் அளவில்லை" என்று தாயுமானவர் சொல்லி விளக்குகிறுரே 'அகிலமெல்லாம் கட்டி ஆளினும்; அந்த ஆசைஅடங்குகிறதா 'கடல் மீதிலும் நம் ஆணை செல்ல வேண்டும்' என்ற ஆசை எழுகிறது. குபேரனைப் போலப் பொற்குவியலை ஒருவர் படைத்திருக்கிறுர்; அவருக்கும் பொரு ளாசை இருப்பதில்லையா ? யாராவது சாமியார் இரசவாதம் செய்கிறுர் என்று கேள்விப்பட்டால் அவரை நாடித் தேடி ஓடுகிறுர். நீண்ட காலமாக வாழ்ந்து முதுமையை அடைந் தவர்கள், 'இந்த வாழ்க்கை இனிப் போதும்' என்ற எண்ணம் கொள்கிறுர்களா ? யாராவது வைத்தியர் காயம் நிலையாக நிற்க ஒரு மருந்தைக் கண்டுபிடித்திருக்கிறுர் என்று கற்பனை யாக ஒரு செய்தி வந்தாலும் அந்தக் காயகற்பத்தைத் தேடிச் சென்று அது கிடைக்காமல் நெஞ்சு புண்ணுவார்கள்.

இவ்வாறு ஆசைகள் விரிந்துகொண்டே போகின்றன. இவற்றையெல்லாம் நிலைவேற்றிக் கொள்ள முடியுமா ? முடியும் என்று யாராவது சொன்னுல் நாம் சும்மா இருப் போமா ? அவரிடம் சென்று அடிபணிந்து கெஞ்சிக் கூத்தாடி அந்த இரகசியத்தைத் தெரிந்து கொள்ள முயல்வோம்; இது மனித இயல்பு.

காரைக்கால் அம்மையார் எண்ணியவற்றை யெல்லாம் பெறமுடியும் என்று சொல்கிறுர். வேறு யாருக்கோ சொல்

லாமல் தம் நெஞ்சை நோக்கியே சொல்கிறார். "உள்ளமே!" என்று விளித்துச் சொல்கிறார். உள்ளத்தின் உள்ளே கருத்து இருக்கிறது; இது வேண்டும் அது வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது அந்த உள்ளத்தை வேறாக வைத்துப் பேசுவதைப் போலச் சொல்கிறார் அம்மையார்.

'உள்ளமே, உனக்கும் கருத்து இருக்கிறது. அது வேண்டும் இது வேண்டும் என்று ஆசைப்படும் பகுதி அது. அந்தக் கருத்தில் நீ என்ன என்னவோ வேண்டும் என்று ஆசைப்படுகிறாய். அவ்வாறு நீ எதைக் கருதினாலும் அதை உடனே பெற்று அதை அனுபவிக்கலாம்' என்று தொடங்குகிறார். குழந்தைக்கு ஆசை காட்டுவது போல இருக்கிறது அது.

**கருத்தினால் நீகருதிற்று எல்லாம் உடனே**
**திருத்தலாம்.**

'இதை ஏதோ கவனக்குறைவாக, போகிற போக்கில் சொல்லி வைப்பதாக எண்ணாதே! நான் திண்ணமாக, உறுதியாகவே சொன்னேன்' என்கிறார் அம்மையார்.

**கிக்கென நான்சொன்னேன்.**

உள்ளத்துக்கு இப்போது ஆசை எழுகிறது. கருதினவற்றையெல்லாம் பெற்று அனுபவிக்கலாம் என்றால் அதற்கு உரிய வழியைத் தெரிந்துகொள்ள ஆருக்குத்தான் ஆசை உண்டாகாது? "என்ன செய்ய வேண்டும்?" என்று அது கேட்கிறது.

காரைக்காலம்மையார் அதற்கு உரிய தந்திரத்தைச் சொல்லப் புகுகிறார்.

"சிவபெருமானை உனக்குத் தெரியுமா? பெரிய அலைகளை வீசி வெள்ளமாக வந்த கங்கை நீரைத் தலையில் தாங்கிக் கொண்டவன் அவன். எவ்வளவோ காலமாகக் கங்கைநீர்

தன் முதாதையர் என்பின் மேல் பாயவேண்டும் என்று எண்ணித் தவம் புரிந்த பகீரதனின் விருப்பத்தை யாரும் நிறைவேற்ற முன்வரவில்லை. கடைசியில் சிவபெருமானே வெள்ளமாக இரைந்து வந்த கங்கையைத் தன் சடாபாரத் தில் ஏற்று, அங்கிருந்து பகீதரனுடைய மூதாதையர் என்பின் மீது பாயச் செய்தான். யாராலும் நிறைவேற்ற முடியாமல் இருந்த பகீரதனுடைய ஆசையைச் சிவபெருமான் நிறை வேற்றினன்.

**பருத்தரங்க வெள்ளநீர் ஏற்ருன்**

உள்ளம் கேட்கிறது, "நான் என்ன செய்யட்டும்?" என்று, "அந்தப் பெருமானுடைய திருவடிக் கமலத்தியானம் எல்லா விருப்பங்களும் நிறைவேறச் செய்யும். ஆகையால் அந்தப் பாத தாமரைகளை அன்புடன் விரும்பி இடைவிடா மல் அதன் புகழை ஓதிக் கொண்டிரு. அப்போது உன் விருப் பங்கள் நிறைவேறும்" என்கிருர் அம்மையார்.

**வெள்ளநீர் ஏற்ருன் அடிக்கமலம் நீவிரும்பி**
**உள்ளமே, எப்போதும் ஓது.**

'இறைவனுடைய பாதாரவிந்தங்களின் புகழை ஓதினல் நாம் கொண்ட எல்லா வகையான ஆசைகளும் நிறை வேறுமா? கோடிப் பொன் வேண்டும் என்று எண்ணினல் கிடைக்குமா? பெரிய பதவி வேண்டும் என்று விரும்பினல் பெறலாமா? என்றெல்லாம் கேட்கத் தோன்றுகிறது. 'கருதிற்றெல்லாம் திருத்தலாம்' என்று அம்மையார் சொல் கிருரே நாம் என்னவோ கருதி ஆசைப்படுகிறேம். அவை யாவும் கிடைக்குமா?!

இறைவனுடைய திருவடிக் கமலத்தைத் தியானித்து அதன் புகழைப் பாடத் தொடங்கினல் நம்முடைய உள்ளம் தூய்மை பெறும். எப்போதும் பலவற்றை விரும்பி ஒன்றை விட்டு ஒன்றுபற்றி ஓடுவது மனம். இங்கே உள்ளம் என்றது

மனத்தையே. அந்த மனம் கலங்கிய வெள்ளம் கரைகடந்து ஓடும் வெள்ளத்தைப் போல எங்கெங்கோ சுற்றுகிறது. இறைவனுடைய திருவடிக் கமலத்தை விரும்பினால் அந்த ஓட்டம் நிற்க வேண்டும். ஓடும் ஆற்றில் தாமரை மலராது. குளங்களிலும் பொய்கைகளிலுமே அது மலரும். நம்முடைய மனமும் ஓடுதலை நிறுத்தி அவன் அடியை விரும்பித் தியானித்தால் இந்த மனமே சலனமற்ற குளம்போல ஆகிவிடும். உள மென்னும் குளத்தில் இறைவன் திருவடிக்கமலம் தோன்றும். அதைப் புகழ்ந்து புகழ்ந்து. தியானம் செய்து தியானம்செய்து நாளடைவில் வரவேண்டிய நிலை இது.

அவனுடைய அடிக்கமலத்தை விரும்பி அதன் புகழை ஓதும் உள்ளத்தில் கண்ட கண்ட ஆசை எழாது. அது தூய்மை பெற்றுவிட்டமையால் அதில் நிறைவேறத்தக்க நியாயமான விருப்பங்களை உண்டாகும். அவை நிறைவேறு வது எளிது; இறைவன் திருவருள் துணையும் கிடைக்கும்போது மிக எளிது.

இறைவனுடைய திருவடியை எண்ணிப் புகழும் உள்வத்தில் இறைவன் திருவருளைப் பெற வேண்டும், அவன் அருளைப் பெற்ற அடியாரோடு சேரவேண்டும் என்பன போன்ற விருப் பங்களே உண்டாகும். அவை நிச்சயமாக நிறைவேறும். இந்த அனுபவ நிலையை உணர்ந்தே அம்மையார், 'எதைக் கருதினாலும் கிடைக்கும்' என்று சொன்னார்.

**கருதினால் நீ கருதிற் றெல்லாம் உடனே**
**திருத்தல்ஆம்; சிக்கென நான்சொன்னேன்—பருத்தரங்க**
**வெள்ளநீர் ஏற்றான் அடிக்கமலம் நீவிரும்பி**
**உள்ளமே எப்போதும் ஓது.**

[என் நெஞ்சமே, நீ உன் கருத்துக்குள்ளே எதனை வேண்டு மென்று கருதுகிறாயோ அதனையெல்லாம் உடனே பெற்று நுகரலாம்; இதை உறுதியாக நான் சொன்னேன்; (அதற்கு இதுதான் வழி.) பெரிய அலைகளையுடையதாய் வெள்ளமாகப்

பரந்து வந்த கங்கைநீரை அடக்கித் தன் தலைப்பாரத்தில் ஏற்றுக்கொண்ட சிவபெருமானுடைய திருவடித் தாமரையை நீ விரும்பி எப்போதும் அவன் திருநாமத்தையும் புகழையும் ஓதிக்கொண்டே இரு.

உள்ளத்துக்கு கருத்து இருப்பதாகச் சொல்வது கவிமரபு. கருதிற்றுதொகுதி ஒருமை, திருத்தலாம்-செவ்வையாக அனுபவிக்கலாம், சிக்கென உறுதியாக, சிக்கெனத் திருத்தலாம். என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம்.

அகங்கார மிகுதியாகி என்னைத் தாங்குவார் யார் என்று 'விண்ணுக்கடங்காமல் வெற்புக்கடங்காமல்' வந்த கங்கையாதலின்' 'பழுத்தரங்க வெள்ள நீர்' என்றார்.

அவன் திருமுடி பரந்து வந்த அலைகளை அடக்கியது போல அவன் திருவடியும் அலைபாயும் மனத்தை ஒருமுகப் படுத்துவது. அப்படி ஒருமுகப்பட்ட மனத்தில் ஆசைகள் எழா. எழுந்தாலும் நிறைவேற்ற முடியாத பேராசைகளாக இரா. எனவே அவை நிறைவேறுவது அரிதன்று. ஓதுதல் பலகால் சொல்லுதல்.]

இறைவன் திருவடித் தியானத்தால் நாம் விரும்பும் நல்ல எண்ணங்களெல்லாம் நிறைவேறும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 73- ஆவது பாடல் இது

# 75. கபாலக் கலம்

இறைவன் தன்திருக்கரத்தில் பிரமனுடைய கபாலத்தை ஏந்தியிருக்கிறான். சிவபெருமானுக்கு ஐந்து தலைகள்; பிரமனுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. "சிவனுக்கும் ஐந்துதலை; எனக்கும் ஐந்துதலை. நானும் அவனும் சமம்" என்று பிரமன் அகங்காரம் கொண்டான். படைத்தல் என்னும் பொறுப்பான தொழிலைச் செய்கிறவன் அவன். அத்தகைய சிறந்த பதவியில் உள்ளவர்கள் நான் என்ற அகம்பாவம் கொண்டால் அவர்கள் செய்யும் கடமைகள் தவறிவிடும். அந்தத் தொழிலைச் செய்யும்படி பிரமனுக்கு ஆணையிட்டவன் சிவபெருமான். தன் ஆணையை ஏற்றுப் பணிபுரியும் அதிகாரிகள் தம் கடமையிலே உள்ளத்தைச் செலுத்தாமல் அகங்காரம் கொண்டு நின்றால் அவர்களை அந்தப் பணியில் அமைத்த மேலதிகாரி அவர்களுக்கு உரிய தண்டனையை அளித்துத் திருத்த வேண்டும். சிவபெருமான் பிரமனுடைய அகங்காரத்தைப் போக்க எண்ணினான். ஐந்து தலை இருப்பதைக் கொண்டு அவனுக்குத் தருக்கு உண்டாயிற்று என்று உணர்ந்து அந்தத் தலைகளில் ஒன்றைக் கிள்ளினான் அதுமுதல் பிரமன் நான்முகன் ஆனான்.

கிள்ளிய தலையின் கபாலத்தைச் சிவபெருமான் தன் கையில் வைத்துக் கொண்டான். அதைக் குழிவான பாத்திரத்தைப் போலத் திருப்பி வைத்துக் கொண்டு பிச்சை வாங்கத் தொடங்கினான். அவனை வெறும் பிச்சைக்காரனென்றும் தாம் அவனுக்குப் பிச்சையிடும் பெரியவர்களென்றும் நினைத்து வருகிறவர்களின் அகந்தையையும் அவன் போக்கினான். "இறைவனே பிச்சை எடுக்கிறான். அவனுடைய பிச்சைக் கலம் நிறைய நாம் இடுவோம்" என்று

எண்ணிய பலர் அதில் சோற்றையும் பிற பொருளையும் இட்டார்கள். அது நிரம்பவே இல்லை. "இந்தக் கலம் நிரம்ப இட்டால்தான் என் பசி தணியும். அரைகுறையாக இட்டால் என் பசி தீராதே!" என்று சொல்லி இறைவன் எல்லாரிடமும் பிச்சை கேட்டான். இந்திராதி தேவர்கள் தம்மிடம் உள்ளவற்றையெல்லாம் இட்டுப் பார்த்தார்கள். அந்தப் பிச்சைப் பாத்திரத்தில் பாதிகூட நிரம்பவில்லை மிடுக்கோடு வந்து பொருளை இட்டவர்கள் யாவரும் திகைத்துப் போனார்கள். 'இது என்ன? எத்தனை போட்டாலும் நிரம்பாக் குழியாக இருக்கிறதே!' என்று அலுத்துக் கொண்டார்கள். 'உங்கள் சக்தி இவ்வளவுதானா?' என்று கேட்டுச் சிரிப்பது போல அந்தக் கபாலம் பல்லைக் காட்டிக் கொண்டிருந்தது.

வருணன் வந்தான். அவன் கடல்களுக்கு அதிபதி. பல வகையான கடல்கள் அவன் ஆட்சியில் இருந்தன. பால், அமுதம், உப்புநீர், கருப்பஞ் சாறு, தயிர், நன்னீர், கள் என்பவை நிரம்பிய கடல்கள் ஏழு உண்டு. அவற்றையெல்லாம் இறைவனுடைய பிச்சைப் பாத்திரத்தில் பெய்தான். கரையற்ற கடலில் உள்ள நீரே போதும் இதை நிரப்ப என்று எண்ணி வந்த அவன் ஒவ்வொரு கடலாகப் பெய்யப் பெய்ய, அந்தக் கலம் நிரம்பிய பாடில்லை. எத்தனை கடல்களைப் பெய்தாலும் அது சிறிதுகூட நிறையவில்லை.

> ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் எய்துஅட்ட
> ஏதும் நிறைந்ததில்லை என்பரால்.

'பார்த்தால் சிறிய கபாலமாக இருக்கும் இது இத்தனையையும் விழுங்கிவிட்டு, இன்னும் கொண்டுவா, கொண்டுவா என்கிறதே!' என்று வியந்தார்கள். 'இதை எவ்வாறு நிறையச் செய்வது?' என்று மயங்கினார்கள்.

இப்படி நிகழ்ந்ததென்று அடியார்கள் சொல்லிக்கொண்டார்கள். அதைக் காரைக்கால் அம்மையார் கேட்டிருக்கிறார்

'இப்படி எல்லாம் சொல்கிறார்களே; அந்தக் கலம் என்றும் நிரம்பாதோ?' என்று எண்ணமிட்டார்.

ஆனால் அடுத்தபடி அவர் கேட்டறிந்த செய்தி அவருக்கு மிக்க வியப்பை உண்டாக்கியது.

அந்தக் கலம் நிரம்பிவிட்டதாம். எப்போது, எங்கே, எப்படி?

சிவபெருமான் தாருகாவனத்து முனிவர்களின் அகம் பாவத்தை அடக்க எண்ணினான். அவர்கள் வேதமும் வேள்வி யுமே போதுமானவை என்று நினைந்து இறைவனிடம் பக்தி பண்ணாமல் இருந்தார்கள். கர்மமே முக்தியைத் தரும் என்று எண்ணினார்கள். இறைவனுடைய திருவருள் இல்லாமல் எதையும் அடையமுடியாது என்ற உண்மையை அவர்கள் அறியவில்லை. அவர்களுடைய மனைவிமாரும் அவர்களுடைய எண்ணத்துக்கே ஆதரவு தந்தார்கள் அவர்களுடைய உறுதியைக் குலைக்க எண்ணிச் சிவபெருமானும் திருமாலும் ஒரு விளையாட்டை நிகழ்த்தினார்கள். சிவபெருமான் திகம்பரனாக நின்று கையில் பிரமகபாலமாகிய பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு தாருகாவனம் சென்றான். திருமால் மோகினிக் கோலம் பூண்டு அங்கே சென்றார். சிவ பெருமானுடைய மோகன வடிவத்தைக் கண்டு முனிவர்களின் மனைவிமார்கள் அவனுக்குப் பிச்சையிடுபவர்களைப் போல வந்து அவன் அழகிலே சொக்கி நின்றார்கள். அவ்வாறே மோகினியைக் கண்டு முனிவர்கள் மயங்கி நின்று பல்லை இளித்தார்கள். அவர்களுடைய மன உறுதி குலைந்துவிட்டது.

சிவபெருமானுக்குப் பிச்சையிடும் பொருட்டு முனிவர் களின் மனைவிமார் கையில் சோற்றைக் கொண்டுவந்தார்கள். இறைவனுடைய பெருமையை அறியாத பேதையராகிய அந்தப் பெண்கள், அவனுடைய அழகிலே மயங்கிக் கையில் சோறும் நெஞ்சில் மோகமும் உடையவராக வந்தார்கள். சோறிடும் பெண்களை அன்னையராகப் பார்த்தான் சிவ

பெருமான். அவர்களோ அவனை அழகனாகக் கண்டார்கள். அவர்கள், இன்னது செய்கிறோம் என்ற நினைவே இல்லாமல், அவன் அழகிலே அறிவையே பறிகொடுத்துப் பிச்சை யிட்டார்கள். அவர்கள் கண்ணிலும் கருத்திலும் இறைவனே நிறைத்திருந்தான்.

அத்தனை கடல்களையும் உண்டு இன்னும் நிரம்பாத விரிந்த இடத்தையுடைய கபாலமாகிய அந்தப் பிச்சைக் கலம் இப்போது நிரம்பிவிட்டது. என்ன ஆச்சரியம்!

அந்த மங்கையர் தம் கணவரை மறந்து சூழ்நிலையை மறந்து நாணத்தையும் நழுவவிட்டு அரைகுலையத் தலைகுலைய இறைவன் ஒருவனையே கண்டும் கருதியும் அந்தப் பிச்சையை இட்டார்கள். எல்லாம் மறந்து தன்னையே நினைக்கும் அவர் களுடைய ஒருமைப்பாட்டை உணர்ந்த ஆண்டவனுக்கு இப்போது அருள் கனிந்தது. அவனுடைய கையில் உள்ள கபாலம் இப்போது நிறைந்துவிட்டது. இது என்ன ஆச்சரியம்

**பேதையர்கள்**
**எண்ணாது இடும்பலியால், என்னோ நிறைந்தவா**
**கண்ஆர் கபாலக் கலம்.**

அந்தப் பெண்கள் அந்தக் கலத்தின் அளவை எண்ண வில்லை. அதற்குமுன் அது நிரம்பாமல் இருந்ததை எண்ண வில்லை. தாம் நாணம் இழந்து நிற்பதை எண்ணவில்லை. தம் கணவன்மார் கண்டால் சினப்பார்களே என்றும் எண்ண வில்லை. இப்படி எந்த எண்ணமும் இல்லாமல் இறைவன் கலத்தில் பிச்சை இடவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு சென்று இட்டார்கள். அது நிரம்பிவிட்டது.

பல கடல்களாலும் நிரம்பாத அது கீழும் மேலும் சிந்த அந்த மங்கையர் இட்ட சோற்றால் நிறைவுபெற்று விளங்கு வது பெரு வியப்புத்தானே? இறைவன் அவர்கள் எல்லா வற்றையும் மறந்து தன்னையே எண்ணிவந்த ஒருமைப்

பாட்டை அறிந்து அதன் பெருமையைக் காட்டுவதற்காகவே இப்படிச் செய்தான் போலத் தோன்றுகிறது.

**ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்துஅட்ட**
**ஏதும் நிறைந்ததில்லை என்பரால்;—பேதையர்கள்**
**எண்ணாது இடும்பலியால் என்னோ நிறைந்தவா,**
**கண்ணார் கபாலக் கலம்!**

[இடம் நிரம்ப உள்ளதும் இறைவன் திருக்கரத்தில் உள்ளதுமாகிய பிரமகபாலமாகிய பிச்சைப் பாத்திரமானது, அலைப்பெருக்கையுடைய அழமான கடல்கள் எத்துணையைப் பெய்து இட இட, சிறிதும் நிறைவுபெறவில்லை என்று சொல்கிறார்கள்; ஆனால் ஒன்றும் அறியாத பேதையர்களாகிய தாருகாவனத்து முனிவரின் மனைவிமார், பிச்சைப் பாத்திரத்தின் அளவையும் பிறவற்றையும் எண்ணாமல் இட்ட பிச்சையால் நிறைந்தவாறு என்ன வியப்பு!

ஓதம்—அலைகள் பெருகுவது. நெடுங்கடல்கள்—ஆழமான கடல்கள். எத்தனையும்—எவ்வளவையும்; எண்ணினால் பலவாக உள்ள எல்லாவற்றையும். உய்த்து அட்ட—பாத்திரத்தில் தள்ளி இட. ஏதும்—சிறிதளவும்; என்பர்—என்று அறிந்தோர் சொல்வர். ஆல்: அசை. பேதையர்கள்—தாம் இன்னது செய்கிறோம் என்பதை அறியாத பேதைமையை உடைய தாருகாவனத்து முனிவர்கள் மனைவிமார். எண்ணாது—பாத்திரத்தின் அளவு, தம் நிலை முதலியவற்றை எண்ணாமல். பலி—பிச்சை நிறைந்த—நிறைந்தவாறு; விகாரம். கண் ஆர்—இடம் நிரப்பிய. கபாலக்கலம்—பிரம கபாலமாகிய பிச்சைப் பாத்திரம்.

'கபாலக் கலம் உய்த்து அட்ட நிறைந்ததில்லை என்பர்; பேதையர்கள் இடும்பலியால் நிறைந்தவா என்னோ' என்று கூட்டிப் பொருள் செய்க.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 74-ஆம் பாடல் இது.

# 76. சடையும் விசும்பும்

காரைக்காலம்மையார் இறைவன் திருவடிவத்தைக் கண்டு கண்டு மகிழ்கிறவர். அப்படிக் காணும்போதெல்லாம் அவருக்குப் பல வகையான கற்பனைகள் தோன்றுகின்றன. அவனுடைய திருக்கோலத்தில் உள்ள பொருள்களை இணைத்து உவமைகளையும் உருவகங்களையும் புனைகிறார். அவை ஒருவகையில் அணிகளே அல்லவா? அந்த அணிகளைப் புனைந்து புனைந்து மகிழ்ச்சி அடைகிறார்.

இப்போது இறைவனுடைய திருமுடியைப் பார்க்கிறார். அங்குள்ள விரிசடையில் அவர் பார்வை உலாவுகிறது. அந்தச் சடையில் சிவபெருமான் கங்கையைத் தாங்கியிருக்கிறான். வானின்று இறங்கி வந்த கங்கை அது. அந்தத் திருமுடியில் பிறைவிட்டு விளங்குகிறது. செவ்வண்ணச் சடையில் அது அழகாக வெண்ணிலவை வீசிக்கொண்டு ஒளிர்கிறது. அங்கே பாம்பும் இயங்கிக் கொண்டிருக்கிறது. கங்கையையும் மாலையையும் பாம்பையும் ஒரு சேர இணைத்துப் பார்க்கிறார். இப்போது ஒரு கற்பனை உருவாகிறது.

'இந்த விரி சடையை யாம் காணும் போது வானத்தைப் போலத் தோற்றம் அளிக்கிறது' என்று எண்ணுகிறார்.

**விரிசடையாம் காணில் விசும்பு.**

எவ்வாறு அது வானத்தைப் போலத் தோன்றுகிறது? காரணத்தைச் சொல்கிறார்.

வானத்தில் ஆகாயகங்கை இருக்கிறது. பகீரதன் கங்கையை வருவிப்பதற்காகத் தவம் செய்தான். கங்கை

இரங்கவில்லை. அது தருக்கினால் கலங்கியிருந்தது. "என்னை ஏற்றுக் கொள்வார் யார்?" என்ற அகம்பாவம் அதற்கு. அதனால் அது 'கலங்கு புனற் கங்கை'யாக இருக்கிறது. பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவம் புரியவே, அவன் தவத்துக்கு இரங்கி அந்தக் கலங்கிய கங்கையை இறைவன் தன் சடாபாரத்தில் ஏற்றுக் கொண்டான். கலங்கிய நீர் ஓரிடத்தில் தங்கினால் அது தெளிவு பெறும். அவ்வாறு தெளிவுபெற்ற கங்கையையே பகீரதன் வேண்டுகோளுக்கு இரங்கி அவனுடைய மூதாதையர்களின் என்பின்மேல் பாயும்படி செய்தான்.

கலங்கிய புனலையுடைய கங்கை அவன் சடையினூடு அலைகளை வீசிச்கொண்டு அசைந்தது.

**கலங்கு புனற்கங்கை ஊடுஆடலாலும்.**

தக்கனுடைய சாபத்தைப் பெற்ற சந்திரனுக்கு அபயம் தந்து இறைவன் பிறையைத் தன் சடாபாரத்தில் எடுத்து அணிந்து கொண்டான். நல்ல இடத்தைச் சேர்ந்தமையால் அது கவலையின்றி இயங்குகிறது. அங்கேயிருந்து ஒளியை வீசுகிறது. கங்கையின் ஊடே அது இயங்குகிறது.

**இலங்கு மதிஇயங்கலாலும்.**

இறைவனுடைய திருமுடி உயர்ந்து விளங்கும் நீள்முடி. பலவகை நலன்களை உடையவன் இறைவன். அனந்த கல்யாணகுணங்களை உடையவன். அவனுடைய நீண்ட முடியில் பாம்புகள் இயங்குகின்றன. பாம்புக்கும் சந்திரனுக்கும் பகை. இறைவன் திருமுடியின் மேல் அவை பகைமையை மறந்து குழந்தைகளைப் போலக் குலாவுகின்றன.

**நலங்கொள்**
**பரிசுடையான் நீள்முடிமேல் பாம்பு இயங்கலாலும்.**

வானில் கங்கை உண்டு; மதி உண்டு; இராகு கேதுக்களாகிய பாம்புகளும் உண்டு. இங்கே இறைவன் சடையி

லும் அவை உள்ளன. ஆகவே இந்தச் சடாபாரம் விசும்பைப் போலத் தோற்றம் அளிக்கிறதாம்.

**கலங்குபுனற் கங்கை ஊடு ஆட லாலும்,**
**இலங்கு மதி இயங்க லாலும்.—நலங்கொள்**
**பரிசுஉடையான் நீள்முடிமேல் பாம்பு இயங்கலாலும்**
**விரிசடை யாம் காணில் விசும்பு.**

[பல நலங்களைக் கொண்ட தன்மையையுடைய இறைவனுடைய நீண்ட திருமுடியின் மேல் கலங்கிய புனலையுடைய ஆகாசகங்கை ஊடே அசைவதாலும், விளங்கும் பிறையானது இயங்குவதாலும், பாம்புகள் உலாவுவதாலும் அவனுடைய விரித்த சடையை யாம் காணும்போது வானமாகத் தோற்றம் அளிக்கிறது.

கலங்கு புனல் என்றது, வானில் இருந்த நிலையைச் சுட்டியது ஆடல்-அசைதல். இலங்கும் மதி-மறுவின்றி விளங்கும் பிறை; மதி என்பது முழுத் திங்களைக் குறித்தாலும் இங்கே பிறையைச் சுட்டியது; "இருகோட் டொருமதி எழில்பெற மிலைச்சினை" என்பது நக்கீரர் வாக்கு. பிறைக்கு மறு இன்மையின் அது விளக்கம் பெற்றிருக்கிறது. மறுவின்மையும் தக்க இடத்தில் இருக்கும் பெருமிதமும் அந்த விளக்கத்துக்குக் காரணமாகின்றன. நலம்-உயர்ந்த குணங்கள். பரிசு—இயல்பு. நீள்முடிமேல் என்பதை முன்னும் கூட்டிப் பொருள் செய்க. அது இடைநிலை விளக்கு.

முடிமேல் கங்கை ஆடலாலும், மதி இயங்கலாலும், பாம்பு இயங்கலாலும், விரிசடை காணில் விசும்பு என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும்.

இறைவன் திருமுடி விசும்பைப் போலக் காட்சியளிக்கிறது என்பது கருத்து.]

அற்புதத் திருவந்தாதியில் 75-ஆம் பாடலாக அமைந்ததுஇது.

# 77. திருவடிக்கு வந்த தீங்கு

இறைவனுடைய திருமுடியைப் பார்த்துத் தம் கற்பனைக் குதிரையைத் தூண்டிவிட்ட காரைக்காலம்மையார், இப்போது அவனுடைய திருவடியைக் காணப் புகுகிறார். அதைக் காணும்போது அவருக்குத் தாய்த் தன்மை குமிழியிடுகிறது. 'அடடா! இந்த அடி என்ன, இப்படி ஆகிவிட்டது!' என்று அங்கலாய்க்கிறார்.

தன் குழந்தை சிறிது சோர்ந்தாற் போல இருந்தால், 'என் குழந்தைக்கு என்ன வந்தது? இப்படி இளைத்துப் போய் விட்டதே!' என்று இரங்குவது தாயின் இயல்பு. அந்த இயல்பு அம்மையாரிடம் வெளிப்படுகிறது. அம்மையார் இறைவன் 'அம்மையே!' என்று அழைக்கும் சிறப்புடையவர். அவர் இப்போது உண்மையில் தாய்க்கு உரிய வாத்ஸல்யத்தோடு இறைவன் திருவடியைப் பார்க்கிறார்.

"ஆ! இந்தத் திருவடி தாமரையைப் போல எவ்வளவு அழகாக இருக்கும்! அடியார்களெல்லாம் பாதாம்புயம் என்று புகல்புகும் சரணாலயம் அல்லவா இந்தத் திருவடிகள்! தாமரையைப் போல விரிந்தும் மலர்ச்சி பெற்றும் மணமும் குளிர்ச்சியும் வனப்பும் உடையனவாக விளங்குமே இவை. இப்போது எப்படி இருக்கின்றன? பார்க்கச் சகிக்கவில்லை. கண்ணைக் குத்தும்படி காட்சி அளிக்கின்றனவே! நல்ல திருவடிகள் பொல்லாதனவாக, அந்த நல்ல தோற்றத்தை இழந்து காண்கின்றனவே! ஐயோ பாவம்! என்ன தீங்கு வந்தது இவற்றிற்கு?" என்று உள்ளம் கரைகிறார்.

**ஏபாவம்! பொல்லாவாம்,**
**அந்தா மரை போல் அடி.**

அந்தத் திருவடியின் அழகைப் பார்த்துப் பார்த்து மகிழும் அம்மையாருக்கு இப்போது அதன் தோற்றத்தைக் கண்டு உள்ளம் உருகுகிறது. "ஏன் இப்படி ஆயிற்று?" என்று எண்ணிக் கலங்குகிருர்.

"ஓ! இப்போது இப்படி மெலிந்து தழும்பேறியல்லவா தோன்றுகின்றன? எம்முடைய அப்பனே! இது என்ன அலங்கோலம்!" என்று புலம்புகிருர்.

**முசிந்து எங்கும்**
**எந்தாய்! தழும்பேறி ஏபாவம்!**
**பொல்லாவாம் அந்தா மரைபோல் அடி.**

"அப்பா! என்ன இது! பார்க்கப் பாவமாய் இருக்கிறதே" என்கிருர். அந்தத் திருவடி முழுவதும் தழும்பேறிக் காய்த்துப் போய் இருக்கிறது. நடந்து சென்ற வடுவாக இருந்தால் திருவடியில் உள்ளங்கால் சுவடு பட்டிருக்கும். ஆனல் இது என்ன? திருவடி முழுவதும், ஒவ்வொர் அங்குலமும் தழும் பேறி இருக்கிறதே! என்ன காரணம்?

யோசித்துப் பார்க்கிருர் காரணம் விளங்குகிறது. ஊரில் உள்ளவர்களெல்லாம் குழந்தையின் அழகைக் கண்டு எடுத்து முத்தமிட்டு முத்தமிட்டுச் சிவந்திருக்கும் அதன் கன்னங்களைப் போல அல்லவா இந்த அடிகள் இருக்கின்றன? ஆம்! தேவர்கள் செய்த காரியத்தால் வந்த வினை இது. வானத்தில் வாழும்படி விதிக்கப் பெற்ற விண்ணோர்கள் இறைவனைத் தரிசித்து விட்டுச் சும்மாவா போகிருர்கள்? அவனுடைய திருவடியில் விழுந்து விழுந்து வணங்கி விட்டுச் செல்கிருர்கள் ஒவ்வொருவரும் தம் முடியை அவன் கால் களில் வைத்து வணங்குகிருர்கள். அவர்கள் தலையில் முடி

களை அணிந்திருக்கிறார்கள்; அந்தமுடிகள் இந்த மெத்தென்ற திருவடிகளிலே படியும்படி வணங்கி விட்டுப் போகிறார்கள்.

அந்த முடிகள் மெத்தென்றா இருக்கின்றன? பசும் பொன்னால் அமைந்து மணிகளைப் பதித்த மகுடங்கள் அவை. மணிகள் பார்க்க ஒளி வீசினாலும் கற்களே அல்லவா? இறைவன் திருவடிகள் கல்லின் மேல் நடக்கவில்லை. ஆனால் தேவர்களின் முடிகளிலுள்ள கற்கள் அந்தத் திருவடிகளில் படிந்து படிந்து இந்தத் தழும்பை உண்டாக்கியிருக்கின்றன. ஒருவரா, இருவரா? முப்பத்து முக்கோடி தேவர்களும் இறைவனிடம் வந்து அவன் திருவடிகளில் முடியைச் சாய்த்து வணங்குகிறார்கள். அந்தச் செயல் அவர்களுடைய பணிவையும், இறைவனுடைய தலைமையையும் காட்டுகின்றனவானாலும் அந்தத் திருவடிகளுக்குத்தான் எவ்வளவு துன்பம் நேர்ந்து விட்டது!

ஒரு வீரன் வெற்றி பெற்றதை அறிந்து அவனிடம் மகிழ்ச்சியோடு வந்து அவன் கையை மக்கள் குலுக்குகிறார்கள். நூற்றுக்கணக்கான மக்கள் இப்படிக் குலுக்கியதால் அந்தக் கைக்கு வலி எடுக்கிறது; சுளுக்கியேவிடுகிறது. இந்தப் பழக்கத்தைப் பற்றி ஜவஹர்லால் நேரு ஒரு முறை ஒன்று சொன்னார். "கையைப் பலரும் குலுக்கி மகிழ்ச்சியைத் தெரிவிப்பது நல்லதுதான். ஆனால் குலுக்குகிறவர்கள் பல பேர். குலுக்கப்படும் கை ஒன்றுதான். பலரும் குலுக்குவதால் கை தன் சுவாதீனத்தை இழந்துவிடுகிறது. இப்படிக் குலுக்கும் பழக்கத்தைவிட, நம் நாட்டு முறைப்படி அஞ்சலி செய்வதே மேல் என்று தோன்றுகிறது" என்று அவர் சொல்லியிருக்கிறார்.

தேவர்களெல்லாம் தம் பணிவைக் காட்டப்போய் இந்தத் திருவடிகளுக்கு அல்லவா தீங்கு வந்திருக்கிறது? அவர்கள் மிகவும் பக்தியுடன் காலில் விழுகிறார்கள். முடிகளை அவற்றின் மீது படிய வைத்து இப்படியும் அப்படியும் தலையைத் திருப்புகிறார்கள். அந்தமுடிகள் திருவடிகளையே தேய்த்துவிடுகின்றன.

தம்முடைய உயர்ந்த பதவிச் செருக்கால் இறுமாந்து நிற்கும் அவர்கள், இறைவன் திருவருளே காரணம் என்பதை உணர்ந்து அவன் முன் விழுந்து திருவடிகளிலே முடி பணிய வணங்குகிறார்கள். பணிவைக் காணும்போது மகிழ்ச்சியாகவே இருக்கிறது. ஆனால் அந்தப் பணிவினால் திருவடிகளுக்கு அல்லவா இன்னல் உண்டாகிவிட்டது? அந்த அடிகளில் தேவர்களின் முடிகளின் தழும்புகள் ஏறிப் பார்க்கப் பொறுக்க முடியவில்லையே!

இப்படி எண்ணி வருந்துகிறார் அம்மையார்.

**விசும்பில் விதியுடைய விண்ணோர் பணிந்து**
**பசும்பொன் மணிமகுடம் தேய்ப்ப,—முசிந்து எங்கும்,**
**எந்தாய்! தழும்புஏறி. ஏபாவம்! பொல்லாவாம்**
**அந்தா மரைபோல் அடி!**

எங்கள் தந்தையே, வானத்தில் வாழும் நியமனத்தை யுடைய தேவர்கள் கீழே விழுந்து தம்முடைய தூய பொன்னும் மணியும் கொண்டு சமைத்தக் கிரீடங்களைப் படியும்படி தேய்ப்பதனால், உன்னுடைய அழகிய தாமரையைப் போலத் தோற்றம் அளிக்கும் திருவடிகள் தலிவு பெற்று, எங்கும் தழும்பு ஏறிக் காண்பதற்கு அழகற்றவனாக இருக்கின்றனவே அந்தோ பாவம்!

[விசும்பு-வானுலகம். விதி-இறைவனால் ஆணையிடப் பட்ட முறை. முன்னால் விசும்பு என்று வந்தமையால் பின் நின்ற விண்ணோர் என்பது தேவர் என்னும் துணையாக நின்றது. பணிந்து-கீழே விழுந்து திருவடியில் முடிசாய்த்து வணங்கி; மணிமகுடம் தேய்ப்ப என்றதனால் அடியில் வீழ்ந்து வணங்கியது புலனாகிறது. பசும்பொன்-கலப்பில்லாத பொன்; செம்பைக் கலந்து அணிகளைச் செய்யும்போது அது செம்பொன் ஆகிறது; இங்கே பசுமை மஞ்சள் நிறத்தைக் குறிக்கிறது. பொன்னில் மணியைப் பதித்துப் பதித்துச் செய்த மகுடம் அவை; மணிகள் கற்களைப் போல உறுத்தித்

தேய்கின்றன. ஒளியுடைய மணிகள் ஆனாலும் ஸ்பரி சித்தற்குக் கல்லைப் போல வன்மையுடையனவாக இருக்கின்றன.

திருக்கோயிலில் உழவாரத் திருப்பணியை நாவுக்கரசர் செய்து வந்தபோது இந்திரன் அவரைச் சோதிப்பதற்காக அவர் தொண்டு செய்த பிரகாரத்தில் பொன்னையும் மணியையும் இட்டான். அவற்றை மற்றவர்கள் கண்டால் உடனே எடுத்துச் சேமித்து வைப்பார்கள். ஓடும் கல்லை யும் ஒக்கவே நோக்கும் திருநாவுக்கரசர் அவைகளும் வலம் வரும் அடியார்களின் அடிகளில் உறுத்துமே என்று கல்லையும் மண்ணையும் ஒதுக்குவது போல, உழவாரத்தால் தள்ளினாராம். இந்த வரலாறு இங்கே நினைவுக்கு வருகிறது.

தேவர்களின் மகுடத்திலுள்ள மணிகள் நம் கண்களுக்கு ஒளியும் அழகும் உடையனவாகத் தோன்றினாலும் இறைவன் திருவடிகளுக்குத் துன்பம் தருகின்றவையே. அந்தத் திருவடி களில் தேய்ப்பதனால் தழும்பை உண்டாக்குபவை. எங்கும்—திருவடி முழுவதும். ஏ, பாவம்: இரண்டும் இரக்கக் குறிப்பு. ஏறி—ஏற; எச்சத்திரிபு. பாவம் என்பது புண்ணியத்தின் மறுதலையைக் குறிக்காமல் இரக்கத்தை வெளியிடுவதாக நிற்கிறது; குறிப்புச்சொல். பொல்லா—நலமாகிய அழகை இழந்து காணப் பொறுக்காத தோற்றத்தை உடையன.

அடி, விண்ணோர் பணிந்து தேய்ப்ப, முசிந்து, ஏறி, பொல்லாவலம் என்று வினை முடிவு செய்க.]

இறைவனுடைய திருவடிகளைக் கண்டு இரங்குவதைப் போல, அவனுடைய தனித் தலைமையைப் புலப்படுத்துகிறது. இந்தப் பாட்டு. இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 76-ஆம் பாடல்.

# 78. அறிந்து ஆடும்!

தமிழ்நாட்டில் இறைவன் சிறப்பான நடனத்தைச் செய் தருளும் சபைகள் ஐந்து உண்டு. அவற்றைப் பஞ்ச சபைகள் என்று சொல்வார்கள். திருவாலங்காட்டில் இறைவன் ஊர்த்துவ தாண்டவம் புரியும் இரத்தின சபையும், சிதம் பரத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்தருளும் கனக சபையும், மதுரையில் கால் மாறியாடும் வெள்ளியம்பலமும், திருநெல் வேலியில் நடனமிடும் தாமிர சபையும், திருக்குற்றாலத்தில் திருக்கூத்தாடும் சித்திர சபையும் இருக்கின்றன. இவற்றில் வடக்கே தொண்டை நாட்டில் உள்ள திருவாலங்காடு ஊர்த்துவ தாண்டவத் தலம். அவனுடைய நடனத்தைத் தரிசித்துக் கொண்டு என்றும் காரைக்காலம்மையார் அங்கே இருக்கிறார்.

"கூடுமா றருள்கொ டுத்துக்
குலவுதென் திசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர்
நிலவிய ஆலங் காட்டில்
ஆடுமா நடமும் நீகண்டு
ஆனந்தம் சேர்ந்துஎப் போதும்
பாடுவாய் நம்மை என்றான்
பரவுவார் பற்றாய் நின்றான்."

"மடுத்த புனல் வேணியினார்
அம்மைஎன மதுரமொழி
கொடுத்தருளப் பெற்றாரைக்
குலவியதாண் டவத்தில்அவர்

எடுத்தருளும் சேவடிக்கீழ்
என்றும் இருக்கின் றுரை
அடுத்தபெரும் சீர்பரவல்
ஆர்அளவா யினதம்மா!"

(காரைக்காலம்மையார் புராணம், 61, 75.)

என்று சேக்கிழார் பாடுவார்.

அவ்வாறு ஊர்த்துவ தாண்டவம் புரிந்தருளும் ஐயனைப் பார்க்கிறார் காரைக்காலம்மையார். அவன் ஆடும் ஆட்டம் உலகத்தையே கிடுகிடுக்க வைக்கிறது. சுழன்றும் வளைந்தும் விளையாடும் குழந்தையைப் பார்த்து அதன் மேனி அலசுமே என்றும், எங்காவது முட்டிக் கொள்ளுமே என்றும் அஞ்சும் அன்னையைப் போல அம்மையார் இப்போது கவலைப்படுகிறார். "சுவாமி, தாங்கள் சிறிது நிதானமாகவே ஆடுங்கள். உங்கள் ஆட்டத்தால் விளையும் விளைவுகளைச் சற்றே திருவுள்ளங் கொண்டு மெல்ல ஆடுங்கள்" என்று சொல்ல வருகிறார்.

"நீங்கள் ஆடும் இந்த அரங்கு உங்கள் திருநடனத்தைத் தாங்காது; ஆகவே மெல்ல ஆடுங்கள்" என்கிறார்.

அடிகள்! அறிந்து ஆடும் ;
ஆற்றாது அரங்கு.

விசிறி ஆடினால் என்ன ஆகும்? அதைச் சொல்கிறு

"நீங்கள் உம்முடைய அடிகளைப் பெயர்த்து வேகமாக ஆடினால் அடியில் உள்ள பாதாள உலகம் நிலைபெயரும். இதனை அறிந்து மெல்லவே ஆடுங்கள்."

அடிபேரின் பாதாளம் பேரும்.

"உம்முடைய திருமுடி அசைந்து பெயர்ந்து ஆடினால் மேலே உள்ள வானத்தின் உச்சியே தகர்ந்துவிடும். இதை உணர்ந்து ஆடுங்கள்."

முடிபேரின் மாமுகடு பேரும்.

"தேவரீர் கைகளில் கடகங்களை அணிந்திருக்கிறீர்கள். எட்டுத் தோள்கள் இருக்கின்றன. அந்த எண்டோளையும் வீசி நின்று ஆடும் பிரான் நீங்கள். கைவளைகள் மேலும் கீழும் மறிந்து ஆடும்படி உங்கள் நடனம் அமைந்தால் பெருமை யுடைய திசைகளெல்லாம் பெயர்ந்து மாறிவிடும். ஆகவே இதனை அறிந்து ஆடுங்கள்."

கடகம்
மறிந்து ஆடு கைபேரின்
வான்திசைகள் பேரும்.

"அடியினால் பாதாளமும், முடியினால் வான் முகடும், கைகளால் திசைகளும் நிலை பெயர்ந்து விடுமானால் உலகம் என்னாகும்? இந்த விளைவை எண்ணியும், தேவரீர் ஆடும் இந்த அரங்கு தங்கள் ஆட்டத்தைத் தாங்காமல் குலையும் என்பதையும் நினைந்து, மெல்ல ஆடுங்கள்."

அடிபேரின் பாதாளம் பேரும் : அடிகள்
முடிபேரின் மாமுகடு பேரும் ;— கடகம்
மறிந்துஆடு கைபேரின் வான்திசைகள் பேரும் :
அறிந்து ஆடும் : ஆற்றாது அரங்கு.

"சுவாமி, நீங்கள் தாண்டவம் புரியும்போது தங்கள் திருவடி வேகமாகப் பெயர்ந்து சதி மிதித்தால் கீழே உள்ள பாதாள உலகம் நிலைபெயரும்; தேவரீர் திருமுடி பெயர்ந்து வேகமாக ஆடினால் பெரிய வானத்தின் உச்சியிலே அது முட்டி அந்த வானம் பெயர்ந்து விடும்; வளைகள் மாறி மாறி ஆடும் திருக்கரங்களை வீசி ஆடினால் பெரிய திசைகளே தம் நிலை யிலும் குலைந்து மாறிவிடும்; ஆகவே இவற்றையெல்லாம் அறிந்து நடனம் புரிந்தருள்வீர்களாக; இந்தச் சிறிய நடன அரங்கு தேவரீருடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தாங்காது. நிலை குலைந்து போகும்."

[நடனமிடும்போது திருவடிகளைச் சதிக்கு ஏற்ப மிதித்து ஆடுவார்கள். கால்கள் பெயர்ந்து பெயர்ந்து மிதிக்கும். அவ்வாறு அடிகளைப் பெயர்த்து வைக்கும்போது அவற்றின் ஆற்றலைத் தாங்க மாட்டாமல் பாதாளம் பெயர்ந்து நிலை குலையுமாம்.

அடிகள்-சுவாமியே; விளி. அடிகளுடைய முடி என்றும் கொள்ளலாம். அப்போது அதனை அடிகள் அடி அடிகள் கை என்று பிறவற்றோடும் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.

தலையை அப்படியும் இப்படியும் பெயர்த்து ஆடுதல் நடனமிடுவோருக்கு இயல்பு. அவ்வாறு ஆடும்போது பெரிய வானத்தின் உச்சி பெயர்ந்துவிடுமாம். மாமுகடு—பெரிய உச்சி; வானம் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி அகலிரு வானமாக இருத்தலின் அதன் உச்சி, 'மாமுகடு' ஆயிற்று.

ஆடுபவர்களின் கைகளில் அணிந்த வளையல் குலுங்கி நடனத்துக்குத் தாளம் போடுவது போல மாறி மாறி ஒலிக்கும். அசையும்போது அவற்றிலுள்ள கடகங்கள் மேலும் கீழும் மறிந்து குலுங்கும். அதனால் பெரிய திசைகளெல்லாம் பெயர்ந்து விடுமாம். மறிந்து-மாறி மாறி அமைந்து. கடகம் ஆடும் கை. வான்-பெருமை. அறிந்து-இந்த விளைவுகளையெல்லாம் திருவுள்ளத்தில் கொண்டு. ஆடும்-ஆடுவீராக. அரங்கு ஆற்றாது-தேவரின் ஆடுவதற்கு நிலைக்களமாகிய அரங்கமே தங்கள் ஆட்டத்தைத் தாங்காது.

'பாதாளம் பேரும்; மாமுகடு பேரும்; திசைகள் பேரும்; அரங்கு ஆற்றாது; இவற்றை அறிந்து அந்த நிலைகுலைவு உண்டாகாமல் ஆடுங்கள்' என்றபடி. அரங்கு: ரங்கம் என்ற ஆரியச் சொல் அரங்கம் என்று தமிழ் வடிவம் பெற்று, அது பின்னும் திரிந்து அரங்கு என்று ஆயிற்று.]

இறைவனுடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்த அதிசயத்தால் பாடியது இது.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 77-ஆம் பாடல் இது.

# 79. எல்லாம் கிடைக்கும்

இவ்வுலகில் உள்ள மக்களைச் சார்ந்து பணிந்து இரந்தால் அவர்கள் நமக்கு வேண்டியதை உதவக்கூடும். மனம் பொருந்தாமல் இருந்தால் உதவாமலும் இருப்பார்கள். சிலருக்கு மனம் இருந்தாலும் நமக்கு வேண்டிய பொருள் அவரிடம் இல்லாமல் இருந்தால், அவரால் நமக்கு ஒரு பயனும் இராது.

உலகில் உள்ள யாவருமே குறைவுடையவர்கள். தேவர்களும் குறை உடையவர்களே. இந்திரன், பிரமன் ஆகியவர்களும் குறை உடையவர்களே. இறைவன் ஒருவனே குறையிலா நிறைவை உடையவன். அவன் திருவுள்ளம் இரங்கினால் எதைக் கேட்டாலும் தரவல்லவன். அவனைப் போன்ற வள்ளன்மை உடையவர் யாரும் இல்லை எல்லாப் போகங்களையும் அவனால் வழங்க முடியும். எத்தகைய இன்பங்களிலும் சிறந்ததாகிய முக்தியின்பத்தை அவன் ஒருவனால்தான் தர முடியும். அவனுடைய திருவுள்ளம் இரங்கி அருள் சுரக்கப் புகுந்தால், அந்த அருளால் உண்டாகாத நலமே இல்லை.

அவன் மயானத்தில் ஆடுகிறான். தனக்கு நடன சாலையாக அரங்கமாக, பேய்கள் நிறைந்த சுடுகாட்டைக் கொண்டிருக்கிறான் அவன். அவனை நினையாதவர்களும் அவனை வெறுப்பவர்களும் கூட அங்கேதான் போகவேண்டும். எல்லாரும் உறுதியில் வந்து சேரும் இடத்தில், மக்கள் பிறந்து இறந்து வந்து சேரும் சுடுகாட்டில், அவன் ஒருவனே என்றும் அழியாத பெருமானாக விளங்குகிறான். அங்கே அவன் நடனம் புரிகின்றான்.

**அரங்கமாப் பேய்க்காட்டில் ஆடுவான்.**

'பேயோடு ஆடும் இவன் நமக்கு என்ன தரப்போகிறான்?' என்று எண்ணக்கூடாது. நிலையாமையை நினைப்பூட்டும் புனிதமான இடம் மயானம். அங்கே அவன் எல்லாரையும் சந்திப்பதற்காக ஆடிக்கொண்டிருக்கிறான்.

அவனுடைய சூழ்நிலையைக் கண்டு நாம் ஏமாறக் கூடாது. அவன் நம்மிடம் இரக்கம் கொண்டு அருள் செய்யப் புகுந்தானானால் பிறரால் வழங்க முடியாதவற்றையெல்லாம் வழங்குவான்.

இந்தக் கருத்தைக் காரைக்கால் அம்மையார் தம் நெஞ்சத்தைப் பார்த்துச் சொல்கிறார். 'அறிவில்லாத ஏழை நெஞ்சே!' என்று விளித்துக் கூறுகிறார்.

### ஏழாய்!

தமக்கு மிகவும் நெருக்கமாக இருக்கிற நெஞ்சைப் பார்த்துத்தான் அப்படிச் சொல்கிறார். தம் நெஞ்சுக்குக் கூறுவது போலப் பல இடங்களில் அவர் பாடியிருக்கிறார்.

அந்தப் பெருமானுடைய திருவுள்ளத்தில் இரக்கம் உண்டானால் நமக்கு எல்லாம் கிடைக்கும். ஆனால் ஏதும் செய்யாமல் உலகியலில் ஈடுபட்டு உழலும் நம்மிடம் அவன் இரக்கம் கொள்ளமாட்டான். வேலை செய்யாமல் கூலி கொடுத்தால் சோம்பேறி ஆகிவிடுவோம். ஆதலால் அவன் நாம் ஒன்றும் செய்யாமல் இருந்தால், வாளா இரங்க மாட்டான்.

### வாளா இரங்குமோ!

உயிர்க் கூட்டங்கள் பல. அவற்றின் வினைக்கு ஈடாக இன்ப துன்பங்களை ஊட்டுபவன் அவன். அவர்களுக்குள் சிறப்பான முயற்சி செய்பவர்களிடம் அவனுக்கு இரக்கம் மிகுதியாகும். அவர்களுக்குச் சிறப்பான அருளை வழங்குவான். நன்றாகப் படித்துத் தேர்வு எழுதியவனுக்கு ஆசிரியர் அதிகப் புள்ளி வழங்குவார். மிகச் சிறப்பாகத் தேர்ச்சி பெறுபவர்

களுக்குப் பரிசுகளும் கிடைக்கும். எல்லாருக்குமே தேர்ச்சிக் குரிய புள்ளிகளை வழங்கினால் பிறகு கல்விக்கு என்ன மதிப்பு உண்டாகும்?

முயற்சி கல்லாதவர்களுக்கு ஒன்றை வழங்கினால் அவர் களுக்கு அதன் அருமை தெரியாது. 'தான் தேடாப் பொன் னுக்கு மாற்றும் இல்லை; உரையும் இல்லை' என்பது பழமொழி. ஆகவே அவன் எல்லா உயிர்களுக்கும் இரங்குவதில்லை.

வாளா

இரங்குமோ எவ்வுயிர்க்கும்?

ஆகவே நம்மிடம் அவனுக்கு இரக்கம் உண்டாகும் வகை யில் நாம் முயற்சி பண்ணவேண்டும், அவனைச் சரணடைந்து, 'எனக்கு அருள் செய்யவேண்டும்' என்று பணிந்து இரக்க வேண்டும். ஒருமுறை விண்ணப்பித்தால் போதாது. பல காலும் அடுத்தடுத்துப் பணிந்து இரக்கவேண்டும். அப்போது தான் நம்முடைய உண்மையான அன்பு புலப்படும். பணம் படைத்தவனிடம் வறியவன் எத்தனை முறை சென்று எப்படி, எப்படியெல்லாம் பணிந்து கெஞ்சி வேண்டுகிறான்!

உண்மையான அருட்பசி உடையவர்கள் இறைவனைப் பலகாலும் பணிந்து வழிபட்டு வேண்டுவார்கள்.

> ''பற்பாவும் வாயாரப் பாடி ஆடிப்
> பணிந்தெழுந்து குறைந்தடைந்தார்
> பாவம் போக்க கிற்பானை.

என்று அப்பர் சுவாமிகள் பாடுவார்.

அவ்வாறு பலகாலம் பணிந்து இரந்தால் இறைவன் திருவுள்ளம் நெகிழ்வான்; இரங்குவான்.

பன்னாள் இரந்தாற் பணிந்து.

அவ்வாறு இரங்குவானானால் நமக்குக் கிடைக்கும் நன்மைகளுக்கு அளவே இராது. அவன் நம்மை மிக உயர்ந்த பதவியிலே வைப்பான். இந்திரபதவி, பிரமபதவி, திருமால் பதவி முதலிய உயர்ந்த பதவிகள் கிடைக்கும். எந்தப் பதவியில் தான் அவனால் வைக்க முடியாது?

> "குடங்கை நீரும் பச்சிலையும்
> இடுவார்க்கு இமையாக் குஞ்சரமும்
> படங்கொள் பாயும் பூவணையும்
> தருவாய் மதுரைப் பரமேட்டி."

என்பது திருவிளையாடற் புராணம். தன்னை அபிடேகம்செய்து அருச்சித்து வழிபடுகிறவர்களுக்குப் பிரம பதவியையும் அவன் தருவான். அவன் நினைத்தால் எதைத்தான் தர முடியாது?

இரங்குமேல்

என் ஆக வையான்தான்?

அவன் இந்த உலகத்தில் நுகரும் சுகபோகத்தைத் தருவான். தேவலோகத்தை வழங்குவான்; அதன் அரசுரிமையையே தந்துவிடுவான். வேறு எந்த உலகமாக இருந்தால் என்ன? அவன் தரமாட்டானா?

எவ்வுலகம் ஈந்து அளியான்?

ஈவதுமட்டும் அன்று; அப்படி ஈந்த பதவியில் எந்தப் பகையும் வராமல் நம்மைப் பாதுகாப்பான். "நாம் இவனுக்கு உயர்ந்த பதவியைக் கொடுத்துவிட்டோமே! இனி இவன் சுகமாக இருக்கட்டும்" என்று சும்மா இருந்துவிடமாட்டான். அந்தப் பதவியில் இடையூறு சிறிதும் வராமல் நம்மைக் காத்து நிற்பான். நமக்கு வேண்டிய உலகத்தை ஈந்து, பிறகு அளிப்பான் பாதுகாப்பான்;.

ஆகவே அவன் உள்ளத்தில் இரக்கம் சுரக்கும்படி நாம் பன்னுள் பணிந்து இரக்கவேண்டும். அப்போதுதான் எல்லாம் கிடைக்கும். ஒரு முயற்சியும் செய்யாமல் இருந்தால் அவன் சும்மா இரங்க மாட்டான்.

அரங்கமாப் பேய்க்காட்டில் ஆடுவான் வாளா
இரங்குமோ எவ்வுயிர்க்கும்? ஏழாய்!—இரங்குமேல்
என்ஆக வையான்தான்? எவ்வுலகம் ஈந்தளியான்?
பன்னுள் இரந்தாற் பணிந்து.

அந்வயம்: ஏழாய், பேய்க்காட்டில் அரங்கமா ஆடுவான் எவ்வுயிர்க்கும் வாளா இரங்குமோ? பன்னுள் பணிந்து இரந்தால், இரங்குமேல், தான் என்னுக வையான்? எவ்வுலகம் ஈந்து அளியான்?

அறிவற்ற நெஞ்சே, பேய்களை உடைய சுடுகாட்டில் அதையே அரங்கமாகக் கொண்டு நடனமிடும் சிவபெருமான் தராதரம் பாராமல் எல்லா உயிர்களுக்கும் வாளா இரங்குவானே? மாட்டான். அவனைப் பல காலம் வணங்கி வழிபட்டு விண்ணப்பித்துக் கொண்டால் இரங்குவான்; அவ்வாறு இரங்குவானுயின் அவன் நம்மை எந்தப் பதவியிலுள்ளவராக்கத் தான் வைக்கமாட்டான்? எந்த உலகத்தைத்தான் வழங்கிக் காப்பாற்ற மாட்டான்?

[அரங்கம்—நடனமாடும் இடம். பேய்க்காடு—பேய்களை உடைய சுடுகாடு. ஆடுவான் என்பதால் சிவபெருமான் என்பது புலப்பட்டது. வாளா—தராதரம் பாராமல், சும்மா இரங்குமோ: வினு எதிர்மறைப் பொருளில் வந்தது; இரங்கான் என்னும் பொருளைத் தந்தது. எவ்வுயிர்க்கும்—பல தரப்பட்ட பக்குவங்களையுடைய எல்லா உயிர்களுக்கும். ஏழாய்: நெஞ்சை விளித்துச் சொன்னது. ஏழையாக உள்ள உனக்கு எல்லாப் போகமும் கிடைக்கும் என்று நயம்படச்சொன்னபடி.

'பணிந்தால் இரங்குவான்; இரங்கினுல் இவற்றையெல்லாம் வழங்குவான்' என்றுர். என் ஆக—எந்த நிலையில்

இருப்பவராக. தான்—அவன். என்னுகத்தான் வையான், எவ்வுலகந்தான் அளியான் என்று இரண்டிடத்திலும் கூட்டிப் பொருள் செய்வதும் பொருந்தும். ஈதலும் அளித்தலும் வேறு வேறு செயல்; ஈதல் வழங்குவதைக் குறித்தது; அளித்தல் பாதுகாப்பைக் குறித்தது.

விலை உயர்ந்த பொருளைக் குழந்தையிடம் அளித்த அன்னை அது பறிபோகாமல் அந்தக் குழந்தையின்பால் ஒரு கண் வைத்துக் காவல் செய்வது போன்றது இது. பன்னாள்: நாள் என்றது தினத்தைக் குறியாமல் காலம் என்னும் பொதுப் பொருளைக் குறித்தது.

> "பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சிக்கின்
> நல்லறிவு சற்றே நகும்."

என்பராதலின் பலகாலம் செய்யும் முயற்சியினால்தான் மேலான பயன் கிடைக்கும் என்று குறிப்பித்தார்.

இறைவனை இடைவிடாது பணிந்து வழிபட்டால் எல்லா வகையான பதவிகளும் கிடைக்கும் என்பது கருத்து.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 78-ஆவது பாடல் இது.

# 80. அடியவர்களின் பெருமிதம்

இறைவனுக்கு ஆட்பட்ட அடியவர்களுக்கு அச்சம் என்பதே இராது. மரணத் துன்பத்துக்கும் அவர்கள் அஞ்ச மாட்டார்கள்.

"யாம்ஆர்க்கும் குடி அல்லோம் ;
யாதும் அஞ்சோம்;
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை."

என்ற பெருமிதத்தோடு இருப்பார்கள். பெரிய செல்வர் ஒருவரை நெருங்கிய நண்பராகப் பெற்றவர் அந்த நட்பினால் மிகவும் தைரியத்தோடும் ஊக்கத்தோடும் வாழ்வார். எந்த இன்னல் வந்தாலும் அவரால் போக்கிக் கொள்ளலாம் என்ற உறுதிப்பாடு அவரிடம் இருக்கும்.

மனிதர்களின் நட்புறவினாலே இப்படி ஒரு மனத்திண்மை வருகிறதென்றால் எல்லாம் வல்ல இறைவனுடைய அருட் பலத்தைப் பெற்றவர்கள் கொள்ளும் மிடுக்குக்கு உவமையே இல்லை.

"நாவலித் துழிதர் கின்றோம்
நமன்தமர் தலைகள் மீதே"

என்ற வீறுப்பை அவர்களிடம் காணலாம். காரைக் காலம்மையார் இத்தகைய உள்ளத் திண்மையை உடையவர். அவரோடு கொஞ்சம் பேசலாமா?

"அம்மையாரே, உங்களுக்கு இவ்வளவு செருக்கு இருக் கிறதே! உங்களுக்கு அச்சம் சிறிதும் இல்லையா?" என்று நாம் கேட்கிறோம்.

"அச்சம், தளர்ச்சி, சோர்வு ஆகியவை எல்லாம் மனத்தில் எழுபவை. எம்முடைய சிந்தையில் அவை எழுவதில்லை. எம் சிந்தையார் செருக்குடன் இருக்கிறார்."

அவருடைய பெருமிதம் தம்முடைய மனத்தையே உயர்த்திப் பேசச் செய்கிறது. 'சிந்தையார்' என்று மதிப்புடன் பேசுகிறார். அந்தச் சிந்தையாரிடத்தில் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை.

**சிந்தையார்க்கு உற்ற செருக்கு.**

"இந்தச் செருக்கு உங்கள் சிந்தையார்க்கு எவ்வாறு வந்தது?"

"எல்லாம் வல்ல எம் தந்தையாருக்கு அடிமைப்பட்டு வாழும் நல்வாழ்வு நமக்குக் கிடைத்திருக்கிறது. அது காரணமாகத்தான் இந்தச் செருக்கு வந்திருக்கிறது."

"பணத்தாலும் அறிவாலும் உடல் வலிமையாலும் சிறந்து நிற்பவர்கள் செருக்குடன் இருப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் அந்தச் செருக்கு நிலையாக நிற்பதில்லை. செல்வம் சகடக்கால் போல வரும். ஒருகால் வளம் பெற்றோர் மற்றொரு கால் வளம் சுருக்கிச் செருக்கழிந்து நிற்கிறார்கள். அறிவிற் சிறந்தவர்களும் தம் அறிவெல்லைக்கு அகப்படாத பொருளைப் பற்றிச் சிந்திக்கும்போது தடுமாறுகிறார்கள். அப்போது அவர்கள் செருக்கு எங்கோ ஓடி ஒளிந்து கொள்கிறது. உடல் வலிமை பெற்றவர்கள் ஆண்டு முதிர முதிர அந்த வலிமையை இழந்து விடுகிறார்கள். அப்போது முன்பு இருந்த மிடுக்கு இருப்பதில்லை. மிகப் பெரிய செல்வரை உற்ற தோழராகக் கொண்டவர்கள் அந்தச் செல்வர் மனம் மாறினாலும், அவருடைய செல்வம் குறைந்தாலும், அவர் உலக வாழ்வை நீத்தாலும் அவரால் பெறும் நன்மையை இழந்து வாடுகிறார்கள். எப்போதும் ஒரே நிலையில் செருக்கோடும் மிடுக்கோடும் வாழ்பவர்களைக் காண்பதில்லை. அப்படி இருக்க

நீங்கள் செருக்குக் குலையாத சிந்தையுடன் இருக்கிறீர்களே; அது எப்படி?"

"அதற்குக் காரணம் இதுவாக இருக்குமோ?"

இதுகொலோ
சிப்தையார்க்கு உள்ள செருக்கு?

"எது?"

"எம் தந்தையாராகிய சிவபெருமானுக்கு ஆளாகப் பெற்ற வலிமையாகத்தான் இருக்க வேண்டும்."

"எவ்வாறு ஆட்பட்டீர்கள்?"

"உலகத்தில் மற்றவர்களைப் பற்றினால் பயன் ஒன்றும் இல்லை என்பதை அநுபவத்தில் அறிந்து, வேறு ஏதும் பற்றின்றி, எம் தந்தையாரைப் பற்றிக்கொண்டு ஆளாக நின்று தொண்டு செய்யப்பெற்றோம். அதையன்றி வேறு வழி யில்லை என்று துணிந்து, அந்த அடிமைத் தன்மையில் என்றும் பிறழாது நிற்கிறோம். இதுதானோ இந்தச் சிந்தையாருக்கு உண்டான கெருக்குக் காரணம்?"

துணிந்துஎன்றும்
எந்தையார்க்கு ஆட்செய்யப்
பெற்ற இதுகோலோ
சிந்தையார்கரு உள்ள செருக்கு?

"எவ்வாறு ஆட்பட்டுத் தொண்டு செய்தீர்கள்?"

"படர்ந்த சடையை உடைய எம் தந்தையாரை அணுகி னோம். அவரைப் பணிந்தோம். அவருடைய திருவடிகளை மலரால் அருச்சித்து மலர்மாலைகளை வேய்ந்து அலங்காரம் செய்தோம்."

பணிந்தும் படர்சடையான்
பாதங்கள் போதால்
அணிந்தும்,

"பிறகு?"

"இவ்வாறு இறைவனை வழிபட்டதோடு நிற்கவில்லை. இந்த மனம் ஒரு சமயம் இருப்பதுபோல் மற்றொரு சமயம் இருப்பதில்லை, இறைவன் திருவடிகளைப் போதால் புனையும் போது மனம் தெளிவாக இருக்கிறது. வேறு சில சமயங்களில் இது சோர்வடைகிறது. தொடர்ந்து இறையுணர்வோடு இருப்பதற்கு என்ன வழி என்று பார்த்தோம். ஒரு வழி கிடைத்தது."

"என்ன வழி அது?"

"மனித மனம் சார்பினால் உயர்வதும் தாழ்வதும் செய்கிறது. எந்தச் சூழ்நிலையில் நாம் இருக்கிறோமோ, அந்தச் சூழ்நிலைக்கு ஏற்றபடி இது மாறுகிறது. பெரிய விளக்கை ஏற்றி நடுத்தெருவில் வைத்தால் காற்றினால் அலைப்புண்டு அது அணைந்து போகும். எவ்வளவு எண்ணெய் விட்டிருந்தாலும் காற்றின் தாக்குதலுக்கு எதிரே அந்த விளக்கு நிற்பதில்லை. இந்த உலகத்தில் எத்தனையோ மாயாசக்திகள் இருக்கின்றன. தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகாமல் அவை தடுக்கின்றன. ஒருகால் கடவுள் உணர்வு சிந்தையில் எழுந்தாலும் உலக விவகாரங்கள் அந்த உணர்வைக் குலைத்து விடுகின்றன. ஆகையால் அதற்குரிய பாதுகாப்பைத் தேடிக்கொண்டாலன்றிக் கடவுளுணர்வு நிலையாக நில்லாது"

"நீங்கள் எந்தப் பாதுகாப்பை நாடினீர்கள்?"

"நல்லோர் இணக்கத்தை நாடினோம். இறைவனுடைய திருவடிக்கு அருச்சனை செய்து வாழும் தொண்டர் கூட்டத்தில் சேர்ந்தோம். அவர்களைத் துதித்து அவர்கள் கூட்டத்தில் ஒருவராகச் சேர்ந்து கொண்டோம். அவர்களோடு சார்ந்தமையால் எம்மை அறியாமலே நல்ல பழக்கங்கள் எம்மிடம் உண்டாயின. சுற்றுச் சூழ்நிலை முழுதும் ஆண்டவனுக்கு அடிமையாகித் தொண்டு புரியும் இயல்பே அமைந்ததனால், வேறு எந்த நினைவும் இடையே புகுவதற்கு இடம் இல்லாமல்

போயிற்று. அருமையான செல்வத்தைப் பெற்ற ஒருவன், அது பறிபோய் விடுமோ என்ற அச்சத்தால் தக்க பாதுகாப்புள்ள கோட்டைக்குள்ளே அதை வைத்து, அங்குள்ள காவலர்கள் அதற்குப் பாதுகாப்பாக இருக்கும் திறத்தை அறிந்து, இனி நமக்குக் கவலை இல்லை என்று இருப்பதைப் போல இருக்கிறார்.

"உங்கள் அடிமைத் தன்மை மாறாமல் இருக்க அவர்கள் என்ன செய்தார்கள்?"

"அவர்கள் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. அவர்களிடையே நாம் இருப்பதே போதுமானது. சூரியன் ஒளி நன்றாக வீசும் இடத்தில் இருள் புகுவதற்கு ஏது இல்லை. எந்தையார்க்கு ஆட் செய்யப் பெற்ற தொண்டர்களுடைய கூட்டம் பலமான கோட்டையைப் போன்றது. பக்தி உணர்வாகிய செல்வத்தை அங்கே புகுந்து யாரும் குலைக்க முடியாது. அவ்வாறு இறைவன் பாதப் போதை அருச்சித்து ஆட்பட்டு வாழும் தொண்டர்களைத் துதித்து அவர்கள் கூட்டத்திலே கலந்துவிட்டோம். ஆகவே இனிப் பயம் இல்லை. எம்முடைய அடிமைப் பண்பு மாறாது; குலையாது இந்த உறுதியான நிலையில் பாதுகாப்பாக இருப்பதனால் போலும் எம்முடைய சிந்தையார் செருக்குடன் இருக்கிறார்."

**பணிந்தும் படர்சடையான்**
**பாதங்கள் போதால்**
**அணிந்தும், அணிந்தவரை**
**ஏத்தத்—துணிந்துஎன்றும்**
**எந்தையார்க்கு ஆட்செய்யப்**
**பெற்ற இதுகொலோ**
**சிந்தையார்க் குள்ள செருக்கு!**

படர்ந்த சடையை உடையவன் பாதங்களைப் பணிந்தும், பிறகு அந்தத் திருவடிகளை அலரும் பருவத்துள்ள மலர்களால் அலங்கரித்தும், அப்பால் அவ்வாறு அலங்கரித்த அன்பர்களை

ஏத்துவதே நல்ல நெறியென்று துணிந்து நின்றோம்; அப்பால் என்றும் பிறழாமல் எம் தந்தையாராகிய சிவபெருமானுக்கு ஆளாகித் தொண்டு செய்யப் பெற்றோம். அவ்வாறு பெற்ற இந்த நிலைதானே, எம்முடைய சிந்தையாருக்கு உள்ள செருக்குக் காரணம்?''

படர்சடையான் பாதங்கள் பணிந்தும் போதால் அணிந்தும் என்று கூட்டுக; இடைநிலை விளக்கு. படர் சடையான்-விரிந்த சடையை உடையவன். படர் சடையையும் பாதங்களையும் கூறியதனால் அவன் திருக்கோலம் முழுவதும் கண்டவராயிற்று. கேசாதி பாதக் காட்சி கிட்டியது. போது அலரும் பருவத்துள்ள பேரரும்பு. "உன்னைச் சிங்காரித்து உன் அழகைப் பாராமல், என்னைச்சிங் காரித் திருந்தேன் பராபரமே!" என்பார் தாயுமானவர். இறைவனுக்கு அலங்காரம் செய்து கண்குளிரக் கண்டு மகிழ்வது அவனுக்கு ஆட் செய்யப் பெற்றவர்களின் இயல்பு.

பணிந்தபோது பக்தி அரும்பியது; இறைவன் பாதங்களை அர்ச்சித்தபோது அது அலர்ந்தது; அணிந்தவரை ஏத்தத் துணிந்தபோது அது காயாயிற்று; அவர்களோடு சேர்ந்து ஆட்செய்யப் பெற்றபோது அது கனிந்தது.

முதலில் நெருக்கமின்றி இருந்தமையால் படர் சடையான் என்று ஒருமையால் சொன்னவர், தொண்டர் கூட்டத்தோடு சென்று நெருங்கி ஒட்டுறவு இறுகவே, தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பின் முதிர்ச்சியினால், 'எந்தையார்' என்று உறவின் முறையைப் பன்மை வாசகத்தில் சொன்னார். ஆட்செய்யப் பெற்ற இது—அடிமையாக நின்று தொண்டு செய்யும் பேறுபெற்ற இந்த இயல்பு. இது கொலோ: ஓ, விஞப்பொருளைத் தருதலின், கொல், அசையாக நின்றது. இது என்றது ஆட்செய்யப் பெற்றதைக் குறித்தது. இது தான் என்று சொல்லாமல் இதுகொலோ என்றது. ஐயத்தால் சொன்னதன்று; இதுதான் என்றால் அகங்காரம் தொனிக்கும் அதனால் 'இதனால் தானோ?' என்று பராமுகமாகச் சொன்னார்.

சிந்தையார் என்றது, 'இத்தகைய நன்மனத்தைப் பெற்றோமே!' என்ற உவகையால் அஃறிணை ஒருமையை உயர்திணைப் பன்மை வாய்பாட்டால் குறித்தபடி. தமக்குச் செருக்கு உண்டானதாகச் சொல்லாமல் அதனைச் சிந்தையின் மேலேற்றிச் சொன்னார், பணிவு காரணமாக.

செருக்கு—செருக்குக் காரணம்; ஆகு பெயர்.

'படர்சடையான் பாதங்கள் பணிந்தும், அணிந்தும், துணிந்து ஆட்செய்யப் பெற்ற இது கொலோ உள்ள செருக்கு' என்று இணைத்துப் பொருள் கொள்க.

படர்சடையான் என்றதன் பின் எந்தையார் என்று சொன்னதில் அவ்வெந்தையார் என்ற சுட்டுத் தொக்கு நின்றது.

இறைவனுடைய அடியார்கள் எதனாலும் தளர்வின்றிப் பெருமிதத்தோடு இருப்பார்கள் என்பது, இதனாற் பெறப்படும் கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 79-ஆவதுபாடல் இது.

# 81. திருவடியின் ஆற்றல்

காரைக்காலம்மையார் இப்போது இறைவன் திருவடிப் பெருமையை நினைத்துப் பார்க்கிறார். அது அடியவர்களுக்கு இன்ப வீடாக இருப்பது. அல்லாதவர்களின் கொடுமையை அடக்கும் ஆற்றலுடையது. அந்தப் பராக்கிரமத்தை எண்ணுகிறார்.

திருவின் கேள்வன் திருமால். அவன் திருவுடையவன். அதனால் சிறந்த தகுதியுடையவன். அவன் இறைவனுடைய திருவடியைக் காணமுடியாது. உலகத்தைப் படைக்கும் பிரம தேவனும் காண்பதற்கரியது அந்த அடி.

சுந்தரத் திருவடிகளைக் காண வேண்டுமென்று திருமால் வராக உருவெடுத்து முயன்றான். உலகத்தை அகழ்ந்து போனான். அவனால் காண முடியவில்லை. அவனால் காண முடியாதபோது அவனைக் காட்டிலும் ஆற்றல் குறைந்த அயன் எங்கே காணப்போகிறான்?

அவற்றைக் காணவேண்டும் என்ற அவாவினால் எவ்வளவோ முயன்று பார்த்தும் அவர்களால் முடியவில்லை யாதலால், "எம்பெருமானே! உன் திருவடியைக் காணலாம் என்ற அகந்தையோடு முயன்றோம். எங்கள் ஆற்றலுக்கு அகப்பட்டவை அல்ல அவை என்பதை உணர்ந்தோம். எங்கள் அகந்தையைப் பொறுத்தருள வேண்டும்" என்று பல வாறு சொல்லி அவர்கள் அரற்றினார்கள். பிறகு இறைவன் அவர்கள் கண் காணும்படி, சோதி வடிவத்தை மாற்றி அவர்கள் முன் நின்றான். அப்போது வீழ்ந்து பணிந்து மகிழ்ந் தார்கள்; அந்தத் திருவடியின் பெருமையைப் புகழ்ந்து துதித்தார்கள்.

### திருத்தக்க
### மால்அயனும் காணாது
### அரற்றி, மகிழ்ந்து ஏத்த

காணாமல் வருந்திய அவர்களுக்கு இறைவனே இரங்கித் தன் திருவடியைக் காட்டினான். முதலில் வருந்தியதனால் அவற்றின் அருமைப்பாட்டை அறிந்த அவர்கள், இறைவன் கருணையினால் அந்தத் திருவடிகளின் தரிசனம் கிடைத்தபோது அவர்கள் உள்ளம் மகிழ்ந்தார்கள்; தம் அகந்தையை மறந்து இறைவன் கருணை காட்டினானே என்று எண்ணி ஏத்தினார்கள்.

குழந்தை தன்னைத் தேடட்டும் என்று அன்னை மறைந்து கொள்ளுகிறாள். அந்தக் குழந்தை தாயை எங்கெங்கோ தேடுகிறது. தேடித் தேடி அலுத்துப் போய் அரற்றுகிறது. அப்போது தாய் வெளிப்பட்டுக் குழந்தையின் முன் நிற்கிறாள். தேடி வருந்திய குழந்தைக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாகிறது.

அத்தகைய மகிழ்ச்சி மாலுக்கும் அயனுக்கும் உண்டாயிற்று. அந்த மகிழ்ச்சியின் விளைவாக அவர்கள் இறைவனை ஏத்தித் துதித்தார்கள்.

அவர்கள் ஏத்தும்படி விளங்கும் இறைவன் திருவடி, காலனையே உதைத்தது. அவன் மிடுக்குடன் மார்க்கண்டேயனைப் பிடிக்க வந்தான். தன் பாசத்தை அவன்மேல் வீசினான். சிவலிங்கப் பெருமானையும் சேர்த்துப் பாசத்தால் அகப்படுத்தினான். அப்போது அந்தக் காலனுடைய ஆற்றல் தோற்றுப் போகும்படி அவனை உதைத்தது இறைவன் திருவடி. அது காலஜயம் கொண்ட திருவடி.

அத்தகைய பராக்கிரமத்தைச் செய்த திருவடியே மற்றொரு செயலையும் செய்தது.

இராவணன் தன் விமானத்தில் ஏறி வரும்போது அந்த விமானம் கைலாசத்தின் மேல் சென்றது. அப்பால் அதனால்

நகர முடியவில்லை. இறைவனுடைய இடமாகிய அதை மீறி அதனால் செல்ல முடியவில்லை. தன் விமானப் பயணத்துக்குத் தடையாக இருந்த கைலாசத்தைத் தூக்கி எறிந்துவிட வேண்டுமென்று எண்ணினான் அவன்.

போகும் வழியில் ஏதேனும் கல் தடுத்தால் அதைத் தூக்கி எறிகிறோமே; அது போலச் செய்துவிடலாம் என்று எண்ணினான். விமானத்திலிருந்து கீழிறங்கினான். கைலாச மலையைத் தன் தோள்வலியால் தூக்கி எறிந்து விடலாம் என்ற செருக்கு உண்டாக தன்னுடைய இருபது திண்டோள்களையும் கொண்டு அதைத் தூக்க முயன்றான். மலை சிறிதே நகர்ந்தது. கீழே தோள்களைப் புகுத்தி மேலும் தூக்கலானான்.

செருக்கினால் வெற்பு எடுத்த
திண்தோள் அரக்கனையும்.

அப்போது இறைவன் பார்த்தான். தன் திருவடியை மலை மேல் சிறிதே அழுந்த ஊன்றினான். பொறியிலே சிக்கிய எலியைப் போல இராவணன் நசுங்கிப் போனான். பிறகு தன் கைகளில் ஒன்றையே வீணையாக வைத்துச் சாமகானம் பாட இறைவன் அவனுக்கு அருள் சுரந்தான்.

இராவணன் மலையை எடுத்தபோது அவ்விடத்தில் அந்தத் திருவடிகள் அவனை நசுக்கின. காலனையே உதைத்து வென்ற அந்தத் திருவடிகளுக்கு இதுஎம்மாத்திரம்? இராவணனுடைய செருக்கை அழித்து நின்றன அத்திருவடிகள்.

அரக்கனையும் முன் நின்று அடர்த்த.

காலனை உதைத்து வென்ற பராக்கிரமத்தையும் செருக்குற்ற இராவணனை அடர்த்த ஆற்றலையும் ஒருங்கே இணைத்துச் சொல்கிறார் அம்மையார்.

செருக்கினால் வெற்புஎடுத்த
    எத்தனையோ திண்தோள்
அரக்கனையும் முன்நின்று
    அடர்த்த;—திருத்தக்க
மால்அயனும் காணாது
    அரற்றி, மகிழ்ந்துஏத்தக்
காலனையும் வென்றுதைத்த கால்.

திருவினால் தகுதி பெற்ற திருமாலும் அயனும் காணமல் அரற்றி, பின்பு இறைவன் அருள் செய்ததனால் மகிழ்ந்து துதி பாட, யாராலும் வெல்லற்கரிய காலனையும் உதைத்து வென்ற திருவடிகள், நம்மைவிட வலியவர் இல்லை என்ற கர்வத்தால் கைலாச மலையைத் தூக்கிய பல திண்ணிய தோள்களையுடைய அரக்கனாகிய இராவணனையும் முன்னே நின்று அமுக்கின.

[தனக்குப் பல திண்ணிய தோள்கள் இருப்பதனால் இராவணன், 'இது நமக்கு எம்மாத்திரம்?' என்ற செருக்கை அடைந்தான். அவன் திண்ணிய தோள்கள் இருபது. அவற்றை வீணே யார் எண்ணிக் கொண்டிருப்பார்கள் என்ற எண்ணத்தால், 'எத்தனையோ திண்டோள்' என்றார். 'அவை எத்தனை யாக இருந்தால்தான் என்ன? அத்தனையையும் இறைவன் திருவடிகள் அழுந்திவிட்டன' என்றார்.

அரக்கனையும்: இறந்தது தழீஇய எச்சவும்மை; எண்ணும்மையாகவும் கொள்ளலாம். உயர்வு சிறப்பும்மை யாகவும் கொள்ள இடம் உண்டு. முன் நின்று அடர்த்த; இரண்டு திருவடிகளையும் எண்ணிப் பன்மையால் சொன்னார். மாலும் அயனும் என்று உம்மையை மாலுக்கும் கூட்டுக; மாலோடு சேர்ந்த அயனும் என்று கொண்டு உயர்வு சிறப்பும்மையாகக் கொள்வதும் பொருந்தும்.

காணமையால் முதலில் அரற்றினார்கள்; பிறகு இறைவன் திருவருளைப் பெற்று மகிழ்ந்து ஏத்தினார்கள்.

காலவினையும்; எதிரது தழீஇய எச்சவும்மை; உயர்வு சிறப்பாகவும் கொள்ளலாம். வென்று உதைத்த என்பவற்றை உதைத்து வென்ற என்று மாற்றிப் பொருள் செய்க. உதைத்த கால் அடர்த்து என்று முடிக்க.

காணாது அரற்றி மகிழ்ந்து ஏத்த, வென்று உதைத்து கால் அடர்த்த என்று வினை முடிவு கொள்க.

ஏத்தியது ஒரு சமயம்; உதைத்தது வேறு ஒரு சமயம்; அடர்த்தது பின் ஒரு சமயம். இந்த மூன்றும் திருவடிகளின் செயல்களாதலின் இணைத்துச் சொன்னார்.]

அற்புதத் திருவந்தாதியில் 80-ஆம் பாட்டாக அமைந்தது இது.

# 82. அடியார்களின் நிலை

சிவபெருமான் திரிபுரங்களை அழித்தவன். இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய மூன்றினாலும் அமைந்த கோட்டைகளையுடைய மூன்று புரங்களில் வாழ்ந்து வித்யுன்மாலி, தாரகாட்சன், வாணன் என்ற மூன்று அசுரர்கள் உலகத்தை நலிந்து வந்தார்கள். பறக்கும் கோட்டைகளாகிய அவை திடீரென்று எங்கேனும் வந்து படியும். அவற்றின்கீழ் அகப்பட்டவர்களெல்லாம் நசுங்கி மடிவார்கள். இவ்வாறு மக்களை அழிப்பதில் இன்பம் கண்டார்கள், அந்த அசுரர்கள்.

அவர்கள் செய்த கொடுஞ் செயல்களைப் பொறுக்காமல் தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டுக் கொண்டார்கள். இறைவன் மேருவையே வில்லாகவும் வாசுகியையே நாணாகவும் திருமாலையே அம்பாகவும் கொண்டு, பூமியாகிய தேரில் ஏறி, நான்முகன் சாரதியாக இருந்து அதைச் செலுத்தப் புறப்பட்டான். திரிபுரங்களை அணுகியபோது அம்பாக இருந்த திருமாலுக்குச் சிறிதே அகங்காரம் தோன்றியது. 'நாம் அம்பாக இருந்து திரிபுரங்களை அழிக்கப் போகிறோம். திரிபுர சங்காரத்தில் நம்முடைய பங்கே தலைமையானது' என்ற அகந்தை அவருக்கு உண்டாயிற்று. அதை அறிந்த சிவபெருமான் அவருடைய பேதைமையை எண்ணிச் சிரிப்பது போலப் புன்னகை செய்தான். அந்தப் புன்னகையின் ஒளியே திரிபுரங்களை எரித்துவிட்டது. மற்ற யாருடைய துணையையும் வேண்டாமல் தன்னுடைய சிரிப்பினாலே இறைவன் திரிபுர சங்காரம் செய்து விட்டான். இது வரலாறு.

தேவாரத்திலும் பிற பாடல்களிலும் திரிபுர சங்காரத்தைப் பற்றிய செய்தி வரும்போது வேறு வகையாகவும் இருப்பதுண்டு. இறைவன் தன் நெற்றிக் கண்ணை விழித்துத் திரிபுரங்களை எரித்தான் என்றும், அம்பை எய்து அழித்தான் என்றும் வரும். இவ்வாறு வேறுபட்டு இருப்பதற்கு ஒரு காரணம் சொல்வதுண்டு. ஒவ்வொரு கற்பத்திலும் திரிபுர சங்காரம் நடைபெறுகிறதாம். அந்த அந்தக் கற்பத்தில் வெவ்வேறு முறைகளை இறைவன் ஆளுகிறானும். ஆதலால் இவற்றைக் கற்ப பேதம் என்று சொல்வது வழக்கம்.

இறைவனுடைய திருவிளையாடல்களைச் சொல்லும் பக்தர்களுக்கு அவன் திரிபுரசங்காரம் செய்தான் என்ற மையக் கருத்தே நினைவில் இருக்கிறது. எவ்வாறு அழித்தான் என்பதை நினைவு கொள்வதில்லை. எப்படியானாலும் திரிபுரங்கள் அழிந்தன என்ற கருத்தில் வேறுபாடு இருப்பதில்லை. அந்த இயல்பே வேறு வேறு முறைகளை அவர்கள் சொல்வதற்குக் காரணம் என்று கொள்வதே பொருத்தாக இருக்கும்.

காரைக்காலம்மையார், இப்போது பார்க்கப் போகும் பாட்டில், இறைவன் திரிபுரங்களை அம்பால் எய்தான் என்று சொல்கிறார்.

'பார்ப்பதற்கு அழகாக இருந்த மூன்று அரணங்களை உடையவர்களின் வலிமையை அடக்குவதற்கு இறைவன் அந்த அரணங்களை அழித்து, அவற்றின் தலைவர்களாக இருந்த அசுரர்கள் தம் ஊக்கம் குலைந்து வருந்தும்படி செய்தான். வெவ்விய தீயைக் கக்கும் அம்பை எய்து அந்தச் செயலைச் செய்தான்' என்கிறார்.

**கோல**

**அரணார் அவிந்துஅழிய வெங்தீஅம்பு எய்தான்.**

அந்தப் பெருமானுடைய பாததாமரைகளைப் பற்றிக் கொண்டு வாழ்கிறார்கள் அன்பர்கள்; அவற்றை இடைவிடாமல் நினைக்கிறார்கள்.

எய்தான்

சரணாரவிந்தங்கள் சார்ந்து.

சிவபெருமான், அல்லாதவர்களை ஒறுப்பதற்கு வெவ்விய தீயைக் கக்கும் அம்பை வைத்திருக்கிறான். தன்னைச் சார்ந்து பணிபவர்களுக்குத் தண்மையான தாமரைகளைப் போன்ற திருவடிகளை உடையவனாக இருக்கிறான். கையிலே தீ அம்பு; காலிலே தாமரை போன்ற தண்மை. இறைவன் திருவடியையே புகலாகப் புகுந்தவர்களுக்கு உடலும் உள்ளமும் உயிரும் குளிரும். மூன்று தாபங்களால் உண்டாகும் வெப்பம் அவர்களுக்கு இருப்பதில்லை.

இறைவனுடைய சரணாரவிந்தங்களைச் சார்ந்தமையால் அவர்களுக்குக் கிடைக்கிற நன்மை என்ன?

அவர்கள் காலனுக்கு அஞ்சமாட்டார்கள். அவனை வென்று விடுவார்கள். 'காலனையும் வென்றோம்' என்று செம்மாப்பார்கள்.

மக்கள் இறந்தால் அவர்களை அழைத்துச் செல்லக் காலனும் அவனுடைய தூதுவர்களும் வருவார்கள். சிவபெருமானுடைய அன்பர்களின் அருகில் வரக் காலன் அஞ்சுவான். அவர்கள் எந்தத் திருவடியைப் பற்றியிருக்கிறார்களோ அந்தத் திருவடி அவனை உதைத்து விழச்செய்தது. அதை அவன் மறந்து விடுவானா? பக்தர்கள் இறந்தால் அவர்களைச் சிவகணங்கள் வந்து சிவலோகத்துக்கு அழைத்துச் செல்வார்கள். காலனுடைய கொடுமை அன்பர்களுக்கு இராது. அவர்கள் காலஜயம் பண்ணியவர்கள்.

காலனையும் வென்றோம்.

காரைக்காலம்மையார் தம்மையும் தம்மைப் போன்ற அன்பர்களையும் எண்ணித் தன்மைப் பன்மையால் பாடுகிறார். இறைவன் திருவடியைப் பற்றிக்கொண்ட பெருமிதத்தால்

இவ்வாறு மிடுக்குடன் சொல்வதாகவும் வைத்துக் கொள்ள லாம்.

சாமான்யமானவர்கள் இறந்தால் அவர்கள் செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்றபடி மறுமை வாழ்வு அமையும் பாவங்களுக்கு உரிய தண்டனையை ஏற்பதற்கு நரகத்தை அடைவார்கள். இறைவனுடைய அடியார்களுக்குக் கால பயமே இல்லாதபோது நரகாநுபவம் எப்படி உண்டாகும்? ஆகவே அவர்கள், நரகம் உள்ள திசையைக்கூடப் பார்க்க மாட்டார்கள். அவற்றினின்றும் நெடுந்தூரம் விலகிச் செல் வார்கள்.

**கடுநரகம் கைகழன்றோம்.**

இந்த உலகத்தில் வாழும்போதே இறைவனுடைய திரு வருளநுபவ உறைப்பினால் சீவன் முக்த நிலையை அடைந்த வர்கள் அடியார்கள். ஆதலின் இங்குள்ளபோதே, 'எமக்குக் கால் பயம் இல்லை; காலஜயந்தான் உண்டு. நரகாவஸ்தை எமக்கு இல்லை. அவை இருக்குமிடத்துக்கும் எமக்கும் நெடுந் தூரம்' என்ற உறுதி அவர்களுக்கு உண்டாகி விடுகிறது.

வினைகள் மூன்று வகை. பல பிறவிகளில் சேமித்து ஈட்டிய புண்ணிய பாவங்களாகிய கர்மங்கள் மூட்டையாக நம் கணக்கில் இருக்கின்றன. அந்த வினைத் தொகுதிக்குச் சஞ்சிதம் என்று பெயர். சஞ்சி-மூட்டை. பல பிறவிகளில் ஈட்டிய வினையாதலின் அவை முழுவதையும் ஒரே பிறவியில் அநுபவித்துக் கழிக்க முடியாது. ஆகையால் இறைவன் அத் தொகுதியில் ஒரு பகுதியை இந்தப் பிறவியில் அநுபவித்துத் தீர்க்கட்டும் என்று ஆணையிட்டு அனுப்புகிறான். அதற்குப் பிராரப்தம் என்று பெயர்; அதனையே ஊழ்வினை என்று சொல் கிறோம்.

அடியவர்கள் பிராரப்த வினையின் பயனாக அநுபவிக்க வேண்டியவற்றை அநுபவித்துவிட்டு இறைவனை அடை

வார்கள். மற்றவர்களோ பிராரப்த வினையை அநுபவித்துக் கொண்டே புதிய வினைகளை ஈட்டுவார்கள். அந்த வினைத் தொகுதிக்கு ஆகாம்யம் என்று பெயர்.

இறைவனுடைய அடியவர்கள் இந்தப் பிறவிக்குக் காரணமான வினையை அநுபவித்தாலும் அவனுடைய திருவடியைப் பற்றிக் கொண்டு அன்பு செய்வதால் புதிய வினைகளை ஈட்டமாட்டார்கள். அவர்கள் இந்தப் பிறவியையே இறுதிப் பிறவியாகக் கொண்டு வாழ்வதனால், அடுத்த பிறவிகளில் அநுபவிப்பதற்கு உரிய சஞ்சிதம் அவர்களளவில் பயனற்றுப் போகிறது. மற்றவர்களோ புதிய வினைகளையும் ஈட்டி அந்த மூட்டையைப் பெருக்கிக் கொள்கிறார்கள்.

ஒரு செல்வருடைய புதல்வன் வீண் செலவு செய்து பெரிய கடனாளியாகி விடுகிறான். அவனுடைய தந்தை அவனுக்கு இரங்கி, "இனியாவது புத்தியாகப் பிழைத்துக் கொள்" என்று சொல்லி, ஒரு தொகையைக் கொடுத்து, "இதை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்து கடனில் ஒரு பகுதியைத் தீர்த்துவிடு" என்று சொல்லி அனுப்புகிறார். அவன் வியாபாரத்தில் ஈடுபட்டுத் தந்தை வரையறுத்த கடனை அடைத்து விடுகிறான்; ஆனால் புதிய கடனை வாங்குகிறான். அவனுக்கு என்றாவது உய்தி உண்டாகுமோ?

அறிவாளியான பையன் ஒருவனுக்கு அவன் தந்தை இவ்வாறே செய்கிறார். அவன் தன் தந்தையின் அறிவுரைப் படியே நடந்து, தந்தை வரையறுத்த கடனைத் தீர்த்துவிட்டு, புதிய கடன் ஏதும் வாங்காமல் வியாபாரம் செய்கிறான். தந்தை அவனுடைய பழைய கடனை, 'வஜா' செய்ய ஏற்பாடு செய்கிறார்.

இந்த இரண்டு உதாரணங்களும் அடியாரதல்லாதவர்களுக்கும் அடியார்களுக்கும் உள்ள இயல்பை விளக்குவன.

காலனை வென்று கடுநரகம் கைகழன்ற அடியவர்கள் தம்மை நலிவதற்கு உரிய சஞ்சிதம், ஆகாம்யம் என்னும்

இருவகை வினைகளும் இல்லாமல் அவற்றை அடியோடு அறுத்து விடுவார்கள்.

மேலை இருவினையும் வேரறுத்தோம்.

காலபயம் இல்லாமலும் நரகத்தின் வாசனையே படாமலும் பிறப்புக்குக் காரணமான வினைகளால் நலிவுறாமலும் உள்ள நிலை சீவன் முக்த நிலை. இறைவனுடைய பக்தர்கள் முக்தர்களாகத் திகழ்வார்கள். காரைக்காலம்மையார் அந்த நிலையில் உள்ளவர். ஆதலால் அவர் செம்மாப்புடன் இருப்பவர்.

காலனையும் வென்றோம்;
 கடுநரகம் கைகழன்றோம்;
மேலை இருவினையும்
 வேர் அறுத்தோம்;—கோல
அரணார் அவிந்துஅழிய
 வெந்தீஅம்பு எய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து.

பார்ப்பதற்கு அழகாக இருந்த கோட்டைகளாகிய திரிபுரங்களை உடைய அசுரர்கள், தம் ஊக்கம் குலைந்து இரங்கும்படியாக, அந்தப் புரங்களை வெவ்விய தீயைக் கக்கும் ஓர் அம்பினால் எய்து அழித்த சிவபெருமானுடைய திருவடிகளைப் பற்றாகப் பற்றி, யாம் காலஜயம் பெற்றோம்; கடுமையான நரகானுபவத்தினின்றும் விலகி நிற்கிறோம்; முன்புள்ள சஞ்சித வினையையும் இப்போது சேரும் ஆகாம்ய வினையையும் வேரோடு அறுத்துவிட்டோம்.

[காலனையும்: உம்மை உயர்வு சிறப்பு; எண்ணும்மையாக வைத்து, கடுநரகத்தையும் என்று உம்மையை வருவித்து முடிப்பதும் ஒன்று. கடுநரகம் என்பதில் உள்ள கடுமை இனத்தைச் சுட்டாமல், அதன் இயல்பைச் சொல்லியது,

செஞ்ஞாயிறு என்பது போல. கைகழன்றோம். அதன் பக்கத்தில் சாராமல் விலகி நின்றோம். மேலே என்பது இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் குறிக்கும். இறந்தகால வினையாகிய சஞ்சிதத்தையும் வருங்கால வினையாகிய ஆகாமியத்தையும் அறுத்து விட்டோம் என்றார். வினைகளையும் வேரில் அறுத்துவிட்டோம், வேரோடு அறுத்து விட்டோம் என்று இருவகையாகவும் கொள்ளலாம். கோலம் : பார்வைக்கு அழகாக இருந்தாலும் செயலால் கொடுமையுடையது என்பது குறிப்பு. 'அரணார் அவிந்தழிய' என்பதற்கு 'திரிபுராதிகள் இறந்து போக' என்று பொருள் செய்தல் பொருந்தாது. இறைவன் திரிபுரங்களை அழித்தானேயன்றி அவற்றின் தலைவர்களை அழிக்கவில்லை. அவர்களைத் திருத்தித் தன் தொண்டில் ஈடுபடச் செய்தான். ஆதலின், 'தம் ஊக்கம் கெட்டு இரங்க' என்று பொருள் கூறப்பட்டது.

அம்பில் வாயு, அக்கினி, திருமால் மூவரும் இருந்தனர் என்பது புராண வரலாறு. எரிப்பதற்குக் காரணமானது அக்கினியாதலின் அதை அடையாக்கி 'வெந்தீ அம்பு' என்றார். முப்புரங்களையும் எரிக்கும் ஆற்றலும் வெம்மையும் உடையதாதலின் 'வெந்தீ' ஆயிற்று. தீயையுடைய அம்பு. கையை நோக்கத் தீயம்பு தெரிந்தாலும் திருவடியை நோக்கத் தாமரையாக இருக்கும் என்றார். சார்தலாவது இடைவிடாது நினைத்தல்.]

இறைவனின் அடியார்களுக்கு யமபயமும் நரகாவஸ்தையும் பிறவிக்குக் காரணமான வினைகளும் இல்லாமல் ஒழியும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியின் 81-ஆவது பாட்டு இது.

# 83. இறைவன் திருச்சடை

இறைவனுடைய திருவடியைப்பற்றிப் பாடிய காரைக் காலம்மையார் இப்போது அவனுடைய திருமுடியைப் பார்க் கிறார். அவனுடைய திருக்கோலத்தைக் கண்டு கண்டு அப் பெருமாட்டியாருக்கு அவனுடைய திருமுடியில் விழுது விட்டது போல நீண்டிருக்கும் சடாபாரத்தில் கண்கள் நிலவு கின்றன. திருவடிகள் எவ்வாறு நல்லார்க்கு நல்லனவாகவும் அல்லார்க்கு அல்லனவாகவும் இருக்கின்றனவோ, அவ்வாறே திருமுடியிலுள்ள சடைகளும் உள்ளன என்று சொல்ல வருகிறார்.

சிவபெருமானை நன்றாகத் தியானித்து அவன் திரு வுருவத்தை நுட்பமாகக் கவனித்தால் அவனுடைய மின்னலைப் போல விளங்கும் சடைகள் தோன்றுகின்றன. அவன் தீவண்ணனாக இருக்கிறான். அவனுடைய ஒளிக்கு முன்னர் எந்த ஒளியும் மங்கிவிடுகிறது. கிரணங்கள் விட்டு விளங்கும் செய்ய கதிரவனுடைய பேரொளியும் அவன் திரு முன் சாய்ந்து மழுங்குகின்றது.

நேர்ந்துஉணரின்
தாழ்சுடரோன் செங்கதிரும் சாயும்
தழல்வண்ணன்

ஆக அவன் தோற்றம் அளிக்கிறான். அவனுடைய வீழ்ந்து தொங்கி மின்னல் என்று உவமை சொல்லும்படி அமைந்த சடை எப்படி இருக்கிறது?

வீழ்சடையே என்று உரைக்கும் மின்.

மின்னல் ஒரு கணம் தோன்றி உடனே மறைவது. இந்த மின்னலோ அவ்வாறு மறையாமல் நின்று காட்சி தருகின்றது பார்ப்பவர்களுடைய இயல்புக்கு ஏற்றபடி அது தோன்று கின்றது.

இறைவனைச் சார்ந்து வழிபட்டு அன்பு செய்பவர்களுக்கு அந்தச் சடைகள் அழகாக இருக்கின்றன. பொன் கொழுந்து விட்டால் எப்படி இருக்குமோ அப்படி இலங்குகின்றன. இறைவன் திருமேனி பொன்வண்ணம் உடையது. "பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி பொலிந் திலகும்" என்று பொன்வண்ணத் தந்தாதி சொல்கிறது. அந்தப் பொன் வண்ணத் திருமேனி கொழுந்து விட்டது போல இறைவன் சடைகள் தோன்றுகின்றன. நெருப்பின் கொழுந்து மேல் நோக்கியிருக்கும். இறைவன் தழல் வண்ணன், அந்தத் தழற் பிழம்பின் கொழுந்துகள் மேலே தோன்றுகின்றன.

அவை அன்பர்களுக்குப் பொற்கொழுந்தைப் போல விளங்குகின்றன.

**சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே**
**ஒத்து இலங்கி.**

பொன்னைக் கண்டவர்கள் அதைக் கைக்கொண்டு இல்லத்தே பொதிந்து வைப்பார்கள். இந்தப் பொன்னையும் பொற்கொழுந்தையும் தரிசித்த அன்பர்கள் அவற்றைத் தம் உள்ளத்தே போற்றி வைக்கிறார்கள். பொன்னைப் படைத் தவர்கள் அதைக் கொண்டு வேண்டிய பொருள்களையெல் லாம் பெற்றுக் கொள்ள முடியும். அப்படியே இந்தப் பொன்னைத் தம் அகத்தே கொண்டவர்களுக்கு எல்லாம் கிடைக்கும். அவர்களுக்கு ஒன்றாலும் குறைவு இராது.

பொன்னைப் படைத்தவர்களுக்கு, நாம் எது வேண்டு மானாலும் பெறலாம் என்ற பெருமிதம் இருக்கும். இறைவ னென்னும் பொன்னை அகத்தில் அடக்கினவர்களுக்கும் அத்

தகைய பெருமிதம் இருக்கும். அந்தப் பெருமிதத்தைத்தான், "சிந்தையார்க்கு உள்ள செருக்கு" (79) என்று முன் ஒரு பாட்டில் சொன்னார்.

பொன்னைப் படைத்தவர்களுக்கு இரும்பு முதலிய பிற உலோகங்கள் மதிப்புடையனவாகத் தோன்றுவதில்லை. அவ்வாறே அன்பர்களுக்கு இறைவனையன்றி மற்றவர்களிடத்தில் உள்ளம் செல்லாது. எவ்வளவு சிறந்த பதவியில் இருப்பவர்களேனும் யாவரும் இறைவனினும் தாழ்ந்தவர்களே என்ற உண்மை அவர்களுக்குப் புலனாகும். அவனைச் சிந்தையிலே வைத்து வாழ்பவர்களுக்கு, என்றும் இறவாத அந்த மெய்ப் பொருளின் முன் மற்றவையெல்லாம் மதிப்பற்றனவாக, அழிவுடையனவாக தோன்றும்.

ஆனால், இறைவனைச் சாராது நிற்பவர்களுக்கு இந்த அருமைப்பாடு தெரியாது. அவர்கள் இறைவனிடம் பொருந்தி உணராதவர்கள். அவனை நேர்ந்து உணர்பவர்களுக்குத்தான் இறைவனுடைய மதிப்புத் தெரியும்.

பொன்னைத் தேடி ஈட்டும் வகை தெரியாதவர்கள் இரும்பையும் தகரத்தையும் பித்தளையையும் சேர்த்து வைத்துக் கொண்டு அவற்றாலே அற்பமான திருப்தியை அடைபவர்களைப் போல, இறைவனிடம் உள்ளம் செலுத்தாதவர்கள் உலகியற் பொருள்களிலே பற்று வைத்து, அவற்றுக்காக உழைத்து, அவற்றைச் சேமித்து வைத்துப் பாதுகாப்பார்கள்.

இறைவனைச் சார்ந்து அன்பு செய்து அவனுடைய திருக்காட்சியிலே ஈடுபட்டு நிற்பவர்களுக்கு அவன் பொன்னையும், அவன் சடைகள் பொற்கொழுந்தையும் ஒத்து இலங்குவதைச் சொன்ன அம்மையார், இறைவனைச் சாராதவர்களுக்கு அவை எப்படித் தோன்றுகின்றன என்பதையும் சொல்கிறார்.

அவனைச் சாராமல், அவன் அருமையை உணராமல் போகிறவர்களே பலர். அவர்கள் ஏதேதோ பொருளை நாடி

உழன்று கொண்டிருப்பார்கள். அவர்கள் இறைவனை நெருங்கி உணர்வதில்லை. அவ்வாறு இருப்பவர்களுக்கு அந்தச் சடைகள் தீயைப் போலத் தோன்றுமாம். தீ, கொடி விட்டது போலப் பறந்திருந்தால் எப்படியோ அப்படி அந்தச் சடைகள் காட்சி அளிக்கும்.

**சாராது பேர்ந்தார்க்குத் தீக்கொடியின்**
**பெற்றியவாம்.**

தீயைக் கண்டு அஞ்சி ஒதுங்குபவர்களைப் போல அவர்கள் ஒதுங்கி நிற்பார்கள். செம்பொன்னனின் ஒளியைக் கண்ணை அகல விழித்துக் கண்டு, இப்படி ஒரு பொருள் நேர் பட்டதே என்று வியந்து கைக் கொள்வர்கள் அறிவுடைய வர்கள். நல்ல பார்வையின்றி ஒளி குறைந்த கண்ணோடு உள்ளவர்கள் அந்தச் செம்பொன்னின் ஒளியை நன்றாகப் பார்க்க முடியாமல், அது கண்ணைக் கூசச் செய்யும் நெருப்பு என்று அஞ்சி விலகிச் சென்று ஏமாந்து போவார்கள். கண் இருந்தும் குருடர்களாகவும், பொன்னை அணுகியும் அதன் அருமையை அறியாத பேதையர்களாகவும் அவர்கள் திரிவார்கள். இறைவனைச் சாராதவர்கள் மெய்ப்பொருளை அறியும் அகக்கண் மழுங்கியவர்கள். கண்நோய் உள்ளவர்கள் ஒளியைக் கண்டு கண்ட அதை அணுகாமல் ஒளி இல்லாத இடத்தை நாடிச் செல்வது போல, அகக் கண்ணின் ஒளி படையாதவர்கள் இந்தச் செம்பொன்னை அணுகக் கூசி எங்கெங்கோ போவார்கள். அவர்கள் இறைவன் சடையைத் தீக்கொடி போலக் கண்டு விலகிச் செல்பவர்கள்.

**சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே**
**ஒத்து இலங்கிச் சாராது**
**பேர்ந்தார்க்குத் தீக்கொடியின்**
**பெற்றியவாம்;—நேர்ந்துஉணரின்**
**தாழ்சுடரோன் செங்கதிரும்**
**சாயும் தழல்வண்ணன்**
**வீழ்சடையே என்றுரைக்கும் மின்.**

பொருந்தி உணர்ந்தால் கிரணங்கள் தங்கும் சூரிய னுடைய சிவந்த கதிர்களும் மழுங்கிச் சாய்வதற்குரிய தழல் போன்ற வண்ணமுடைய சிவபெருமானுடைய, தொங்கும் சடை என்று சொல்லும் மின்னல்களானவை இறைவனை அணுகி அன்பு செய்பவர்களுக்குப் பொன்னின் கொழுந்தைப் போலத் தோன்றி, அவ்வாறு அவனைச் சாராமல் விலகிச் செல்பவர்களுக்கு நெருப்புக் கொடியின் தன்மையை உடையனவாகும்.

[சார்ந்தார்—இறைவனை இடைவிடாமல் தியானித்துச் சார்ந்த அன்பர்கள். பொற்கொழுந்து — பொற்பிழம்பின் மேற்பகுதி சாராது போந்தார்—இறைவனை அணுகாது விலகிச் செல்பவர்கள். தீக்கொடி—நீண்டு சுடர்விடும் நெருப்பு; தீநாக்குகள். பெற்றிய—தன்மையை உடையன. நேர்ந்து—பொருந்தி; இறைவனைச் சார்வதற்குரிய தகுதியைப் பெற்று. தாழ்சுடரோன்—வானத்தில் தங்கும் கதிரவன். அவன் தழல்வண்ணனாக இருப்பினும் அவன் ஒளி கதிரவன் ஒளியையும் மங்கச் செய்கிறது. சாய்தல்—தாழ்ச்சி அடைதல். வீழ்சடை-தொங்கும்சடைகள். மின்-மின்னல்கள்; பால்பகா அஃறிணைப் பெயர்

'மின் ஒத்து இலங்கி, பெற்றிய' என்று முடிக்க ]

இறைவன் திருச்சடை அன்பர்க்கு இனிதாகவும் மற்றவர் களுக்கு இன்னாததாகவும் தோன்றும் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் அமைந்துள்ள 82-ஆவது பாட்டு.

# 84. இரண்டு குன்றுகள்

இறைவன் பல வகையான திருக்கோலங்களை அவ்வப் போது எடுத்துக் கொண்டு, அந்தத் திருக்கோலங்களுக்கு உரிய தனி இலக்கணங்களுடனும் திருநாமங்களுடனும் தோன்றுகிறான். சோமாஸ்கந்தர், நடராஜர், தட்சிணா மூர்த்தி, இடபாரூடர் என்பவை அவ்வாறு திருவுருவம் கொண்ட வடிவங்களே.

மாதிருக்கும் பாதியனாக உள்ள திருவுருவம் அர்த்தநாரீசுவரக் கோலம். அப்படியே மாலிருக்கும் பாதியனாகவும் அவன் கோலம் கொண்டான். அந்த மூர்த்தியைக் கேசவார்த்தர் என்று சொல்வார்கள். ஒரு பாதி மால் கொள்ள நிற்கும் அந்த மூர்த்தியைச் சங்கரநாராயணர் என்றும் சொல் வார்கள்.

சங்கரநயினார் கோயில் என்ற தலத்தில் சங்கரநாராயணர் சந்நிதி இருக்கிறது. இடப்பாகம் திருமாலாகவும் வலப்பாகம் சிவபெருமானாகவும் காட்சியளிக்கும் பெருமானை அங்கே தரிசிக்கலாம்.

திருமாலோடு இணைந்து நின்றும், வேறாக நின்றும் காட்சி அளிக்கிறான் சிவபெருமான். ஒரு பக்கம் சிவபெருமானுக்கு உரிய செஞ்சடையும் மற்றொரு பக்கம் கருங்குழலும் அமைந் திருக்கும்; அப்படி நின்ற கோலத்தை இப்போது காரைக் காலம்மையார் நினைக்கிறார்.

இறைவனுடைய பல வகைத் திருக்கோலங்களையும் அங்கங்களையும் பராக்கிரமங்களையும் அருள் விளையாடல்களை யும் எண்ணி எண்ணி இன்புறுவது அடியார்கள் இயல்பு.

மனத்துக்கு ஏதாவது வேலை கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அது கண்டபடி நம்மை எங்கெங்கோ இழுத்துச் செல்லும். அதற்கு இறைவனுடைய திருக்கோலங்களை நினைக்கும் பழக்கத்தை உண்டாக்கினால் அவற்றைப் பற்றியே எண்ணி எண்ணிப் பொழுதுபோக்கும்.

சுறுசுறுப்பான குழந்தை எதையாவது எடுத்து மோதித் துன்பம் அடையும். அதற்காக அதற்குப் பல விதமான பொம்மைகளைக் கொடுத்தால் அவற்றில் மனம் செலுத்தி விளையாடும். மனம் என்னும் குழந்தைக்கும் இறைவனுடைய கோலங்களை அறிமுகப்படுத்தினால் அது எப்போதும் அவற்றையே எண்ணி, வேறு தீய நினைவுகளைக் கொள்ளாமல் இருக்கும்.

இறைவனுடைய திருக்கோலத்தை வருணித்துச் சொல்லும் பாடல்களைப் படித்து உணர்வதனால் நம் மனத்துக்கு நல்ல பயிற்சி உண்டாகும். கண்டபடி திரியாமல் தெய்விக வட்டத்துக்குள் உலாவும். அதற்காகத்தான் கோயில்களும் விக்கிரகங்களும் அமைந்திருக்கின்றன. இறைவன் அவற்றில் இருக்கிறானா என்று சிலர் கேட்பதுண்டு. எவ்விடங்களிலும் உறையும் இறைவன் அவற்றில் இருக்க மாட்டானா? ஆனால் இறைவன் எல்லா இடங்களிலும் இருப்பதை நாம் உணர்வதில்லையே! அவனை நினைப்பூட்டும் சின்னங்களைக் கண்டால் அவனையே எண்ணி வாழும் நிலை ஏற்படும். ஊருக்குச் சென்றிருக்கும் காதலனுடைய பிரிவை ஆற்ற விரும்பும் காதலி அவனுடைய படத்தை வைத்துக் கொண்டு, தன் துயரத்தை ஆற்றிக் கொள்வது போன்றது இது.

சிவபெருமான் தனியாக நிற்பவன். அவன் இப்போது திருமாலோடு மீண்டும் இசைந்து நிற்கிறான். முன்பு தன்னிடம் ஒன்றி அடங்கிய திருமாலை வெளிப்படுத்திக் காத்தல் தொழிலை அவனிடம் ஒப்பித்தான். இப்போது யாவரும் காண வடிவில் அவனோடு ஒன்றி இணைந்து சங்கர நாராயண

ளுகக் கோலம் காட்டுகிருன். அந்தக் கோலம் எப்படி இருக்கிறது?

இப்படி ஒரு விளுவை எழுப்பிக் கொள்கிருர், காரைக் காலம்மையார்.

> மின்போலும் செஞ்சடையான்
> மாலோடு மீண்டுஇசைந்தால்
> என்போலும் காண்பார்கட்கு
> என்பிரேல்.

நாம் கேட்காவிட்டாலும், நாம் கேட்பதாக வைத்துச் சொல்கிருர். நம்மை நல்ல பிள்ளைகளாக்கி, "இப்படி இறைவன் திருக்கோலம் கொண்டால் அது எப்படி இருக்கும் என்று கேட்பீர்களாளுல்...." என்று தொடங்குகிருர். அதைக் கேட்ட பிறகாவது நாம்இறைவன் திருக்கோலத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்க வேண்டும்.

நாம் அவரைக் கேட்காவிட்டாலும் நமக்காக அவர் ஒரு கேள்வியை எழுப்ப அதைக்கேட்டு நாம் சும்மா இருக்கலாமா? நாம் அந்தக் கேள்வியைக் கேட்டதாக எண்ணிக்கொண்டு அம்மையார் கூறும் விடையைக் கவனிக்கத் தொடங்கலாம்.

அவர் அந்தத் திருவுருவத்தை விவரமாக வருணிக்கப் புகுந்தால் நீண்ட நேரமாகும். அதைக் கேட்க நமக்குப் பொறுமை இராது. ஆகையால் ஓர் உவமையைச் சொல்லிச் சுருக்கமாக விளக்குகிருர்.

மேருவைப் பொன்மலே என்று சொல்வார்கள். சிவபெருமான் செம்பொன் வண்ணத் திருமேனியுடையவனுதலால் அவன் பொற்குன்று போலக் காட்சி தருகிருன். திருமாலோ நீல நிறமுடையவர். அவருடைய திருமேனிக்கு நீலமணியை உவமை கூறுவர்.

"மண்ணுறு மணிபாய் உருவினவை."

"நின்னது திகழ்ஒளி சிறப்பிருள் திருமணி"

என்று பரிபாடல் கூறும்.

பொற்குன்றும் நீலமணிக்குன்றும் இணைந்து ஒன்றி நின்றால் எப்படி இருக்கும்? மாலிருக்கும் பாதியனுகிய சங்கர நாராயணப் பெருமான் அவ்வாறு காட்சியளிக்கிறான். செம் பொற் குன்றுடன் நீலமணிக்குன்று பாதி பாதியாக இணைந்து நின்றால், ஒன்றுக்கு ஒன்று வேறுபட்ட வண்ணம் உடைமை யால் இரண்டும் நன்றாக விட்டு விளங்கும்.

சிவபெருமான் தனக்குள் திருமாலை அடக்கிக் கொள்ளா மல் இப்படி இணைந்து நிற்கும்போது அப்பெருமானும் பளிச் சென்று தோன்றுகிறான்; திருமாலும் விளக்கமாகக் காட்சி அளிக்கிறார்.

அவ்விருவரும் உயர்ந்து ஓங்கி நிற்கும்போது அந்த இரண்டு குன்றுகளும் ஓங்கி உயர்ந்து நிற்பது போன்ற எழிற் காட்சி தோன்றும்.

தன்போலும்
பொற்குன்றும் நீல மணிக்குன்றும் தாம்உடனே
நிற்கின்ற போலும் நெடிது.

மேருமலையும் நீலகிரியும் இணைந்த தோற்றம் உலகில் இல்லாதது. ஆகவே இது இல்பொருள் உவமை. இரண்டு கண்களாலும் அந்தத் திருக்காட்சியை மாறி மாறிப் பார்க் கலாம். சிவபக்தி உடையவர்கள் அப்பெருமானை முதலில் பார்த்து அவனோடு இணைந்திருக்கும் திருமாலையும் சேவிக் கலாம். திருமாலன்புடையவர்கள் திருமாலைப் பார்த்து அப்படியே சிவபெருமானையும் தரிசிக்கலாம்.

மின்போலும் செஞ்சடையான்
மாலோடு மீண்டுஇசைந்தால்
என்போலும் காண்பார்கட்கு
என்பீரேல்—தன்போலும்

**பொற்குன்றும் நீல மணிக்குன்றும்**
**தாம்உடனே**
**நிற்கின்ற போலும் நெடிது.**

மின்னலைப் போன்ற செம்மையையுடைய சடையை யுடைய சிவபிரான் திருமாலோடு, பிரிந்து நில்லாமல் மீண்டு ஒன்றி இணைந்து நின்றால், 'அந்தக் கோலம் தரிசிப்பவர் களுக்கு எதைப் போல இருக்கும்?' என்று கேட்பீர்களானால், சிவபிரானைப் போன்றுள்ள பொன் மலையும் நீலமணிக்குன்றும் உடன் ஒன்றி உயர்ந்து நிற்கின்றதைப் போல இருக்கும்.

[மின்-மின்னல். மால்-திருமால். காண்பார்கட்கு என் போலும் என்றிரேல். தன் என்றது சிவபிரானை. மணி என்பது எல்லாவகை மணிகளையும் குறிப்பதாதலின் தெளி வாகத் தெரியும் பொருட்டு நீல மணிக்குன்று என்றார். தாம்: அசை. உடனே-ஒருங்கே. நிற்கின்ற; நிற்கின்றது என்ற தொழிற்பெயர் ஈறு குறைந்து நின்றது; செய்யுள் விகாரம். நிற்கின்றவை என்று வினையாலணையாகவும் கொள்ளலாம். என்றிரேல் பொற்குன்றும் மணிக்குன்றும் நெடிது நிற்கின்ற போலும் என்று கூட்டுக. நெடிது-உயரமாக. நீண்ட காலம் என்றும் கொள்ளலாம்.]

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 83-ஆவது பாட்டு இது.

# 85. மூன்று கண்கள்

சிவபெருமான் மூன்று கண்களை உடையவன். பிறரெல்லாம் இரண்டு கண்களே படைத்திருக்க அந்தப் பெருமான் நெற்றியில் குறுக்கே தோன்றும் மூன்றுவது கண்ணை உடையவனாக இருக்கிறான். "நெற்றிமேல் ஒற்றைக்கண் உடையார் போலும்" என்று அப்பர் பாடுவார். மற்றக் கண்களைப்போல இராமல் அது வேறு வடிவில் இருப்பதனால் சிவபெருமானுக்கு 'விடுபாட்சன்' என்ற திருநாமம் உண்டாயிற்று.

அந்த மூன்றுவது கண் எப்போதுமே திறந்திருப்பதில்லை. வேண்டும்போது திறந்து ஆற்ற வேண்டியதை ஆற்றும். அந்தக் கண் ஞானக்கண். அதை உடைய பெருமான் பேராற்றல் உடையவன். "நெற்றிமேல் கண்ணை உடையவனோ?" என்று உலக வழக்கில் கேட்கும் கேள்வி அதைப் படைத்தவன் பிறருக்கு இல்லாத ஆற்றலை உடையவன் என்பதைக் குறிப்பிக்கும்.

ஒரு காலத்தில் மூன்று அசுரர்கள் மூன்று பறக்கும் கோட்டைகளை உடையவர்களாய் ஊருக்குத் தீங்கு இழைத்து வந்தனர். அந்த மூன்று புரங்களையும் இறைவன் அழித்தான். அதனால், 'திரிபுராரி' என்ற திருநாமம் அவனுக்கு அமைந்தது.

திரிபுர சங்காரம் எவ்வாறு நடந்தது? பல வேறு வகையில் நிகழ்ந்ததாக அருளாளர்கள் பாடியிருக்கிறார்கள் என்பதை முன்பே பார்த்திருக்கிறோம். அம்பை எய்து அழித்தான் என்றும், விழித்து எரித்தான் என்றும், சிரித்து எரித்தான் என்றும் மூன்று வேறு வகையில் சொல்வதுண்டு. சிரித்து எரித்தான் என்பதே பெருவழக்கு.

காரைக்கால் அம்மையார் இப்போது விழித்து எரித்த தாகச் சொல்ல வருகிறார். நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்து மன்மதனை எரித்ததாகச் சொல்வது ஒரு வரலாறு. அதே நெற்றிக் கண்ணால் திரிபுரங்களை அழித்தான் என்ற வரலாறும் உண்டு.

ஆனால் அம்மையார், மூன்று புரங்களையும் தன்னுடைய மூன்று கண்களாலும் பகர்த்து எரித்தான் என்ற செய்தியைச் சொல்கிறார். இறைவனுடைய மூன்று திருவிழிகளைப் பற்றிச் சிந்திக்கும்போது இந்தப் பராக்கிரமச் செயலைக் குறிப்பிடு கிறார்.

நல்லவர்களுக்கெல்லாம் பகைவர்களாக இருந்தார்கள் திரிபுரத்தின் தலைவர்கள். பிறருக்குக் கொடுமை உண்டாகும் படி அந்தப் புரங்களைப் பறக்கவிட்டுப் பிறகு நிலத்தின் மேல் படியச் செய்தார்கள்.

**கொடிதுஆக**
**விண்டார்கள் மும்மதிலும்.**

அந்த மூன்று புரங்களையும் கோபத்தினால் எரிக்கும் தன் மூன்று விழிகளாலும் பார்த்தான் சிவபெருமான். அந்தக் கண்களிலிருந்து தோன்றிய கனலால் மூன்று புரங்களும் எரிந்தன. அந்தக் கண்கள் அந்தப் புரங்கள் எரிவதைக் கண்டு அருளினால் பிறழ்ந்தன; அசைந்தன; ஆயின.

**கொடிதாக**
**விண்டார்கள் மும்மதிலும்**
**வெந்தீ யினில்அழியக்**
**கண்டுஆலும் முக்கணான் கண்.**

அந்த மூன்று கண்களை நினைக்கிறார் அம்மையார். சூரிய சந்திர அக்கினிகளை முச்சுடர் என்பார்கள். இந்த மூன்றும் ஒளியைத் தருவன. கதிரவன் பகலிலும் சந்திரன் இரவிலும்

தீ எக்காலத்திலும் இருளைப் போக்கி ஒளியைப் பரப்புவன தீ விளக்கு வடிவத்தில் நின்று இருளைப் போக்குகிறது.

இந்த மூன்று சுடர்களுமே இறைவனுக்குக் கண்களாக அமைந்திருக்கின்றன. இந்த மூன்றும் இல்லாவிட்டால் உலகில் இருளே நிரம்பியிருக்கும். இயல்பாக இருண்டு கிடப்பது உலகம். 'மாயிருள் ஞாலம்', 'இருள்தருமா ஞாலம்' என்று இதைச் சொல்வார்கள். அந்த இருளைப் போக்குவதற்கு முச்சுடர்களும் பயன்படுகின்றன. அவை ஒளிராவிடின் உலகம் இருளில் மூழ்கும். மக்கள் கண்களைப் படைத்திருந்தாலும் இருளில் பொருள்களின் வடிவத்தையும் வண்ணத்தையும் தெரிந்துகொள்ள முடியாது. உலகத்தினர் கண் விழித்தாலும் இறைவன் கண் விழித்தாலன்றி அவர்கள் கண்கள் எதையும் காணமுடியாது. அதாவது, சூரிய சந்திர அக்கினிகள் இருந்தாலன்றி ஒளி இல்லை; கண்கள் இருந்தும் பார்க்க முடியாது.

இறைவனுடைய மூன்று கண்கள் ஒளியை உடையவை அதே சமயத்தில் அவை வெம்மையையும் உடையவை உலகத்துக்கு ஒளியைத் தரும்போது, சில சமயங்களில் தீயவர் களை அழிப்பதற்கு அவை பயன்படும். அப்போது அவற்றின் வெம்மை செயற்படும்.

மூன்று கண்களை உடைய சிவபெருமானுக்கு மூன்று சுடர் களே கண்களாக உள்ளன. அவை தத்தமக்குரிய இயல்போடு இறைவன் திருமுகத்தில் ஒளிர்கின்றன. அவற்றைப் பார்த் தாலே, 'இவை மூன்று சுடர்களைப் போல இருக்கின்றனவே!' என்று சொல்லத் தோன்றும். உண்மையை அறியாதவரைப் போல அம்மையார் சொல்கிறார். மூன்று சுடரே அவன் கண்கள் என்னுமல், அவற்றைப் போலத் தோன்றும் என்று சொல்கிறார்.

உயர்ந்து கொழுந்து விட்டு எரியும் தீ இறைவனுக்கு ஒரு கண்.

**நெடிதாய பொங்கு எரியும்.**

குளிர்ந்த நிலவை வீசும் தண்ணிய மதியும் அவனுக்கு ஒரு கண்.

**தண்மதியும்.**

நேர் நின்றால் கடுமையாகச் சுடும் கிரணங்களை வீசும் கதிரவனும் ஒரு கண்.

**நேரே**
**கடிதாம் கடுஞ்சுடரும் போலும்.**

மும்மதில்களையும் சுட்ட மூன்று கண்களும் எப்போதும் எரியைக்கக்குவன அல்ல. அவை தத்தமக்கு உரிய இயல்போடு இருப்பவை. இறைவன் சினம் மூண்டு பார்க்கும்போது அவை மூன்றும் ஒரே திறத்தனவாக எரியைக் கக்கிச் சங்காரச் செயலுக்குக் கருவியாக இயங்குகின்றனவாம்.

**நெடிதாய பொங்கெரியும்**
**தண்மதியும் நேரே**
**கடிதாம் கடுஞ்சுடரும்**
**போலும்;—கொடிதாக**
**விண்டார்கள் மும்மதிலும்**
**வெந்தீ யினில்அழியக்**
**கண்டுஆலும் முக்கணான் கண்.**

கொடுமை உண்டாக மற்றவர்களினின்றும் பிரிந்து சென்று பகைவர்களாக இருந்த திரிபுரத் தலைவர்களுடைய மூன்று மதில்களும் வெம்மையான தீயினால் அழியும்படி பார்த்து, அவை அழிந்தபிறகு மகிழ்ந்த முக்கண்ணனாகிய சிவபெருமானுடைய கண்கள், உயர்ந்ததாகிய கொழுந்துவிடும் தீயையும், குளிர்ச்சியையுடைய சந்திரனையும், நேரே கடுமையாக உள்ள வெய்ய கதிரவனையும் போல இருக்கும்.

[நெடிது ஆய—உயர்ந்ததாகிய; நெருப்பு மேல்நோக்கி எரிதலின் இவ்வாறு சொன்னார். பொங்கு எரி—கொழுந்து விட்டு எரியும் தீ. வேறு சுடர்களினும் நீக்குவதற்குக் கடுஞ் சுடர் என்றார். கடிதாம் கடுஞ்சுடர் என்று இரண்டு முறை சொன்னது அதன் கடுமை மிகுதியைச் சொன்னபடி. கடுஞ் சுடர் என்பதைச் சூரியன் என்னும் துணையாக நின்றது என்று கொண்டு பொருள் செய்வதும் பொருந்தும்.

'கண் எரியும் மதியும் கடுஞ்சுடரும் ஆம்' என்று பயனிலையை வருவித்து முடித்து, 'போலும்' என்பதை அசை யாகக் கொள்வதும் ஒன்று. கொடிது ஆக விண்டார்கள்; விண்டார்கள் என்பது பகைவர்களைக் குறிக்கும் சொல். இங்கே கொடிது ஆகும்படி பிரிந்து, பகைத்தவர்கள் என்று பொருள் கொள்ளவேண்டும்; கொடிதாகக் கண்டு என்று கூட்டி முடிப்பதும் பொருந்தும். வெந்தீ—ஐம்பூதங்களில் ஒன்றாகிய தீயைப் போலன்றி மிகக் கொடிதாகிய தீ. திரிபுரங் களின் ஆற்றல் மிக்கதாதலின் அதை அழிக்கும் வெம்மையை உடைய தீ ஆயிற்று.

கண்டு ஆலும்; முதலில் பார்த்து அழித்து அதன்பின்பு புரங்களை அழித்த பெருமிதத்தால் பிறழ்ந்தன. ஆலுதல்—அசைதல்: பிறழ்தல்; களித்தல் என்றும் கூறலாம். முக்கணான் என்பது சிவன் என்னும் துணையாய் நின்றது. 'முக்கணும் கண்' என்பது ஒரு பாடம்.

'கண் போலும்' என்று முடிக்க.]

இறைவனுடைய மூன்று கண்களின் இயல்பைச் சொன்ன இந்தப் பாடல் அற்புதத் திருவந்தாதியில் 84-ஆவது செய்யு ளாக அமைந்தது.

# 86. தரிசனத்தால் பெறும் இன்பம்

இறைவன் எல்லாரையும் விடப் பெரியவன். எல்லாப் பொருள்களினும் மேம்பட்ட பரம்பொருள் அவன். மேலான தென்று சிலர் நினைக்கும் எல்லாவற்றையும்விடப் பெரியவன் அதனால் அவனைப் பராபரன் என்று சொல்வார்கள்.

அத்தகைய பெருமானுடைய தரிசனம் கிடைத்தால் எத் தகைய இன்பத்தை அடையலாம்! அவனைக் காணும்படியான அநுபவம் கிடைத்தால் அது மிகப் பெரிய பேறு ஆகும். அந்தப் பேறு யாவருக்கும் கிடைப்பதன்று.

அவனுடைய திவ்ய தரிசனம் கிடைத்தால் உணர்ச்சி வயப்பட்டு அன்பர்கள் எப்படி எப்படியோ குதுகலிப்பார்கள். பல வகையில் தம் பக்தி உணர்ச்சியைக் காட்டுவார்கள்.

காரைக்கால் அம்மையார், "இறைவனுடைய திவ்ய தரிசனம் கிடைத்தால் இப்படியெல்லாம் செய்வேன்" என்று சொல்கிறார்.

**பெரியானைக் காணப் பெறின்.**

தாம் செய்வன இவை என்று அவர் சொல்வதைக் கேட் கலாம்.

பெருமானுடைய அழகுக் காட்சி காணக் காண இனிக் கும். ஒருகால் பார்த்தால் போதாது; கண்ணை அகல விரித் துப் பருகுவது போன்ற ஆர்வத்தோடு பார்க்கலாம். கண் ணாரக் கண்டு மகிழலாம். 'அப்படிக் காண்பேன்' என்கிறார் அம்மையார்.

**கண்ஆரக் கண்டும்.**

பலகால் பார்த்துப் பார்த்துத் தம் கண்களில் இறைவன் திருவுருவே நிரம்பி நிற்கும் அநுபவம் அவருக்குக் கிடைக்கிறது. பார்த்துக் கொண்டே தம்மை மறந்து நின்றவர், சிறிது உணர்வு வரப் பெற்று, 'எம்பெருமான் அல்லவோ நம் முன் நிற்கிறான்? இவனைப் பார்த்துக் கொண்டேயிருந்தால் போதுமா? இவன் நமக்கு நேர்பட்டானே என்ற மகிழ்ச்சியில் செய்ய வேண்டியதை மறக்கலாமோ? இவனை வணங்க வேண்டாமோ?' என்ற எண்ணம் தோன்றும். உடனே கைகளைக் கூப்புவாராம். கைகளை நன்கு இணைத்துக் கும்பிடுவாராம்.

கையாரக் கூப்பியும்.

கைகள் அவனைக் கும்பிடுவதற்காகவே இருக்கின்றன என்ற உண்மையை உணர்ந்து கைகளின் செயல் நிரம்பும் படியாகக் கூப்புவார்.

நம்முடைய இந்திரியங்கள் இருவகைப்படும். ஞானேந்திரியங்கள், கன்மேந்திரியங்கள் என்பவை அவை; கண், காது, மூக்கு, சுவையுணரும் நாக்கு, தோல் என்பவை ஞானேந்திரியங்கள். இவற்றில் கண் தலைமையானது.

"கண்ணிற் சிறந்த உறுப்பில்லை"

என்பார்கள்.

அத்தகைய சிறந்த இந்திரியத்தால் சிறந்த செயலைச் செய்வதுதான் அறிவு படைத்தவர்களுக்கு அழகு. எதைக் காண வேண்டும், எதைக் கண்டால் மற்றவற்றைக் காணுவதால் பெறமுடியாத பெரிய இன்பத்தைப் பெறலாம் என்பதை அறிந்து செய்ய அறிவுடைய மனிதரால்தான் முடியும். ஆகவே இறைவன் திருவடிவைத் தரிசிப்பதே கண் படைத்த பயன் என்று அன்பர்கள் எண்ணுவார்கள். அவனைக் கண்ணாரக் கண்டு களிப்பார்கள்.

கை, கால், பேசும் வாக்கு, எருவாய், கருவாய் என்பன கண்மேந்திரியங்கள், மனிதனுக்குத்தான் எடுக்கவும் கொடுக்கவும் ஆற்றல் பெற்ற கைகள் இருக்கின்றன. குரங்குகளுக்குக் கை இருந்தாலும் அது காலாகவும் பயன்படும். யானைக்குத் துதிக்கை இருந்தாலும் நம்முடைய கையைப் போல இல்லை. ஆகவே நல்ல முறையில் அமைப்பான கைகளைப் படைத்த மனிதன் அந்தக் கைகளால் மிகச் சிறந்த செயலைச் செய்ய வேண்டும்,

"கைகாள் கூப்பித் தொழீர்"

என்று அப்பர் சுவாமிகள் திருவங்க மாலையில் கைக்குரிய பணி இன்னதென்பதைச் சொல்கிறார். இறைவனைக் கூப்பித் தொழுவதே கைகளுக்குரிய சிறப்பு. அம்மையாரும்,

**கையாரக் கூப்பியும்**

என்கிறார்.

கரணங்கள் மூன்று. அவை உடல், உரை, மனம் என்பவை. உடம்பிலுள்ள இந்திரியங்களில் சிறந்தவற்றை இறைவனுடைய வழிபாட்டில் ஈடுபடுத்திய அம்மையார் இனி மற்றக் கரணங்களையும் ஈடுபடுத்துவதைப் பற்றிச் சொல்ல வருகிறார்.

மனம் முழுவதும் நிரம்ப இறைவனுடைய வடிவத்தையும் புகழையும் எண்ணி எண்ணி இன்புறுவது அன்பர்களின் இயல்பு. சுவையுள்ள தின்பண்டங்களைக் கண்டு மகிழலாம். அதோடு நின்றுவிட்டால் பயன் என்ன? அவற்றை உண்டு மகிழ வேண்டும். அப்படியே இறைவன் திருவுருவத்தைக் கண்டும் கைகூப்பியும் மகிழ்வதோடு நில்லாமல் அதை உட்கொள்ள வேண்டும். உள்ளமெல்லாம் நிறைய நம் எண்ணங்களெல்லாம் அந்த உருவம் பற்றியவையாகவே அமையத் தியானம் செய்ய வேண்டும். அம்மையார் அப்படி எண்ணி இன்புறுகிறவர்.

**எண் ஆர எண்ணத்தால் எண்ணியும்.**

தொழுது தியானித்து இன்புற்றால் அந்த இன்ப உணர்ச்சி பொங்கி வரும். அதனால் நம்மை அறியாமலே வாய் திறந்து அந்த உணர்ச்சியை வெளிப்படுத்துவோம். இன்ப உணர்ச்சி மிகும்போது நாம், "அம்மாடி! அப்பாடி!" என்று சொல்வோம். வயிறார உண்டவன் ஏப்பம் விடுவது போல அத்தகைய சொற்கள் நம் வாயினின்று எழும்.

ஆனால் அன்பர்கள் இன்ப உணர்ச்சியில் ஆழ்ந்திருக்கும் போது அவர்கள் வாயிலிருந்து இறைவன் திருநாமங்களே எழும். அவனுடைய பெருமையை எண்ணி அந்தப் பெருமையை விளக்கும் திருப்பெயர்களை உணர்ச்சி மிகுதியினால் அவர்கள் சொல்லுவார்கள். அம்மையார் எவ்வாறு சொல்வார்?

தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவன் அவன்; மகா தேவன். அவனை வாயார வாழ்த்த புகுந்து,

**விண்ணோன்**

என்பாராம். அவன் தீயினில் நின்று ஆடும் திறனுடையோன். அவன் திருமேனி தீயைப் போன்றது. பெருந்தீப்பிழம்பாகிய அவனுக்கு இந்தப் பௌதிகத் தீச் சுடாது. அது புனல் போலக் குளிர்ந்திருக்கும். அதை எண்ணி,

**எரியாடி**

என்பாராம். இப்படி ஒரு முறையா சொல்வார்? இன்ப உணர்ச்சி மிகும்போது ஒரு சொல்லையே மீட்டும் சொல்வது மனித இயல்பு. அரிய நண்பர் வருவதைக் கண்டால் பல முறை, "வா, வா, வா, வா" என்று சொல்லுவோம். எதையாவது கேட்டு மகிழ்ந்தால், "பேஷ்! பேஷ்! பேஷ்!" என்று பல முறை சொல்வோம்.

அம்மையாரும், 'விண்ணோன், எரியாடி' என்று ஒரு முறை சொல்வதோடு நிற்கமாட்டார். பலமுறை திரும்பத்

திரும்ப அவற்றையே சொல்லி இன்புறுவாராம். உணர்ச்சி மிகும்போது பல பல வார்த்தைகளை நினைந்து சொல்லும் இயல்பு இராது. ஒன்றையே திருப்பித் திருப்பிச் செல்வோம். அப்படி, 'விண்ணோன், விண்ணோன். எரியாடி, எரியாடி' என்று பலமுறை சொல்லிச் சொல்லி உணர்ச்சியிலே மிதப்பார் அம்மையார்.

**விண்ணோன் எரிஆடி என்று என்றும் இன்புறுவன்.**

இறைவன் திருக்காட்சியைக் கண்டபோது கண்ணுக்கு இன்பம்; கருத்துக்கும் இன்பம். கை கூப்பும்போது காத்துக்கும் இன்பம்; மனத்துத்துக்கும் இன்பம். மனத்துக்குள் அவன் உருவத்தை எண்ணும்போது அங்கே இன்பமே நிரம்பும். 'விண்ணோன், எரியாடி' என்று சொல்லும் நாவுக்கும் உள்ளத்துக்கும் இன்பம் உண்டாகும்.

"பேசப் பெரிதும் இனியாய் நீயே" என்று அப்பர் பாடுவார்.

'பெரியவனாகிய இறைவனைக் காணும் பேறு பெற்றால் இவ்வாறெல்லாம் செய்து இன்புறுவேன்' என்று சொல்கிறார் அம்மையார், இந்தப் பாட்டில்.

**கண்ஆரக் கண்டும் என் கைஆரக் கூப்பியும்**
**எண்ஆர எண்ணத்தால் எண்ணியும்—விண்ணோன்**
**எரியாடி என்று என்றும் இன்புறுவன் கொல்லோ?**
**பெரியானைக் காணப் பெறின்?.**

"எல்லாரினும் பெரியவனாகிய சிவபெருமானைத் தரிசிக்கும் பேறு பெற்றால், அவனை என் கண் நிரம்பும்படியாகப் பார்த்தும், என் கைகள் நிரம்பக் கும்பிட்டும், மனம் நிரம்பும்படியாக அவனைப் பற்றிய எண்ணங்களை எண்ணியும், 'மகாதேவனே! எரியாடியே' என்று பலகால் சொல்லியும் இன்பம் அடைவேன்."

கண்கள் வேறு ஒன்றைப் பாராமல் அவனையே பார்த்தல்; கண்ணாரக் காணல். கைகள் முழுவதும் பொருந்திக் கும்பிடு தல் கை ஆரக் கூப்பல். எண்-மனம்; ஆகுபெயர். மனம் நிரம்பும்படி தியானித்தலைச் சொன்னார். எண்ணத்தால் - எண்ணங்களை; உருபுமயக்கம். என்று என்றும் - என்றென்று பலகால் சொல்லியும்.

கண்டும் கூப்பியும், எண்ணியும், என்றும் என்பவற்றில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள்.

கண் காணுவதும் கை கூப்புவதும் மெய் என்னும் கரணத்தின் செயல்கள்; எண்ணுதல் மனம் என்னும் காரணத் தின் செயல்; என்றென்று கூறுதல் வாக்கு என்னும் கரணத் தின் செயல்; மூன்று கரணங்களின் செயல்களையும் கூறினார். கரணங்கள் யாவும் இறைவனிடம் ஈடுபட்டு நிற்பதைச் சொன்னார். கண்ணும் கையும் வாயும் புறக்கரணங்கள். மனம் அகக்கரணம். உள்ளும் புறம்பும் இறைவன் மயமாக நின்று இன்புற்றார் அம்மையார்.

கொல், ஓ: இரண்டும் அசைகள். ஐயமாகக் கொண்டு "அவனைக் கண்ட இன்பத்தில் செயலிழந்து நிற்பேனோ, அன்றி இவற்றைச் செய்வேனோ?" என்றதாகவும் கொள்ள லாம். அந்தப் பொருள் கொள்ளும்போது, ஓ: அசை.

செயின் எனும் வாய்பாடமைந்த பெறின் என்பது பெறு வதன் அருமையைக் காட்டியது.

பெறின், கண்டும், கூப்பியும், எண்ணியும் இன்புறுவன் கொல்லோ என்று முடிக்க.]

இறைவனுடைய தரிசனத்தால் கரணங்கள் யாவும் தெய்விக இன்பத்தை அடையும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 85-ஆம் பாடல் இது.

# 87. வேறு நிலையே வேண்டாம்

காரைக்காலம்மையாரை மணந்த கணவன் அவருடைய தெய்விகத் தன்மையை அறிந்து, அவரை மனைவியாகக் கொண்டு வாழ்வது தவறு என்று உணர்ந்து மதுரைக்குச் சென்று வேறொரு பெண்மணியை மணந்துகொண்டு வாழ்ந்தான். அந்த மனைவிக்குப் பிறந்த பெண் குழந்தைக்குக் காரைக்கால் அம்மையாரின் இயற்பெயராகிய புனிதவதி என்பதையே வைத்தான்.

கணவன் பிரிந்த பிறகு சுற்றத்தாருடன் அவனைத் தேடிச் சென்று அடைந்தபோது அவன் அம்மையாரை வணங்கினான்.

அதைக் 'கண்ட அம்மையார் அச்சத்தோடு ஒதுங்கி நின்றார். சுற்றத்தார் அவனிடம், "உன் மனைவியை வணங்கு வது ஏன்?" என்று கேட்டார்கள். அதற்கு அவன், "இவர் மானிடப் பிறவி அல்லர், தெய்வத் தன்மை உடையவர். இதை அறிந்து, இவரை மனைவியாகக் கொண்டு வாழ்தல் தகாது என்று இங்கே வந்து வேறு திருமணம் செய்து கொண்டேன். இங்கே பிறந்தபெண் குழந்தைக்கு இவருடைய பெயரை வைத்தேன். நீங்களும் இவரைப் பணியுங்கள்" என்றான்.

கணவராக மணந்த அவன் அவ்வாறு சொல்லவே, அம்மையார், "இவனுக்காகத் தாங்கிய இந்த அழகுடைய உடம்பைப் போக்கித் தசையற்ற பேய் வடிவத்தை அருள வேண்டும்" என்று இறைவனை வேண்டினார். இறைவன் அவ்வாறே அருள் புரிய அவர் பேய் வடிவம் கொண்டு நின்றார். அந்த நிலையில் அவர் பாடியது அற்புதத்திருவந்தாதி.

சிவபெருமானைச் சுற்றிப் பேய்க்கணங்கள் இருக்கும். காரைக்காலம்மையாரும் அந்தக் கணங்களில் ஒன்றாகி விட்டார்.

தாம் பேயானதை அவரே சொல்கிறார். 'சிவபெருமானுடைய நல்ல பேய்க் கணங்களில் ஒன்றான நாம்' என்று பெருமையோடு சொல்லிக் கொள்கிறார்.

பேயாய
நற்கணத்தில் ஒன்றாய நாம்.

இறைவன் இரண்டு கண்களுக்குமேல் நெற்றியில் ஒரு கண்ணை வைத்தவன். இறைவனோடு இரண்டறக் கலக்கும் நிலை அது, அதுதானே யாவரும் பெறவேண்டியது?

அந்தக் கண்ணை எப்போதும் திறந்திருக்கமாட்டான். யாருக்கேனும் தன் ஆற்றலைச் சிறிது உணர்த்த வேண்டுமானால் அப்போது அதைத் திறந்துகாட்டுவான். நக்கீரரோடு வாதிட்டபோது அதைச் சிறிதே திறந்து காட்டினான். மன்மதன் மலரம்புகளை விட்டபோது சிறிது அந்தக் கண்ணை விழித்துப் பார்த்தான். ஆகவே, தன் நெற்றியின்மேல் அந்தக் கண் இருப்பதைச் சிறிதளவே, உணர்த்தி வைத்திருக்கிறான்.

சிறிது உணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல் வைத்தான்.

அவனுடைய பேயக்கணத்தில் ஒன்றாக இருக்கிறார் அம்மையார்.

"இந்த நிலையில் எவ்வளவு காலம் இருக்கப் போகிறீர்கள்?" என்று நாம் கேட்கிறோம்.

"ஏன்? இந்த நிலையே பெரிய நிலை அல்லவா? சிவபெருமானுடைய நல்ல கணத்தில் ஒரு பேயாக இருக்கும் பேறு பெறற்கு அரியதல்லவா?"

"இந்த நிலை எவ்வளவு காலம் நிலைத்திருக்கும்? இது மாறினாலும் மாறலாமே! அப்போது என்ன செய்வீர்கள்?"

"என்ன செய்யச் சொல்கிறீர்கள்?"

"பேரின்ப வாழ்வு ஒன்று இருக்கிறதே!"

"இந்த நிலை எமக்குத் தங்கியிருந்தாலும் இல்லா விட்டாலும் அதைப்பற்றி எமக்குக் கவலை இல்லை. இறைவ னுடைய திருவுள்ளம் எப்படியோ அப்படியே நடக்கட்டும். வேறு நிலையே எமக்கு வேண்டாம்."

**வேண்டேம், நமக்குஈது**
**உறினும் உருதொழியு மேனும்.**

"இறைவனுடைய திருவருளினால் சாலோக சாமீப சாருப சாயுஜ்ய நிலைகளெல்லாம் கிடைக்குமே! அவற்றை விட்டு விட்டு இந்தப் பேயுருவத்தோடு இருப்பானேன்?"

"வேறு எதைப் பெற்றாலும் அதை யாம் வேண்டோம். இந்த நிலையே போதும். அவனடிக் கீழிருந்து அவனுடைய நடனத்தைத் தரிசித்து இன்புறுவதைவிட வேறு ஒன்றும் எமக்குப் பெரிதாகத் தோன்றவில்லை."

"இறைவனோடு ஒன்றும் நிலை மிகச் சிறந்ததாயிற்றே! நீங்கள் விரும்பினால் இறைவன் அருளால் பெறலாமே!"

"அப்படிப் பெற்றாலும் யாம் அதை வேண்டோம்."

**பெறினும் பிறிதியாதும் வேண்டேம்.**

திருவாலங்காட்டில் நடராசப் பெருமான் திருவடிக்கீழ்ப் பேய் வடிவோடு என்றும் இருக்கிறார் அம்மையார். அந்த நிலையிலேயே இணையற்ற இன்பம் கண்டு,

"கூடும் அன்பினில் கும்பிட லே அன்றி
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"**

என்றபடி வீட்டின்பத்தையும் வேண்டாத மிடுக்கோடு அவர் இருக்கிறார். ஆதலால், "வேறு எந்த உயர்ந்த நிலை எமக்குக் கிடைப்பதாக இருப்பினும் அது வேண்டியதில்லை. இந்த நிலையே போதும்" என்று சொல்கிறார்.

பெறினும் பிறிதியாதும்
வேண்டேம், நமக்குஈது
உறினும் உறுதுஒழியு மேனும்; -
சிறிது உணர்த்தி
மற்றொருகண் நெற்றிமேல்
வைத்தான்றன் பேயாய
நற்கணத்தில் ஒன்றாய நாம்.

அந்வயம் : மற்றொருகண் சிறிதுணர்த்தி நெற்றிமேல் வைத்தான்றன் பேய் ஆய நற்கணத்தில் ஒன்று ஆய நாம், உறினும் உறுது ஒழியுமேனும், பிறிது யாதும் பெறினும் வேண்டேம்.

"இயல்பான இரண்டு கண்களோடு மற்றும் ஒரு கண்ணைச் சில சமயங்களில் சிறிதளவு உணரச் செய்து தன் நெற்றியின் மேல் வைத்துள்ள சிவபிரானுடைய பேயாகிய நல்ல கணத்தில் ஒரு பேயாகிய நாம், இந்த நிலை எப்போதும் தங்கினாலும் தங்காமல் போய் விட்டாலும், இதனினும் சிறந்ததென்று பிறர் சொல்லும் பிறநிலை எதனையும் வேண்டோம்."

[பெறினும் என்ற உம்மை உயர்வு சிறப்பும்மை; பெறுவது அரிதென்றபடி. பிறிது யாதும் பெறினும் வேண்டேம். ஈது உறினும் உறுது ஒழியுமேனும் யாதும் வேண்டேம், பிறிது யாதும் என்பவை புணரும்போது குற்றியலுகரம் ஆயிற்று. ஈது என்றது இறைவன் அடிக்கீழ் இருக்கும் நிலையை. சிறிது உணர்த்தி - சிறிதளவு ஞானத்தைப் பெறச் செய்து என்றும் பொருள் கொள்ளலாம். இயல்பான கண்கள் இருப்பதனால் நெற்றிக்கண்ணை மற்றொரு கண் என்றார்.

நெற்றிக்கண் உடையவன் என்று சுட்டியது, வேறு யாருக்கும் இல்லாத சிறப்புடையவன் என்று சொன்னபடி. பேய்க்கணமாயினும் இறைவனுடைய தொண்டில் ஈடுபடுவதாதலின் நற்கணமாயிற்று. பேய் என்பது அஃறிணையாதலின் ஒன்று என அஃறிணையால் சொன்னர்.]

இறைவனுக்கு ஆட்பட்டவர்களுக்கு வேறு எந்தப் பதவியும் உயர்வாகத் தோன்ருது என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 86-ஆவது பாடல் இது.

# 88. எப்படி அடும்?

இறைவனை வழிபடுபவர்கள் பல வகையில் வணங்கி இன்புறுவார்கள். அவரவர்களுடைய ஆற்றலுக்கு ஏற்றபடி அந்த வழிபாடு அமையும். காரைக்கால் அம்மையார் சிவ பெருமானுக்குப் பாமாலை சூடும் திறமை உடையவர். அவர் அன்பினால் என்ன என்ன காரியம் செய்வார் என்பதைச் சொல்ல வருகிறார்.

அவர் நாவன்மை படைத்தவராதலின் அவனுக்குப் பாமாலை புனைந்து அணியும் ஆற்றல் படைத்தவர்; நாவினால் அழகிய பாமாலையைச் சூடுகிறவர். ஆதலின் முதலில் அதைச் சொல்கிறார்.

நாமாலை சூடியும்.

எல்லாரும் இப்படிச் செய்ய முடியாது. பூமாலை சூடலாம். அம்மையாரோ நாவினால் அழகையுடைய பூமாலையைச் சூடி இன்புறுகிறவர்.

"நாவிலே சித்ர மாகவே கட்டி.... மாத்ருகா புஷ்ப மாலை கோலப்ரவாள பாதத்தில் அணிவேனோ" என்று அருணகிரி யார் பாடுவார். அவ்வாறு நாவினால் அலங்காரமாகப் பாமாலை சூடும் பேறு பெற்றவர் அம்மையார்.

**அன்பாய்**
**நாமாலை சூடியும்**

என்கிறார்.

இறைவனுடைய பொன்னிறம் பெற்ற திருவடிகளைத் தரிசிக்கும்போது அதற்கு அலங்காரம் செய்து பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் உண்டாகிறது அவருக்கு. ஈசனிடம் நெருங்கி உறவாடும் அன்பையுடைய அவர் அப்பெருமானை, 'நம் ஈசன்' என்று சொல்கிறார். அவருக்கு உள்ளது ஒரே உறவுதான். இறைவனுடைய உறவுதான் அது. ஆகவே,

**நாமாலை சூடியும் நம் ஈசன்**
**பொன்அடிக்கே**

என்கிறார்.

குழந்தையின் அழகிய அடிகளைக் கண்டவுடன் தாய்க்கு அவற்றிற்குத் தண்டையும் வெண்டயமும் பூட்டி அலங்காரம் செய்யும் ஆர்வம் உண்டாவது போல அம்மையாருக்கும் உண்டாகிறது. அதனால் அந்த அடியைப் புனைந்து பார்க்க விரும்புகிறார்.

நாமாலை சூடுவது மாத்திரம் அன்று, அந்தப் பொன்னடிக்கு மற்றவர்களைப் போலப் பூமாலையைக் கொண்டு புனையவும் ஆர்வம் பிறக்கிறது. எனவே,

**நம்ஈசன் பொனஅடிக்கே**
**பூமாலை கொண்டு புனைந்து அன்பாய்**

என்கிறார்,

அவர் வேறு யாரையும் பாமாலை கொண்டு பாடுபவர் அல்லர்; பூமாலை சூட்டுபவரும் அல்லர். அது செய்தாலும் இறைவனுடைய திருவடிகளுக்கே அர்ப்பணம் செய்கிறவர். அவனுடைய திருவடிகளையன்றி வேறு ஒருவரைப் பாடுவதையோ, மலர்மாலை சூடுவதையோ அறியாதவர் அவர். அவற்றிற்கே பாமாலையையும் பூமாலையையும் சூட்டுகிறவர். ஆகவே பிரிநிலை ஏகாரம் போட்டு,

**நம் ஈசன் பொன் அடிக்கே**

என்று சொல்கிறார்.

அவருடைய நாவினால் பாமாலை சூடுவார்; இது வாக்கின் செயல். கையினால் பூமாலை புனைவார்; இது காயத்தின் செயல். வாக்கு, காயம் என்னும் இரண்டினாலும் இறைவனுக்கு மாலை புனைந்து வழிபடும் அவர் மனத்தினாலும் அவனையே தியானம் செய்கிறவர். அவனை எப்போதும் ஓர்கின்ற அறிவை உடையவர். நல்லவற்றையும் அல்லாதவற்றையும் சிந்திக்கும் இயல்புடையது மனம். நல்ல மனம் உள்ளவர்கள் நல்லவற்றையே எண்ணுவார்கள். அல்லாதவர்கள் அல்லாதவற்றையே நினைப்பார்கள். நாம் இரண்டு வகையான எண்ணங்களையும் உடையவர்கள். அம்மையாரோ எது எண்ணினாலும் அந்த எண்ணம் இறைவனோடு தொடர்புடையதாகவே இருக்கும். மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கரணங்களாலும் அவனுடைய வழிபாட்டைச் செய்கிறவர் அவர்.

அவர் தம் அறிவினால் இன்னது செய்வதே நலம் என்பதை நன்கு அறிந்தவர். ஆகையால் வேறு எதை எதையோ பற்றிக் கொண்டு அல்லற்படும் அறிவு அவரிடம் இல்லை, இறைவனை எப்போதும் ஓரும் அறிவையே அவர் தமக்கு உரியதாகப் பெற்றவர்.

**நாம்ஓர்**
**அறிவினையே பற்றினால்.**

உடம்பாலே வழிபடுவது எளிது; வாக்காலே வழிபடுவது அதைவிடச் சற்றுச் சிரமம் ஆனது. மனத்தாலே ஓர்ந்து தியானம் செய்வது அதைவிட அருமை, ஆனால் மெய்யன்பர்கள் மனத்தின் வழியே செல்லாமல், அதைத் தம் வழிப்படுத்தி இறைவன்பால் ஈடுபடுத்துவார்கள்.

**"சிந்தனை நின்றனக்கு ஆக்கி"**

என்று மாணிக்கவாசகர் பாடுவார்.

அம்மையார் மூன்று கரணங்களையும் இறைவனுடைய வழிபாட்டில் ஈடுபடுத்தியதால் அவருக்கு ஒரு தைரியம் பிறக்

கிறது. பணம், கல்வி. உடல்வன்மை ஆகியவற்றை உடைய வர்களைத் துணையாகப் பெற்றவர்கள் தமக்கு அவை இல்லா விட்டாலும் தம் நண்பர்களின் பலத்தினால் தைரியமாக இருப்பார்கள். எல்லாரையும்விட வல்லமையை உடையவன் இறைவன். அவன் எல்லாம் வல்ல பெருமான்.

அருள் என்னும் அருஞ் செல்வத்தைப் படைத்த பெருஞ் செல்வன் அவன். எல்லாம் அறிந்த சர்வக்ஞன். அவனுடைய நல்ல துணையைப் பெற்றவர்களுக்கு எதனாலும் குறை உண்டாகாது. குறையிலா நிறைவாகிய ஈசனைப் பற்றியவர் களும் குறைவிலா நிறைவோடு இருப்பார்கள். 'நமக்கு என்ன குறை?' என்ற செம்மாப்பு அவர்களுக்கு உண்டாகும்.

> **''நாம் ஆர்க்கும் குடியல்லோம்,**
> **நமனை அஞ்சோம்,**
> **நரகத்தில் இடர்ப்ப டோம்,**
> **நடலை இல்லோம்;**
> **ஏமாப்போம், பிணிஅறியோம்**
> **இனைவோம் அல்லோம்;**
> **இன்பமே எந்நாளும்;**
> **துன்பம் இல்லை''**

என்ற பெருமிதம் அவர்களிடம் எழும். அந்த நிலையில் அம்மையார், ''இனி நாம் எதற்கு அஞ்ச வேண்டும்?'' என்று இறுமாந்து பேசுகிறார். காலனுக்கும் அஞ்சாத மனத் திண்மை உண்மையன்பர்களுக்கு இருக்கும்.

நம்மையெல்லாம் பாவங்கள் பற்றிக் கொண்டு துன்புறுத் துகின்றன; அடுகின்றன. மெய்யன்பர்களிடம் அவை அணுகு வதில்லை. அவர்களைக் கண்டாலே தூர விலகிப் போகும். ஆகையால் அந்த வினைகளைப் பற்றிய அச்சம் அவர்களுக்கு இராது. 'பிறரை அடுகின்ற வினை நம்மிடம் எப்படி வரும்? அவை நம்மை என்ன செய்யும்?' என்று மிடுக்குடன் சொல் வார்கள். மற்றவர்களை, இருள் செறிந்து வந்து மூடிக்

கொண்டு மயக்குவது போலத் துன்புறுத்தும் வினைகள் அவர்களை ஒன்றும் செய்ய முடியாமல் அகன்று போகும். 'எறிகின்ற வினை என்னும் இருள் நம்மை எவ்வாறு துன்புறுத்தும்? எதற்காகத் துன்புறுத்தும்?' என்று கேட்கிறார் அம்மையார்.

எற்றுஏது அடுமே
எறிவினையே என்னும் இருள்?

பாவங்களால் சூழப்பெற்றவர்கள் இருளில் வழி தெரியாமல் தடுமாறுகிறவர்களைப் போலக் கலங்குவார்கள். பாவங்களின் தொடர்பு இல்லாதவர்கள் ஒளியில் நடப்பவர்களைப் போல அஞ்சாமல் நடை போடுவார்கள். எங்கிருந்து எது வந்து தாக்குமோ என்று அஞ்சும் நிலை அவர்களுக்கு இல்லை. அந்த உறுதியான ஒளிநிலத்தில் நடை போடும் அம்மையார், "வினைகள் நம்மை என்ன செய்யும்?" என்று கேட்கிறார்.

தம் நெஞ்சை நோக்கி இந்தக் கேள்வியைக் கேட்கிறார். பாட்டில் நெஞ்சை விளிக்கும் விளி இல்லாவிட்டாலும் குறிப்பினால் அதை விளித்துச் சொல்வதாகக் கொள்ள வேண்டும். அவருக்கு நெருக்கமாக உள்ளது ஆதலினால் அதனிடம் சொல்கிறார். "நெஞ்சமே, நீ அஞ்சாதே; நம்மை எது என்ன செய்யக் கிடக்கிறது?" என்று பேசுபவரைப் போல அவர் சொல்கிறார்.

நாமாலை சூடியும் நம்ஈசன் பொன்அடிக்கே
பூமாலை கொண்டு புனைந்துஅன்பாய் - நாம்ஓர்
அறிவினையே பற்றினால் எற்றுஏது அடுமே
எறிவினையே என்னும இருள்?

[என்னுடைய நெஞ்சமே, நாம் நமக்கு உறவாகிய சிவபெருமானுடைய பொன் வண்ணத் திருவடிகளுக்கே நாவினால் அன்பால் பாமாலை சூடியும், பூமாலையைக் கொண்டு அலங்கரித்தும், அவனை நினைக்கும் அறிவினையே பற்றி வாழ்ந்

தால், பிறரை மோதித் துன்புறுத்தும் தீவினையாகிய இருள் நம்மை எவ்வாறு எதற்காக வந்து அடும்?

[நாமாலை - நாவினால் புனைந்து பாடும் பாமாலை. அன்பால் பொன்னடிக்கே என்பவற்றை நாமாலை சூட்டுவதற்கும் பூமாலை புனைவதற்கும் கொள்ளவேண்டும். நம் ஈசன் என்றது பக்தியினால் உண்டான உறவின் வலிமையைக் குறிப்பது. பொன் அடி - பொன் வண்ணத்தை உடைய அடிகள்; பொன்னைப் போல உள்ளத்தே பொதிந்து வைப்பதற்கு உரிய அடிகள், என்றும் பொலிவு பெற்ற அடிகள் என்றும் பொருள் கொள்ளலாம்; பொன் - பொலிவு. அடிக்கே என்பதில் உள்ள ஏகாரம் பிரிநிலை; வேறு எதையும் வழிபடாமையைக் குறித்தது. புனைந்தும் என்ற எண்ணும்மை செய்யுள் ஓசை நோக்கித் தொக்கது: செய்யுள் விகாரம். ஓர்தல் - இடைவிடாது நினைந்தல். அதைச் செய்வது அறிவு. அந்த அறிவைப் பற்றி, விடாமல் தியானிப்பது அன்பர் இயல்பு. எற்று-எவ்வாறு. இறைவனுடைய திருவடிகளையே வேறு பற்றறப் பற்றினவர்களுக்கு வினைகளால் உண்டாகும் துன்பம் இராது. ஒளிமயமான பொன்னடியைப் பற்றினவர்களை வினை என்னும் இருள் சாராது. விளக்கைப் பிடித்தவர்கள் இருளுக்கு அஞ்சாமல் இருப்பதுபோல அவர்கள் இருப்பார்கள். அடுமே, வினையே: ஏகாரம், அசைநிலைகள்.

'அன்பாய் அடிக்கே சூடியும் புனைந்தும் பற்றினால் இருள் எற்று ஏது அடும்' என்று கூட்டுக. எற்று - எப்படி. ஏது - எவ்வாறு, எதனால், எந்த அளவில் என்று பல வகையில் பொருள் கொள்ளலாம்.]

இறைவனை வழிபடுகிறவர்களுக்கு வினையினால் வரும் துன்பம் இல்லை என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 87-ஆவது பாடல் இது.

# 89. கண்டத்து ஒளி

இறைவனைப் பார்த்து ஒரு கேள்வி கேட்கிறார் காரைக்கால் அம்மையார். அவருடைய நீலகண்டத்தைத் தரிசித்து அது பற்றிய வினாவை விடுக்கிறார். இறைவனுடைய நீலகண்டத்தில் ஈடுபடுகிறவர் அவர் என்பதைப் பல முறை பார்த்திருக்கிறோம்.

இப்போது அதைப்பற்றியே கேட்கிறார். "இறைவனே, இதை எமக்கு அருளிச் செய்ய வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொள்கிறார்.

அருள் எமக்கு.

இறைவனை விளித்து இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறார். அவன் நல்லன எல்லாவற்றையும் உடையவன்.

"நன்றுடையானைத் தீயதில்லானை" என்பது **சம்பந்தர்** திருவாக்கு. ஆகவே அவனை,

**நன்று உடையாய்!**

என்று விளிக்கிறார்.

இறைவன் தன்னுடைய செந்நிறம் பெற்ற சடாபாரத்தில் சந்திரனை அணிந்திருக்கிறான். அது பிறையாதலின் மாசு மறுவின்றி ஒளிர்கிறது. இறைவனுடைய திருச்சடையாகிய பாதுகாப்பான இடத்தில் இருப்பதனால் அது நன்றாக விளங்கித் தோன்றுகிறது. அது ஒளி வீசி இலங்கும்படி தன் செஞ்சடை மேல் அதைப் புனைந்திருக்கிறான். அந்தச் சந்திரசேகரனிடம் தம் விண்ணப்பத்தைச் சொல்கிறார்.

செஞ்சடைமேல், நக்கு இலங்க வெண்மதியம்
ஒன்று உடையாய்;

'உன்னுடைய திருக்கழுத்தில் நஞ்சை வைத்திருக்கிறுய். அது நீல வண்ணமுள்ள ஒளியுடன் அங்கே இலங்குகிறது. அதற்கு நான் எதை உவமை சொல்லட்டும்?' என்று சொல்கிறுர்.

கண்டத்து ஒளி.

ஒளிபடைத்த திருமேனியை உடைய சிவபெருமானிடம் இருப்பதனுல் அந்த நஞ்சும் ஒளியுடையதாக இருக்கிறது. அதன் ஒளியைப் பார்த்து, அதற்கு 'எதை உவமை சொல்லலாம் என்று யோகிக்சிறுர் அம்மையார்.

"இரா நீர் இருண்டனைய கண்டத்தீர்" (22)
"இருள் போந்து இடம் கொண்டிருக்கின்றது ஒக்கும்" (35)
"மற்றவற்கு வீங்கிருளே போலும் மிடறு" (65)

என்று அதற்கு இருளை உவமையாக்கி முன்பு சொன்னுர்.

இப்போதும் அதையே முதலில் நினைக்கிறுர்; 'இந்தக் கண்டத்தின் நிறத்தை இருளின் உருவென்று சொல்லட்டுமா?' என்று தொடங்குகிறுர்.

இருளின் உருஎன்கோ?

'இருளைச் சொல்வது அவ்வளவு சிறப்பன்று. இருள் எல்லாவற்றையும் தனக்குள் மறைத்துக் கொள்வது; அறியாமைக்கு உவமையாவது. அதைச் சொல்லலாமா?' என்ற எண்ணம் தோன்றுகிறது. 'கரியதாகவும் இருக்க வேண்டும்; பார்க்கக் குளிர்ச்சியாகவும் இருக்க வேண்டும்; நலம் பயப்பதாகவும் இருக்க வேண்டும். அப்படி உள்ள பொருள் எது?' என்று யோசிக்கிறுர். அவருடைய உள்ளத்தில் மேகம் வந்து நிற்கிறது. அதையே சொல்லலாமா என்று நினைக்கிறுர்.

மாமேகம் என்கோ?

'இருளுக்கும் மேகத்துக்கும் ஒளி ஏது? இறைவனுடைய கண்டம் ஒளியுடன் விளங்குகிறதே நீலமாகவும் ஒளியுடைய தாகவும் ஒரு பொருள் இருந்தால் அதைத்தான் சொல்ல வேண்டும்' என்ற எண்ணம் பிறகு உண்டாகிறது. 'இது என்ன?' என்று மயங்கி யோசிக்க வேண்டிய அவசியம் இல்லா மல், பளிச்சென்று தெரியும் நீலமணியைச் சொல்வதுதான் பொருத்தம் என்ற எண்ணம் எழுகிறது. உடனே,

மருள்இல் மணிநீலம் என்கோ?

என்கிறார்.

'இப்படி நாம் உவமையைத் தேடித் தடுமாறுவானேன்? எம்பெருமானிடமே இந்தச் சந்தேகத்தைக் கேட்டு விடலாமே!' என்ற எண்ணம் அடுத்தபடி தோன்றுகிறது. ஆகவே, 'எம்பெருமானே, நீயே சொல்லியருள்' என்று சொல்கிறார்.

அருள் எமக்கு.

இறைவனுடைய திருநீல கண்டத்தின் ஒளியிலே சொக் கிப் போய், அதைப் பார்த்துப் பார்த்து இன்புறுகிறார் அம்மையார். ஒரு செப்புக்குள் மற்றொரு செப்பைப் போட முயலும் குழந்தை இரண்டின் அளவையும் தெரிந்து கொள்ளாமையால், ஒவ்வொன்றாக எடுத்து வைத்துப் பார்ப்பது போல அம்மையார் உவமைச் செப்பில் கண்டத் தொளியை அடைக்கப் பார்க்கிறார்.

இருளின் உருஎன்கோ?
மாமேகம் என்கோ?
மருள்இல் மணிநீலம்
என்கோ? - அருள்எமக்கு;
நன்றுஉடையாய், செஞ்சடைமேல்
நக்குஇலங்கு வெண்மதியம்
ஒன்றுஉடையாய் கண்டத்து ஒளி,

# 90. வாயும் கண்டமும்

காரைக்காலம்மையார் இறைவனை விளித்துத் துதிப்பார். அவனுக்கு அறிவுரை சொல்வது போல ஒன்றைச் சொல்வார். அவனிடம் சில வினாக்களை விடுப்பார். இவையெல்லாம் அவருடைய பக்தி உணர்ச்சியால் எழுபவை.

இப்போது இறைவனிடம் ஒரு கேள்வி கேட்கிறார். இறைவனுடைய நஞ்சுண்டு இருண்ட கண்டத்தில் தம் பார்வையைப் பதித்துப் பல வேறு வகையில் அவர் பேசுவதை நாம் பார்த்து வருகிறோம்.

முதலில் இறைவனை விளிக்கிறார்.

அடியவர்கள் இறைவன்மேல் மலர்களைத் தூவி அர்ச்சனை புரிவார்கள். அவர்களுக்கு அவன் அருள் பாலிப்பான். ஆனால் ஒருவன் அவன்மேல் மலர்களை வீசினான். அவனைப் பெருமான் எரித்துவிட்டான். பக்தர்கள் அன்பினால் மலர் தூவி வழிபடுவார்கள். அவனோ மென்மையான மலர்களையே தன் அம்புகளாகக் கொண்டு எய்வான். உலகத்து மக்களிடம் அந்த அம்புகளினால் காம உணர்ச்சி உண்டாகும்படி செய்வான். இறைவனிடமும் அந்த வேலையைச் செய்தான். அதன் பயன் என்ன? அவன் எரிந்து சாம்பலானான். காமாக்கினியால் யாவரையும் தகிக்கும் மன்மதனது ஆற்றல் எம்பெருமானிடம் பலிக்கவில்லை.

பளபளவென்று ஒளி வீசும் கரும்பு வில்லை உடையவன் மன்மதன். அவனைத் திருக்கண்ணோக்கத்தால் எரித்து விட்டான் எம்பெருமான்.

ஒளிவிலி வன்மதனை ஒண்பொடியா நோக்கி.

அவன் விட்டவை மென்மலர்கள்தாம் என்றாலும் அவன் அவற்றையே தன்னுடைய படைக்கலமாகக் கொண்ட வன்மையை உடையவன். அவன் சாம்பரானான். இறைவன் திருக்கண்ணால் சாம்பராதலின் அது பளபளக்கிறது.

இவ்வாறு காமனை எரித்த திருவிழியை உடைய இறைவன் அன்பர்களுக்குத் தண்மையான அருளைப் புரிபவன். அவர்களுடைய சித்தம் காமம் முதலிய மாசுகள் இல்லாமல் தெளிவாக இருக்கும். தெளிவற்ற உள்ளங்களில் அவன் இருந்தாலும் அங்கே அவன் நிலைகொள்வதில்லை. சலனமுள்ள நீரில் நிழல் நன்கு தெரியாமல் இருப்பது போல, இறைவனுடைய வடிவம் அத்தகைய உள்ளங்களில் நிலைகொள்வதில்லை.

ஆனால் ஞானத்தால் தெளிவு பெற்ற உள்ளங்களில் அவன் நிலையாகத் தங்கியிருப்பது போலக் காட்சியளிப்பான்.

தெளிவுள்ள சிந்தனையிற் சேர்வாய்!

சிந்தனை என்பது சித்தத்தைக் குறித்தது. மனத்தின் நான்கு பகுதிகள் உண்டு. அவை மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன. அவற்றை அந்தக்கரணம் என்றும் அகக் கரணம் என்றும் கூறுவர். மனம் ஒன்றை விட்டு மற்றொன்றில் தாவுவது.

"ஒன்றைவிட் டொன்று பற்றிப்
பாசக் கடற்குளே வீழாமல் மனதற்ற
பரிசுத்த நிலையை அருள்வாய்"

என்று வேண்டுவார் தாயுமானவர். அத்தகைய பரிசுத்த நிலையைப் பெற்றவர்கள் அடியார்கள்.

புத்தி என்பது, தக்கது இன்னது, தகாதது இன்னது என்று ஆராய்ந்து பார்ப்பது. சித்தம் என்பது ஒன்றைப் பற்றி நிற்பது. அகங்காரம் என்பது நான் என்ற உணர்வு.

இறைவனுடைய திருவடியைப் பற்றிக்கொண்டு, சலன மின்றி உள்ள சித்தம் படைத்தவர்கள் அன்பர்கள்.

"அளப்பரும் கரணங்கள் நான்கும் சிந்தையே ஆக"

என்று இந்த நிலையைச் சேக்கிழார் சொல்வார்.

அவ்வாறு சித்தத்தைச் சிவன்பாலே வைத்த அன்பர் களின் உள்ளம் தெளிவாக இருக்கும். அந்தத் தெளிவை உடைய சித்தத்திலே இறைவன் தங்கித் தன் வடிவத்தைத் தெளிவாகத் தரிசிக்கும் அருளைப் புரிவான்.

தெளிவு உள்ள சிந்தையிற் சேர்வாய்!

இவ்வாறு இறைவனை விளித்த அம்மையார் அவனிடம் ஒரு வினாவைச் சமர்ப்பிக்கிறார்.

சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டவன். அந்த நஞ்சு பளபளவென்று நீல நிறமாக இருந்தது.

ஒளிநஞ்சம்

என்று அதைச் சொல்கிறார் அம்மையார்.

அந்தக் கரிய நஞ்சை இறைவன் வாங்கி உண்டான்; வாயில் இட்டு விழுங்கினான்; தன் கண்டத்தில் நிறுத்திக் கொண்டான். அங்கே அது நீல நிறத்தோடு நிற்கிறது.

"கறை நிறுத்திய கண்டன்"

என்பார் பரஞ்சோதி முனிவர்.

அவ்வாறு உண்ட நஞ்சம் கழுத்தில் நீல நிறத்தை உண்டாக்கியது. அதனால் இறைவனுக்கு நீலகண்டன் என்ற திருநாமம் உண்டாயிற்று.

இறைவன் அதை விழுங்கியபோது வாய் வழியாகத் தானே உள்ளே சென்றது? அப்போது அந்த வாயும் நீல நிறத்தை அடைந்திருக்க வேண்டுமே! தாம்பூலத்தை உண்ட

வர்களின் கண்டம் வெப்பதில்லை; வாய் வேகிறது. அவ்வாறு நஞ்சத்தை உண்ட திருவாய் நீல நிறம் பெற்றிருக்க வேண்டுமே! உண்ட வாய் நிறம் மாறாமலே இருந்திருக்க, கண்டம் மாத்திரம் இருள் நிறம் கொண்டு விளங்குகிறது! கண்டத்திலுள் அடங்கிய நஞ்சமிக்க கறுப்புடையதானமையால் அங்கே தன் ஒளியைப் புறத்திலும் வெளிப்படச் செய்கிறது. அப்படி இருண்ட நஞ்சு வாயையும் அவ்வாறு கறுத்திருக்கச் செய்ய வேண்டும்? இங்கே அப்படி இல்லையே!

"இதற்கு என்ன காரணம்? இதை நீயே சொல்லியருள வேண்டும்" என்று இறைவனைக் கேட்கிறார் அம்மையார்.

ஒளிநஞ்சம்
உண்டவாய் அஃதிருப்ப
உன்னுடைய கண்டம்இருள்
கொண்டவாறு என்? இதனைக் கூறு.

"அதனை உண்ட வாயானது தன் இயல்பான நிறம் கெடாமல் இருக்க, கண்டம் மாத்திரம் கறுப்பானது ஏன்?" என்று கேட்கிறார்.

ஒளிவிலி வன்மகனை ஒள்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையில் சேர்வாய்—ஒளிநஞ்சம்
உண்டவாய் அஃதிருப்ப உன்னுடைய கண்டம்இருள்
கொண்டவாறு என்? இதனைக் கூறு.

[எம்பெருமானே, ஒளியையுடைய கருப்பு வில்லை உடைய வன்மையான காமனைச் சாம்பராகும்படி நெற்றிவிழியால் பார்த்து, ஞானத்தினால் தெளிவுபெற்ற அன்பர்களின் சித்தத்தில் தங்கி வடிவத்தைக் காட்டும் தூயனே, ஒளியையுடைய ஆலகால விடத்தை உண்ட வாய் தன் நிறம் மாறாமல் இருக்க, உன்னுடைய திருக்கழுத்து மட்டும், கரிய நிறத்தை அடைந்த வண்ணம் ஏன்? இதை எனக்குத் தெளிவாகச் சொல்வாயாக.

ஒளி விலி — ஒளிந்த வில்லையுடையவன் என்றும் பொருள் கொள்ளலாம். விலி — வில்லி; இடைக்குறை. தன் போர்க் கருவியாக மென்மலரைக் கொண்டாலும் அவன் வலியவன்; எல்லாரையும் காம உணர்ச்சியில் அமிழும்படி செய்யும் வலிமையை உடையவன். 'மன்மதனே' என்றும் பாடம்.

நன்பொடியா — விளக்கம் பெற்றுச் சாம்பராகும்படியாக நோக்கி — நெற்றிக் கண்ணால் பார்த்து. கண்ணைத் திறந்து நோக்கிய அளவிலே அவன் பொடியாகி விட்டான். அவனைச் சங்கரிப்பதற்கென்று இறைவன் பெருமுயற்சி ஏதும் செய்ய வில்லை.

மன்மதன் கலங்கிய சிந்தையை உடையவன். இறைவன் மேல் அம்பை எய்யவேண்டும் என்று தேவர்கள் அவனை ஏவிய போது முதலில் அவன் அதற்கு இசையவில்லை. ஆனால் தேவர்கள் வற்புறுத்தவே, விருப்பம் இல்லாமலே இறைவன்மேல் அம்புகளை எய்தான். தெளிவுள்ள சிந்தனை இல்லாமல் அதைச் செய்தான். அன்பர்களோ தெளிவுள்ள சித்தம் உடையவர்கள். சேர்தல் என்பது இடைவிடாது தரிசிக்கும்படி இருத்தல்.

ஒளி நஞ்சம் — பளபளப்பாக ஒளியைப் பெற்ற நஞ்சு. இறைவன் திருக்கழுத்தினுள் சென்றும் அதன் நிறம் புறத்தே தெரிவதிலிருந்து அது ஒளியையுடைய நஞ்சு என்பது புலப்படும்.

வாய் அஃது: அஃது, பகுதிப் பொருள் விகுதி. இருள் — கரிய நிறம்; "இருளின் உருவென்கோ?" என்று முன்பாட்டில் சொன்னார். கொண்டவாறு — அடைந்த விதம். என் — என்ன காரணம்?

'சொல்வாய், இதனைக் கூறு' என்க.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 89-ஆம் பாட்டு இது.

# 91. கங்கை பெருகினால்?

காரைக்கால் அம்மையார் தொடர்ந்து கேள்வி மேல் கேள்வியை எழுப்புகிறார். இறைவனுடைய வாளையும் கண்டத்தையும் நோக்கிக் கேள்வி கேட்ட அவர் இப்போது தம் பார்வையை உயர்த்திப் பார்க்கிறார். பெருமானுடைய சடாபாரத்தில் அவர் பார்வை நிலைக்கிறது.

இறைவன் திருமுடியில் சடை இருக்கிறது. அங்கே அவன் அரவை அணிந்திருக்கிறான்; பிறையைப் புனைந்திருக்கிறான்; கங்கையையும் வைத்திருக்கிறான்.

கங்கை மிக்க ஆரவாரத்தோடும், 'என்னைத் தாங்குபவர் யார்?' என்று மிடுக்கோடும் வந்தது. அதை இறைவன் சடையில் ஏற்றான். அங்கே கங்கை இருக்கிறது. கங்கையில் அலைகள் இருக்கும். அது சடையில் அடங்கி நில்லாமல் மீண்டும் அலைகளை வீசிப் பெருகினால் என்ன ஆகும்? — இப்படி எண்ணிப் பார்க்கிறார் அம்மையார்.

“குழந்தாய், அந்த நாயைப் பிடிக்காதே; அது சாதுவாக இருந்தாலும் திடீரென்று அது உன்னைக் கடித்தாலும் கடிக்கும். அப்போது என்ன செய்வாய்?” என்று தன் குழந்தையிடம் கூறும் தாயைப் போலச் சொல்கிறார் அம்மையார். இறைவனைத் திருக்கயிலையில் சென்று தரிசித்தபோது, “அப்பா!” என்று கூறிக்கொண்டே அவனை அணுகினார். இப்போதும், “எம் தந்தையே!” என்று விளித்து, “நான் கேட்கும் கேள்விக்கு விடையைச் சொல்” என்று தொடங்குகிறார்.

கூறு எமக்கு ஈது, எந்தாய்!

கங்கை எப்படி வந்தது? தலைதெறிப்பாக அலைகளை வீசிச் சீறிக் கொண்டு வந்தது. 'விண்ணுக்கு அடங்காமல், வெற்புக்கு அடங்காமல், வந்தது.

அது இப்போது பெட்டிப் பாம்பாக இறைவன் சடையில் அடங்கியிருக்கிறது. அங்கே உள்ள பொருள்களை அது இழுத்து அதற்குள்ளேயே அலை வீசிக் கொண்டு நிற்கிறது. ஆற்றின் இயல்பு அது.

சீறி விழித்துப் படரும் ஒளியையுடைய அரவம் கங்கையின் அருகிலே இருக்கிறது. சில சமயங்களில் அலைகளை வீசி அதை இழுத்து ஒலியுடன் ஓடுகிறது. இறைவன் திருமுடி பரந்து விரிந்தது; ஆகவே அங்கே அதனால் ஓட முடிகிறது. அங்குள்ள பாம்பையும் சந்திரனையும் இழுத்துக் கொண்டு அலைகள் ஒலியை எழுப்ப ஓடுகிறது கங்கை.

சீறி
விழித்துவரும் வாள்அரவும்
வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்துஓடும் கங்கைத் திரை.

அவ்வாறு ஓடினாலும் சடையின் எல்லையைக் கடவாமல் இருக்கிறது கங்கை. குண்டு சட்டியில் குதிரையை ஓட்டுவது போல அந்த இடத்தில் தன் ஆற்றலைக் காட்டுகிறது.

சரி, அடங்கிக் கிடக்காமல் சிறைப்பட்டது போல இறைவன் சடையில் இருக்கும்போதும் தன் இயல்பு மாறாமல் அலைகளை வீச ஓடும் கங்கை இப்படியே இருக்குமா? கன்னம் போடும் திருடன் சிறையையும் உடைத்துக் கொண்டு வெளியேற முயல்வானே! அது போல இப்போது சடைக்குள்ளே இருக்கும் கங்கை திடீரென்று புரட்சி செய்யப் புகுந்து இறைவனுடைய சடையையும் மீறி மேலே வெள்ளமாகப் பெருகினால் என்ன செய்வது? இறைவன் அப்போது என்ன செய்வான்?

இப்படி ஒரு கற்பனையைச் செய்து இறைவனைக் கேட்கிறார் அம்மையார்.

> குளிர்சடையை மீதுஅழித்திட்டு
> ஏற மிகப்பெருகின் என்செய்தி?

தான் அன்பு வைத்த குழந்தை வாசலில் விளையாடிக் கொண்டிருக்கும்போது, 'ஏதாவது வண்டி ஏறிவிட்டிருந்தால் என்ன ஆகும்?' என்று எண்ணி அஞ்சுவாள் தாய். குழந்தை எந்த ஆபத்துக்கும் உட்படாத பலமுடையதாக இருந்தாலும் தாயின் மனம் இவ்வாறு எண்ணிச் சஞ்சலம் அடைவது இயல்பு. அம்மையார் அவ்வாறு கற்பனையில் ஒரு விபத்தைக் கண்டு அங்கலாய்க்கிறார்.

> கூறுமக்கு ஈது. எந்தாய்!
> குளிர்சடையை மீதுஅழித்திட்டு
> ஏற மிகப்பெருகின்
> என்செய்தி? — சீறி
> விழித்துவரும் வாள்அரவும்
> வெண்மதியும் ஈர்த்துத்
> தெழித்தோடும் கங்கைத் திரை.

'எம் அப்பனே, இந்தக் கேள்வியை விடுக்கும் எமக்கு விடையைச் சொல். சீறிக் கோபத்தோடு விழித்து வளர்ந்து செல்லும் ஒளியையுடைய பாம்பையும் வெண்மையான பிறையையும் இழுத்துக் கொண்டு ஒலித்து ஓடும் கங்கையின் அலைகள் தாம் தங்கியிருக்கும் நின்னுடைய குளிர்ந்த சடையை மேலே அமிழ்த்திவிட்டு வெள்ளம் ஏறும்படியாக மிகப் பெருகினால் நீ என்ன செய்வாய்?'

[எமக்கு என்றது பெருமிதத்தால் வந்த பன்மை. ஈது—இதற்கு உரிய விடையை. இறைவனுடைய சடை கங்கையும் பிறையும் சேர்ந்து தன்மை பெறாமல் இயல்பாகவே குளிர்ந்த தாதலின் குளிர் சடை என்றார். சடையை மீது அழித்து விட்டு—சடையை மேலே பொங்கி அமுக்கிவிட்டு; அழித்தல்

—உரு மறையும்படி பெருகுதல். ஏற—வெள்ளம் உயர. என் செய்தி—அதை மாற்றுவதற்கு என்ன செய்வாய்? வாள்—ஒளி. மதியம்—பிறை. அதில் மறுவின்றி முற்றும் வெண்மையாக இருத்தலின் வெண்மதி என்றார். தெறித்து—ஒளித்து.

'ஈர்த்து மூடும் திரை பெருகின் என் செய்தி?' என்று முடிக்க.]

'இது பொல்லாத கங்கை. இதை நம்பலாகாது. என்றைக்காவது திடீரென்று பெருகி ஆபத்தை விளைக்கலாம். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று சொல்வது போலச் சொல்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 90-ஆவது பாட்டு இது.

# 92. புறம் கூறுவது ஏன்?

காரைக்காலம்மையார் தசையெல்லாம் கழன்று என்பே வடிவாய்ப் பேயாக நின்றார். தம்மை மணந்த கணவன், 'இவர் தெய்வம்; இவரோடு வாழ்வது தகாது' என்று மதுரை சென்று வேறொரு பெண்ணை மணந்து வாழ்ந்தான். அவனிடம் உறவினர்கள் அம்மையாரை அழைத்துச் சென்றபோது அவன் அவரை வணங்கினான். "இவர் தெய்வம் என்று அஞ்சி இங்கே வந்தேன்" என்றான். பிறகு அவனுக்குப் பயன்படாத இந்த அழகு வேண்டாமென்று எண்ணி, இறைவனை வேண்டிப் பேயுருவம் கொண்டார் அம்மையார்.

அவர் அவ்வாறு ஆனதைக் கண்டு சிலர் பழி கூறினார்கள். "இவள் வாழ்க்கை இழந்தாள்" என்று தம்முள் பேசிக் கொண்டார்கள்; புறம் கூறினார்கள்.

இந்தச் செய்தி அம்மையாருக்குத் தெரிந்தது. 'பாவம்! அறியாமையையுடைய மக்கள்' என்று எண்ணிச் சிரித்துக் கொண்டார். 'நமக்குக் கிடைத்திருக்கும் பேரின்ப வாழ்வைப் பற்றி அறிந்து கொள்ளாமல் இப்படிப் புறம் கூறுகிறார்களே! இம்மை வாழ்விலும் மறுமை வாழ்விலும் நமக்குக் கிடைத்த பேறு வேறு யாருக்குக் கிடைக்கும்?' என்று பெருமிதம் கொண்டார்.

தன்னுடைய சிரத்தில் அலைகள் நிரம்பிய கங்கையை அணிந்தவன் சிவபெருமான். அந்தச் செஞ்சடை கங்கைக்குப் புகலிடம் அளித்திருக்கிறது. அவனுடைய சடையும் சிவந்தது. திருவடியும் சிவந்தது. அந்தச் சேவடிக்கே ஆளாகி அதன் கீழேயிருந்து என்றும் பணிந்து வாழும் வாழ்வு அம்மையாருக்குக் கிடைத்தது.

திரைமருவு செஞ்சடையான்
சேவடிக்கே ஆளாய்.

இறைவனுடைய திருவடித் தொண்டைப் புரிவதோடு அவனுடைய புகழைப் பேசும் வாய்ப்பும் அம்மையாருக்குக் கிடைத்தது. அவருடைய உடம்பு இறைவன் அடிக்கீழ்ப் பணிந்து நின்றது. அவருடைய வாக்கு இறைவனைப் பற்றியே பேசியது; அவன் புகழைப் பாடியது. அந்தப் பாடல்களை இன்று நாமும் ஓதி இன்புறுகிறோம்.

உரைமருவி.

இறைவனுடைய புகழை உரையிலே பொருந்தப் பாடும் அம்மையாருக்கு மெய்ஞ்ஞானம் உண்டாயிற்று. அவருக்கு நல்லுணர்வு பிறந்தது.

அந்த உணர்வினால் மெய்ப் பொருள் இன்னதென்பதை உணர்ந்தார். உலகியல் வாழ்வை அவர் தியாகம் செய்து உதறி விட்டாலும் இந்த மெய்ஞ்ஞான வாழ்வை அவர் பெற்றார். அதைப் பெருமிதத்தோடு சொல்கிறார்.

உரைமருவி, யாம் உணர்ந்தோம்
கண்டீர்!

தம்மைப் புறங்கூறும் மக்களுக்குச் சொல்வது போலச் சொல்கிறார். போலியான புற வாழ்க்கையின் ஆடம்பரங்களைக் கண்டு மெச்சி மகிழும் உலகியலுள்ளம் படைத்தவர்களுக்கு இந்த அருமைப்பாடு தெரியாது. அவர்கள், அம்மையார் தம் வாழ்வை இழந்துவிட்டார் என்று பேசுகிறார்கள். பாவம்! அவர்களுக்கு என்ன தெரியும்? "இதோ பாருங்கள்; இதை உணர்ந்து கொள்ளுங்கள். உடல், உரை, உள்ளம் என்னும் மூன்று கரணங்களும் இறைவனோடு இணைந்த பேரின்ப வாழ்வல்லவா எமக்குக் கிடைத்திருக்கிறது? இதைத் தெரிந்து கொள்ளாமல் புறம் உரைக்கிறீர்களே! எமது நிலையை நீங்கள் நன்றாக அறிந்து கொள்ளுங்கள்" என்கிறார்.

தெரியிலே.

"இப்படி ஆனதால் உமக்கு என்ன கிடைத்தது?" என்று கேட்கிறீர்கள் உலகத்தீர்!

"இம்மையில் புகழும் அம்மையில் அருளின்பமும் கிடைப்பதுதான் வாழ்க்கையின் பயன். இம்மையில் இறைவன் அடியை அடையாத இன்பம் கிடைத்தது. அம்மையிலேயோ அவன் ஆள்வதற்கு யாரும் குறுக்கிடவில்லை. மற்ற எது இருந்தாலும் இறைவன் அருள் இல்லாவிட்டால் என்ன பயன்? அந்த அருள் கிடைத்தால் கிடைக்காதது என்ன? இம்மைக்கும் அம்மைக்கும் எவை கிடைக்க வேண்டுமோ, அவை யாவும் எமக்குக் கிடைத்திருக்கின்றன. எமக்கு இன்பம் கிடைப்பதுதான் உண்மையான நிலை! எமக்கு அந்த இன்பம் கிடைத்திருக்கிறது. இம்மையிலேயே அது கிடைத்துவிட்டது. அவன் அருள் பெற்றதனால் எமக்கு எல்லாம் அமைந்திருக்கின்றன. குறைவிலா நிறைவாகிய அப்பருமானுடைய பேரருளில் மூழ்கியிருக்கும் எமக்கு ஏது குறை? நாம் எல்லாம் அமைந்தோம்."

இம்மைக்கும் அம்மைக்கும்
எல்லாம் அமைந்தோமே.

"இப்படி இருக்க, எம்மைப் பற்றிப் புறத்தே பழித்துப் பேசுவது ஏன்? எம்மைக் குறை கூறுபவர்கள் இம்மையிலும் குறையில்லாமல் வாழ்வதில்லை. அம்மையைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதே இல்லை. அவ்வாறு உள்ள தம் நிலையை எண்ணிப் பாராமல் யாம் என்னவோ வாழ்க்கையை வீணடித்துவிட்டதாகப் பேசிக் கொள்கிறீர்களே! இது என்ன பேதைமை?"

எம்மைப் புறம்உரைப்பது என்?

"நேரே எம்மிடம் சொன்னால் அவர்களுக்கு எம்முடைய மனநிறைவை எடுத்து விளக்கியிருப்போமே. எதற்காகப் புறம்பே நின்று பேசுகிறீர்கள்?"

இவ்வாறு அம்மையார் பாடுகிறார்.

நிரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே ஆளாய்
உரைமருவி யாமுணர்ந்தோம் கண்டீர், -தெரிமினோ
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தோமே;
எம்மைப் புறமுரைப்பது என்?

'உலகியலில் ஈடுபட்டு எம்மைப்பற்றிப் பழி கூறுகிறவர்களே, கங்கை பொருந்திய செம்மையான சடையை உடைய சிவபெருமானுடைய செம்மையான திருவடிக்கே ஆளாகி, அவனைப் பற்றிய உரைகளையே உரைத்து, அவனை யாம் உணர்ந்தோம்; இதைப் பாருங்கள்; இந்த நிலைமை அறிந்து கொள்ளுங்கள். இவ்வுலக வாழ்வுக்கும் அடுத்த வாழ்வுக்கும் உரிய எல்லா நலன்களும் அமையப் பெற்றோம்; அப்படி இருக்க, எம்மைப் புறத்தே நின்று பழி கூறுவது ஏன்?'

[நிரை-அலை; இங்கே கங்கைக்கு ஆயிற்று; ஆகுபெயர். செஞ்சடையையும் சேவடியையும் நினைத்து முடி முதல் அடி வரையில் எண்ணிப் பார்க்கிறார். உரை-இறைவனுடைய புகழ். உணர்ந்தோம்-அவனே மெய்ப்பொருள் என்பதை அநுபவத்தில் தெளிந்தோம். ஆளானது மெய்யின் செயல்; உரை மருவியது வாக்கின் செயல்; உணர்ந்தது மனத்தின் செயல். 'மூன்று கரணங்களாலும் அவனுடைய தொடர்புடையோம்' என்றார். கண்டீர், தெரிமின் என்பவை குறை கூறுவாரை நோக்கிச் சொல்வது; ஓ: அசை நிலை. அமைந்தோமே: ஏகாரம்: அசை. புறம் உரைப்பது-நேர்நின்று சொல்லத் தைரியம் இல்லாமல் புறத்தே நின்று பழி கூறுதல். என்-என்ன பேதைமை!

"ஆளாய், மருவி, உணர்ந்தோம், புறம் உரைப்பது என்?" என்று முடிக்க.]

இறைவனை வழிபட்டு வாழ்பவர்களுக்கு இம்மையிலும் அம்மையிலும் நிறைவான வாழ்வு அமையும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் உள்ள 91-ஆவது பாடல் இது.

# 93. என்னை உடையான்

இறைவனுக்கு உடையான் என்பது ஒரு பெயர். எல்லா வற்றையும் தன் உடைமையாக உடையவன் ஆதலின் அந்தப் பெயர் வந்தது. வடமொழியில் ஸ்வாமி என்று வழங்கும் திருநாமமும் அந்தப் பொருளுடையதே.

எல்லாவற்றுக்கும் ஸ்வாமியாக இருக்கும் அவனை எல்லோரும் அவ்வாறு உணர்வதில்லை. பிரமன், இந்திரன் முதலிய பெரிய தேவர்கள்கூடத் தாங்களே எல்லாவற்றுக்கும் சொந்தக்காரர்கள் என்று எண்ணி இறுமாப்பு அடைவதுண்டு. ஆனால் அடியவர்கள், அவனே எல்லாவற்றையும் உடையவன் என்றும், தமக்கும் அவனே உடையவன் என்றும், 'நாம் அரன் உடைமை' என்றும் எண்ணுவார்கள். பொருளை உடையவன் அதனைப் பாதுகாப்பது போல இறைவன் தம்மைப் பாதுகத்தருள்வதாக உணர்வார்கள். இந்தக் கருத்தை நினைக்கிறார் காரைக்கால் அம்மையார்.

என்னை உடையானும்.

வெவ்வேறு குழுவிற்கு வெவ்வேறு தலைவர்கள் இருப்பார்கள். அமரர் குழுவுக்கு இந்திரன் தலைவன். சத்திய லோகத்தில் உள்ளவர்களுக்குப் பிரமன் தலைவன். உலகத்தில் பல பல நாடுகளில் உள்ளவர்களுக்கு அந்த அந்த நாட்டின் அரசன் தலைவன்.

இவ்வாறு வேறுபட்ட குழுக்களுக்கு வெவ்வேறு தலைவர்கள் இருந்தாலும்,எல்லாத் தலைவர்களுக்கும் மேலான தலைவன் ஒருவன் இருப்பான். சிறு சிறு நாடுகளுக்கு ஆட்சி புரியும் மன்னர்கள் வெவ்வேறாக இருந்தாலும் எல்லா மன்னர்

களுக்கும் மேலாக மன்னர் மன்னனாகிய சக்ரவர்த்தி இருப்பது போல அந்தத் தலைவன் இருக்கிறான். பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள் படைத்தல், காத்தல், அழித்தல் என்று மூன்று தொழில்களை இயற்றும் தலைவர்கள். அவர்களை மும்முதல் என்று சொல்வார்கள். அந்த அந்தத் தொழிலை இயற்றும் அளவில் அவர்கள் முதல்வர்களாக இருந்தாலும் எல்லாருக்கும் மேலாக முதல்வனாக இருப்பவன் ஒருவன்தான்.

ஒரு பெரிய காரியாலயத்தில் ஒவ்வொரு பிரிவிற்கும் ஒவ்வொரு தலைவர் இருப்பார். காரியாலயம் முழுமைக்கும் ஒரு தனித் தலைவர் இருப்பார். அது போன்ற நிலை இது.

அது மட்டும் அன்று. கீழே உள்ள தலைவர்கள் தங்கள் ஆட்சிக்காலம் முடிந்தவுடன் போய்விடுவார்கள். வேறு தலைவர்கள் வருவார்கள்.

"நூறு கோடி பிரமர்கள் நுங்கினார்" என்று பாடுவார் அப்பர்.

கீழுள்ள தலைவர்கள் இப்படிக் காலத்துக் காலம் மாறிக் கொண்டிருந்தாலும் மேலுள்ள தனித் தலைவனாகிய சிவபெருமான் என்றும் மாறாமல் நிலைத்து நிற்பவன். தான் ஒருவனே தனித் தலைவனாக என்றும் நிலையாக இருப்பவன் அவன்.

**ஏகமாய் நின்றானும்.**

அவனுடைய கல்யாண குணங்கள் பல. அவனுடைய அருள் வெளிப்படும்போது அந்தக் குணங்கள் சமயத்துக்கு ஏற்ப வெளிப்படும். அவனுக்கே தன்னுடைய தன்மை முழுவதும் தெரியாதாம். அடியார்கள் கண்டு கண்டு வியந்து பாராட்டும்போது அவற்றை நாம் தெரிந்து கொள்கிறோம்.

**"உன்னை நீதானும் உணராதாய்"**

என்று சகாதேவன் கண்ணனைப் பார்த்துச் சொல்வதாகப் பாரதத்தில் வருகிறது. அதுபோல அமமையார்,

தன்னை அறியாத தன்மையனும்

என்று சொல்கிறார்.

அப்படி உள்ளவன் யார்? நுட்பமாகச் சொன்னார் முதலில். என்னை உடையான் என்றும், ஏகமாய் நின்றான் என்றும், தன்னை அறியாத தன்மையன் என்றும் சொல்லி விட்டு அவனை இனம் கண்டுகொள்வதற்கு அடையாளம் காட்டுகிறார்.

அவனுடைய சடையைப் பற்றிச் சொல்கிறார். போன பாட்டில், 'திரைமருவு செஞ்சடையான்' என்று சொன்னவர் அந்த எண்ணத்தோடே பேசுகிறார். அங்கே 'செஞ்சடையான்' என்று மட்டும் சொன்னார். இங்கே சற்று விளக்கமாகச் சொல்கிறார்.

அது செம்பொன்னைப் போல ஒளிர்கிறது, செம்பொன்னைச் சுருள் சுருளாக வைத்தால் எப்படி இருக்கும்? அப்படி அவனுடைய தூய சடை தோற்றம் அளிக்கிறது.

பொன்னைச்

சுருளாகச் செய்தனைய தூச்சடையான்.

அந்தச் சடையை, 'தூச்சடை' என்கிறார். அகங்கரித்து வந்த கங்கையின் அகங்காரத்தைப போக்கித் தூயதாக்கிய சடை அது. சாபமேற்ற சந்திரனைத் தூயவனுக்கிப் புனைந்த சடை அது. ஆகவே தூய சடையாயிற்று.

அவன் வானவர்களுக்கு அருள் பாலிக்கிறான். அவர்கள் தன் அருளைப் பெற்றுத் தம் தம் கடமைகளை முறையாக ஆற்றும்படி செய்கிறான். தன்னுடைய அருளை அவர்களுக்கு ஆகும்படி திருவுள்ளங் கொண்டு வைக்கிறவன் அவன். அவர்கள் அடியவர்களைப் போலச் சிறந்த தகுதியைப் பெறு விட்டாலும் உலகம் நடைபெறுவதற்காக அவர்கள் தம் தொழிலைச் செய்ய வேண்டுமாதலின் அவர்களுக்குத் தன் அருளைத் துணையாக வைத்திருக்கிறான். அடியவர்கள் குழந்தை போன்றவர்கள். அவர்களிடத்தில் இயல்பாக இறைவனுக்கு அன்பு சுரக்கிறது. அவர்களைத் தன் உடைமை

யாகக் கொண்டு ஆளுகிறான். ஆனால் தேவர்களை, மேலதிகாரி தன் கீழுள்ள அதிகாரிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வேலை வாங்குவது போல, அருள் தந்து தம் கடமைகளை ஆற்றச் செய்கிறான்.

என்னை உடையானும்
ஏகமாய் நின்றானும்
தன்னை அறியாத
தன்மையனும்—பொன்னைச்
சுருளாகச் செய்தனைய
தூச்சடையோன், வானோர்க்கு
அருள்ஆக வைத்த அவன்.

'என்னை உடைமையாக உடைய ஸ்வாமியும், தானே தனித் தலைவனாக நின்றவனும், தன்னையே தான் அறியாத இயல்புள்ளவனும், செம்பொன்னைச் சுருளாகச் செய்தாற் போன்ற தூய சடையவனாகிய, தேவர்களுக்கு அருள் உண்டாகும்படியாக அந்தச் சிவபெருமான்.'

[உடைமைக்குச் சுதந்தரம் இல்லை. உடையவன் அதை எப்படி வேண்டுமானாலும் ஆளலாம். அப்படிச் சர்வ சுதந்தரனாகிய இறைவனுடைய திருவுள்ளப்படி இயங்குபவர்கள் அடியவர்கள். அதனால், 'என்னை உடையானும்' என்றார். மற்ற எல்லாப் பொருள்களும் தானேயாய் நிற்பவனாதலின் உயர்திணையாகச் சொல்லாமல் ஏகம் என்று அஃறிணையாற் சொன்னார். நின்றான் - தன் தலைமை நிலைமை மாறாமல் என்றும் நிலைத்து நின்றவன்; நின்றான் என்பது இறந்த காலத்தால் சொன்னாலும் கால வழுவமைதியால் முக்காலத்துக்கும் பொருந்தும். பொன் என்றது இங்கே செம்பொன்னை. செய்தனைய—செய்தாலனைய; விகாரம்.

'உடையானும், நின்றானும், தன்மையனும் சடையான், அவன்' என்று முடிக்க.]

இறைவனுடைய தனித் தலைமையைச் சொன்னது இந்தப் பாட்டு.

இது அற்புதத் திருவந்தாதியில் 92-ஆவது பாட்டு.

# 94. அன்பாய் விரும்பு

காரைக்கால் அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துப் பேசுகிறார். அந்த நெஞ்சு நம்முடைய போன்றதன்று. 'எந்தையார்க்கு ஆட்செய்யப் பெற்ற இதுகொலோ, சிந்தை யார்க்கு உள்ளசெருக்கு' என்று அந்தநெஞ்சு பெருமிதத்தோடு இருப்பதை முன்பு (79) சொல்லியிருக்கிறார். இறைவனை உணர்ந்த நெஞ்சு அது. இறைவனுடைய சேவடிக்கே ஆளாய் வேறு ஒன்றையும் விரும்பாத நெஞ்சு அது.

நம்முடைய மனத்துக்கு நாம் அடிமையாக இருக்கிறோம். அதனால் அது நம்மைக் காடு மேடெல்லாம் இழுத்துக் கொண்டு திரிகிறது. பேய்க்கு அடிமைப்பட்டால் அது நாம் விரும்பாத செயல்களையெல்லாம் செய்யச் சொல்லும். அதை நாம் அடிமைப்படுத்திவிட்டால் நாம் விரும்பிய காரியங்களை யெல்லாம் அது செய்யும். இந்த மனமும் ஒரு பேய்தான். அதை அடக்கி நம் வசப்படுத்திவிட்டால் அது நம் விருப்பம் போல நடக்கும். இறைவனையே நினைக்கும்படி நாம் ஏவினால் அப்படியே செய்யும். அது வன்னெஞ்சாகவோ புன்னெஞ் சாகவோ இராமல் நன்னெஞ்சாகவே மாறிவிடும்.

இத்தகைய நன்னெஞ்சைப் படைத்தவர் அம்மையார். அதைத் தட்டிக் கொடுத்து அதைப் பின்னும் நன்றாக இறை வனிடம் ஈடுபடும்படி ஏவுகிறார் அவர். அதை, "நன் னெஞ்சே!" என்று விளித்துச் சொல்லப் புகுகிறார்.

**நன்னெஞ்சே!**

இறைவனிடம் இடையறாத அன்பு செய்ய வேண்டும் என்பதைச் சொல்ல வருகிறார். யாவர்க்கும் மேலான அவனை

விரும்பி அன்பு செய்தால் அதனினும் சிறந்த செயல் வேறு இல்லை. அவனைப்பற்றிச் சொல்கிறார்.

மனிதர்களைவிட உயர்ந்தவர்கள் தேவர்கள். தம்மினும் உயர்ந்தவர்களைப் பற்றிக்கொண்டு வாழ்வதுதான் அறிவாளிகளுக்கு அழகு. இறைவனே எல்லாத் தேவர்களுக்கும் தலைவன்; அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் தரும் உபகாரி. 'இதை நீ முதலில் தெரிந்துகொள்' என்று தொடங்குகிறார்.

**அவன் கண்டாய்**
**வானோர் பிரான் ஆவான் என்றும்.**

சிலர் சில காலம் தலைவர்களாக இருப்பார்கள். பிறகு அந்தத் தலைமைப் பதவி போய்விடும். எப்போதுமே தலைவராக இருக்கும் நிலை இந்திராதியர்களுக்கு இல்லை. ஆனால் சிவபெருமானே என்றும் தலைவனாக இருப்பவன். மற்றவர்கள் எல்லாம் தம் தம் தொழிலை ஆற்றும் தலைவர்களாக இருந்து, தமக்கு வரையறுக்கப்பட்ட காலம் ஆனவுடன் அந்தத் தலைமைப் பதவியிலிருந்து இறங்கி விடுவார்கள். இறைவனோ என்றும் பிரானாக இருப்பவன்.

அவன் எப்படி இருக்கிறான்?

அழகிய பவளவண்ணத் திருமேனி கொண்டவன் அவன்.

"பவளம் போல் மேனியிற் பால்வெண்ணீறும்" என்று அப்பர் பாடுவார். "குழகன்றன் அம்பவள மேனி" (39) என்று முன்னும் அம்மையார் சொல்லியிருக்கிறார். இப்போதும்,

**அவன் கண்டாய் அம்பவள வண்ணன்**

என்கிறார்.

இறைவனுடைய நீல கண்டத்தைப் பற்றி அடிக்கடி சொல்வது அம்மையாருக்கு இயல்பு. முதல் பாட்டிலேயே, 'மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே' என்று சொன்னவர். அந்த வானோர் பிரானுடைய கண்டத்தை இப்

பொழுதும் நினைக்கிறார். அது கருமை நிறம் பொருந்தி விளங்குகிறது. செம்பவளத் திருமேனியில் அந்த வண்ணம் எடுப்பாகத் தெரிகிறது.

அவன் கண்டாய்
மைத்து அமர்ந்த கண்டத்தான்.

அவன் கண்டம் ஆலகால நஞ்சை உண்டமையால் மை போலக் கறுத்துத் தங்கியிருக்கிறது. அதைத் தன்னிடத்தில் இருப்பதை விரும்பி ஏற்றுக் கொண்டது அந்தக் கண்டம். தேவர்களையும் பிறரையும் நடுநடுங்கச் செய்த அதை இறைவன் உண்டு கண்டத்திலே தேக்கி நலம் செய்தான். பிறருடைய துன்பத்தைப் போக்குவதில் இன்பம் காணு கிறவன் எம் பெருமானாதலின் அந்த நஞ்சைத் தன் திருக் கழுத்திலே வைத்திருக்கிறான். அந்தக் கண்டம் கருமை பெற்று விளங்குகிறது. அதை அவன் விருப்புடன் ஏற்றது மட்டும் அன்று, பிறரைச் சார்ந்திருந்தால் அவரையும் அழித்துத் தானும் அழிந்து போயிருக்கும் அந்த நஞ்சு. இப்போது அது இறைவனுடைய கண்டத்தில் கரிய நிறத் தோடு பொருந்தித் தங்கியிருக்கிறது. அதற்கும் சிரஞ்சீவித் தன்மை கிடைத்துவிட்டது.

''கறைமிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை
மறைநுவல் அந்தணர் ஏத்தவும் படுமே''

என்று அந்த நஞ்சுக்குக் கிடைத்த பெருமையைப் புறநானூறு சொல்கிறது.

'அத்தகைய பரமோபகாரிபால் நீ அன்பு செய்து அவனையே விரும்பு. நீ நன்னெஞ்சமாகையால் நான் சொல் வதைப் புரிந்து கொள்வாய். அவனிடத்தில் மெய்யான அன்புடன் இரு. அவனையே விரும்பு' என்கிறார்.

''உள்ளம், பொய்தான் தவிர்த்து உன்னைப்
போற்றி சயசய போற்றி என்னும்,
கைதான் நெகிழவிடேன்''

என்பார் மாணிக்கவாசகர்.

அவ்வாறு உண்மையாக, உள்ளார்ந்த அன்புடன் பொருந்தி அவனையே விரும்பவேண்டும். வானோருக்கே வேண்டியவற்றை வழங்கும் அவன் நமக்கு வேண்டியவற்றையும் தரும் அருளாளன். எவனை விரும்பினால் எல்லாம் கிடைக்குமோ அவனையே விரும்ப வேண்டும். ஒவ்வொரு பொருளை ஒவ்வொரு சமயம் நமக்கு வழங்கும் கொடையாளர்களை நாடிச் சென்றால் அவர்கள் வழங்கும் பொருள் பல நாள் நில்லாது. நமக்கு வேண்டியவற்றைப் பெறுவதற்கு வெவ்வேறு வள்ளல்களிடம் போய் நிற்கவேண்டும். அவ்வாறு இன்றி எல்லாவற்றையும் ஒருங்கே தரும் ஒரு பெருவள்ளலிடம் போய் அன்பு செய்தால் அவரால் எல்லாவற்றையும் பெறலாம். வேறு ஒருவரிடம் சென்று கையேந்தி நிற்க வேண்டிய அவசியம் இல்லாமற் போய்விடும்.

ஆகவே வானோர்பிரானாகிய சிவனையே மெய்யாக விரும்பி அன்பு செய்ய வேண்டும். இதைச் சொல்கிறார் அம்மையார்.

மற்று அவன்பால் நன்னெஞ்சே
மெய்த்து அமர்ந்து அன்பாய் நீ விரும்பு.

'என்னுடைய நல்ல நெஞ்சமே, சிவபெருமானே எல்லாக் காலத்தும் வானோர்களுக்குத் தலைவனாய் அவர்களுக்கு வேண்டியவற்றை வழங்கும் பரமோபகாரியாக இருப்பவன்; இதனை நீ தெரிந்து கொள். அவனே அழகிய பவள வண்ணத் திருமேனியை உடையவன்; இதையும் அறிந்து கொள். அவனே மைநிறம் பெற்றுப் பொருந்திய திருக்கழுத்தை உடையவன்; இதனையும் நீ உணர்ந்து கொள். அவனிடம் உண்மையாகத் தங்கி அன்பாக இருந்து அவனை விரும்புவாயாக.'

[அவன்: உலகறி சுட்டு. கண்டாய் என்று அடுத்தடுத்துச் சொன்னார், மனம் வேறு பொருளில் பற்று அறுதற் பொருட்டு. பிரான்-தலைவன், உபகாரி. ஆவான் என்பது

புதிதாக ஆகிறவன் என்ற பொருள் தராமல் என்றும் உள்ள நிலையைச் சுட்டியது; அதை வற்புறுத்தவே என்றும் என்ற சொல்லைப் பெய்தார். 'என்றும் பிரானுவான்' என்க. அம்ப வளம்—காண்பதற்கு அழகாக உள்ள பவளம். மைத்து-மை நிறம் பெற்று; இருண்டு. அமர்ந்த-தங்கிய. என்றும் உள்ளவனைச் சேர்ந்தமையால் அந்தக் கரிய நிறம் அங்கே தங்கியது. "கறை நிறுத்திய கண்டன்" என்று திருவிளையாடற் புராணம் கூறும். மற்று: அசை. மெய்த்து-மெய்த்தன்மை யைக் கொண்டு: மெய்யாக என்றபடி. மெய் என்பதனடி யாக மெய்த்து என்ற எச்சம் வந்தது. அமர்ந்து-பொருந்தி; அலையாமல் பொருந்தி என்றபடி. அன்பாய்-அன்பே வடிவ மாய்; குணம் வேறு, குணி வேறு என்ற பேதம் தோன்றாமல் அன்பு வடிவமே ஆகி என்றபடி. விரும்பு-விருப்பம் கொள். பிறவற்றை விரும்பினல் அந்த விருப்பமே பிறவிக்கு ஏதுவாகி விடும். அவனை விரும்பினல் பிறவியைப் போக்கி விடலாம்.]

இறைவனிடம் மெய்யன்பு பூண்டு வாழ வேண்டும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 93-ஆவது பாட்டு இது.

# 95. இணைப்புக் காரணம்

காரைக்கால் அம்மையார் இப்போது உமாதேவியைப் பார்க்கிறார் மற்றவர்களெல்லாம் தம் தேவிமார்களை நாவிலும் மார்பிலும் அருகிலும் வைத்திருக்கச் சிவபெருமான் தன்னுடைய திருமேனியில் ஒரு பாதியையே அந்தப் பெருமாட்டிக்கு வழங்கியிருக்கிறான். மாதிருக்கும் பாதியனாக உள்ள அவன் எப்போதும் அவளோடு இணைந்து ஒட்டி விளங்குகிறான்..இந்த ஒட்டுறவைப் பற்றிய எண்ணம் அம்மையாருக்கு எழுகிறது.

இறைவனோடு பல வகையில் உரையாடும் இயல்புள்ள அம்மையார் உமாதேவிக்கும் எம்பெருமானுக்கும் உள்ள இணைப்பைப் பற்றி இப்போது சொல்கிறார். இறைவனை நோக்கி வினவும் முறையில் ஒரு பாட்டைப் பாடுகிறார்.

இறைவனை அவனுடைய வாகனத்தை முன்னிட்டு விளிக்கிறார் திருமால் இறைவனுக்கு வாகனமாக, விடைவடிவத்தில் விளங்குகிறான். திருமால், 'மஞ்செனத் திரண்ட மேனி' உடையவன். மஞ்சு—மேகம். மேகத்தைப் போன்ற நிறத்தையுடைய திருமாலைத் தன்னுடைய ஊர்த்தியாகிய இடபமாகக் கொண்டவன் இறைவன். இந்த அடையாளம் கூறி விளக்கினார்.

**மஞ்சுபோல் மால்விடையாய்!**

"தேவிமாரைப் படைத்தவர்கள் அவர்களுக்காகத் தனியே அந்தப்புரத்தைக் கட்டி அதிலே இருக்கச் செய்வார்கள். நெருங்கியிருக்க வேண்டுமானால் அருகே அமரச் செய்

வார்கள். பின்னும் நெருக்கம் வேண்டினல் தம் நாக்கிலும் மார்பிலும் வைத்துக்கொள்வார்கள். ஆனல் நீ அவளுக்கு உன் திருமேனியில் ஒரு பாதியையே வழங்கியிருக்கிருய். அவளும் நீயும் சேர்ந்து ஒருவடிவமாக இருக்கிருய். இதற்குக் காரணம் என்ன?'' என்று நினைத்துச் சொல்லத் தொடங்குகிருர்.

'அம்மையிடம் உனக்குள்ள சிறந்த காதலால், அவளை ஒருகாலும் பிரிந்திருக்கக்கூடாது என்று இப்படி ஒட்டிக் கிடக்கிருயோ?'' என்று முதலில் ஒரு வினவை எழுப்புகிருர்.

விருப்பினல் நீ பிரியகில்லாயோ?

'அன்றி அவளைத் தனியே வைக்கவேண்டும் என்று விரும்பிப் பல இடங்களைத் தேடி நீ இல்லாத இடமே இல்லாமையால் வெளிப்படையாகவே இப்படி வைத்துக் கொள்ளலாம் என்று திருவுள்ளம் கொண்டாயோ? உனக்கு வேருன இருப்பிடம் பிறிது ஒன்று இல்லையோ?'

வேரு
இருப்பிடம் மற்று இல்லையோ?

'மலைக்கு மகளாகப் பிறந்த பார்வதிதேவி உன்னைப் பிரிந்து தனியாக இருக்க அஞ்சுவாளோ? உன்னுடைய விருப்பம் காரணமாக இணைத்துக்கொண்டிருக்கலாம். அவளைப் பிரியாமலே இருக்கவேண்டும் என்ற உன் காதலுணர்ச்சியே அவளோடு ஒட்டி இணைந்து நிற்பதற்குக் காரணமாக இருக்கலாம்; அல்லது அந்தப் பெருமாட்டி உன்னைப் பிரிந்து தனியாக இருப்பது அவளுக்கு அச்சத்தைத் தரலாம். உன் விருப்பம் இந்த இணைப்புக்குக் காரணமா? அல்லது அவளுடைய அச்சம் காரணமா? இதைச் சொல்ல வேண்டும்.'

பொருப்பன் மகள்
மஞ்சுபோல் மால்விடையாய், நிற்பிரிந்து வேறு இருக்க
அஞ்சுமோ சொல்லாய், அவள்.

'ஒன்று, உன்னுடைய திருவுள்ளம் காரணமாக இந்த இணைப்பு அமைந்திருக்கவேண்டும்; அல்லது, அந்தப் பெருமாட்டியின் உள்ள நிலை காரணமாக அமைந்திருக்க வேண்டும். இந்த இரண்டில் எது உண்மையான காரணம்? இதை எனக்குச் சொல்லியருள வேண்டும்' என்று விண்ணப் பிக்கிறார் அம்மையார்.

'மேகம் போன்ற நிறத்தையுடைய திருமாலை விடையாகக் கொண்டவனே! நீ பார்வதியிடம் கொண்ட பெருங் காதலால் அவளைப் பிரியும் ஆற்றல் இல்லாதவனாக இருக் கிறாயோ? அன்றி உன்னை விட்டு வேறாக இருக்கும் இடம் பிறிது அவளுக்கு இல்லையோ? என்ன காரணம்? அந்தப் பார்வதி உன்னைப் பிரிந்து வேறாக இருக்க அஞ்சுவாளோ? இதை எனக்குச் சொல்வாயாக."

விருப்பினால் நீபிரிய கில்லாயோ? வேறா
இருப்பிடம்மற்று இல்லையோ என்னோ?—பொருப்பன்மகள்
மஞ்சுபோல் மால்விடையாய், நிற்பிரிந்து வேறுஇருக்க
அஞ்சுமோ? சொல்லாய், அவள்.

[விருப்பு—காதல். பிரியகில்லாயோ—பிரிவதற்கு ஆற்றல் இல்லாமல் உள்ளாயோ? கில்—ஆற்றலைக் குறிக்கும் இடைச் சொல். வேறா—உன்னை விட்டு வேறாக மற்று—பிறிது; அசை யாகவும் கொள்ளலாம். என்—என்ன காரணம்? ஓ: அசை. பொருப்பன் மகள்—இமாசல அரசனுடைய பெண்; பார்வதி. நிற்பிரிந்து—நின்னைப் பிரிந்து. பொருப்பன் மகளாகிய அவள்]

"உன்னுடைய திருவுள்ளம் காரணமாகவா, இறைவி யின் உள்ளக் கிடக்கை காரணமாகவா இந்த இணைப்பு அமைந்தது?" என்று கேட்கிறார்.

இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 94-ஆவது பாட்டு.

# 96. அன்பு மிக்கவர் யார்?

சிவபெருமான் தன் வாம பாகத்தில் அன்னையை வைத்திருக்கிறான். மாதிருக்கும் பாதியனாகிய அவனோடு பிரிவின்றி ஒட்டி இணைந்திருக்கிறாள் அன்னை. அவள் இமாசல அரசனின் மகள்; நல்ல குலத்தில் உதித்த மங்கையாகிய அவளைத் தேவரும் பிறரும் அறிய இறைவன் திருமணம் செய்து கொண்டான்.

**அவள் ஓர் குலமங்கை;**
**பாகத்து அகலாள்.**

அந்தப் பெருமான் தன் தலையில் கங்காதேவியை வைத்திருக்கிறான். எப்போதும் அவனுடைய சடாபாரத்தில் தங்கியிருக்கும் பெருமாட்டி அவள். ஜலமங்கையாகிய இவளும் அவன் சடையிலிருந்து பிரியாமல் தங்கியிருக்கிறாள்.

**இவள்ஓர் சலமகளும் ஈதே.**

பாகத்தில் ஒருத்தியையும் தலையில் ஒருத்தியையும் தாங்கிக்கொண்ட சிவபெருமானுக்கு அந்த இருவரும் மனைவி மார்கள். உமாதரனாகிய அவன் கங்காதரனுமாக இருக்கிறான்.

கங்கையை இறைவனுடைய மனைவியாகச் சொல்வது மரபு.

“கங்கையாளோ வாய்திறவாள்
கணபதியோ வயிறுதாரி
அங்கை வேலோன் முருகன் பிள்ளை”

என்று இந்தக் குடும்பத்தைப் பற்றிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடுவார்.

இவ்வாறு இரண்டு பெண்டாட்டிக்காரனாக இருக்கும் சிவபெருமானைப் பார்த்துக் காரைக்காலம்மையார் ஒரு கேள்வி கேட்கிறார். இறைவனை நெருங்கி அன்பு செய்பவராதலின் அவனிடம் பல கேள்விகளைக் கேட்கும் உரிமை பெற்றவர் அவர். அவர் எழுப்பும் பல வகை வினாக்களை நாம் பார்த்து வருகிறோம்.

இறைவனையே நேரில் விளித்து இந்த வினாவை எழுப்புகிறார் அம்மையார். "வெள்ளை வெளேர் என்றிருக்கும் திருநீற்றையும் எலும்பையும் அணியும் பெருமானே!" என்று இறைவனை அழைக்கிறார்.

தவளநீறு என்பி அணியீர்!

"இந்த இரண்டு தேவிமாரையும் என்றும் பிரியாமல் வைத்திருக்கிறீர் நீர். அவர்களை விட்டு நீர் ஒருகாலும் பிரிந்ததில்லை.

என்றும் பிரிந்து அறிவீர்.

'எப்போதாவது இருவரையும் விட்டுப் பிரிந்து இருந்ததில்லை. சிறிது நேரம் கங்கையை விட்டுவிட்டு உமாதேவியுடன் மட்டும் இருக்கலாம் என்று எண்ணிப் பிரிந்ததில்லை. அப்படியே உமாதேவியை விட்டுக் கங்கையுடன் சில காலம் இருக்கலாம் என்று எண்ணியும் இருந்ததில்லை. எந்தக் காலத்திலும் அவர்களினின்றும் பிரிந்து நின்றதில்லை.'

இரண்டு பெண்டாட்டிக்காரர்களில் பெரும்பாலோருக்கு இரண்டாம் தாரத்தின் மேல் அதிகக் காதல் இருக்கும். சிலருக்கு மூத்த மனைவியிடத்தில் விருப்பம் இருக்கும். இரண்டு பெண்டாட்டிகளையும் பிரியாமல் வாழும் இறைவனுக்கு மலை மங்கை சலமங்கை ஆகிய இருவர்களுள் யாரிடத்தில் அதிக

அன்பு இருக்கும்? இப்படி ஓர் எண்ணம் தோன்றியது. அம்மை யாருக்கு. யாரைக் கேட்பது? அந்த மங்கையரைக் கேட்டால் ஒவ்வொருவரும் தம்மிடந்தான் இறைவன் நெருங்கி அன்பு செய்கிறவன் என்று சொல்லக்கூடும். அவ்வாறு பட்சபாத மின்றி அன்பு செய்கிறவன் அவன். ஆனாலும் அவனுடைய திருவுள்ளத்தில் யாரேனும் ஒருவரிடம் மிகுதியான அன்பு இருக்குமோ? இந்த ஐயத்தை எப்படித் தீர்த்துக் கொள்வது? இறைவனையே கேட்டுவிடலாம் என்று அம்மையாருக்குத் தோன்றுகிறது.

"எம்பெருமானே, இந்த இரண்டு பேர்களுக்குள் உன்னுடைய அன்புக்கு நெருக்கமானவர் யார்?" என்று அவனையே நோக்கிக் கேட்கிறார்.

> ஈங்குஇவருள்
> அன்பு அணியார் சொல்லுமின்
> இங்கு ஆர்?

இறைவன் அவர்களுக்குக் கொடுத்திருக்கும் இடத்தைப் பார்த்தால் இரண்டு பேருமே சிறந்தவர்களாகத் தோன்றுகின்றனர். உடம்பிலே ஒரு பாதியையே ஒருத்திக்கு வழங்கினான் என்றால் அவர்களுடைய நெருக்கத்தைச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் மற்றொருத்தியைத் தலையாலே தாங்குகிறான். அன்புள்ளவர்களை ஆதரித்து ஒட்டியுறவாடுவதை, "தலையினாலே தாங்குகிறான்" என்று சொல்வது உலக வழக்கு. அப்படிப் பார்த்தால் தலையாலே தாங்கும் சலமகளாகிய கங்கைக்கு இறைவன் இரண்டாந்தரமான இடத்தைக் கொடுத்திருக்கிறான் என்று சொல்ல முடியாது. உடம்புக்குள் உத்தம அங்கமாக இருப்பது தலை. அந்த உத்தமமான இடத்தையே கங்கைக்கு அளித்திருக்கிறான். அவ்வாறானால் அவளிடத்தில் உள்ள அன்பு அவ்வளவு உயர்ந்ததன்று என்று சொல்ல முடியுமோ?

இறைவன் திருவுள்ளத்தை உணர முடிந்தால் யாரிடம் அவன் அதிக அன்பு பாவிக்கிறான் என்று சொல்ல முடியும். அவன் திருவுள்ளத்தை அறிந்து கொள்ளும் ஆற்றல் யாருக்கு இருக்கிறது?

ஆகவே, அவனையே கேட்டு விடுவோம் என்று துணிந்து இந்த வினாவை விடுக்கிறார் அம்மையார்.

அவள்ஓர் குலமங்கை,
    பாகத்து அகலாள்;
இவள்ஓர் சலமகளும்
    ஈதே;- தவளநீறு
என்புஅணிவீர், என்றும்
    பிரிந்துஅறியீர்; ஈங்குஇவருள்
அன்புஅணியார் சொல்லுமின்; இங்குஆர்?

'வெண்மையான திருநீற்றையும் எலும்பையும் அணியும் பெருமானே! அங்கே இருக்கும் ஒப்பற்ற அவள் நல்ல குலத்தில் தோன்றிய மங்கையாகிய பார்வதி; இங்கே இருக்கும் இந்த நீர் வடிவத்திலுள்ள கங்கா தேவியும் இந்தத் திருமுடியில் இருக்கிறாள். இந்த இரண்டு தேவிமாரையும் நீர் என்றும் பிரிந்தறிய மாட்டீர். இவ்வாறு உம்மோடு ஒட்டி நிற்கும் இந்த இரு தேவியர்களுக்குள் உம்முடைய அன்புக்கு அணிமையை உடைய நெருக்கமானவர் யார்? இதை யானகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. நீரே சொல்லும்.'

[அவள் என்றது பார்வதியை. பாகத்து அகலாள் என்பதனால் அச்சொல் அம்பிகையைக் குறித்தது என்பது தெரியவரும். இவள் என்றது கங்கையை. ஓர் என்றது எண்ணைக் குறித்து நின்றது. உலகத்தவரும் காண ஆறாக ஓடுதலின் இவள் என்று அணிமைச் சுட்டினால் குறித்தார்.

ஈதே என்பது நின் திருமுடியாகிய இடத்தில் இருப்பவள் என்ற பொருள் உடையது. சலமகளும்—சலமகளின் நிலையும். ஈது-இந்தத் திருமுடியில் இடங்கொள்வது என்று பொருள் கொள்ள வேண்டும். ஈங்கு—இவ்வாறுள்ள. அன்பு அணியார்—அன்புக்கு அணிமையாக இருப்பவர்; அண்ணியார் என்பது அணியார் என்று இடக்குறை. அன்பை அணிகலமாகக் கொண்டவர் என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு—இவ்விடத்தில். அன்பணியார் ஆர், சொல்லுமின் என்று கூட்டி முடிக்க.]

இறைவனோடு உரிமையுடன் உரையாடும் இயல்புள்ளவராதலின் இவ்வாறு கேட்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 95-ஆவது பாட்டு இது.

# 97. மறைத்து வைத்தோம்

இறைவனைக் காண்பது யாவருக்கும் எளிதன்று. அவன் நுட்பத்திலும் நுட்பமான பொருள். அணுவுக்கும் அணுவாய்க் கலந்து உறைபவன். அவன் இல்லாத இடம் ஏதும் இல்லை யாயினும் அவனை நம்மால் காண முடிவதில்லை. அவனைக் காண வல்லவர் யார்?

ஆர்வல்லார் காண அரன்அவனை?

என்று காரைக்காலம்மையார் ஒரு வினவை எழுப்புகிறார். அவன் சர்வாந்தர்யாமியாய் மறைந்து நிற்பதனால் நம்மால் காண முடியவில்லை என்று நாம் எண்ணுகிறோம். ஆனால் அதற்கு வேறொரு காரணத்தை அம்மையார் சொல்கிறார்.

அருமையான மாணிக்கமொன்றை ஒருவன் மிக அரிதில் பெற்றான். அதை யாவரும் காண வெளியில் வைப்பானா? அதைத் துணியில் கட்டிப் பத்திரமாகப் பெட்டியில் வைத்துப் பூட்டிப் பாதுகாப்பான். அருமையான பொருள்களை யாரும் அறியாமல் இரகசியமாகப் பாதுகாப்பான இடத்தில் வைத்துப் போற்றுவது உலகத்தார் இயல்பு. 'நான் எவ்வளவோ ஜாக்கிரதையாகப் பதுக்கிப் பாதுகாத்து வைத்திருக்கிறேன். அதை யார் காணமுடியும்?' என்று அந்த மாமணியை வைத்திருப்பவன் சொல்வதுபோல அம்மையார் சொல்கிறார்.

ஆர்வல்லார் காண அரனவனை?

என்று தொடங்கியவர், அவ்வாறு காண முடியாமைக்கு உரிய காரணத்தைச் சொல்கிறார். 'அந்த மாணிக்கத்தைத் துணி யினாலே மூடிப் பெட்டிக்குள் வைத்திருக்கிறேன்' என்று

மாணிக்கத்தை வைத்திருப்பவன் சொல்வது போலச் சொல்கிறார்.

அவரும் இறைவனுகிய மாணிக்கத்தை ஒரு துணியினலே போர்த்து அதனுள்ளே அதை அமைத்திருக்கிறாராம். வெறும் துணியா அது? அன்பையே போர்வையாக்கி அதனல் போர்த்து அமைத்தாராம். இப்போது இறைவன் அன்பென்னும் போர்வைக்குள் அடங்கி நிற்கிறன்.

அன்புஎன்னும்
போர்வை யதனலே போர்த்து அமைத்து.

பிறகு ஓரிடத்தில் அடைத்துவிட்டாராம். தானே தேடிப் பெற்றுத் தனக்கு உரிமையாக்கிக்கொண்ட மாணிக்கத்தை ஒருவன் தன் விருப்பம் போலப் பாதுகாத்து வைத்திருப்பான். "நீ ஏன் இதை இப்படி ஒளித்து வைத்திருக்கிறய்?" என்று கேட்கும் உரிமை யாருக்கும் இல்லை. "என்னுடைய பொருள் இது. இதை எப்படிப் பாதுகாக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். உனக்கு என்ன தெரியும்? நான் அதை உன் கண்ணில் காட்ட மாட்டேன். அதை யாராலும் காண முடியாது. நான் நல்ல பாதுகாப்பில் வைத்திருப்பதனல் அதனைக் காண வல்லார் யார் இருக்கிறர்கள்?" என்று அவன் கேட்பது போலக் கேட்கிறர் அம்மையார். இறைவனைத் தம்முடைய நெஞ்சினுள்ளே அடைத்து வைத்துவிட்டார். அத்தகைய சிறப்பான உரிமையை அவர் பெற்றிருக்கிறர். அவருடைய நெஞ்சில் வேறு எதுவும் இல்லை. எந்தப் பொருளுக்கும் இடம் கொடாத அங்கே, அந்தரங்கமாக இறைவன் என்னும் மாணிக்கத்தை அடைத்து வைத்திருக்கிறர்.

சீர்வல்ல
தாயத்தால் நாமும் தனிநெஞ்சின் உள்ளடைத்து.

"யாரும் காணக்கூடாது என்ற எண்ணத்தால் ஒரு மாயம் பண்ணி அந்த மாயத்தினல் எம் தனியான நெஞ்சின் உள்ளிடத்தே மறைத்து வைத்திருக்கிறேம்" என்கிறர்.

சீர்வல்ல

**தாயத்தால் நாமும் தனிநெஞ்சின் உள்ளடைத்து**
**மாயத்தால் வைத்தோம் மறைத்து.**

*'இவனை மறைத்து வைத்ததனால் யாரும் இவனைக் காண முடியாது. உள்ளே அடைத்து வைத்ததனால் இவன் எங்கும் போகவும் முடியாது என்று எண்ணும்படி அடைத்து வைத்தோம், மறைத்து வைத்தோம்' என்கிறார். 'எம் நெஞ்சில் வேறு ஒன்றும் இல்லை. அங்கே காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற தீய பொருள்கள் இருந்தால் இந்த அருமையான பொருளை அவற்றோடு சேர்த்து வைக்க இயலாது. எம் நெஞ்சில் அத்தகைய அழுக்குகள் இல்லை, சுத்தமான தனி நெஞ்சு அது. இதுதான் யாரும் புகாத இடம் என்று எண்ணி, யாரும் அறியாத மாயமான முறையினால் அந்தப் பரம்பொருளை உள்ளே வைத்து வெளியே போகாமல் அடைத்துவிட்டோம்' என்று சொல்கிறார்.*

**ஆர்வல்லார் காண**
**அரனவனை? அன்புஎன்னும்**
**போர்வை யதனாலே**
**போர்த்துஅமைத்துச்—சீர்வல்ல**
**தாயத்தால் நாமும்**
**தனிநெஞ்சின் உள்அடைத்து**
**மாயத்தால் வைத்தோம்**
**மறைத்து.**

*'அரனை அன்பு என்னும் மூடுதுணியினாலே போர்த்து உள்ளே அமையச் செய்து, சிறப்பு மிக்க உரிமையால் நாம் வேறெதுவும் தன்னிடம் இல்லாத எம்முடைய தனி நெஞ்சின் அந்தரங்கத்திலே அடைத்துப் பிறருக்குத் தெரியாத மாயமான முறையினாலே மறைத்து வைத்துவிட்டோம். ஆகையால் அவனை ஆர் காண வல்லார்?'*

[அரனவனைக் காண வல்லார் ஆர் என்று கூட்டுக. அரனவனை: அவன்: பகுதிப் பொருள் விகுதி. அரனை என்பது தான் பொருள். போர்வையதனாலே என்பதிலுள்ள அது என்பதும் பகுதிப்பொருள் விகுதியே. போர்வை என்றது போர்த்தப்படுபவருக்குத் துன்பம் இல்லாமல் மூடியதைக் குறித்தது. குளிருள்ள காலத்தில் குளிரால் நடுங்கும் ஒருவருக்கு மற்றொருவர் போர்வையைப் போர்த்தினால் அதனால் அவர் இன்பம் அடைவாரேயன்றிச் சினம் கொள்ள மாட்டார். அவ்வாறு அன்பினால் போர்த்தும்பொழுது இறைவன் அதை மனமுவந்து ஏற்றுக்கொள்வான். போர்த்தல் — மூடுதல். அமைத்தல் — வெளியில் பிதிர்ந்து வராமல் இருக்கச் செய்தல். சீர் வல்ல—இறைவனிடம் கொண்ட நெருக்கத்தால் பெற்ற சிறப்பிலே உரம் பெற்றிருந்த இறைவனுடைய சிறப்புக்களையெல்லாம் அறிய வல்ல என்றும் பொருள் கொள்ளலாம்.

தாயம்—உரிமை. நாமும்: உம்மை மற்ற அன்பர்கள் செய்வதைப் போல நாமும் செய்தோம் என்று குறித்தது; எச்சஉம்மை. தனி நெஞ்சு—வேறு ஒன்றும் புகாத நெஞ்சம். நெஞ்சின் உள்—அந்தரங்கத்தில். 'மாயத்தால் உள்ளே அடைத்து மறைத்து வைத்தோம்' என்று கூட்டுக. மாயம் என்றது பிறர் அறியாதவாறு என்பதைக் குறித்தது.]

இறைவனை அன்பினால் உரிமையாக்கிக் கொள்ளலாம் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 96-ஆவது பாடல் இது.

# 98. செந்தீ அழல்

இறைவன் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் என்ற மூன்று தொழிலையும் செய்கிருன். அந்த மூன்று தொழில்களையும் தன் ஆணையால் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களைச் செய்யச் சொல்லி அவர்களுக்கு வேண்டிய ஆற்றல்களை அருளுகிருன்.

''மூவண்ணல் தன்சந்நிதி முத்தொழில்
இயற்ற வாளா, மேவு அண்ணல்''

என்று பரஞ்சோதி முனிவர் கூறுவார்.

உயிர்க் கூட்டங்கள் தம் வினைக்கு ஏற்ப உடம்பை எடுத்துப் பிறந்தும் வாழ்ந்தும் இறந்தும் மீண்டும் பிறந்தும் வருகிருர்கள். ஒவ்வோர் உயிரும் இவ்வாறு பிறவிச் சுழலில் சுழன்று வருகிறது. மகாப் பிரளய காலத்தில் எல்லா உயிர்களுக்கும் ஒய்வு கொடுப்பது போல இறைவன் சர்வசங்காரம் செய்கிருன். ஜலப் பிரளயம், அக்கினிப் பிரளயம் என்பது போல் பிரளயங்கள் பல வகைப்படும். உலகமெல்லாம் நீரில் அமிழ்ந்து கிடப்பது ஜலப் பிரளயம்; தீயால் வெந்து அழிவது அக்கினிப் பிரளயம். காலாக்கினி ருத்திரர்களை அதிஷ்டித்து நின்று அக்கினிப் பிரளயத்தை நடத்துகிருன் இறைவன்.

இறைவன் அக்கினிப் பிரளயத்தை நிகழ்த்தும்போது எங்கே பார்த்தாலும் தீ மூண்டு நிறைந்து நிற்கிறது. தீக் கொழுந்துகள் பலபடியாகச் சீறி எழுந்து உலகை எரிக்கின்றன. அந்தர் மத்திய பாதலம் என்று சொல்லும் மூன்று தட்டாகிய உலகங்களும் அழலால் எரிந்து சாம்பலாகின்றன. அந்த மூன்று உலகங்களுக்கும் உள்ளே புகுந்து எல்லாப் பொருள்களையும் தனக்குள் அடக்கிக் கொண்டு அந்தச் செந்தீயின் அழலானது எழுந்து எரிகின்றது. அதன் நாக்குகளுக்கு

அகப்படாத பொருள் ஏதும் இருப்பதில்லை. எங்கே பார்த்தாலும் தீயே நிறைந்து தன் வேலையைச் செய்கிறது. அவ்வாறு தீயை மூள விட்டு இந்த உலகங்களை அவன் எரித்து விடுகிருன்.

இவ்வாறு உலகையே அழித்துச் சுடரும் அந்த அக்கினி பிறகு அடங்கிவிடுகிறது. பிரபஞ்சம் மீண்டும் தோற்றுகிறது. மறுபடியும் உலகத்தில் உயிர்கள் பிறக்கின்றன. எரிந்த சோலை மீண்டும் தழைத்து அடர்ந்து வளர்வது போல உலகம் மறுபடியும் உயிர்கள் வாழும் இடமாக அமைந்து காட்சி அளிக்கிறது. பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் எரித்த அந்தத் தீ என்ன ஆயிற்று? மறுபடியும் பிரளயம் வந்தால் அது எழுந்து பரந்து தன் வேலையைச் செய்ய வேண்டுமே; இப்போது அது எங்கே போயிற்று?

ஒருகால் அந்தப் பெரிய தீயை உலகம் ஏழிலும் அங்கங்கே மறைத்து வைத்திருக்கிருரோ? கோட்டைக்குள் மறைந்து நின்ற வீரர்கள் போர் வந்தால் திடீரென்று மறை இடத்திலிருந்து எழுந்து வந்து போர்க்களத்தில் புகுந்து அமர் செய்யப் புகுவார்களே, அது போல அந்தத் தீ மீண்டும் பிரளய காலம் வரும்வரை அங்கங்கே மறைந்திருக்கிறதோ? அதை இந்த ஏழுலகத்திலும் மறைத்து வைத்திருக்கிருரோ, இறைவன்? இந்தக் கேள்வியை இறைவனிடமே கேட்கிருர் காரைக்கால் அம்மையார்.

> மறைத்து உலகம்
> ஏழினிலும் வைத்தாயோ?

உலகத்துக்குள் மறைந்திருந்து வேண்டும்போது வெளிப்படும் அந்தத் தீ உலகம் ஜலப் பிரளயத்தில் அமிழ்ந்து போகும்போது அதுவும் அமிழ்ந்து அணைந்து போகாதா? அழிக்கும் பொருள் அழிக்கப்படும் பொருளுக்குப் புறம்பே இருந்தால்தான் எளிதில் அழிக்க முடியும். ஆகையால் அந்தச் செந்தீ அழல் பிரபஞ்சத்துக்கு அப்பால் வேறு ஓரிடத்

தில் இருப்பதுதான் பொருத்தமாக இருக்கும். இதை அறிந்து அதை அதன் வெம்மை சிறிதும் குறையாமல் உறைப்போடு இருக்கும்படி பாதுகாப்பான இடத்தில் வைத்திருக்கிருனே? அந்த இடம் எது? ஓ! இறைவன் அதனைத் தன் திருக்கரத்தில் வைத்திருக்கிருன். தீயை ஏந்தி ஆடும் பெருமான் அல்லவா அவன்?

முன்காலத்தில் தீக்குச்சி இல்லை. அதனால் நெருப்பைப் பாதுகாத்து வைப்பார்கள். ஓமச் சட்டியில் பொதிந்து வைத் திருப்பார்கள். அந்தணர்கள் நாள்தோறும் அக்கினி காரியம் செய்வார்கள். அதனால் அக்கினியைப் பாதுகாத்து வைப்பார் கள். பிறருக்கு அதிலிருந்து நெருப்பை உதவுவார்கள். அக்கினி காரியம் செய்து வரும் அந்தணன் இறந்து போனால் அந்த அக்கினியைக் கொண்டே அவன் உடலை எரிப்பார்கள்.

பிறருக்கு நெருப்பைக் கொடுப்பது ஓர் உபகாரம்.

அவ்வாறு அக்கினியைப் பாதுகாத்து வைத்துப் பயன் படுத்துவது பழங்கால வழக்கம். அவ்வண்ணமே இறைவன் பிரளய காலத்தில் பயன்படுத்துவதற்காகச் செந்தீ அழலைத் தன் திருக்கரத்தில் ஏந்திப் பாதுகாப்பாக வைத்திருக்கிருனே?

**அன்றேல் உறைப்போடும்**
**உன்கைக் கொண்டாயோ?**

உலகத்தில் ஐந்து பூதங்களும் இருக்கின்றன. அவை வெவ்வேறு அளவில் கலந்து பிரபஞ்சமாக உருவெடுக்கின்றன.

"நிலந்தீ நீர்வளி வெளியென ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம்"

என்று தொல்காப்பியம் கூறுகிறது. அவ்வாறு மறைத்து வைத்திருக்கிருனு அழலை? அல்லது தன் கையில் எடுத்து வைத்துப் பாதுகாக்கிருனு?—இவ்வாறு கொண்ட ஐயத்தை இறைவனிடமே கேட்கிருர் அம்மையார்.

மறைத்துஉலகம் ஏழினிலும்
 வைத்தாயோ? அன்றேல்
உறைப்போடும் உன்கைக்
 கொண்டாயோ?—நிறைத்திட்டு
உளைந்துஎழுந்து நீஎரிப்ப
 மூவுலகும் உள்புக்கு
அளைந்துஎழுந்த செந்தீ அழல்.

'எம்பெருமானே, சர்வப் பிரளய காலத்தில் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து நின்று சீறி எழுந்து நீ எரிப்பதனுல் மூன்று உலகங்களிலும் கலந்து பொங்கி எழுந்த பிரளய காலாக்கினியாகிய செம்மையாகிய தீயின் கொழுந்துகளை மற்றக் காலங்களில் இந்த உலகம் ஏழினிலும் மறைத்து வைத்தாயோ? அல்லாமல் அதனை அதன் வெம்மையோடும் நின் திருக்கத்தில் பாதுகாத்து வைத்தாயோ? இதனை எனக்குச் சொல்லியருள வேண்டும்.

[உலகம் ஏழினிலும் மறைத்து வைத்தாயோ என்று கூட்டுக. உறைப்பு—வெம்மை மிகுதி. நிறைத்திட்டு—எங்கும் தன் வெப்பத்தை நிறையச் செய்து. உளைந்து—கொழுந்துகளை எழுப்பிச் சீறி. உள்புக்கு—உள்ளே புகுந்து. அளைந்து எங்கும் கலந்து. செந்தீ — செந்நிறத்தையுடைய தீ. அழல்—தீயின் கொழுந்து; அதன் வெப்பம் என்றும் சொல்லலாம். 'அழலை வைத்தாயோ, கைக் கொண்டாயோ' என்று கூட்டி முடிக்க. நீ: எழுவாய். 'நீ எரிப்ப எழுந்த அழலை வைத்தாயோ, கொண்டாயோ?' என்று கூட்டுக.]

இறைவன் அழலேந்தி ஆடும் கோலத்தை நினைந்து இவ்வாறு பாடினர்.

அற்புதத் திருவந்தாதியில் 97-ஆவதாக உள்ளது, இந்தப் பாட்டு.

# 99. சிவந்தது எப்படி?

இறைவனுடைய திருக்கரத்திலுள்ள செந்தீயைப் பற்றிச் சொன்ன காரைக்கால் அம்மையாருக்கு அதன் நினைவு பின்னும் எழுகிறது. அதைப் பற்றி மீண்டும் சிந்திக்கிறார். இறைவன் திருக்கரத்தில் உள்ள அழல் கொழுந்து விட்டு எரிந்து ஆடுகிறது. அதை ஏந்திய சிவபிரானுடைய உள்ளங் கை சிவப்பாக இருக்கிறது. அவனுடைய திருமேனியே செம் பவள வண்ணமுடையதுதானே?

'இறைவனது உள்ளங்கை சிவந்திருக்கிறதே! ஏன்? ஒருகால் தழலை ஏந்துவதனால் அந்தத் திருக்கரம் சிவந்து விட்டதோ?' இவ்வாறு அவருடைய உள்ளத்தில் எண்ணம் எழுகிறது.

இறைவன் கரம் தீயினால் சிவக்குமா? அவனே தீ வண்ணன் தானே? அந்தப் பெரிய தீயை இந்தச் சிறிய தீ என்ன செய்யும்? அவன் தன் கையில் அனல் ஏந்துவது மட்டுமா? அவன் தீயிலேயே நின்று நடனம் புரிகிறவன் ஆயிற்றே!

அவன் கையில் அனல் ஏந்தி மயானத்தில் தீயில் ஆடு கிறான். அவன் காலில் கழல் ஒலிக்கிறது. அங்கே உள்ள பேய்களெல்லாம் அந்த நடனத்தைக் கண்டு களிக்கின்றன. அவனோடு சேர்ந்து அவையும் கூத்தாடுகின்றன.

இந்தப் பேயாட்டத்தைப் பேய் வடிவம் கொண்ட காரைக்கால் அம்மையாரும் கண்டு களித்திருக்கிறார். ஆகவே அந்த மயானக் கூத்தனை விளித்துச் சொல்கிறார் :

**கழல்ஆடப்**
**பேயோடு கானில்**

பிறங்க அனல் ஏந்தித்
தீஆடுவாய்!

அந்தப் பெருமானைப் பார்த்து ஒரு வினவை எழுப்பு கிறார். 'நான் விடுக்கும் இந்த வினாவுக்கு விடை கூறு' என் கிறார்.

இதனைச் செப்பு.

'அழலினால் உன்னுடைய உள்ளங்கை சிவந்ததோ?' என்று முதலில் வினவுகிறார்.

அழல்ஆட அங்கை சிவந்ததோ?

தீயே தன் வடிவமாக இருக்கும் இறைவனுக்கு இந்தத் தீ எம்மாத்திரம்? அவன் தீயிலேயே நடனமாடுகிறானே! அந்தத் தீயினால் அவனுக்கு வெப்பம் உண்டானால் அவனால் ஆட முடியுமா? பெருந் தீயாகிய அவனுக்கு அது குளிர்ந்து தான் இருக்கும். நீரில் ஆடுவது போலத் தீயில் ஆடும் அவனுக்கு அவன் கையில் எடுத்த தீயானது சுடுமா? அதன் வெம்மையில் உள்ளங்கை சிவக்குமா?

தீயும் செந்நிறம் உடையதுதான். அவன் திருக்கரமும் செம்மையுடையது. தீயின் சிவப்பு அவன் உள்ளங்கையில் சிவப்பை உண்டாக்கியது என்று சொல்வது பொருத்தம். இல்லையானால், அந்த உள்ளங்கைச் சிவப்பே அதில் ஏந்தும் தீக்குச் செந்நிறத்தை உண்டாக்கியதோ?

இறைவனுடைய அழகான அங்கையின் செம்மைதான் அந்த அழலில் ஏறியிருக்க வேண்டும்.

அங்கை
அழகால் அழல்சிவந்த வாறோ?

இப்படி வினாக்களை எழுப்பிய அம்மையார் இறைவனையே, "எது உண்மை என்பதைச் சொல் அப்பா!' என்று கேட்கிறார்.

**அழல்ஆட அங்கை சிவந்ததோ? அங்கை**
**அழகால் அழல்சிவந்த வாறோ?—கழல்ஆடப்**
**பேயோடு கானில் பிறங்க அனல்ஏந்தித்**
**தீஆடு வாய், இதனைச் செப்பு.**

*'காலில் கட்டிய வீர கண்டை ஆடி ஒலிக்க, சுடுகாட்டில் பேயோடு உன் கோலம் நன்றாக விளங்கும்படி தழலை ஏந்திக் கொண்டு, தீயில் நடனம் புரியும் எம்பெருமானே, உன்னுடைய உள்ளங்கை அதில் ஏந்தியிருக்கும் தீயானது ஆடி எரிய அதனால் சிவந்ததோ? அன்றி உன்னுடைய உள்ளங் கையின் அழகிய செவ்வண்ணத்தால் அந்த அழல் சிவந்த படியோ? இந்த வினாவுக்கு உரிய விடையை நீ சொல்லி யருள்வாயாக.'*

*[அழல்—இறைவன் திருக்கரத்தில் ஏந்தியிருக்கும் அக்கினி. அங்கை — உள்ளங்கை. அழகால்—அழகிய செவ்வண்ணத் தால். சிவந்தவாறோ —சிவந்தபடியோ? 'அழல் சிவந்தவாறு அங்கை அழகாலோ?' என்று ஓகாரத்தைப் பிரித்துக் கூட்டிப் பொருள் செய்வதும் பொருந்தும். கழல்—திருவடியில் அணிந்த வீரகண்டை. கான்—சுடுகாடு. பிறங்க—திருக் கோலம் விளங்கும்படி. தீயில் ஆடுவாய். இதனை—இந்தக் கேள்விக்கு உரிய விடையை.]*

*இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 98-ஆவது பாட்டு.*

# 100. யார் காண?

இறைவன் மயானத்தில் நடனமாடும் கோலத்தை மீண்டும் எண்ணுகிறார் அம்மையார். பேயோடு பேயாக நின்று கண்ட காட்சி அவர் உள்ளத்தில் அழுந்தப் பதிந்திருக்கிறது. மறுபடியும் வினாவை எழுப்புகிறார்.

இறைவன் நாகத்தைப் பூணாக அணிந்திருக்கிறான். அந்த நாகத்துக்கு ஐந்து தலைகள் இருக்கின்றன. அவன் ஆடும்போது அந்த நாகம் வாயைத் திறந்து அனலைக் கக்குகிறது. மேலேயும் தீ, சுற்றிலும் மயானத் தீ, பாம்பு உமிழ்வதும் தீ. எல்லாம் அனல்மயம். அங்கே தீப்பிழம்பாக நின்று நடனமாடுகிறான் இறைவன்.

இந்தப் பயங்கரமான சூழ்நிலையில் ஆடுகிறானே, அந்த நடனத்தைக் கண்டு களிப்பவர் யார்! இறைவனை விளித்து வினவுகிறார் அம்மையார்.

> அங்காந்து அனல்உமிழும் ஐவாய
> நாகத்தாய்!

"நீ ஆடுகின்ற நடனத்தை அங்கே வந்து யார் காணப் போகிறார்கள்? யார் கண்டு களிப்பதற்காக நீ தீ உண்டாகி எரியும் சுடுகாட்டில் ஆடுகிறாய்?" என்ற கேள்வி அம்மையார் உள்ளத்தில் எழுகிறது.

'அந்த இடத்தில் யார் இருக்கிறார்கள்? அவனோடு இணைந்து என்றும் பிரியாமல் இருக்கிறாள் அன்னை. அவள் நல்ல பருவமடந்தையாகக் காட்சி அளிக்கிறாள். தங்கச் செப்புப் போன்று இளமையின் வளப்பத்தைக் காட்டும் நகில்களை உடையவள் அவள். அந்தப் பெருமாட்டிதான் அதைக்

கண்டு களிக்கிறாளோ? அவள் தன் நடனத்தைக் காண வேண்டும் என்றுதானா இந்த நடனத்தை ஆடுகிறான்?'

**செப்பு ஏந்து இளமுலையாள் காணவோ?**

அல்லது அந்த மயானத்தையே தம்முடைய வாசத்தான மாகக் கொண்ட பேய்க் கூட்டம் கண்டு களிக்கவே அவ்வாறு ஆடுகிறானோ?

இறைவன் ஆடும் மன்றங்கள் பல உள்ளன. இரத்தின சபை, கனக சபை, வெள்ளியம்பலம், தாமிர சபை, சித்திர சபை என்ற ஐந்து சபைகள் வெவ்வேறு தலங்களில் இருக்கின்றன. அந்த இடங்களில் ஆடும் நடனத்தைக் காணப் பேய்கள் வருவதில்லை. பக்தர்கள் கண்டு களிக்க ஆடும் அந்தத் தலங்களில் பேய்களுக்கு என்ன வேலை? உயிரோடு உலவும் மனிதர்கள் வாழும் இடத்தில் பேய்க்கு உணவில்லை; உற்சாகம் இல்லை. பிணம் சுடும் மயானத்தில்தான் அவை வாழ்கின்றன. அங்கேதான் அவற்றிற்கு உணவு கிடைக்கிறது.

அந்தப் பேய்களும் தன் நடனக்காட்சியைக் கண்டுகளிக்க வேண்டும் என்ற பெருங் கருணையால், அவற்றிற்காகவே சிறப்பாக இந்த நடனத்தை ஆடுகிறானோ?

**தீப்படுகாட்டு**
**அப்பேய்க் கணமவைதாம் காணவோ?**

'இந்தக் காரணங்களில் ஏதேனும் ஒன்று உண்மையாக இருக்கவேண்டும். 'மக்கள் வாழும் தலங்களில் மட்டுந்தான் ஆடுபவனா? என்னை விரும்பும் பேய்கள் உள்ள இடத்தில்கூட நான் ஆடுவேன்' என்று காட்டுகிறானோ? 'பாவம்! அந்தப் பேய்க் கணங்களுக்கு என்னுடைய நடனத்தைக் காண வேறு வாய்ப்பு இல்லை. ஆகவே அவை உலாவும் இடத்திலே அவை கண்டு களிக்க நான் ஆடிக் காட்டுகிறேன்' என்று திருவுள்ளங் கொண்டு ஆடுகிறானோ?

எந்தக் காரணத்தைச் சொல்வது? அவன் திருவுள்ளம் எது என்று அவனையே கேட்டு அறிந்துகொள்ளலாமே! 'இந்த இரண்டு காரணங்களில் ஒன்றுதான் உண்மையாக இருக்க முடியும். அந்தக் காரணம் என்ன? எனக்கு அந்த ஒன்று இன்னதென்று சொல்' என்கிறார் அம்மையார்.

செப்பு எனக்கு ஒன்றாகத்தான்.

'நமக்கு இந்த இரண்டு காரணங்களும் தோன்றுகின்றன ஆனால் அவன் எதற்காக, எந்த ஒரு காரணத்துக்காக, இந்த நடனத்தை ஆடுகிறான்? அவனே சொன்னால்தான் நமக்கு விளங்கும்' என்று எண்ணிக் கேட்கிறார் அம்மையார்.

> செப்புஏந்து இளமுலையாள் காணவோ? தீப்படுகாட்டு
> அப்பேய்க் கணம்அவைதாம் காணவோ?
> செப்புஎனக்குஒன்
> றாகத்தான், அங்காந்து அனல் உமிழும் ஐவாய
> நாகத்தாய், ஆடுஉன் நடம்.

வாயைத் திறந்து அனலைக் கக்கும் ஐந்து வாய்களை யுடைய நாகத்தை அணிந்த எம்பெருமானே, நீ ஆடுகின்ற உன் நடனமானது, தங்கச் செப்பின் தன்மையை ஏந்திய, இளமையின் அடையாளமாகிய தனங்களையுடைய அன்னை கண்டு களிக்கவோ? அல்லது, தீ உண்டாகும் சுடுகாட்டில் உள்ள அந்தப் பேய்க் கணங்கள் கண்டு மகிழவோ? இந்த இரண்டில் இன்னதுதான் காரணம் என்று ஒன்றாக எனக்குச் சொல்.

[செப்பு—தங்கச்செப்பு; தந்தச்செப்பும் ஆம். ஏந்து: உவம வாசகமாகவும் கொள்ளலாம். எவ்வுலகங்களையும் ஈன்றும் தாழாக் கொங்கையாதலின், 'செப்பேந்திளமுலை' என்றார். 'இங்கயற்கண் அகனுலகம் எண்ணிறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை' என்று அதனைச் சிறப்பிப்

எந்தக் காரணத்தைச் சொல்வது? அவன் திருவுள்ளம் எது என்று அவனையே கேட்டு அறிந்துகொள்ளலாமே! 'இந்த இரண்டு காரணங்களில் ஒன்றுதான் உண்மையாக இருக்க முடியும். அந்தக் காரணம் என்ன? எனக்கு அந்த ஒன்று இன்னதென்று சொல்' என்கிறார் அம்மையார்.

செப்பு எனக்கு ஒன்றாகத்தான்.

'நமக்கு இந்த இரண்டு காரணங்களும் தோன்றுகின்றன ஆனால் அவன் எதற்காக, எந்த ஒரு காரணத்துக்காக, இந்த நடனத்தை ஆடுகிறான்? அவனே சொன்னால்தான் நமக்கு விளங்கும்' என்று எண்ணிக் கேட்கிறார் அம்மையார்.

செப்புஏந்து இளமுலையாள் காணவோ? தீப்படுகாட்டு
அப்பேய்க் கணம்அவைதாம் காணவோ?
செப்புஎனக்குஒன்
றாகத்தான், அங்காந்து அனல் உமிழும் ஐவாய
நாகத்தாய், ஆடுஉன் நடம்.

வாயைத் திறந்து அனலைக் கக்கும் ஐந்து வாய்களையுடைய நாகத்தை அணிந்த எம்பெருமானே, நீ ஆடுகின்ற உன் நடனமானது, தங்கச் செப்பின் தன்மையை ஏந்திய, இளமையின் அடையாளமாகிய தனங்களையுடைய அன்னை கண்டு களிக்கவோ? அல்லது, தீ உண்டாகும் சுடுகாட்டில் உள்ள அந்தப் பேய்க் கணங்கள் கண்டு மகிழவோ? இந்த இரண்டில் இன்னதுதான் காரணம் என்று ஒன்றாக எனக்குச் சொல்.

[செப்பு—தங்கச்செப்பு; தந்தச்செப்பும் ஆம். ஏந்து; உவம வாசகமாகவும் கொள்ளலாம். எவ்வுலகங்களையும் ஈன்றும் தாழாக் கொங்கையாதலின், 'செப்பேந்திளமுலை' என்றார். 'இங்கயற்கண் அகனுலகம் எண்ணிறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை' என்று அதனைச் சிறப்பிப்

# 101. இறைவன் ஊரும் ஏறு

இறைவனுடைய வாகனமாகிய இடபத்தின் வலிமையை எண்ணிப் பார்க்கிறார் காரைக்கால் அம்மையார். அது தர்ம ரிஷபம். என்றாலும் அதற்குக் கோபம் வந்துவிட்டால் அது நடக்கும் முறையே வேறு.

நமக்கு இன்பம் தருவதற்கும் துன்பம் தருவதற்கும் காரணமாக இருப்பது அறம். அதை அறக் கடவுள் என்றே சொல்வார்கள். பாவம் செய்பவர்களை அறம் புறக்கணிக்கும். நல்லவர்களுக்கு இனியதாக இருந்து நலம் செய்யும் அறக் கடவுள் தீயவர்களுக்கு இன்னாததாக நின்று ஒறுக்கும்.

> "என்பி லதனை வெயில்போலக் காயுமே
> அன்பி லதனை அறம்."

என்பது திருக்குறள். அறம் காய்வதும் உண்டு என்பது அதனால் தெரியவரும்.

அறத்தையே இறைவன் இடபமாகக் கொண்டிருக்கிறான். ஆதலின் அது தீயவர்களை நடுங்கச் செய்யும் ஆற்றலும் கொண்டது.

இறைவனை நோக்கி அந்த ஏற்றைப் பற்றிய வினாவை விடுக்கிறார் அம்மையார். 'பொன்னையொத்த திருமேனியை உடையாய்!' என்று விலாசம் இடுகிறார்.

பொன்ஒப்பாய்;

"நின் வாகனமாகிய ஏறு எத்தகையது?" என்று கேட்கிறார்.

அது சினத்துடன் இருந்தால் எப்படி இருக்கிறது? அப்போது அது நடந்தால் இந்தப் பூமியே அதிரும்; பூகம்பம் வந்தது போல நடுங்கும்.

நடக்கின் படிநடுங்கும்.

அது கோபத்தோடு நோக்கினுல் அதன் கண்களிலிருந்து அனல் கொப்புளிக்கும். அது கோபத்தோடு எந்தத் திசையில் தன் பார்வையைச் செலுத்துகிறதோ, அந்தத் திசையிலுள்ள பொருள்களெல்லாம், அந்தக் கண்கள் உமிழும் தீயால் வெந்து போய்விடும்.

நோக்கின் திசைவேம்.

அது தன் குரலை எழுப்பி இடி போல முழங்கினுல் எல்லா உலகங்களிலும் இருப்பவர்கள் அஞ்சி, "பிரளயகாலந்தான் வந்துவிட்டதோ? இடி விழப்போகிறதோ!" என்று நடுங்குவார்கள்.

இப்படிச் செய்யும் இறைவனுடைய வாகனமாகிய ஏற்றுக்கு எதை உவமை சொல்லலாம்? மலைகளைத் தாக்கி இடிக்கும் சிங்கத்தைச் சொல்லலாமா?

அடுக்கல் பொரும் ஏருே?

மலைகளை மட்டுமா இந்த இடபம் தாக்குகிறது? அண்டங்களெல்லாம் கிடு கிடுக்கச் செய்கிறதே! இது உண்மையில் காளை மாடுதானே?

ஆன்ஏருே?

அல்லது பிரளயகாலத்தில் இடியும் மின்னலுமாகப் பிரசண்ட மழை பொழிகிறதே, அந்தக் காலத்தில் இடிக்கும் இடியோ?

உருமேருே?

'நின்னுடைய இடப வாகனத்துக்கு எதை உவமையாகச் சொல்வது? அதனோடு பழகும் உனக்குத்தானே அது தெரியும்? எந்த ஒன்றைச் சொன்னால் நல்ல பொருத்தமாக இருக்குமோ அந்த ஓர் உவமையாக எனக்குச் சொல்.'

நின்ஏறு
உருமேறு ஒன்று உரை.

'சிங்கம் என்று சில சமயம் சொல்லத் தோன்றுகிறது. அது சாந்தமாக இருக்கும்போது ஆனேறாகத் தோற்றமளிக்கிறது. இடிபோல முழங்கினால் இடியைப் போலக் காட்சியளிக்கிறது. இந்த மூன்றில் எது சரி? ஏதாவது ஒன்றுதான் சரியாக இருக்கும். அந்த ஒன்றை எனக்கு விடையாகச் சொல்' என்கிறார்.

நடக்கிற் படிநடுங்கும்;
நோக்கின் திசைவேம்;
இடிக்கின் உலகுஅனைத்தும்
ஏங்கும்;—அடுக்கல்
பொரும்ஏறோ? ஆனேறோ?
பொன்ஒப்பாய், நின்ஏறு
உருமேறோ? ஒன்றுஉரை.

'பொன்னையொத்த நிறமுடையவனே, நின்னுடைய வாகனமாகிய இடபம், நடந்தால் இந்த உலகமே நடுங்கும்; கோபத்தோடு பார்த்தால் திசைகளில் உள்ளவை வெந்து போகும்; இடி போல முழங்கினால் உலகிலுள்ள உயிர்கள் யாவும் அச்சத்தால் துன்பம் கொண்டு, என்ன ஆகுமோ என்ற ஏக்கத்தை அடையும்; ஆதலால் அது மலைகளோடு மோதி உடைக்கும் ஆண்சிங்கமோ? அல்லது ஆனேறு தானோ? அல்லது இடிதானோ? ஏதேனும் என் வினாவுக்குரிய விடையை ஒன்றாகச் சொல்.'

[படி-பூமி. வேம்-வேகும்; இடைக்குறை. திசை-திசையிலுள்ள பொருள்கள்; ஆகுபெயர். இடிக்கின்-இடிபோல முழங்கினால்; தன் கொம்பினால் இடித்தால் என்றும் பொருள் கொள்ளலாம். உலகு-உலகத்தில் உள்ள உயிர்கள். ஏங்கும்-என்ன ஆகுமோ என்று எண்ணி நையும். அடுக்கல்-மலை. மலையொடு பொருவதைச் சொன்னதால், ஏறு என்பது ஆண் சிங்கத்தைக் குறித்தது. ஆன் என்பது பசுமாட்டின் பொது; ஏறு, அவற்றின் ஆண். பொன் ஒப்பாய்-நிறத்தால் பொன்னை ஒப்பவனே; "பொன் வரையே போல்வான்" (8), "மேனி, செம்பொன் அணிவரையே போலும்" (39), "ஆங்கவன்றன் பொன்னுருவில்" (58), "பொன் விலங்கல் போலாம்" (60), "ஆம்பொன் உருவடிவில்" (67), "தன்போலும் பொற்குன்றும்" (83) என்று பல இடங்களிலும் இதை அம்மையார் சொல்வதைக் காண்க.

அடியவர்கள் தம் உள்ளத்தே பொன்னைப் போல் பொதிந்து வைத்தலால், 'பொன் ஒப்பாய்' என்றார் எனலும் ஆம். ஓகாரங்கள்: ஐயம். ஒன்று-ஒன்றாக; ஒரே விடையாக.

'பொன் ஒப்பாய், நின் ஏறு இத்தகையது. அது சிங்கமோ, ஆனேறோ, இடியோ? ஒன்றைச் சொல்' என்றார்.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 100-ஆவது பாட்டு இது.

# 102 பாடலின் பயன்

காரைக்கால் அம்மையார் இறைவனைப் பாடிய அற்புதத் திருவந்தாதி விளக்கம் இந்த பாட்டில் நிறைவுறப் போகிறது. இதுகாறும் நூறு வெண்பாக்களைப் பாடினார். இப்போது இறுதியில் 101-ஆவது வெண்பாவில் பயனைச் சொல்லப் போகிறார். நூல்களின் முடிவில், 'இதை ஓதினால் இன்ன நற் பயன் உண்டாகும்' என்று சொல்வது மரபு. திருஞான சம்பந்தப் பெருமான் தாம் அருளிய ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாசுரத்திலும், பயனைச் சொல்வார். 'இந்தப் பாமாலையை ஓதி இறைவனைப் புகழ்பவர்கள் இன்ன பயனைப் பெறுவார்கள்' என்று சொல்கிறார் அம்மையார்.

அம்மையார் பாடிய இந்த நூல் இறைவனுக்குச் சூட்டிய பாமாலை; வாடாத மாலை. ஒரு பாட்டின் அந்தம் அடுத்த பாட்டின் ஆதியாகவும், இறுதிப் பாட்டின் ஈறு முதல் பாட்டின் முதலாகவும் இருத்தலால் இது அந்தாதி. அந்தாதியை வெவ்வேறு செய்யுட்களால் சொல்வதுண்டு. இது முழுதுவம் வெண்பாக்களால் அமைந்த அந்தாதி.

**இம்மாலை அந்தாதி வெண்பா.**

இந்த அந்தாதி பேயுருவம் பெற்ற காரைக்காலம்மையார் சொன்னது. இந்த இறுதிப் பாட்டில் அவர் தம்மைக் காரைக்கால் பேய் என்றே சொல்லிக் கொள்கிறார்.

**கரைக்காற் பேய்சொல்.**

இந்த மாலையை அன்பர்கள் வாயாரப் பாடி மகிழலாம். வாக்கினால் பாடுபவர் சும்மா பாடினால் போதாது. உள்ளம்

கரைந்து பாடவேண்டும்; வாயாரப் பாடவேண்டும். இந்தப் பாடல்களைப் பாடி இறைவனைத்துதிக்கவேண்டும். இத்தகைய பாடல்கள் நாமே இயற்றிப் பாடுவது என்பது இயலாத காரியம். அப்படி வருந்திப் பாடவேண்டிய அவசியமே இல்லாமல், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்ற எண்ணத்தால் அவரே பாடித் தந்திருக்கிறார். இந்த மாலையை மனங் கரைந்து இறைவனைப் பரவினால் அப்படிப் பரவுகிறவர்களுக்கு என்ன கிடைக்கும்?

இங்கே இருந்து பாடுபவர்களுக்கு இந்தப் பிறவிக்குப் பிறகு சிவலோக பதவியே கிடைக்கும். சிவலோகத்திற்குச் சென்றால் அங்கே நேரே சிவபிரானைத் தரிசிக்கலாம். அன்பர் களுக்குத் தெவிட்டாத அன்பு இருக்கும். குறையாத பக்தி அமைந்திருக்கும். அந்த அன்பினோடு இறைவனை அணுகிச் சென்று அவன் திருமுன் நின்று ஏத்தும் நிலை உண்டாகும்.

**பரவுவார்**
**ஆராது அன்பினொடு அண்ணலைச் சென்று**
**ஏத்துவார்.**

இயல்பாகவே அன்புடைய அவர்கள் இறைவனுடைய சாமீப்பியத்தை அடைந்தவுடன் அவர்களுடைய அன்பு பன்மடங்கு பெருகிவிடும். என்றும் நீங்காத பேரன்பு தோன்றும். இறைவனை இங்கே இருக்கும்போது ஏத்து வதையே இன்பமாகக் கொள்ளும் அவர்கள் சாமீப்பிய பதவி யைப் பெறுவார்கள். அங்கும் என்றும் பேராமல் நிலைத்து நிற்கும் காதல் பிறந்த அவர்கள் என்றும் இன்பமே நிறைந்து நிற்பார்கள்.

**பேராத காதல் பிறந்து.**

இங்கே இறைவனை இந்த மாலையால் பாடிப் பரவிய வர்கள் கைலாயத்தை அடைந்து இறைவனுடைய அணிமை யில் இருக்கும் சாமீப்பியத்தைப் பெற்று, அங்கும் பெருங் காதலோடு நின்று ஏத்துவார்கள்.

உரையினால் இம்மாலை
அந்தாதி வெண்பாக்
கரைவினால் காரைக்காற்
பேய்சொல்-பரவுவார்
ஆராத அன்பினோடு
அண்ணலைச்சென்று ஏத்துவார்,
பேராத காதல் பிறந்து.

'இந்த வெண்பா அந்தாதி மாலையாகிய காரைக்கால் பேயின் சொல்லைத் தம்முடைய வாக்கினால் மனக்கசிவோடு சொல்லி இறைவனைத் துதிக்கும் அன்பர்கள், என்றும் அடங்காத அன்போடு, என்றும் நீங்காத பக்தி பிறந்து, இறைவனிடம் சென்று துதித்துக் கொண்டே இருப்பார்கள்.'

[உரையினால்-வாயினால்; ஆகுபெயர். மாலை அந்தாதி வெண்பா — வெண்பா அந்தாதி மாலை. கரைவு — மனக்கசிவு; நெகிழ்ச்சி. கரைவினால் — கரைவோடு. வெண்பாவாகிய காரைக்காற் பேய் சொல் என்று கூட்டுக. பரவுவார்-துதிப்பவர். ஆராத-தெவிட்டாத; இதோடு போதும் என்ற அமைதி உண்டாகாத. அன்பு என்றது பக்தியை; அந்த அன்பே இன்பமாக இருக்கும். அண்ணல்-பெருமையை உடையவன். சென்று என்றது 'இறைவனிடம் சென்று என்று பொருள் கொள்ளுவதற்குரியது. இது சாமீப்பிய பதவியைக் குறித்தது. அண்ணலை-அண்ணலிடம்: உருபு மயக்கம். 'சென்று அண்ணலை ஏத்துவார்' என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். அன்பு முறுகிக் காதல் பிறக்கும்.

"எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய"

என்று இவ்விரண்டையும் கம்பராமாயணம் கூறுவது காண்க.

"'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' என்ற தேவாரத்தில் காதலும் கசிவும் வந்தன.]

இந்தப் பாட்டில் ஈற்றில் உள்ள சொல் 'பிறந்து' என்பது. இந்த அந்தமே அந்தாதியின் முதற் பாட்டின் முதலில், 'பிறந்து மொழி பயின்ற' என்ற வந்திருக்கிறது. இதை மண்டலித்தல் என்பர். பூவைச் சரமாகத் தொடுத்துச் சரத்தின் இரண்டு தலைப்பையும் முடிந்துவிட்டால் அது வட்டமான மாலையாகத் தோற்றம் அளிக்கும். அப்படியே இதுவும் வட்டமாக மண்டலமாகத் தோன்றுகிறது. அந்தாதி மண்டலித்து வர வேண்டும் என்பது இலக்கணம்.

இறைவனை இந்தப் பாமாலையால் துதிப்பவர்கள் சாமீப்பிய பதவியைப் பெறுவார்கள் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியின் இறுதியில் வரும் 101—ஆவது பாட்டு.

